# திவ்யப் பிரபந்த ஸாரம்

அன்பு விளைத்த அருந் தமிழ்

பி. ஸ்ரீ.

அமுத நிலயம் பிரைவேட் லிமிடெட்

தேனாம்பேட்டை :: சென்னை-18

# பதிப்புரை

பி. ஸ்ரீ. நூல்களுள் ஒன்ருகிய திவ்யப் பிரபந்த ஸாரத்தின் மூன்ரும் பதிப்பை வெளியிடுவதில் நாங்கள் மகிழ்ச்சி அடைகிருேம். இத்தகைய புத்தகங்கள் இன்றைய தமிழ் மக்களின் அறிவுப் பசிக்கு நல்லுணவு அளிக்கின்றன; பழைய தமிழிலக்கியங்களில் பக்தி-இலக்கியத்திற்குள்ள சிறப்பைச் சாதாரண வாசகர்களும் உணரச் செய்கின்றன; பழமை தரும் பரிசுகளைப் புதுமை-எழுத்தாளர்களும் பயன்படுத்திக் கொண்டு மறுமலர்ச்சித் தமிழை உரம்பெறச் செய்துகொள்ளலாம் என்பதையும் உணர்த்துகின்றன. புதுமைக்கும் பழமைக்கும் ஒரு பொற்பாலம் அமைக்கும் முயற்சிகளில் ஒன்று திவ்யப் பிரபந்த ஸாரம்.

நாடு படிக்கிறது; அறிவுப் பசியும் அதிகமாகி வருகிறது. மறுமலர்ச்சித் தமிழிலக்கியம் பல துறைகளிலும் வளர்ந்து இன்றைய மக்களின் அறிவுப் பசிக்கும் இதயப் பசிக்கும் ஊட்டம் தருமாறு இயன்ற தொண்டாற்றிவரும் எங்கள் நிலையம் பி. ஸ்ரீ.யின் திவ்யப் பிரபந்த ஸாரத்தைக் கைக்கும் நல்லணியாக்கிக் கொடுக்க முயன்று, இம்முயற்சியில் பெருமையும் கொள்ளுகிறது.

முதற்பதிப்பைக் கல்கி தமிழகத்திற்கு அறிமுகப் படுத்தியது போல், முன்னிலும் திருந்தி விரிவான முறையில் வெளிவரும் இம்மூன்ரும் பதிப்பைப் பன்மொழிப் புலவர் உயர்திரு. தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் தம் பொன்மொழிகளால் ஆதரித்து ஆசிகூறி அனுப்பி வைக்கிருர். இப்பெரும் புலவருக்கு எங்கள் நன்றி உரியதாகும்.

14-10-57

அமுத நிலையத்தார்.

# அணிந்துரை

உயர்திரு. தெ.பொ. மீனுட்சிசுந்தரனுர், M. A. B. L. M. O. L.,
(சென்னை, அரசினர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்)

பிற மொழிகளில் காணக் கிடையாத தனிச் சிறப்பு ஒவ்வொரு மொழியிலும் உண்டு. பிற மொழிகளில் அரும்பி நிற்பவை ஒரு மொழியில் காய்த்துக் கனிந்து இன்பங் கொழிக்கும். தமிழில் இத்தகைய தனிப் பெருஞ் சிறப்பாக விளங்குவது பத்திப் பனுவலே ஆம். நாலாயிரப் பிரபந்தம் தேவாரம் திருவாசகம்-இவை வேறு எங்கும் நாம் காணுத புத்தம் புதிய இன்பச் சாறு, இவை கடவுட் காதற் பாடல்கள் —திவ்யப் பிரபந்தங்கள். இந்தச் சாற்றை-சாரத்தை நாம் பருக வேண்டாவா? தேன் ஊற்றெடுக்கும் தாமரையின் அருகே அதனை உண்ணுது கிடக்கும் தவளைகளா மக்கள்!

நாலாயிரத்தின் சாற்றைப் பிழிந்து தருவதே வைணவப் பெரியோர்களின் உயிர்த் தொண்டாகச் சென்ற ஆயிரம் ஆண்டுகளில் விளங்கி வருகிறது. நாலாயிரத்தில் இவ்வாறு பழகிய பின் தேவார திருவாசகங்களின் இன்பவெள்ளத்தில் முழுகிக் குளிப்பது எளிதாகிறது. எனவே திவ்யப் பிரபந்த ஸாரம் வைணவர்க்கும் சைவர்க்கும்—பிரித்துப் பேசுவான் ஏன்?—இலக்கியச் சுவைஞர் அனைவருக்கும் இன்ப அன்புக் கோயிற்குள் புகும் கோபுர வாயிலாக அமைகிறது.

நாலாயிரத்தின் சாற்றினைப் பிழிந்து முன்னோர் கோதிலாத் தேனுக—ஆரா அமுதாகத் தந்துள்ளார்கள் என்பது உண்மையே. நினவுகெடச் சொல்லி விளக்கியுள்ளார்கள் என்பதும் உண்மையே. ஆனுல் அவர்கள் விளக்கியுள்ள தமிழும் வேறு; நடையும் வேறு. இன்றைய தமிழன் எளிதில் அவற்றில் ஈடுபட முடியாது. அவற்றை மொழிபெயர்த்தால் மட்டும் போதாது. மனிதன் மனப் போக்கு மாறியுள்ளதற்கு

ஏற்ப அவற்றை விளக்கவேண்டும். மிக்கதோர் ஆழத்தே குதிக்காமல் கரையிலேயே விளையாடப் பழக்கி இனிய கதைகளைச் சொல்லிக்கொண்டே ஆழத்தில் அழைத்தும் போவதனையே இன்று எல்லோரும் விரும்புகின்றார்கள். பத்திரிகை உலகிலும் மேடைப் பேச்சிலக்கியத்திலும் சிறந்து விளங்கும் நண்பர் பி. ஸ்ரீ தாம் இவ்வாறு பெற்ற பழக்கத்தினைக் கொண்டு இந்த ஆழ்நிலைக் கோபுர வாயில் அமைக்கின்றார். நாலாயிரத்தில் நாமே சென்று அடி ஆழத்தினைக் காண வேண்டும் என்பதே அவர் நோக்கம்.

ஆழ்வார்களைப் பற்றி வழங்கும் கதைகளை அவர்கள் பாடலோடும் அவர்கள் குறிக்கோள்களோடும் ஒன்று படுத்தி விளக்குகிறார். அக்குறிக்கோள்களை நம்முள்ளம் உணருமாறு தான் இக்கதைகள் உருவானவோ என்று கூடச் சில போது தோன்றுகின்றது. இவற்றை எல்லாம் தமிழ் நாட்டின் வரலாறுகத் தொடர்பு படுத்தி எழுதியிருக்கிற நுட்பமும் நம் மனத்தைக் கவராதிருக்க முடியாது. முன் சென்ற பெரியோர்கள் வழியே சென்று தாம் படிந்தாடும் துறைகளையும், அவர் அனுபவிக்கும் இன்பப் பாடல்களையும், அந்த இன்பம் நம் உள்ளத்திலும் ஊற்றெடுக்க விளக்கிக் காட்டிச் செல்கின்றார்.

சிறந்ததொரு தொண்டே செய்கின்றார் நம் பி. ஸ்ரீ. ஆண்டவன் முகமலர்கின்றான். நம் உள்ளமும் மலர்கின்றது. இவர் நூலிற் பயின்றபின் நாலாயிரத்திலும் அவற்றின் உரைகளிலும் புகுவது எளிதே ஆம். இவற்றிற் பழகிய நம் மனம் தேவார திருவாசகங்களிலும், இவற்றின் ஒளியில் விளங்கும் பிற தமிழ் அன்பு நூல்களிலும் பழகுவது நம்மையும் அறியாமல் எழும் பழக்கமாகிவிடும். தமிழ் நரம்பறிந்தவன் அன்றோ தமிழன். பலபல சொல்வானேன்? நாம் பேசும் தமிழின் ஆழமும் நமக்குத் தெரியவரும். நம்மையே நமக்குக் காட்டும் வழிதானே நல்ல வழி.

சென்னை
3—10—'57

தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

## இரண்டாவது பதிப்புக்கு

# முன்னுரை

தமிழ் நாட்டிலே பக்தி மணம் கமழச் செய்த பெரியோர்களில், சிவனடியார்களான நாயன்மார்களைப் போல் ஆழ்வார்களும் பிரசித்தமாக விளங்குகிறார்கள். 'பாடும் பக்தமணி'களில் ஆழ்வார்களுக்கு ஒரு முக்கிய ஸ்தானம் உண்டு; தமிழ்க் கவிதையில் உள்ளத்தை உருக்கும் ஆழ்வார் பாசுரங்களுக்கு ஒரு தனிச் சிறப்பும் உண்டு. இப்பாசுரங்களை **நாலாயிரப் பிரபந்தம்** என்றும், **திவ்யப் பிரபந்தம்** என்றும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் போற்றுகிறார்கள். இப் பிரபந்தங்களுக்கு அருமையான வியாக்கியானங்கள் வடமொழியும் தமிழும் கலந்த மணிப்பிரவாளத்தில் எழுதப் பெற்றிருக்கின்றன. ஆழ்வார்களைப் பற்றிய கதைகள் ஸ்ரீவைஷ்ணவ குருபரம்பரையில் காணப்படுகின்றன.

அவற்றின் ஸாரத்தை ஒருவாறு திரட்டித் தமிழர் அனைவர்க்கும் பயன்படுமாறு வெளியிட வேண்டுமென்ற என் ஆசையின் ஒரு விளைவுதான் இப்புத்தகம். இதன் முதற் பதிப்பு 1938-இறுதியில் வெளியிடப்பட்டது.

'அன்பு விளைத்த அருந்தமிழ்' என்று சொல்லத் தக்க ஆழ்வார் பாசுரங்களையும், அவற்றில் பொதிந்துள்ள பக்தி ரஸத்தையும் கவிச் சுவையையும் மாணவர்களும் அறிந்து அனுபவிப்பதற்கு இப்பதிப்பு ஒரு சிறு கருவியாக உதவும் என்பது என் நம்பிக்கை.

சென்னை,
7—9—46

பி. ஸ்ரீ.

முதல் பதிப்புக்குக்

## ‘கல்கி’ அவர்கள் எழுதிய

# முன்னுரை

இந்தப் புத்தகத்தில் தொகுத்து வெளியிட்டிருக்கும் திவ்யப் பிரபந்தக் கட்டுரைகள் "ஆனந்த விகட"னில் பிரசுரமாகிக்கொண்டு வந்தபோது, ஒரு நண்பர், "இந்த ஆழ்வார் கட்டுரைகளை யாராவது படிக்கிறார்களா?" என்று கேட்டார் "படிக்காமற் போனால் ஆழ்வார்களுக்கு ஒன்றும் நஷ்டமில்லை" என்று பதில் சொன்னேன். அதுமட்டுமல்ல; கட்டுரைகளின் ஆசிரியருக்கும் அதனால் நஷ்டம் ஒன்றும் கிடையாது. ஏனென்றால் பி. ஸ்ரீ. இது போன்ற இலக்கியக் கட்டுரைகளை எழுதும்போது, பிறர் படித்துப் பயன் பெறுவதற்கென்று மட்டும் எழுதுவதில்லை. தாமே அநுபவிக்கிறார்; ஆனந்திக்கிறார்; ஆனந்தித்து எழுதுகிறார். தமிழ் நாட்டில் வேறு பல பண்டிதர்கள் பழந்தமிழ் இலக்கியங்களைப் பற்றிப் பேசவும் எழுதவும் செய்கிறார்கள். அவர்கள் பெரும்பாலும் பிறருடைய லாபத்தை முன்னிட்டுப் பேசுகிறார்கள்; எழுதுகிறார்கள். சிலர் கவிதையை வியாஜமாக வைத்துக்கொண்டு தங்களுடைய சொந்த சாமர்த்தியத்தை வெளிப்படுத்துகிறார்கள். ஆனால் பி. ஸ்ரீ. யோ அவருடைய கட்டுரைகளில் தம்மை மறந்து, கேட்கிறவர்களையும் மறந்து, கவிதையின் இன்பத்திலேயே பூரணமாய் ஆழ்ந்து விடுகிறார். தாம் கவிதையை எப்படி அநுபவிக்கிறாரோ, அதை அப்படியே மற்றவர்கள் பார்க்கும்படியும் உணரும்படியும் செய்கிறார்.

தமிழ்க் கவிதையின் பண்பை எனக்கு உணர்த்தி, அதன் இன்பத்தை நன்கு அநுபவிக்கும்படி செய்தவர்கள் இருவர் உண்டு. ஒருவர்தான் "டி. கே. சி." என்று நண்பர்களால்

அழைக்கப் பெறும் ஸ்ரீ. டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள். கவிதைச் சிறப்பிலே தமிழை மிஞ்சக் கூடிய மொழி உலகிலேயே வேறு இல்லை, இருக்க முடியாது என்று எனக்கு உறுதி உண்டு பண்ணியவர் டி. கே. சி. தான். இவர் தமது கவிதாநுபவத்தைப் பிறரும் உணர்ந்து அநுபவிக்கும்படி செய்வதற்குப் பேச்சையே முக்கிய சாதனமாகக் கொண்டிருக்கிறார்.

பி. ஸ்ரீ. தமது இயற்கையான கவிதை உணர்ச்சியுடனே, டி. கே. சி யின் கூட்டுறவினாலும் லாபம் அடைந்தவர். இவர் பேச்சுடன்கூட, எழுத்தையும் தமது சாதனமாகக் கொண்டிருக்கிறார். கவிதை இன்பத்தைத் தெரியப்படுத்துவதற்குப் பேச்சைப் போல் எழுத்து அவ்வளவு சிறந்த சாதனமல்ல என்பது உண்மையே. இந்த எண்ணத்தினால், பி. ஸ்ரீ. அவர்களுக்கே சில சமயம் சந்தேகம் தோன்றுவதுண்டு. ஆரம்பத்திலே குறிப்பிட்ட நண்பரைப் போல் பி. ஸ்ரீ. யும், "நான் எழுதும் கட்டுரைகளை யாராவது படிக்கிறார்களா?" என்று கேட்பார். அப்போதெல்லாம், "உங்கள் கட்டுரைகளுக்கு ஒரு வாசகன் நிச்சயமாக இருக்கிறேன்" என்று நான் உறுதி கூறுவேன். ஆனால் உண்மையில், என்னைப் போன்ற ஆயிரக் கணக்கான வாசகர்கள்,—வாரந்தோறும் விகடன் இதழில் பி. ஸ்ரீ. யின் கட்டுரைகளை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருப்பவர்கள்—தமிழர்கள் உள்ள இடங்களிலெல்லாம் பரவி இருக்கிறார்கள் என்பதை நான் நன்கறிவேன்.

இந்தப் புத்தகத்தின் விஷயமான திவ்யப் பிரபந்தத்தைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். முதல் முதலில் தமிழ்க் கவிதையின் இன்பத்தை நான் உணரும்படி செய்தவை ஆழ்வார் பாசுரங்களே யாகும். நான் பத்து வயதுச் சிறுவனாய் இருந்தபோது. "ஸ்ரீகிருஷ்ண சைதன்ய ஸ்வாமிகள் சரித்திரம்" என்ற ஒரு தமிழ் நூல் வெளியாகியிருந்தது, அது வங்காளத்தில் நானூறு வருஷங்களுக்கு முன் வாழ்ந்த ஒரு வைஷ்ணவப் பெரியாரின் சரித்திரம்,

அவரை ஸ்ரீ கிருஷ்ணனின் அவதாரம் என்றே கொண்டாடு கிறவர்கள் இன்றும் வங்காளத்தில் ஏராளமாக உண்டு. அந்த நூலைத் தமிழில் எழுதிய ஆசிரியர் இடையிடையே திவ்யப் பிரபந்தத்திலிருந்து சில பாடல்களை எடுத்துப் போட்டிருந்தார். அவற்றில் **"ஆனாத செல்வத்து," "கம்ப மதயானை," "ஆல மாமரத்தின்," "கொண்டல் வண்ணனை"** என்று தொடங்கும் நாலு பாடல்களையும் நான் எத்தனை தடவை வாசித்திருப்பேன் என்று சொல்ல முடியாது. பள்ளிக்கூடங்களில் பரீட்சைக்காக நெட்டுருச் செய்த எத்தனையோ செய்யுள்களும் பாடல்களும் மறந்துபோய் விட்டன. ஆனால் இந்த நாலு பாடல்களும் என் மனசை விட்டு அகலவே இல்லை.

இவ்வாறு ஆழ்வார் பாசுரங்களினால் தமிழ்க் கவிதையில் ஏற்பட்ட ஆர்வம், பின்னால் பாரதியார் பாடல்களினால் வளர்ந்தது. கடைசியில் கம்பனுக்கு வந்து பூரணமடைந்தது

தமிழில் கவிதைச் சுவையையும், பக்தி ரஸத்தையும் அநுபவிக்க விரும்புகிறவர்கள் ஆழ்வார்களின் பாசுரங்களைப் படிக்காமலிருக்க முடியாது. அப்படி அப் பாசுரங்களைப் படித்து நாம் இன்புறுவதற்கு, பி. ஸ்ரீ. யின் இந்தக் கட்டுரைகள் ஒரு சிறந்த துணையாகும் என்பதில் சந்தேகமே இல்லை.

சென்னை<br>20—9—38

**ரா. கிருஷ்ணமூர்த்தி**

# பொருளடக்கம்

# பிழை திருத்தம்

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 399 | வகுண | வகுள |
| 401 | ,, | ,, |
| 403 | ,, | ,, |
| 405 | ,, | ,, |
| 407 | ,, | ,, |
| 409 | ,, | ,, |

# திவ்யப் பிரபந்த ஸாரம்

## 1. யோகி பக்தரானது

யோகி தியானத்திலே ஆழ்ந்து உலகத்தை மறந் திருக்கிருர். சிற்சில சமயங்களில் ஞாபகம் வந்தபோது சீடர்களை அழைத்து, 'நீங்களும் இந்த இரகசிய வித்தையைக் கற்றுக்கொண்டு துன்ப மயமான வாழ்க்கையை விட்டுப் பரமானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருங்கள்' என்று சொல்லிக்கொண்டிருக்கிருர். ஒரு நாள் சமாதியிலிருந்து விழித்துக்கொண்டபோது இவரைச் சீடர்கள் நெருங்கி, 'சுவாமி! பகவானுக்குச் செய்ய வேண்டிய கைங்கரியத்தையும், கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் மக்களையும் இப்படி மறந்து, தாங்கள் மாத்திரம் ஆனந்தத்தில் அமிழ்ந்திருக்கப்போகிறீர் களா?' என்று கேட்கிருர்கள்.

கொஞ்ச நேரம் இவர் பதில் சொல்லவில்லை; கண்களை மூடிக்கொள்கிருர். 'மறுபடியும் சமாதிக்குள் ஒடுங்கிப் போய்விட்டார்; ஐயோ, எங்களை மறந்து பேரின்பத்தில் முழுகிவிட்டார்!' என்று அவர்கள் தங்களுக்குள்ளே பேசிக்கொள்கிருர்கள்.

குருவோ விரைவில் கண்களை மலர விழித்துக் கொண்டு 'தவருன வழியில் சென்ற என்னைச் சரி ணியில் திருப்பிவிட்டீர்கள். உங்களைப்போன்ற சிஷ்ய ரத்தினங்கள் இருக்கும்போது எனக்கு என்ன குறை? பகவானுடைய அடியாருள் ஒருவனுயிருந்து பணி செய்து கொண்டிருப்பதுதான் என் கடமை. அந்தக் கடமையைச் செய்து சுற்றிலுமுள்ள துன்பத்தைக் குறைக்க முயலாமல், கண்மூடி மௌனியாகி யோக சமாதிக்குள் ஒளித்துக் கிடந்து சுகம் பெற முயல்வது ஒருவகையில் தன்னலமேயாகும்' என்று ஒப்புக்கொள்கிருர்.

பிறகு, இவர் பாகவத தர்மத்தைப் பரப்பி, அறியாமையில் கிடக்கும் மக்களுக்கு வழிகாட்ட முயல வேண்டுமென்று சங்கற்பம் செய்துகொள்கிருர்.

இந்த யோகியைத் தான் ஸ்ரீநாதமுனி என்று சொல்லுகிருர்கள். ஆழ்வார்களுக்குப் பின்னுள்ள ஸ்ரீவைஷ்ணவ ஆசாரிய பரம்பரையில் இவரே முதலாவது ஆசாரியர். யோக வித்தையின் இரகசியங்களை அறிந்திருந்ததுபோல் இவர் சங்கீத மர்மங்களையும் அறிந்து அந்தக் கலையிலும் நிபுணராக விளங்கினுர்.

ஒரு சமயம் சோழ மன்னனுடைய சபையில் இரண்டு பெண்கள் வந்து பாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருத்தி சாஸ்திர விதிகளுக்குப் பொருத்தமாக எத்தனையோ 'சங்கதி'களை அமைத்து ராகங்களை எடுத்து விஸ்தரித்துக் கொண்டிருந்தாள். மற்றவளோ பாட்டும் பொருளும் பண்ணும் ஒன்ருேடொன்று இசைந்து பொங்கி ஒழுகிய இசையிலே லயித்து விசேஷ உணர்ச்சியோடு பாடிக் கொண்டிருந்தாள்.

சபையிலே இருந்த கலைஞர்கள் இவள் கானத்தை ஒப்புக்கொள்ளவில்லை. இலக்கணப்படி அசுர சாதகம் பண்ணிப் பாடிய பெண்மணியையே 'சபாஷ்!' என்று மெச்சினார்கள். அரசனும் அவளையே சம்மானித்தான்.

சம்மானிக்கப் பெறாதவள் மிகவும் மனம் நொந்து இராஜ சபையை விட்டு நீங்கித் தல யாத்திரை செய்து கொண்டே கோவில்கள் தோறும் பாடிக்கொண்டு போனாள். புலவர்களும் அரசர்களும் ரஸிக்க முடியாத தன்னுடைய கானத்தைத் தெய்வத்தின் திருச் செவியிலேதான் போட வேண்டுமென்று துணிந்தாள். கடைசியாக, நாதமுனியின் இருப்பிடமான வீர நாராயணபுரத்திற்கு வந்து அவ்வூர்க் கோவிலில் பாடிக்கொண்டிருந்தாள்.

இங்கே அதைக் கேட்டு ஆனந்தமடைந்த நாத முனி, 'ராகமும் தாளமும் பாவத்தை எவ்வளவு நன்றாக வெளியிடுகின்றன! உள்ளத்திலிருக்கும் தெய்விக சௌந்தரியத்தையும் உலகத்திலிருக்கும் தெய்விக சௌந்தரியத்தையும் எவ்வளவு லளிதமாகக் குறிப்பிடு கிறது இவளுடைய சங்கீதம்! உண்மையில், இது மனுஷ்ய கானமன்று; தேவ கானமென்றே சொல்லத் தக்கது' என்று தமக்குள் தாமே சொல்லிக்கொண்டார். பிறகு, தம்முடைய கருத்தைத் தெரிவித்துத் தாம் அந்த இசையை உகந்து கொண்டாடியதற்கு அறிகுறியாக அவளுக்கு அந்தக் கோவிலில் மரியாதைகள் செய் வித்தார்.

அவளுடைய வித்தையை இவர் வியந்ததுபோல் இவருடைய ரஸிகத் தன்மையைக் குறித்தும் அவள்

ஆச்சரியமடைந்தாள். இந்தப் பெரியார் அப்படிப் பாராட்டியதே தன்னுடைய வித்தைக்குப் போதுமான வெகுமதியென்று ஆனந்த மடைந்தாள்.

உடனே புறப்பட்டு அவள் மறுபடியும் சோழ மன்னனிடம் போய், 'மகா ராஜாவே! என்னுடைய சங்கீதத்தை அறியக்கூடிய ஒருவரைக் கண்டுபிடித்து விட்டேன்' என்று பெருமை பாராட்டிக் கொண்டாள். அரசன் நாதமுனியை வரவழைத்து இவர் மூலமாக, 'உண்மையான சங்கீதம் எல்லையில்லாத தெய்விக உணர்ச்சிகளை எழுப்பித் தேவகானமாக உயர்ந்து விளங்கக் கூடியது' என்ற இரகசியத்தை ஒருவாறு தெரிந்துகொண்டான்.

நாதமுனி ஒரு சமயம் குடும்ப சகிதமாகப் பாரத தேசமெங்கும் யாத்திரை செய்யப் புறப்பட்டார். வட மதுரை, பிருந்தாவனம், துவாரகை, கோவர்த்தனம், அயோத்தி, பதரிகாச்ரமம் முதலான, வட திசையிலுள்ள, க்ஷேத்திரங்களைத் தரிசித்துக் கொண்டு காசி மார்க்கமாகத் திரும்பி அகோபிலம், திருப்பதி, காஞ்சீ புரம், ஸ்ரீரங்கம் முதலான தலங்களையும் கண் குளிரக் கண்டு, கும்பகோணத்தில் ஆராஅமுதன் என்ற சாரங்க பாணிப் பெருமாளை மனமார வாயார வாழ்த்தி வழி பட்டுத் தம்முடைய ஊருக்கு வந்து சேர்ந்தார்.

ஊரில் பகவத் கைங்கரியம் பாகவத கைங்கரியம் முதலியவற்றைக் குறைவற நடத்திக்கொண்டு, வித் வான்களை அடிக்கடி சபை கூட்டி வேத வேதாந்த விஷயங்களைக் குறித்தும், பல வேறு சாஸ்திரங்களைக் குறித்தும் விவகரித்து அவற்றின் ஸாரமான உண்மை களைக் காண முயன்று வந்தார். அப்படி யிருக்கையில்

ஒரு நாள் இவ்வூர்க் கோவிலில் யாத்திரிகராக வந்த சில பக்தர்கள்,

*ஆரா அமுதே! அடியேன்*
*உடலம் நின்பால் அன்பாயே.*
*நீராய் அலைந்து கரைய*
*உருக்கு கின்ற நெடுமாலே!*

என்று பாடத் தொடங்கினார்கள்.

அப்போது நாதமுனியும் சுவாமி தரிசனத்திற்குப் போயிருந்தார். பாட்டின் சுவையும் பண்ணழகும் இவரை வசீகரித்தன.

'ஆரா அமுதே!' என்று அவர்கள் தொடங்கியதும், சமீபத்தில் தாம் தரிசித்த அந்தப் பெருமானுடைய நினைவு வந்தது. 'ஆ, என்ன லாவண்யமான தமிழ்ப் பெயர்! பாட்டோடும் சங்கீதத்தோடும் எவ்வளவு நன்றாக இசைந்து வருகிறது! "எவ்வளவு அனுப வித்தாலும் திருப்தி பிறவாத அமிர்தமே இறைவன்" என்ற ஆழ்ந்த பொருளை எவ்வளவு நன்றாக வெளி யிடுகிறது!' என்று எண்ணமிட்டார்.

பாடினவர்களும் உருக்கமாகப் பாடினார்கள்; கேட்டுக் கொண்டிருந்தவரோ அவர்களைக் காட்டிலும் உருகி ஈடுபட்டார்.

*சீரார் செந்நெல் கவரி வீசும்*
*செழுநீர்த் திருக்குடந்தை*
*ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்!*
*கண்டேன், எம்மானே!*

[குடந்தை—கும்பகோணம். ஏர் ஆர்—அழகு நிறைந்த. எம்மான்—எம்முடைய சுவாமி.]

என்று அவர்கள் பாடியபோது, நீர்வள நிலவளம் நிறைந்த கும்பகோணத்தில் கோவில்கொண்டிருக்கும் அமுதனைக் குறித்த பாடல்தான் அது என்பது நிச்சயமாயிற்று.

அவர்கள் மீண்டும் பாடியபோது, தாம் அண்மையில் தரிசித்த திருக்குடந்தை அப்படியே கண்முன் வந்துவிட்டது:

*செம்மா கமலம் செழுநீர் மிசைக்கண்*
*மலரும் திருக்குடந்தை*
*அம்மா, மலர்க்கண் வளர்கின் றனே!*
*என்நான் செய்கேனே?*

[செம்மா கமலம்—சிவந்த பெரிய தாமரை. மிசை—மீது. அம்மா—ஆச்சரியக் குறிப்பு.]

'செந்தாமரைகளெல்லாம் மலர்ந்திருக்கின்றன; ஆனால் என் அமுதனுடைய கண்களாகிய ஒப்பற்ற இரண்டு தாமரைகள் மட்டும் என்னை நோக்கி மலரவில்லையே!' என்று கதறிய இதயம் தம்முடைய இதயம் தானோ என்றுகூட நாதமுனிக்குச் சந்தேகம் உண்டாகிறது. அவர்களோ,

*என்நான் செய்கேன்? யாரே களைகண்?*
*எனைஎன் செய்கின்றாய்?*
*உன்னால் அல்லால் யாவ ராலும்*
*ஒன் றும் குறைவேண்டேன்!*

[களைகண்—கதி.]

என்று பாடுகிறார்கள்.

மேலும் பாடுகிறார்கள். நாதமுனி மெய்ம்மறந்து கேட்கிறார்.

உலப்பி லானே ! எல்லா உலகும்
உடைய ஒருமூர்த்தி
நலத்தால் மிக்கார் குடந்தைக் கிடந்தாய் !
உன்னைக் காண்பான்நான்
அலப்பாய் ஆகா சத்தை நோக்கி
அழுவன், தொழுவனே

[உலப்பிலானே—(குணங்களுக்கும் சக்திகளுக்கும்) குறைவில்லாதவனே. அலப்பாய்—மனக் கலக்கமாய்.]

என்றும்,

அழுவன் தொழுவன், ஆடிக் காண்பன்,
பாடி அலற்றுவன் ;
தழுவல் வினையால் பக்கம் நோக்கி
நாணிக் கவிழ்ந்திருப்பன் !

[தழு வல்வினை—தழுவு வல்வினை; (அதாவது) விடாமல் தழுவி நிற்கிற வல்வினை.]

என்றும்,

களைவாய் துன்பம், களையா தொழிவாய் ;
களைகண் மற்றிலேன் !

என்றும் மனம் கனிந்து பாடியபோது, முனிவருக்குத் தம்முடைய அனுபவங்கள்தாம் அப்படி யெல்லாம் அந்தப் பாடல்களில் விவரிக்கப் பெற்றிருப்பதுபோலத் தோன்றியது,

பாடல்களினிடையே,

திசைவில் வீசும் செழுமா மணிகள்
சேரும் திருக்குடந்தை

[வில்—ஒளி. மணிகள்—இரத்தினங்கள்.]

என்றும்,

*வாழ்தொல் புகழார் குடந்தை*

[தொல்—பழமையான. புகழார்-புகழ் நிறைந்த.]

என்றும், அந்த க்ஷேத்திரத்தின் பொருள் வளத்தை யும் கலை வளத்தையும் வருணித்து, அந்த மூர்த்தியை,

*அரியே றே; என் அம்பொற் சுடரே!*
*செங்கட் கருமுகிலே!*
*எரியே! பவளக் குன்றே! நாற்றோள்*
*எந்தாய்! உனதருளே!*

என்று செல்வத்துள் செல்வமாகவும்,

*யாழின் இசையே! அமுதே! அறிவின்*
*பயனே! அரியேறே!*

என்று கலைகளின் ஸாரமாகவும் குறிப்பிட்டபோது, நாதமுனியின் உள்ளம் அப்படியே மோகித்துப் போய் விடுகிறது.

பக்தர்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஒன்பது பாடல் கள் பாடியபின்,

*வாரா வருவாய்; வரும்என் மாயா!*
*மாயா மூர்த்தியாய்,*
*ஆரா அமுதாய் அடியேன் ஆவி*
*அகமே தித்திப்பாய்;*
*தீரா வினைகள் தீர என்னை*
*ஆண்டாய்! திருக்குடந்தை*
*ஊரா? உனக்(கு)ஆட் பட்டும் அடியேன்*
*இன்னம் உழல்வேனோ?*

என்று அனுபவ ரஸத்தோடு அகத்தில் விளங்கும் உண்மையொளி குரலிலே பிரதிபலிக்கப் பாடுகிறார்கள்.

ஓர் இன்னிசைக் கடல் அப்படியே பொங்கி அலை மேல் அலை யெறிவதாகவும், அதிலே தாம் ஆத்ம தாபம்

தீர முங்கி முழுகிக் கொண்டிருப்பதாகவும் உணர்கிறார் நாதமுனி. பாடல்களை அனுபவித்துக் கொண்டே யிருக்க வேண்டுமென்ற ஆசை உண்டாகிறது. ஆனால் அடுத்த பாட்டைப் பாடி அவர்கள் முடித்து விடுகிறார்கள்.

அந்தப் பாட்டில்,

*...........குருகூர்ச் சடகோபன்*
*குழலின் மலியச் சொன்ன ஓரா*
*யிரத்துள் இப்பத்தும்*

[குழலின்-புல்லாங்குழல் ஓசையைக் காட்டிலும. மலிய-(இங்கே) இனிமை அதிகரிக்க.]

என்ற பகுதியை நாதமுனி நன்ருகச் செவி சாய்த்துக் கேட்டார்.

அந்தத் தொண்டர்களை நோக்கி, 'இந்தப் பிரபந்தம் முழுதும் உங்களுக்கு வருமோ?' என்று வினவினர். அவர்கள் அந்தப் பாடல்களுக்குமேல் தங்களுக்குத் தெரியாதென்று பதில் சொன்னார்கள்.

பிறகு, நாதமுனி அவர்களை உபசரித்து அனுப்பி விட்டு, அந்த ஆயிரம் பாடல்களையும் தேடிக் கண்டு பிடிக்க வேண்டுமென்று தீர்மானித்தார். சடகோபர் என்ற நம்மாழ்வார் அவதரித்த—ஆழ்வார்திருநகரி யென்று இப்போது அழைக்கப்பெறும்—குருகூருக்குப் போனர்.

நம்மாழ்வாரின் சிஷ்யராயிருந்த மதுரகவி யாழ்வாரின் தொடர்பு பெற்றிருந்த ஒருவரைச் சந்தித்து, அவருடைய உதவியால் தமக்குக் கிடைத்த நம்மாழ்வார்-பாடல்களையும், வேறு ஆழ்வார்கள் பாடிய பாடல்களையும் நாலாயிரப் பிரபந்தமாகத் தொகுத்தார்.

இந்தப் பிரபந்தத்தைத் தான் திவ்யப் பிரபந்த மென்றும், திராவிட வேதமென்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கொண்டாடு கிருர்கள்.

நாதமுனி இந்தப் பாடல்களுக்கு ராக தாளங் களே அமைத்து அவற்றைச் சீடர்களுக்குக் கற்பித் தார். திவ்யமான கானத்தில் அமைந்த திவ்யப் பிரபந்தம் தமிழ்நாடெங்கும் விரைவில் பரவத் தொடங் கியது.

இப்படிப்பட்ட பாடல்களே ஆனந்தமாகப் பாடிக் கொண்டு கடவுளுக்கும் அடியார்களுக்கும் பணி செய்து வாழ்வதைக் காட்டிலும் மேலான இன்பம் இல்லே யென்பது ஸ்ரீவைஷ்ணவர் கொள்கை.

---

# 2. வேதம் தமிழ் செய்தது

பகவானுடைய தோள்கள் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம் செய்ததில் எத்தனையோ வெற்றிகள் அடைந்திருக்கின்றனவாம். பாற்கடல் சுழன்று நுரை சிந்திக் கதறும்படி மந்தர மலையை மத்தாக நட்டுக் கடைந்து தேவர்களுக்கு அமிர்தத்தை வழங்கிய வெற்றி. தம்மையே வணங்கும்படி உலகங்களை யெல்லாம் ஹிம்ஸித்த அசுர சக்கரவர்த்தியான இரணியனை யும், ராட்சஸ சக்கரவர்த்தியான ராவணனையும் வதஞ் செய்த வெற்றி. கிருஷ்ணுவதாரம் முதலானவற்றில் தீமையை அழித்து நன்மையைப் பாதுகாத்த வெற்றி.

ஆனால், இப்படிப்பட்ட வெற்றிகளினாலெல்லாம் அடையாத பூரிப்பை அந்த அழகிய தோள்கள் ஒரே ஒரு சந்தர்ப்பத்தில் அடைந்துவிட்டனவாம்.

'அது எப்படிப்பட்ட மகத்தான சந்தர்ப்பமோ?' என்று அதிசயிக்கிறீர்களல்லவா?

இந்த இரகசியத்தைச் சுமார் எழுநூறு ஆண்டு களுக்கு முன் வாழ்ந்த ஒரு புலவர் மூலமாக அறிந்து கொள்வோம்:

*அருமறை துணிந்த பொருள்முடிவை இன்சொல்-*
*அமுதொழுகு கின்ற தமிழினில் விளம்பி*
*யருளிய சடகோபர் சொற்பெற்(று) உயர்ந்தன,*

*அரவணை விரும்பி அறிதுயில் அமர்ந்த*
*அணிதிரு அரங்கர், மணிதிகழ் முகுந்தர்,*
*அழகிய மணவாளர் கொற்றப் புயங்களே!*

[அருமறை—அறிந்து கொள்வதற்கு அரிய வட மொழி வேதங்கள், உபநிஷதங்கள். பொருள்—உண்மைப் பொருள். சடகோபர்—நம்மாழ்வார். அரவணை—ஆதிசேஷ சயனம். அறிதுயில்—எல்லாவற்றையும் அறிந்து கொண்டே உறங்குவதுபோலிருக்கும் யோக நித்திரை. மணி திகழ்—நீலமணிபோல விளங்குகிற. கொற்றப் புயங்கள்—வெற்றியையுடைய தோள்கள்.]

நாதமுனியை வசீகரித்த ஆழ்வாரின் பாடல்களைக் கேட்டுத்தான் அப்படிப் பூரித்துப்போய் விட்டானும் இறைவன். ஏன்? வேத வேதாந்தங்க ளெல்லாம் துணிவோடு தத்துவப் பொருளின் முடிவைச் சுட்டிக் காட்டுகின்றன. ஆனல், இமயமலையின் உயர்ந்த சிகரத்தை அடைவதைக் காட்டிலும் அருமையானது உண்மைப் பொருளின் சிகரத்தை எட்டுவது: அவ்வளவு செங்குத்தான—பனிமூடிய—பாதை ஞான மார்க்கம். நம்மாழ்வாரோ அதே சிகரத்திற்கு ஒரு குறுக்குவழி கண்டுபிடித்துவிட்டாராம்.

இந்தக் குறுக்குப் பாதை ராஜபாதையாகவும் இருக்கிறதாம். பாடிக்கொண்டே போகலாம்: இல்லை; இந்தப் பாதை வழியாகத் 'தமிழ் வேதம்' என்ற ஆழ்வார் பாடல்களே ஒரு திவ்ய விமானமாக நம்மைத் தூக்கிப் போகுமாம்.

எவ்வளவோ உயர்ந்த—அறிவினல் தெரிந்து கொள்வதற்கும் அருமையான—தத்துவார்த்தங்களை யெல்லாம் நம்மாழ்வார் தம்முடைய மதுரமான தமிழ்க் கவிதையில் அறிவுக்கும் உணர்ச்சிகளுக்கும் ஒருங்கே அமுதமாகும்படி விளக்கி யிருக்கிருர். அந்தப் 'பொருள்

முடிவை' 'அமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பி'ஞர் என்று சொல்வது எவ்வளவு ரஸமா யிருக்கிறது!

சிலருக்கே சாத்தியமா யிருந்த வேதாந்தத்தை ஆழ்வார் சுவைக் களஞ்சியமான கலையாக்கிப் பலருக்கும் எடுத்துப் பரிமாறி விட்டாராம். 'பகவானுடைய தோள்கள் ஏதோ ஒரு புதிய வெற்றி அடைந்ததுபோல் பூரித்துப் புளகாங்கிதமானதற்கு இதுதான் காரணம்!' என்று பாடுகிருர் திவ்ய கவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்.

வட இந்தியா வேதாந்தத்தின் பிறப்பிடம்; தென் இந்தியாவோ அதைக் கலையாக்கியும் உரை கண்டும் உபகரித்த வளர்ப்புப் பண்ணை. வேதாந்தத்தைக் கலைகளாக்கியவர்கள் நம்மாழ்வார் முதலான ஆழ்வார் களும், சிவனடியார்களான நாயன்மார்களும் ஆவர். வேதாந்த நூல்களுக்கு உரை கண்டவர் சங்கரர், ராமாநுஜர் முதலியோர்.

உபநிஷதங்கள் வேதாந்த ஞானத்தின் மூல பொக்கிஷம். வேதாந்த நூல்கள் பலவாயினும் உப நிஷதங்களையே 'வேதாந்தம்' அல்லது 'வேதத்தின் முடிவு' என்று விசேஷமாகக் குறிப்பிடுகிருேம். சிதறிக் கிடக்கும் உபநிஷத வாக்கியங்களை ஒருவாறு கோத்துக் கட்டும் நூல்தான் வேதாந்த சூத்திரம். உபநிஷதம், வேதாந்த சூத்திரம் என்பவற்ருேடு பகவத்கீதையையும் சேர்த்து, 'இவை இந்து மதத்தின் மூன்று முக்கிய மான வேதாந்த நூல்கள் (ப்ரஸ்தான த்ரயம்)' என்று கூறுவதுண்டு. ஆழ்வார்களுடைய பாடல்களில் உப நிஷதக் கொள்கைகளும் கருத்துக்களும் ஆழ்வார்களு

டைய சொந்த அனுபவங்களாகித் தமிழிலே மாறி உரு வெடுத்து எல்லாருக்கும் உரியனவாகின்றன.

இவர்களுடைய பாடல்களிலே நாம் உண்மை யாகக் காண்பது உபநிஷதங்களின் ஸாராம்சத்தை வாழ்க்கையிலே பிரதிபலிக்கச் செய்துகொண்ட இவர் களுடைய இதயம்தான். வேதத்தைத் தமிழ் செய்தவர் ஆழ்வார் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்லுகிறார்கள்: இதனால் நாலாயிரப் பிரபந்தந்தை வேதத்தின் மொழி பெயர்ப்பென்றோ, வேதாந்த நூல்களின் மொழி பெயர்ப்பென்றோ கருதுவது தவறு.

வேத-வேதாங்க - வேதாந்தங்களின் ஸாரமான ஸநாதன தர்மத்தை உணர்ந்து ஒழுகிய பெரியவர் களுடைய மன எழுச்சி, அனுபவம், ஆனந்தம், ஆத்ம நிலை முதலியவற்றின் மொழி பெயர்ப்பே திவ்யப் பிரபந்தம். எனவே, ஆழ்வார்கள் அருளிச் செய்த இத் தமிழ் வேதத்தைக் கலாரஸத்தோடு கூடிய ஒரு புதிய சிருஷ்டியாகவே மதிக்கவேண்டும்.

இசையோடு பாடுகிறவர்கள் இப்பாடல்களை அநா யாசமாய், ஆனந்தமாய் அனுபவிப்பார்கள். 'இப்படி பகவத் ஸ்வரூப—ரூப—குண—*விபூதிகளை............ அனுபவித்து அது உள்ளடங்காமை வழிந்து புறப் பட்ட சொல்லாயிற்று இப் பிரபந்தம்' என்பது "† ஈடு" வியாக்கியானம்.

சூரியோதய காலத்தில் பறவைகள் உல்லாசமாகப் பாடிக் கொண்டே சூரியனை வரவேற்கின்றன. ஆழ்

---

* விபூதி = ஐசுவரியம்.

† இந்த வியாக்கியானம் நம்பிள்ளை உபதேசிக்க வடக்குத் திருவீதிப் பிள்ளை எழுதியது.

லார்களும் ஞான சூரியனுகிய இறைவனைத் தங்கள் இதயத்திலே குதூகலமாக வரவேற்றுப் பாடுகிருர்கள். 'கடவுள் ஒருவன் உண்டு; அவனே இந்த உலகம் முதலிய யாவையும் படைத்து இவைகளை யெல்லாம் பேணி வளர்ப்பவன்; அவன் அன்புருவாகிய அழகன்' என்றெல்லாம் எண்ணி யெண்ணி அந்தக் கடவுளு டைய குணங்களையும் எல்லையில்லாச் செல்வச் சிறப்பை யும் அனுபவித்துப் பரவசமடையும்போது, அந்த அனுபவம் தடுக்க முடியாத உத்ஸாக வேகத்தோடும் கற்பனு சக்தியோடும் வெளிப்பட்டுப் பாட்டாகிறது என்பது மேலே குறிப்பிட்ட வியாக்கியானத்தின் கருத்து.

இப்படிப்பட்ட பாடல்கள் சங்கீதம் என்ற வசிய சக்தியோடு சேரும்போது, உணர்ச்சிக்குள்ளும் உயிர்க் குள்ளுமே பிரவேசிப்பதுபோலத் தோன்றி நம்மைப் புளகாங்கித மடையச் செய்கிறது. இதயத்தில் அன் பைத் தளிர்க்கச் செய்கிறது; அலுப்பையும் சலிப்பையும் மாற்றி வாழ்க்கைக்கு ஒரு புதிய ஜீவசக்தி தருகிறது.

இவற்றைக் 'காதலாகிக் கசிந்து' பாடுவோர் தாங் களும் எப்படியோ கடவுளை நெருங்கி யிருப்பதாக உணர்கிருர்கள்.

உபநிஷதங்களில் 'பிரமம்' என்றும், 'ஆத்மா' என்றும் பிரஸ்தாபிக்கப்படும் பரம்பொருள் பகவத் கீதையில் அப்படிச் சொல்லப்படுவதோடு 'பகவான்' என்றும், 'விஷ்ணு' என்றும், 'கிருஷ்ணன்' என்றும் அழைக்கப்படுகிறது. ஆழ்வார்களும் பரம்பொருளை விஷ்ணுவாகவும், அவருடைய அவதாரமூர்த்திகளாக வும் வழிபடுகிருர்கள்.

உபநிஷதங்களில் விசேஷமாகச் சொல்லப்படுவது ஞான மார்க்கம். பகவத் கீதையில் விசேஷமாகச் சொல்லப் படுவது கர்ம மார்க்கம்—அதாவது, பற்றில்லாமல் கடமையைச் செய்யும் வழி. நாலாயிரப் பிரபந்தத்தில் விசேஷமாகச் சொல்லப்படுவதோ பக்தி மார்க்கத்திலும் சரணாகதி நெறி.

உபநிஷதங்களை வழிகாட்டியாகக் கொண்டு ஆழ் வார்கள் பரமபக்தர்களாக வாழ்ந்தார்கள்; அந்த வாழ்க்கையே அவர்களுடைய கவிதையாகப் பரிணமித் திருக்கிறது.

*மிக்க இறைநிலையும், மெய்யாம் உயிர்நிலையும்,*
*தக்க நெறியும், தடையாகித்—தொக்கியலும்*
*ஊழ்வினையும், வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்*
*யாழின்இசை வேதத் தியல்.*

[இறை—கடவுள். தொக்கியலும்—திரண்டு வரு கிற. ஊழ்வினை—பழவினை. வாழ்வினை—வாழும் முறை. குருகையர்கோன்—நம்மாழ்வார் ]

என்று ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களில் ஒருவர் கூறு கிறார்.

தெய்வத்தின் நிலையையும், ஜீவாத்மாவின் நிலை யையும், கடவுளைச் சரணமாக அடையும் பக்தி நெறி யையும், தடையாகத் திரண்டு வரும் பழவினையையும், அந்த விரோதியை வென்று பகவானுடைய அருள்-நிழலிலே அவன் உகந்தபடி கைங்கரியம் செய்து கொண்டு அடியாரோடு கூடி வாழும் வாழ்க்கைமுறை யையும், கண்ணாடியில் காட்டுவதுபோல் பிரதிபலித்துக் காட்டும் ஆழ்வார் பாடல்களை 'யாழின் இசைவேதம்'—

அதாவது, யாழின் இசையிலே அமையத்தக்க வேதம்—என்று கருதினார்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாட்டொன்றுக்கு வியாக்கியானம் செய்யும்போது, ' "விக்கிரகமில்லை, குணமில்லை, விபூதியில்லை என்கிற சூனியவாதிகள் சஞ்சரிக்கிற ஸம்ஸாரத்திலே இப்படி விக்கிரகத்தை ஆதரித்த இவர்களை உத்தேச்யராகப் பெற்றோமே!" என்று ஜீயர் அருளிச் செய்தார்'—என்பது பெரிவாச்சான்பிள்ளை வாக்கு.

இத்தகைய கொள்கையுடையவர்கள் வேதாந்த சிந்தனைகளை, அருமறை துணிந்த பொருள் முடிவைக் கலையாக்கி மத மாக்கிக் கொண்டார்கள் என்று கூறுவது பொருத்தம்தானே.

# 3. தமிழும் வைஷ்ணவமும்

கோவலன் தன் மனைவி கண்ணகியை மதுரைமா நகரிலே இடைச்சேரியிலுள்ள ஒரு மனையில் விட்டு, அவளுடைய சிலம்புகளில் ஒன்றை விற்கப்போய்க் கொலையுண்டான் என்பது பலரும் அறிந்த கதை. அப்போது அந்தச் சேரியிலே பலவிதமான துர் நிமித்தங்கள் தோன்றினவாம். உடனே சாந்தியாக. ஆய்சியர் தங்கள் குலதெய்வமான கிருஷ்ண பகவானுடைய பால சரித நாடகங்களில் ஒன்றான குரவைக் கூத்தைக் கண்ணகி காண ஆடினார்கள்.

வட்ட வடிவமாகக் கைகோத்துக் கொண்டு ஆடும் போதே, அந்த ஜகன்மோகன பால கோபாலனுடைய தெய்விக நிலையையும், அதிசய எளிமையையும்,

*பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்*
*ஈங்குநம் ஆனுள் வருமேல், அவன்வாயில்*
*ஆம்பலந் தீங்குழல் கேளாமோ, தோழீ!*

[ஆன்—பசுக்கூட்டம். ஆம்பல்—ஒரு பழைய தமிழ்ப் பண். தீங்குழல்—இனிய புல்லாங்குழலோசை. கேளாமோ—கேட்போம்.]

என்று இவ்விதமாகப் பாடத் தொடங்குகிறார்கள்.

'பசுக்கூட்டமுள்ள இந்த இடத்திற்கு வருவானே; வந்தால், தோழீ! அந்தப் புல்லாங்குழலில் அந்த வசீகரமான ராகத்தைக் கேட்போம்' என்று பாடிப் புகழ்ந்த பின், ஸர்வ சக்தியுமுள்ள அந்தப் புருஷோத்த

மனுடைய குழந்தைப் பருவத்தை ஞாபகப் படுத்திக் கொண்டு,

*வடவரையை மத்தாக்கி, வாசுகியை நாணுக்கி,*
*கடல்வண்ணன்! பண்டொருநாள் கடல்வயிறு*
*கலக்கினையே;]*
*கலக்கியகை யசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை;*
*மலர்க்கமல உந்தியாய்! மாயமோ? மருட்கைத்தே!*

[வரை—மலை. நாண்—கடைகயிறு. கட்டுண் கை—கட்டுண்ட கை. மருட்கைத்தே—ஆச்சரியமாகவும் மயக்க மாகவும் இருக்கிறதே.]
என்று பாடுகிறார்கள்.

மேலும் ஈடுபடுகிறார்கள் தெய்வக் குழந்தையின் திருவிளையாட்டிலே:

*'அறுபொருள் இவன்'என்றே அமரர்கணம் தொழுதேத்த,*
*உறுபசிஒன்(று) இன்றியே உலகடைய உண்டனையே;*
*உண்டவாய் களவினால் உறிவெண்ணெய் உண்டவாய்;*
*வண் துழாய் மாலையாய்! மாயமோ? மருட்கைத்தே!*

[அறு பொருள்—தீர்ந்த பொருள்; பரம்பொருள். அமரர்கணம்—தேவர் கூட்டம். உறு—மிக்க. அடைய—அடங்கலும். வண் துழாய்—வளப்பமான துளசி.]

மூன்று உலகமும் இருள் தீர்ந்து வாழும்படி நடந்த திருவடிகளால் அதே குழந்தை பின்னாளில் தன்னை நம்பிய பஞ்ச பாண்டவர்களுக்குத் தூது நடந்ததாம். அப்படிப் பட்ட சீலத்தை,

*திரண்டமரர் தொழுதேத்தும் திருமால்! நின் செங்கமல*
*இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே;*
*நடந்தஅடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தஅடி;*
*மடங்கலாய்! மாறட்டாய்! மாயமோ? மருட்கைத்தே!*

[மடங்கலாய்—(நர)சிங்கமாய் அவதரித்தவனே. மாறு—பகை. அட்டாய்—அழித்தவனே.]

இந்தத் திருவடிகள்தாம் ராமாவதாரத்திலே காடு களை மிதித்துச் சிவந்து போயினவாம், துஷ்ட நிக்கிரகம் செய்வதற்காக. இந்த வீர மூர்த்தியைக் குறித்தும் ஆய்ச்சியர்கள்,

*மூவலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்*
*தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து,*
*சோஅரணும் போர்மடியத் தொல்இலங்கை கட்டழித்த*
*சேவகன்சீர் கேளாத செவிஎன்ன செவியே!*
*திருமால்சீர் கேளாத செவிஎன்ன செவியே!*

(முறை நிரம்பா வகை—குறைபடும்படி. சேப்ப—சிவக்க. சோ—அசுரர் நகரம். கட்டு—காவல்.]

என்று பாடுகிறார்கள்.

மறுபடியும் தங்களுக்கு உகப்பான கிருஷ்ணவ தாரத்திற்கே வந்து,

*மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்*
*கடந்தானை, நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்*
*படர்ந்(து) ஆரணம்முழங்கப் பஞ்சவர்க்குத் தூது*
*நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே!*
*நாராயணாஎன்னா நாவென்ன நாவே!*

[தாழும்—தங்கிய. ஆரணம்—வேதம்.]

என்று குதூகலமாக ஆடிப் பாடிக் குரவைக் கூத்தை முடிக்கிறார்கள்.

ஆழ்வார்—பாடல்களைப்போல் இந்தப் பாடல் களும் எவ்வளவு லளிதமாகவும் உருக்கமாகவு மிருக் கின்றன! கோவலன் - கண்ணகி கதையான சிலப்பதி

காரம் பிறந்த காலத்திலே, விஷ்ணு பக்தி—விசேஷ மாகக் கிருஷ்ண பக்தி—தமிழ் மக்களுக்கிடையே பரவி யிருந்ததென்று தெரியவருகிறது.

அந்தக் காலத்திற்கும் எத்தனையோ நூற்றாண்டு களுக்கு முன்னமே, தமிழ் முனிவரான அகஸ்திய ருடைய சிஷ்யரென்று கருதப்படும் தொல்காப்பியர் காடுகளிலும் காட்டுச் சார்பான இடங்களிலும் வசித்த தமிழர்கள் விஷ்ணுவை வழிபட்டு வந்தார்கள் என்று சொல்லுகிறார். இதனால் தமிழ் நாட்டிலே வழங்கிய ஆதிசமயங்களில் வைஷ்ணவமும் ஒன்றென்று கருத இடமுண்டு.

சங்க காலத்திலிருந்த புலவர்களிலும் கீரந்தை யார் முதலிய சிலர் வைஷ்ணவர்களா யிருந்தார்கள். வைஷ்ணவக் கொள்கைகளில் சில சங்கப் பாடல் களிலும் காணப்படுகின்றன.

கிருஷ்ண பக்தி அல்லது விஷ்ணு பக்தியில் சிறந் தவர்களைப் பாகவதர் என்றும், வைஷ்ணவ சமயத்தைப் பாகவத தர்மமென்றும் சொல்வதுண்டு. பழைய தமிழ் நாடெங்கும் பகவர் என்ற துறவிகள் சஞ்சரித்து வந்த தாகப் பழைய தமிழ் நூல்களிலிருந்து அறிகிறோம். பாகவத தர்மத்தை அனுஷ்டித்த சன்னியாசிகளே பகவர் என்று ஊகிக்க இடமுண்டு.

இவர்கள் தமிழ் மக்களால் விசேஷமாகக் கௌர விக்கப்பட்டார்கள். இத்தகைய துறவிகளும் அடியார் களும் தல யாத்திரை செய்து கொண்டே தமிழ் நாட்டில் வைஷ்ணவ சமயத்தின் பரந்த நோக்கங்களையும் சிறந்த லட்சியங்களையும் பரப்பி வந்தார்கள்.

விஷ்ணுவை வழிபட்டவர்கள் காடுகளிலும் காடு சார்ந்த இடங்களிலுமுள்ளவர்கள் என்று தொல்காப்பியர் கூறுவதால், ஆதியில் விஷ்ணு கோவில்களும் காட்டுப் பக்கங்களில் அமைந்திருக்க வேண்டும். அப்படி அமைந்திருந்த பழைய தலங்கள் திருவரங்கம், திருப்பதி, திருமாலிருஞ்சோலை முதலியன. காஞ்சீபுரத்திலும் ஒரு பழைய விஷ்ணு ஸ்தலம் உண்டு. இவையெல்லாம் வைஷ்ணவத்தின் வளர்ப்புப் பண்ணைகளாயிருந்தன. இந்தத் தலங்களில் பாகவதர்களான துறவிகளும் பிறரும் கூடுவதுண்டு.

முக்கியமான விஷ்ணு ஸ்தலங்களை,

*தேனோங்கு சோலைத் திருவேங் கடமென்றும்,*
*வானோங்கு சோலை மலையென்றும்,—தானோங்கு*
*தென்னரங்க மென்றும் திருவத்தி யூரென்றும்*
*சொன்னவர்க்கும் உண்டோ துயர்?*

[திருவேங்கடம்—திருப்பதிமலை. சோலைமலை—திருமாலிருஞ்சோலை என்ற அழகர் மலை. அத்தியூர்—காஞ்சீபுரத்திலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம்.]

என்ற பாட்டில் ஒரு புலவர் சாதுரியமாகக் குறிப்பிடுகிறார்.

'தேனோங்கு சோலை'யைத் திருவேங்கடத்தின் சிறப்பாகவும், 'வானோங்கு' மலையைச் சோலைமலையின் சிறப்பாகவும் சொல்லுகிறவர், திருவரங்கத்தைத் 'தானோங்கு தென் அரங்கம்' என்று சிறப்பித்துப் பேசுவது கவனிக்கத் தகுந்தது. 'திருவரங்கம் என்ற தனிச் சிறப்பே போதும், அதற்கு வேறு சிறப்பும் வேண்டுமோ?' என்பது குறிப்பு.

இப்படிப்பட்ட தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்த திருவரங்கத்தையும், 'தேனேங்கு சோலை'த் திருப்பதியையும் அந்த நாளிலேயே பேர்பெற்ற—பலரும் தொழுத—விஷ்ணு ஸ்தலங்களாகக் காட்டுகிறது சிலப்பதிகாரம்.

*நீல மேகம், நெடும்பொற் குன்றத்துப்*
*பால்விரிந்(து) அகலாது படிந்தது போல,*
*ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்-*
*பாயற் பள்ளிப் பலர்தொழு(து) ஏத்த,*
*விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்*
*திருஅமர் மார்பன் கிடந்த வண்ணமும்*

[பால்—பக்கம். திறல்—திறம், பாயல்—படுக்கை. திரை—அலை. வியன்—பெருமை. துருத்தி—ஆற்றினிடையே உள்ள சிறு திட்டு. திரு—லட்சுமி.]

என்று ஸ்ரீரங்கநாதனுடைய சயனத் திருக்கோலம் எவ்வளவு உணர்ச்சியோடு, எவ்வளவு அழகாகச் சித்தரிக்கப் படுகிறது!

'பொன் மலை மீது படிந்து கிடக்கும் நீலமேகம் போல, ஆயிரம் பணுமகுடங்களோடு கூடிய பாம்பணைப் பள்ளிமீது, அலை கொழிக்கும் காவிரியாற்றுக்கிடையே, யோக நித்திரை செய்கின்ருன்!' என்று இளங்கோவடிகள் பாடுகிருர் என்ருல், அவர் அந்தக் காலத்திலுள்ள பாகவதர்களுடைய பக்திக் கண்ணைக் கொண்டே அவர்களுடைய 'பூலோக வைகுண்ட'த்தைப் பார்த்திருக்கவேண்டுமல்லவா?

சேர முனிவரான இப் பெரியாரின் இந்தச் செய்யுட் பகுதியை, இவர் பரம்பரையிலே தோன்றிய

குலசேகராழ்வார் என்ற பெரியார் பாடிய பின்வரும் பாட்டோடு ஒப்பிட்டுப் பாருங்கள்:

*இருள் இரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி*
*இனத்துத்தி அணிபணமா யிரங்கள் ஆர்ந்த*
*அரவரசப் பெருஞ்சோதி அனந்தன் என்னும்*
*அணிவிளக்கும் உயர்வெள்ளை அணையை மேவித்*
*திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி*
*திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்*
*கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்(டு), என்*
*கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே?*

[இரிய—அஞ்சிஓட. துத்தி—பாம்பின் படப்பொறி. பணம்—பாம்பின் படம். ஆர்ந்த—பொருந்திய. அரவம்—பாம்பு. அனந்தன்—ஆதிசேஷன். பொன்னி-காவிரி]

காவிரியாறு போலப் பெருகி வரும் இப்படிப்பட்ட பக்திப் பிரவாகத்தின் உற்பத்தி ஸ்தானம் சிலப்பதிகார காலத்திற்கும் முன்னே வெகு தூரத்தில் இருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம்.

இனி, திருவரங்கத்திற்கு அடுத்தபடியாக ஆழ்வார்களால் மதிக்கப்படும் திருப்பதி மலைமீதுள்ள நின்ற திருக் கோலத்தையும் இளங்கோவடிகள் வாயிலாக நோக்குவோம்.

*வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்*
*ஓங்குயர் மலயத்(து) உச்சி மீமிசை,*
*விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி*
*இருமருங்(கு) ஓங்கிய இடைநிலைத் தானத்து,*
*மின்னுக்கோடி உடுத்து விளங்குவில் பூண்டு*
*நன்னிற மேகம் நின்றது போலப்*

*பகைஅணங்(கு) ஆழியும் பால்வெண் சங்கமும்*
*தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி,*
*நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு,*
*பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிச்*
*செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்*

[வீங்கு—மிக்க. மீமிசை—மீதே. ஞாயிறு-சூரியன். திங்கள்—சந்திரன். மருங்கு—பக்கம். இடைநிலைத் தானம்—இடைப்பட்ட இடம். அணங்கு—வருத்துகிற. ஆழி—சக்கரம். தகை—அழகு. நலம்—அழகு. பொலம் —பொன். பொலம்பூ ஆடை—பீதாம்பரம்.]

என்ற அடிகளைப் படித்ததும், 'இளங்கோவடிகள் தாம் பாடினரா? ஆழ்வார்களே பாடினர்களா?' என்ற சந்தேகம் உண்டாகிறது.

ஸ்ரீரங்கத்தில் சயனித்திருக்கும் நீலமேகமே, திருப்பதியில் மின்னற்கொடியை ஆடையாகத் தரித்து வில்லும் சங்கு சக்கரங்களும் ஏந்தி, நின்ற வண்ணமாயிருக்கிறதாம். விஷ்ணு பக்தர்களின் மனோபாவம் இந்தச் செய்யுட் பகுதியில் எவ்வளவு நன்ருகப் பிரதிபலிக்கிறது!

திருமாலிருஞ் சோலை யென்ற அழகர் மலையைக் குறித்த பிரஸ்தாபமும் சிலப்பதிகாரத்தில் வருகிறது. அந்த மலையைத் 'திருமால் குன்றம்' என்றே இளங்கோவடிகள் குறிப்பிடுகிருர்.

அழகர் மலையைக் குறித்துப் பரிபாடலும் பிரஸ்தாபிக்கிறது. இத்தகைய சான்றுகளிலிருந்து, சிலப்பதிகார காலத்திற்கு முன்னமே திருமாலுக்கு உரிய தலங்களில் சில பிரசித்தி பெற்றிருந்தன என்று ஊகஞ் செய்யலாம்.

தமிழ் நாட்டிலே விஷ்ணுபக்தி இன்று நேற்று உண்டானதன்று. ஆழ்வார் காலத்திற்கு முன்னமே வைஷ்ணவம் உண்டு என்பதற்குத் தமிழ் இலக்கியம் சான்று தருகிறது. அந்தப் பண்டைக் காலத்தைப் பக்தியின் அருணோதயகாலம் என்றும், ஆழ்வார்கள் தோன்றிய இடைக்காலத்தைப் பக்திமதத்தின் சூரியோதய காலம் என்றும் சொல்லலாம்.

---

# 4. அறிவுமதங்களும் பக்திமதமும்

சுமார் 1,300 ஆண்டுகளுக்கு முன் காஞ்சீபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு மகேந்திரவர்மன் என்ற பல்லவ சக்கரவர்த்தி தென் இந்தியாவில் அரசு செலுத்தி வந்தான். இவன் மகாவீரனாக விளங்கியதோடு மகா பண்டிதனாகவும் இருந்தான்.

குடியினால் விளையும் கேட்டை விளக்கி, 'மத்த விலாஸம்' என்ற பெயர் வாய்ந்த சிறு நாடகம் ஒன்றை வடமொழியில் இயற்றி யிருக்கிறான், இந்த நாடகத்திற்குத் தமிழில் 'குடியன் கூத்து' என்று பெயர் இடலாம். நகைச் சுவை நாடகம்; நடித்துக் காட்டுவதற்காகவே எழுதப்பட்டது.

அந்தக் காலத்தில் இந்து சமூகத்தின் ஒழுக்க வழக்கங்களிலும், தென்னாட்டில் சிதைந்து வழங்கிய சமயக் கொள்கைகளிலும் காணப்பட்ட குறைகளைப் பரிகசித்துச் சீர்திருத்தலாம் என்பது ஆசிரியனது நோக்கமா யிருக்கவேண்டும்.

நாடக பாத்திரங்களில் ஒருவன், 'உபாஸகரான தனதாஸ செட்டியாரின் சத்திர மகாதானத்தின் வைபம்தான் என்ன? இஷ்டமான நிறம் மணம் சுவை பொருந்திய மச்ச மாமிச வகைகள் சேர்ந்த உணவுப் பொருள் கிடைக்கிறது!' என்று சொல்லிக்கொண்டே நாக்கில் நீர் ஊற நாடக மேடையில் பிரவேசிக்கிறான்.

---

உபாஸகர்-பௌத்தரில் இல்லறத்தில் இருப்பவர்.

'சன்னியாசி இப்படிப் பேசுகிருனே!' என்று நாம் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும்போது, அவன் தனக்குத் தானே மேலும் சொல்லுகிருன்:—'ஆஹா! பரம காருணிகரான பகவான் புத்ததேவர்,—மாளிகைகளில் வாசம், நல்ல படுக்கை விரித்த கட்டில்களில் சயனம், காலையில் சாப்பாடு, பிற்பகலில் நல்ல ருசியான பானங்கள், ஐந்து கந்தங்களுடன் தாம்பூலம், நல்ல இழையுள்ள ஆடைகள், என்று இப்படிப்பட்ட உபதேசங்களால் பிட்சு சங்கத்தை அனுக்கிரகித்தவர்,—எதனுல் பெண் கொள்ளல், மதுபானம் இவைகளை மாத்திரம் உபதேசிக்கவில்லை? அப்படி இராது.'

இந்தப் பௌத்த சன்னியாசியின் தர்க்க வாதத்தைக் கேட்டு நாம் பிரமிக்கிருேம். அவனே, 'ஆகையால் துஷ்டர்களான இந்தக் கிழட்டுச் சங்கத் தலைவர்கள், தங்களுக்கு உத்ஸாகம் மழுங்கிவிட்டதால், வாலிபர்களான எங்களிடம் பொருமை கொண்டு, * பிடக புஸ்தகங்களில் இருந்த ஸ்திரீபரிக்ரஹ - சுராபான விதிகளைக் கட்டாயம் மறைத்திருக்க வேண்டும்!' என்கிருன். இந்தக் குறையை நிறை செய்வதற்காக, இந்த யௌவன பிட்சு என்ன செய்யலாம் என்று ஆலோசிக்கிருன்.

'இப்போது அந்த விதிகள் அடங்கிய மூல பாடம் அழிந்து விடாத ஏட்டுப் பிரதியை எங்கே காணலாம்? அதிலிருந்து புத்த தேவரின் உபதேசம் முழுவதையும் உலகத்தாருக்கு வெளிப்படுத்திஞல், பௌத்த சங்கத்திற்கே நான் உபகாரியாவேன்!' என்று சொல்லிக் கொண்டு போகிருன். பழைய காலத்திலுங்கூட,

* பிடகம் = பௌத்தர்களின் ஆகம நூல்கள்.

இப்படி யெல்லாம் உத்ஸாகமாக ஏடு தேடும் பேர்வழி கள் இருந்திருக்கிறார்கள்!

இந்தத் 'தனிமொழி'யிலிருந்தும், இந்த நாடகத்தி லிருந்தும், கி. பி ஏழாம் நூற்றாண்டில் தமிழ் நாட்டிலே பௌத்த மதம் எவ்வளவு தூரம் வீழ்ச்சி அடைந்து விட்டதென்பது ஒருவாறு புலனாகிறது. இந்த நூல் இயற்றிய மகேந்திரவர்மன் ஜைனனா யிருந்து பிறகு சைவனானன் என்பர்.

இந்த நாடகத்திலே வைஷ்ணவர்கள் பரிகசிக் கப்படவில்லை. மகேந்திரவர்மன் தந்தையான சிம்ம விஷ்ணுவும், மகனான நரசிம்மவர்மனும் வைஷ்ணவர் கள்; சிம்ம விஷ்ணுவின் முன்னோரிலும் விஷ்ணு பக்தர் கள் இருந்தார்கள். சைவனான பின்பும் மகேந்திரவர் மனுக்கு வைஷ்ணவ அபிமானம் இருந்தது.

பல்லவ மன்னர்களில் சிலர் ஜைனர்களுக்கு அனு கூலராயிருந்தபோதிலும், பலர் சைவ வைஷ்ணவங் களுக்கு விசேஷ ஆதரவுஅளித்தார்கள். இவர்களுடைய காலத்திலே தான் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றினார்கள். இதே காலத்தில்தான் சங்கரா சாரியரும் இப்போது உலகப்பிரசித்தி பெற்றிருக்கும் அத்வைத வேதாந்தத்தை நிலைநாட்டிப் பிரசாரத்திற்கு அங்கங்கே மடங்களையும் ஏற்படுத்தினார்.

பண்டைக் காலத்திலே தமிழ் நாட்டில் சைவ வைஷ்ணவங்களுக்குச் செல்வாக்கு இருந்தது. சங்க காலத்தில் ஜைன சமயமும் பௌத்த சமயமும் கொஞ்சங் கொஞ்சமாகப் பரவி வந்தன. இடைக் காலத்தின் தொடக்கத்திலே—அதாவது, சங்க காலத்துக்குப்

பின்,—ஜைன, பௌத்தங்கள் அதிகமாகப் பரவின. அரசர்களும் மக்களும் ஜைன பௌத்தர்களைக் கௌர வித்தார்கள்.

ஜைன பௌத்தர்களுடைய ஒழுக்கமும் கல்வி யறிவும் அந்த நாளில் அவர்கள் அடைந்திருந்த கௌரவத்திற்கும் செல்வாக்கிற்கும் முக்கிய காரணங் களாயிருந்தன.

*இருளே உகைத்(து) இயற்கை; இருள்அகற்றும்*
*கைவிளக்கே கற்ற அறிவுடைமை;—கைவிளக்கின்*
*நெய்யேதன் நெஞ்சத்(து) அருளுடைமை; நெய்பயந்த*
*பால்போல் ஒழுக்கத் தவரே பரிவிலா*
*மேலுலகம் எய்து பவர்*

(அறநெறிச்சாரம்)

[பயந்த—தோற்றுவித்த. பரிவு—துன்பம்.]

என்றபடி, அறிவுத் தாகங்கொண்டு அஹிம்ஸா தர்மத்தை முக்கிய அம்சமாகவுடைய ஒழுக்கமே முத்தி நெறி யென்று உபதேசம் செய்தவர்களை மக்கள் மதித் தது ஆச்சரியமாகுமோ? கடுநோன்புகளும் மந்திர தந்திரங்களும் இந்த மதிப்பைப் பாமரர்களிடையே இன்னும் அதிகப்படுத்தின.

ஜைன பௌத்தர்களுக்கு வடமொழிப் பயிற்சி விசேஷமாக உண்டு; தர்க்க சாஸ்திரத்திலோ நிபுணர் கள். வடமொழிக் கலைகள் தென்னாட்டிலே அதிகமாகப் பரவி வந்த காலமாகிய ஆறு—ஏழாம் நூற்றாண்டு களில்,—அதாவது, மகேந்திரவர்மன் காலத்திலும் அதற்கு முன்பும்,—ஜைன மதம் மற்ற மதங்களைக் காட்டிலும் செல்வாக்குள்ளதாய் உச்ச நிலையில் இருந்தது.

வடமொழியில் வல்லவர்களாயிருந்த போதிலும், ஜைன பௌத்தர்கள் தேச பாஷைகள் மூலமாகத் தங்கள் கொள்கைகளைப் பரப்பி வந்தார்கள்.

*இருட்பார வினைநீக்கி எவ்வுயிர்க்கும் காவலென*
*அருட்பாரம் தனிசுமந்த அன்றுமுதல் இன்றளவும்,*
*மதுஒன்றும் மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும்*
*பொதுஅன்றி நினக்குரித்தோ, புண்ணிய! நின் திருமேனி?*

[மதுஒன்றும்—தேன் பொருந்திய.]

என்பது போன்ற பாடல்களால் பௌத்தர்கள் 'பரம காருணிகரான புத்த தேவ'ரையும், ஜைனர்கள் 'மகா வீரன்' என்ற அருக தேவரையும் பாடி வைத்தார்கள். வேறு இலக்கியங்கள், இலக்கணங்கள் செய்தும் தமிழர் களுடைய கலைச் செல்வம் பெருகுவதற்கு உதவு செய்தார்கள்.

இப்படிப்பட்டவர்களுடைய மதங்கள் க்ஷீணித்துப் போனதற்கும், சைவ வைஷ்ணவங்கள் 'மறு மலர்ச்சி' பெற்றதற்கும், அடிப்படையான காரணம் என்ன? தர்க்க சாமர்த்தியங்களையும் ஒழுக்கத்தைப் பற்றிய உயர்ந்த கொள்கைகளையும் கொண்டு அறிவைப் பிரமிக்கச் செய்த போதிலும், ஜைன பௌத்த மதங்கள் பொது மக்களுடைய இதயத்தோடு உறவாடவில்லை.

அவை மதத்திற்கு இதயம் உண்டென்றே தெரிந்து கொள்ளவில்லை யென்று சொல்லலாம். பக்தி யுணர்ச்சி உள்ளவர்களுக்கு அந்த மதங்கள் அனுஷ் டானத்தில் நாஸ்திகங்களாகவே தோன்றின.

மேலும், ஜைன பௌத்தர்களுடைய காயக்கிலேசத் தையும் கடு நோன்புகளையும் பக்தர்கள் கண்டித்தார்கள்.

*ஊன்வாட உண்ணு(து) உயிர்காவ லிட்டு*
*உடலில் பிரியாப் புலனைந்தும் நொந்து*
*தாம்வாட வாடத் தவஞ்சேய்ய வேண்டா!*

என்பது திருமங்கை ஆழ்வார் வாக்கு.

இதற்கு, பிற்காலத்தில் தோன்றிய ஒரு பக்தர்,

*காயிலை தின்றும், கானில்உறைந்தும்,*
*கதிதேடித்*
*தீயிடை நின்றும், பூவலம் வந்தும்*
*திரிவீர்காள்!*
*தாயிலும் அன்பன், பூமகள் நண்பன்,*
*தடநாகப்*
*பாயல் முகுந்தன் கோயில் அரங்கம்*
*பணிவீரே!*

[பூவலம்—பூப் பிரதட்சிணம். பூமகள்—லட்சுமி. தடநாகப் பாயல்—பெரிய சர்ப்ப சயனம். பாயல்—படுக்கை.]

என்று வியாக்கியானம் செய்திருக்கிறார்.

சொந்த உடம்பானாலும் ஹிம்ஸை செய்ய உரிமையில்லை, அஹிம்ஸா தர்மத்தைத் தான் கைக்கொள்ள வேண்டும் என்கிறார்கள் பக்தர்கள்.

*மண்ணில், வானில், மற் றுலகில் மன்னிவாழ்*
*எண்ணி லாஉயிர் உடம்பு யாவையும்*
*தண்ணந் தாமரைத் தலைவி மேவிய*
*கண்ண னாகவே காணும் காட்சியான்*

[மன்னி—தங்கி. தண்ணந் தாமரை—குளிர்ச்சி பொருந்திய அழகிய தாமரை. தாமரைத் தலைவி—லட்சுமி.]

என்று வைஷ்ணவர்களின் முதலாவது லட்சிய புருஷனை பிரகலாதனைப் பாகவதம் வருணித்திருக்கிறது.

இத்தகைய பகவானுடைய நாம சங்கீர்த்தனமே மந்திர தந்திரங்களுக்கும் மேலானதென்று பக்தர்கள் நம்புகிறார்கள்.

*நாவுண்டு, நீயுண்டு, நாமம் தரித்தோதப்*
*பாவுண்டு; நெஞ்சே! பயமுண்டோ?—பூவுண்டு*
*வண்டுறங்கும் சோலை மதிலரங்கத் தேஉலகை*
*உண்டுறங்கு வான்ஒருவன் உண்டு*

[பா—பாட்டு. பூ உண்டு—பூக்களிலுள்ள தேனை உண்டு.]

என்று பக்தர்கள் உறுதி கூறும்போதுதான், பொது மக்களுடைய இதயப் பசிக்குப் போதுமான உணவு கிடைக்கிறது; உணர்ச்சிகளுக்குத் திருப்தி ஏற்படுகிறது. இப்படிப்பட்ட பக்தியே ஒழுக்கத்திற்கும் உறுதியான அடிப்படையாகக் கூடும்.

கடவுள் நம்பிக்கை,—மக்கள் தங்களுடைய குறைகளை முறையிட்டுக் கொண்டு நெஞ்சுக்கு ஆறுதலும் ஆனந்தமும் பெறுவதற்கு இன்றியமையாத கடவுள்-நம்பிக்கை,—ஜைன பௌத்த மதங்களில் காணப்படவில்லை. சைவ வைஷ்ணவர்களோ, இத்தகைய நம்பிக்கையை 'ஆத்ம வளர்ச்சி'க்கு மிகவும் அவசியமாகக் கொண்டனர்.

ஜைன பௌத்தர்களைப்போல் சைவ வைஷ்ணவர்களும் தாய்மொழியில் பாடல்கள் பாடி, அந்தப் பாடல்களைப் பிரசாரத்திற்கும் உபயோகித்துக் கொண்டார்கள்.

*கருதுசெம்பொனின் அம்பலத்தில் ஓர்*
*கடவுள்நின்று நடிக்குமே*

என்று ஆனந்த நடராஜாவையும்,

*காவிரித்திரு நதியிலேஒரு*
*கருணைமாமுகில் துயிலுமே*

என்று அருளாளனை ஸ்ரீரங்கநாதனையும் சுட்டிக் காட்டிக் கல் நெஞ்சும் உருகும்படி 'பண் சுமந்த' தோத்திரப் பாடல்கள் பாடிவைத்தார்கள்.

இந்தப் பாடல்களுக்கு முன் எந்தத் தர்க்கம்தான் நிற்க முடியும்? எந்த நோன்பிற்கு—எப்படிப்பட்ட மந்திர தந்திரங்களுக்குத்தான்—மனோபாவத்தை வசீகரிக்கும் இன்பக் கவிகளின் சக்தி உண்டு?

சங்கரரின் வேதாந்தத்திலும்—முக்கியமாக ஆழ்வார் நாயன்மார்களின் பக்திப் பாடல்களிலும்—புத்துயிர் பெற்ற இந்து மதம் ஜைன பௌத்தங்களின் ஸாராம்சத்தை ஏற்றுக்கொண்டு, க்ஷீணகதியுற்ற அந்த மதங்களை வெற்றி கொண்டது. இப்படி வெற்றி அடைந்த இந்து தர்மத்திற்கு மூளையாக அமைவது வேதாந்தம் என்றால், ஆழ்வார் நாயன்மார்களின் பாசுரங்களே இதய மென்று கொள்ள வேண்டும்.

---

# 5. ஆழ்வாரும் நாயன்மாரும்

நமது தேச சரித்திரத்தின் வசீகரமான ஒரு பகுதியைத் தென்னுட்டுக் கோவில்களில் காணலாம். பார்த்துப் பார்த்துப் பழகிவிட்டதால் இந்தக் குலதனத்தை—தற்கால ரஸிகர்களையும் பிரமிக்கச் செய்யும் நமது சிற்பச் செல்வத்தை—நாம் சரியாக அனுபவிப்பதில்லை. இப்படிப்பட்ட தேவாலயங்களை வேறு எந்த நாட்டிலும் பார்க்க முடியாது; வட இந்தியாவிலும் பார்க்க முடியாது.

நமது பழைய நாகரிகத்தின் பெருமையையும் அழகையும் கண்டுகளிக்க விரும்புவோர் தமிழ் நாட்டில் யாத்திரை செய்ய வேண்டும்; காலத்தின் ஆட்சிக்கு வணங்காது நிமிரும் கோவில்களையும் கோபுரங்களையும் அவற்றிலுள்ள சிற்ப ஜாலங்களையும் கண்ணுரக் கண்டு களிக்க வேண்டும்.

'கல்லால் இழைத்த காவியங்களோ!' என்று அதிசயிக்கத் தக்க இந்தக் கோவில்களின் இரகசியத்தை அறிய விரும்புகிறீர்களா? அப்படியானுல் கடவுளுக்குரிய விக்கிரகங்களோடு பூஜிக்கப்படும் வேறு சில விக்கிரகங்களையும் கவனித்துப் பாருங்கள். இவை ஆழ்வார்-நாயன்மார்களைக் குறிப்பன. இந்தப் பக்தர்கள் அந்த நாளில் தல யாத்திரை செய்தார்கள்; கோவில்களைத் தரிசித்தார்கள்.

ஆனுல், அக்காலத்தில் கோவில்கள் இப்படிப்பட்ட வேலைப்பாடுகள் அமைந்த கம்பீரமான கட்டடங்கள்

அல்ல. இந்த மெய்யடியார்களின் பக்தியே பாட்டாகிக் கலையாகிப் பிரமாண்டமான கோவில்கள் ஆயிற்று என்று சொல்ல வேண்டும்.

வாழ்க்கையே ஒரு பெரிய யாத்திரை தான். இதற்கு ராஜ பாதை கண்டு நமக்கும் அந்த வழியைக் காட்டும் கலைஞர்கள் ஆழ்வார்-நாயன்மார். 'நாயன்மார்' என்ற சொல்லுக்குத் 'தலைவர்' என்று பொருள். 'கடவுள்மீது மெய்யன்பு செலுத்தித் தலைவ'ரானவர்கள் இவர்கள். 'ஆழ்வார்' என்ற பதத்திற்குச் சாதாரணமாய் 'இறைவனுடைய குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுகிறவர்கள்' என்று பொருள் சொல்லுகிறார்கள். 'ஆழ்வார்' என்பதை 'ஆள்வார்' என்ற பதத்தின் திரிபாகக் கொண்டு, 'நம்மை ஆள்பவர்' என்று பொருள் சொல்வதும் உண்டு. இந்தப் பொருளில், ஆழ்வார்களும் 'கடவுள்மீது மெய்யன்பு செலுத்தி நம்மை ஆளும் தலைவ'ராகிறார்கள்.

நாயன்மார் அறுபத்து மூவர்; ஆழ்வார்கள் பன்னிருவர். இவர்கள் இடைக்காலமாகிய பல்லவர் காலத்தில், வட இந்தியாவின் நாகரிகமும் கலைகளும் தென் இந்தியாவின் நாகரித்தோடும் கலைகளோடும் ஒற்றுமைப்பட்டுக் கலந்ததன் பயனாகத் தமிழ் நாட்டிலே பல இடங்களில் தோன்றினார்கள்.

ஆழ்வார்-பிரபந்தங்களை நாதமுனிகள் தேடிக் கண்டு வெளியிட்டதுபோல், நம்பியாண்டார் நம்பி என்ற சிவநேசர் திருஞானசம்பந்தர் முதலானவர்கள் அருளிய தேவாரம் முதலியவற்றைப் பிரசித்தப்படுத்தினார்.

இந்த அடியார்கள் பல்வேறு வகுப்பினர். இவர்களில், பிராமண குலத்தில் தோன்றிய மதுரகவியாழ்

வார் வேளாள குலத்தில் பிறந்த நம்மாழ்வாரைக் குரு வாகவும் தெய்வமாகவும் போற்றினர். அப்படியே பிராமண குலத்தில் பிறந்த அப்பூதியடிகள் வேளாள குலத்தில் தோன்றிய திருநாவுக்கரசரைக் குருவாகவும் தெய்வமாகவும் வழிபட்டார். திருப்பாணாழ்வாரைப் போல் திருநாளைப்போவார் என்ற நந்தனாரும் 'தீண் டத் தகாத ஜாதி' என்று கருதப்பட்ட வகுப்பிலே பிறந் தவர். இவர்களும் மற்ற ஆழ்வார்-நாயன்மார்களைப் போலவே போற்றப்படுகிறார்கள்; கோவில்களிலும் பூஜிக்கப்படுகிறார்கள்.

ஈச்வர சந்நிதியில் ஜாதி வித்தியாசம் இல்லாதது போல், ஏழை-பணக்காரன் என்ற வித்தியாசமும் கிடையாது. ஏழையென்றுவது, தீண்டத் தகாதவன் என்றுவது குகனை ராமன் ஒதுக்கி வைத்தானு? அவ னுக்கும் இரங்கி அருள் செய்யவில்லையா? அந்த அருள் எவ்வளவு நெடுந் தூரத்தை எவ்வளவு சமீப மாக்கி விட்டது!

இந்தக் கதை திருமங்கை யாழ்வாரை வசீகரித் தது; அவர் உள்ளத்திலே ஊறி,

*ஏழை ஏதலன் கீழ்மகன் என்னு(து)*
*இரங்கி மற்(று) அவற்(கு) இன்னருள் சுரந்து,*
*'மாழை மான்மட நோக்கிஉன் தோழி!*
*உம்பி எம்பி!' என்(று) ஒழிந்திலே; உகந்து*
*'தோழன் நீ எனக்(கு)! இங்(கு)ஒழி' என்ற*
*சொற்கள் வந்(து)அடி யேன்மனத்(து) இருந்திட*
*ஆழி வண்ண! நின் அடியிணை அடைந்தேன்,*
*அணிபொழில்திரு அரங்கத்(து)அம் மானே!*

[ஏதலன் — அன்னியன். கீழ்மகன் — கீழ்ச்சாதி யான். மாழை—இளமை; அழகு. நோக்கி—பார்வை

யுடையவள். மாழை மான்மட நோக்கி—(இங்கே) சீதை. உம்பி—உன் தம்பி. எம்பி—என் தம்பி. ஆழி வண்ண—கடலின் நிறத்தையுடைய பகவானே. அணி பொழில்—அழகான சோலே. அம்மானே—கடவுளே.] என்ற உருக்கமான தோத்திரமாக வெளிப்படுகிறது.

ராமபிரான் தன் தேவியான சீதையைக் குகனுக்கு 'உன் தோழி' என்று அறிமுகப் படுத்தினும். இரக்கமும் அருளும் எவ்வளவு அன்பாக,—எவ்வளவு நட்பாகக் கனிந்து விட்டன! பிறகு, 'உனக்கும் தம்பி தான் என் தம்பியான இந்த லட்சுமணன்!' என்று சொன்னும். கடைசியாகத் தன்னேயும் அவனுக்குத் தோழனுக்கிக் கொடுத்தானும்.

இப்படி ராமன் குகனே நோக்கிச் சொன்ன வார்த்தைகள் கால வெள்ளத்தை எதிர்த்து வந்து ஆழ்வார் காதிலே விழுந்து அவர் உள்ளத்தை மயக்கி விட்டன!

இந்தப் பாட்டோடு, வங்க நாட்டுக் கவியரசாகிய ரவீந்திர நாத தாகுரின் பாட்டை ஒப்பிடலாம். அதன் மொழிபெயர்ப்பு வருமாறு:

'ஏழைகள், தாழ்ந்தவர் வாழும் இடமே உன் திருவடிகள் தங்கும் இடம். உன்னே வணங்க முயலும் போது, உன் அடியிணை எவ்வளவு கீழே போயிருக்கின்றனவோ, அந்த ஆழம்வரை என் வணக்கத்தால் எட்ட முடியவில்லை...........

'ஏழைகள், தாழ்ந்தவர், வீழ்ந்தவரிடையே, தோழர்களே இல்லாதவரோடு நீ தோழமை கொண்டுள்ள இடத்திற்கு என் இதயம் ஒருநாளும் வழி காண முடியாது.'

திருமங்கை யாழ்வாருடைய இதயம் அந்த இடத்திற்கும் வழி கண்டு விட்டது; நமக்கும் அந்த வழியைக் காட்டுகிறது. சேர ராஜாவான குலசேகராழ்வாரும் 'ஏழைகள், தாழ்ந்தவர்' என்ற வித்தியாசம் பாராட்டாமல் அடியார்களோடு தோழமை கொண்டார், ராமனுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றி. இந்த நிலையைச் சிவநேசச் செல்வரான சேரமான்பெருமாள் நாயனுர் என்ற வேருெரு சேர மன்னரும் அடைந்தார்.

ஒரு நாள் சேரமான்பெருமாள் நகர் வலம் வந்த போது ஒரு வண்ணுன் தலைமீது உவர் மண்ணைச் சுமந்து கொண்டு எதிரே வந்தான். பொதிமண் மழையில் கரைந்து ஒழுகி உடம்பை வெளுக்கச் செய்திருந்தது. அந்தத் தோற்றம் திருநீறு பூசிய அடியார் கோலத்தை நினைப்பூட்டியது. உடனே சேர ராஜா யானையை விட்டிறங்கி வண்ணுனைக் கைதொழுதார். அவனுே சிந்தை கலங்கி, 'அடியேன் வண்ணுன்!' என்று அவர் காலில் விழுந்தான். சேரர் பெருமானும், 'அடியேன் சேரன்!' என்று அவன் காலில் விழுந்தாராம்.

ஈச்வரனுடைய அடியிணை எவ்வளவு கீழே போயிருக்கிறதோ, அந்த ஆழம்வரை தம்முடைய வணக்கத்தால் எட்டிப் பார்த்த மெய்யன்பர்களல்லவா இந்த நாயன்மார்களும் ஆழ்வார்களும்?

இவர்களுக்குத் தேசம், பாஷை முதலான வித்தியாசங்களும் இல்லை.

*செந்திறத்த தமிழோசை வடசொல் லாகித்*
*திசை நான்கு மாய்*

என்று விஷ்ணுவைத் திருமங்கையாழ்வார் வருணிப்பதோடு,

*ஆரியன் கண்டாய்! தமிழன் கண்டாய்!*
*எண்திசைக்கும் விளக்காகி நின்றான் கண்டாய்!*

என்று இவ்விதமாகத் திருநாவுக்கரசர் சிவபெருமானை வருணித்திருப்பதை ஒப்பிடலாமல்லவா?

'பழமை, புதுமை என்ற அபிமான துரபிமானங்களும் இந்த அன்பர்களுக்கு இல்லை. கடவுளும் அவனை அடையச் செய்யும் அன்பு-நெறியும் பழைமைக்கும் பழமைதான்; புதுமைக்கும் புதுமைதானே!

அன்புதான் முக்கியம்; வேஷம் பிரயோஜனமில்லை—என்பது கடவுளை அன்பாகக் கண்ட சைவ வைஷ்ணவ மெய்யடியார்களின் பொதுவான சிந்தாந்தம்.

*கள்ளத்தேன் நானும் தொண்டாய்த்*
*தொண்டுக்கே கோலம் பூண்டேன்;*
*'உள்ளுவார் உள்ளிற் றெல்லாம்*
*உடன்இருந்(து) அறிதி!' என்று*
*வெள்கிப்போய், என்னுள் ளேநான்*
*விலவறச் சிரித்திட் டேனே!*

[உள்ளுவார்-நினைப்பவர். உள்ளிற்று - நினைத்தது. அறிதி—அறிவாய். வெள்கி—வெட்கமடைந்து. விலவற—விலா அற்றுப்போகும்படி.]

என்ற தொண்டரடிப் பொடியாழ்வார் வாக்கை,

*'கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்*
*காலத்தைக் கழித்துப் போக்கி,*

... ... ...
... ... ...

'உள்குவார் உள்கிற் றெல்லாம்
உடனிருந்(து) அறிதி!' என்று
வெள்கினேன்; வெள்கி நானும்
விலாஇறச் சிரித்திட் டேனே!

என்ற திருநாவுக்கரசர் வாக்கோடு ஒப்பிட்டுப் பாருங்கள்.

ஆஷாடபூதிகளின் நிலையைத் தங்கள் சொந்த அனுபவம் போல் ஹாஸ்ய ரஸம் தோன்றப் பாடிப் பரிகசிக்கும் இந்த இருவர் வாக்கிலும், பொருளே யன்றிச் சொல்லும் எவ்வளவு தூரம் ஒத்துப் போயிருக் கிறது, பார்த்தீர்களா? தங்களோடு தங்கள் உள்ளத்தில் இருந்துகொண்டே எல்லாவற்றையும் ஈச்வரன் அறிந்து கொள்கிறான் என்பதை மாத்திரம் வேஷக் காரர்கள் அறிந்து கொள்வார்களானால், அவர்கள் வெட்கப்பட்டுத் தங்களைப் பார்த்தே சிரித்துச் சிரித்துச் சீர்திருந்தி விடுவார்க ளல்லவா?

அப்படிச் செய்யாவிட்டால், 'இவர்களைப் பார்த்து ஈச்வரன் வெட்கப்பட்டுச் சிரித்துக்கொண்டே யிருப் பான்!' என்று திருநாவுக்கரசர் வேறொரு சந்தர்ப் பத்தில் சொல்லுகிறார்.

இப்படிப்பட்ட கொள்கைகளை யுடைய சைவ வைஷ்ணவ சமயங்கள் ஸாராம்சத்தில் எவ்வளவு ஒற்றுமையோ டிருக்கின்றன! ஒரே பக்திப் பிரவாகம் வைஷ்ணவம் சைவம் என்ற இரண்டு நதிகளாக ஓடி, சமயத்தையும் கலைகளையும் வளர்த்துத் தமிழ் நாகரி கத்தை அழகு செய்தது. இந்தப் பிரவாகத்தைக் கொண்டு ஆழ்வாரும் நாயன்மாரும் நாட்டை வள முறச் செய்தார்கள்.

## 6. தமிழகத்தின் சூரியோதயம்

ஆகாசப் பரப்பெல்லாம் முத்துப் பந்தல் போட்டதுபோலிருந்த நட்சத்திரக் கூட்டம் கருகி விட்டது. இரவில் சாம்ராஜ்யம் பண்ணின சந்திரனும் ஒளி மழுங்கி விட்டான். சூரியோதயமாகிறது, கிழக்குத் திசையிலே தேவர்கள் ஏற்றி வைத்த மங்கள தீபம் போலே. கிரணங்கள் திசையெல்லாம் பரவுகின்றன. தாமரை முதலான பூக்கள் மலர்கின்றன. அப்படியே அந்தத் தொண்டருடைய முகமும் மலர்ச்சி பெறுகிறது.

வண்டுகள் மதுவுண்டு ரீங்காரஞ் செய்கின்றன. முல்லை மலர்களின் பரிமளத்தை அளைந்து வரும் காலைக் காற்று அவர் முகத்திலே ஜில்லென்று வீசுகிறது. ஆயர்கள் மாடுகளை மேய விடுகிறார்கள். அவர்களுடைய புல்லாங்குழலோசையும், ரிஷபங்களின் கழுத்தில் கட்டியுள்ள மணிகளின் ஓசையும் அவர் காதில் விழுகின்றன. நீராடிய பெண்கள் கூந்தலைப் பிழிந்து உதறிக் கொண்டே கரையேறுகிறார்கள்.

ஆ, பட்சி ஜாலங்கள் எவ்வளவு கோலாகலமாக உதய சூரியனைப்பாடி வரவேற்கின்றன! தொண்டரடிப்பொடி யாழ்வாரும்,

*அரங்கத்தம் மா! பள்ளி யெழுந்தரு ளாயே!*

என்றும்,

*எம்பெரு மான்! பள்ளி யெழுந்தரு ளாயே!*

என்றும், உறங்குவது போலிருக்கும் ஞான சூரியனை ஸ்ரீரங்கநாதனுக்குப் பூபாள ராகத்திலே குதூகலமாகப்

பள்ளியெழுச்சி பாடி, ஒரு ராஜாவைத் துயில் உணர்த்துவது போல் ராஜாதிராஜனைத் துயில் உணர்த்துகிறார். இவரைப் போல் மாணிக்கவாசக சுவாமிகளும்,

*ஆரமுதே! பள்ளி யெழுந்தரு ளாயே!*
*அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே!*
*அலைகடலே! பள்ளி யெழுந்தரு ளாயே!*

என்றெல்லாம் சிவபெருமானுக்குப் பள்ளியெழுச்சி பாடியிருக்கிறார்.

இந்த விதமாகக் கடவுளுக்குத் திருப்பள்ளி யெழுச்சி பாடிய தொண்டர்கள் நாட்டையே நித்திரையிலிருந்து விழிக்கச் செய்தார்கள் என்று சொல்ல வேண்டும்.

ஒரு காலத்தில் இந்த நாடு இந்திரன் முதலான தெய்வங்களை வழிபட்டு வந்தது. ஜைன-பௌத்தங்களும் கொஞ்ச காலம் ஜனங்களை உத்ஸாகப்படுத்தி வந்தன. இந்த 'ஒழுக்க மத'ங்களின் பயனாகத் தமிழர் வழக்க ஒழுக்கங்களில் சில விசேஷ மாறுதல்கள் ஏற்பட்டன; தமிழர் உள்ளங்களில் புதிய கருத்துக்கள் தோன்றின; இவர்களுடைய கருத்துலகில் ஒரு புரட்சி—ஓர் 'அறிவுப் புரட்சி'—ஏற்பட்டதென்றே ஊகிக்கலாம். எனினும் குளிர்ந்த சந்திரிகையை மாத்திரம் எவ்வளவு காலம் அனுபவித்துக் கொண்டிருக்க முடியும்?

'நல்லதைச் செய்; நல்லவனாயிரு' என்ற கொள்கை வாழ்க்கைப் புதிருக்கு விடையளிக்கவில்லை. தர்க்க சாஸ்திர அறிவும் வாக்குவன்மையும் அடிப்படைப் பிரச்சினைகளைச் சிக்கலாக்கி விட்டன. இதயத்திற்கும் ஆறுதல் கிடைக்கவில்லை. நட்சத்திரங்களும்

சந்திரனும் மறைந்து கீழ்வானம் தெளிவு பெற்றதும், சைவ வைஷ்ணவங்கள் விழித்துக்கொண்டன.

காரண காரியங்களின் கட்டுக்கோப்பே உலகம்; காரணமில்லாமல் காரியமில்லை—என்ற வாதத்தைப் பக்தர்களும் ஒப்புக்கொள்கிருர்கள். ஆனல் இந்தக் கட்டடம் கட்டும் காவலுமாயிருக்கிறது; உடையவன் உடைமையைக் கைவிடமாட்டான்—என்று அவர்களுடைய அந்தராத்மா போதிக்கிறது.

ஜைன பௌத்தர்கள் தருமத்தைக் குறித்துப் பிரசாரம் செய்தார்கள்; ஆனல்,

*தருமச் சுடரோன்எனும் தொன்மையினன்*

என்று பக்தர்கள் வருணிக்கும் ஸாட்சாத் தர்மமான ஆதி காரணத்தை மறந்தார்கள். இதனாலும், அந்த மதங்களுக்குப் பின்னுளில் ஏற்பட்ட சீர்கேட்டினுலும், வேறு காரணங்களாலும் தர்மம் சீர்குலைந்தது. இந்தச் சீர்குலைவு வரம்பு மீறியதும், ஆழ்வார் - நாயன்மார் தோன்றினர்கள்.

சாதாரண மனித சக்திக்கு அதீதமான காரியங்களைச் செய்யக்கூடிய அதிவீரர்களுக்கு உலகத்தில் தேவை ஏற்படும்போது, அந்தக் கூட்டம் தோன்றுகிறதென்று உலக சரித்திரம் தெரிவிக்கிறது தருமம் நிலைகுலைந்த காலங்களில் அதை நிலைநிறுத்துவதற்காக அவதாரம் செய்வதாய்ப் பகவான் கீதையில் உறுதி கூறுவதும் இந்தச் சரித்திர இரகசியத்தையே வெளியிடுகிறது. உலக நெருக்கடி அவதார புருஷர்களைத் தோற்றுவிக்கிறது. இவர்களைப் பெற்றுக் கொடுப்பது ஆசியாக் கண்டம்—முக்கியமாக நமது தாய்நாடாகிய ந்தியா.

காலத்தால் ஏற்பட்ட ஒரு மகத்தான தேவையைப் பூர்த்தி செய்ய, நமது தேச சரித்திரத்தின் நெருக்கடியான ஒரு சந்தர்ப்பத்திலே, தமிழ்நாடு ஆழ்வார்-நாயன்மார்களை ஈன்றளித்தது. இ வ ர் க ளு ண் ட ய ஆவேசம் நிறைந்த பாடல்கள் உறங்கிக்கிடந்த பக்தியுணர்ச்சியைக் குலுக்கிவிட்டன.

இவற்றில், நாயன்மார்-பாடல்கள் அதிக அளவில் வைராக்கியத்தையும் தத்துவ விஷயங்களையும் வெளியிடுகின்றன. ஆழ்வார் வாக்கிலோ. மனித உணர்ச்சிகளும் கலைச்சுவையும் அதிகமாக வெளிப்படுகின்றன.

தங்கள் தெய்வ நாட்டத்தைக் குறித்தும், ஆத்மசிந்தனைகளைக் குறித்தும், வாழ்க்கையின் மகத்தான பிரச்சினைகளைக் குறித்தும், இசைச் சுவையோடும் கவிச் சுவையோடும் பாடுகிறார்கள் ஆழ்வார்களும் நாயன்மார்களும். அன்புக் கடவுளை இவர்கள் கோவிலிலும் கண்டார்கள்; கோவிலாகவும் கண்டார்கள்; ஸ்தலமாகவும் கண்டார்கள். உலகமாகவும் உயிர்களாகவும் கண்டார்கள். தந்தையாகவும் தாயாகவும் குழந்தையாகவும் நண்பனாகவும் போற்றினார்கள். காதலனாகப் பாவித்துக் காதற் பாடல்கள் பாடினார்கள். இந்தப் பாடல்களில் மண்ணும் விண்ணும் ஒருங்கே காட்சி தருகின்றன.

இவர்களுக்குக் கலையுணர்ச்சியும் சமய உணர்ச்சியின் பகுதிதான். இனி, இப்படிப்பட்ட சமய உணர்ச்சிக்கு ஆதாரமான கொள்கையை ஒருவாறு அறிந்து கொள்ள முயல்வோம்.

எல்லாம் கடவுள் மயம். பல நிற மணிகளூடே ஒரு நூல் நுழைந்து அவற்றை ஒழுங்கு படுத்துவது

போல், அழகுச் சுடரும் தருமச் சுடருமான ஈச்வரன் உலகத்தை ஒழுங்குபடுத்துகிருன். எங்கும் நிறைந்து விளங்கும் ஈச்வரன் மூலமாய் எல்லா உயிர்களும் ஒன்ருேடொன்று தொடர்பு பெற்றிருக்கின்றன. இந்தத் தொடர்பு அல்லது ஒற்றுமையை அஸ்திவாரமாகக் கொண்டுதான் தருமம் நிலைபெற முடியும். இந்த ஒற்றுமையை உணர்ந்து ஒழுகும் ஒழுக்கமே சமய வாழ்க்கையின் உயிர்நிலை. இந்த உணர்ச்சியும் ஒழுக்கமும் உள்ளவர்கள் அகமும் புறமும் ஒத்த உண்மையாளர்களாகவும் ஞான வீரர்களாகவும் இருப்பார்கள்.

பக்தர்கள் பலவீனர் போலக் காணப்படலாம்; ஆனுல் கடவுளின் போர்வீரர்களல்லவா? இவர்களுக்குக் கோழைத்தனம் கிடையாது; மூடபக்தியும் கிடையாது. கடவுளை நினைத்ததும் சோர்வும் பயமும் பறந்து போகின்றன.

அது என்ன? துன்பமா வருகிறது? 'வரட்டும்; அந்தத் துன்பத்தையே வழித்துணையாகக் கொண்டு முன்னேறுவோம், லட்சியத்தை நோக்கி!' என்கிருர்கள். அவ்வளவு துன்பமும் அவர்களுடைய பக்தியையும் ஆத்ம சக்தியையும் அளக்க வைத்த கருவிதானே? உண்மையில், துன்பமானுல் என்ன, இன்பமானுல் என்ன? இரண்டையும் சமமாக மதித்துத் திருவருள் எப்படி இயக்குகிறதோ அப்படி வாழ்க்கை நடத்துகிருர்கள் ஆழ்வார், நாயன்மார்கள் ஈச்வர சன்னிதியிலே—அதாவது, இறைவனுடைய பார்வையிலேயே.

இந்த நிலையை அடைவது மனித சுபாவத்திற்கு மிகவும் கஷ்டமான தென்று கண்டு, இந்த ஆத்ம வீரர்

களை அவதாரங்களென்றும், ஈச்வரனுடைய அதிகார முத்திரை தரித்த தூதர்களென்றும், ஞான பூர்ணர்களென்றும் கொண்டாடுகிறோம். இவர்கள் நமது நாகரிகப் போக்கையும் சரித்திரப் போக்கையும் மாற்றி விட்டார்கள்.

ஆழ்வார்களின் வைஷ்ணவ இயக்கம் ஆதியில் காஞ்சீபுரத்தைத் தலைநகரமாகக் கொண்ட தொண்டை மண்டலத்தில் தோன்றித் தென்பாண்டி நாடு வரை பரவியது; பிறகு வடநாட்டிற்கும் சென்றது. கலைச் சுவையும் பக்திச் சுவையும் கொழிக்கும் ஆழ்வார்-பாடல்கள் காவிரி தாமிரபருணி யாறுகளின் புது வெள்ளம் போலப் புறப்பட்டன; தலைமுறை தலைமுறையாக நமது மக்களின் ஆத்ம தாபத்தையும் தாகத்தையும் போக்கி வருகின்றன.

# 7. ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்;

சூரியன் அஸ்தமித்து விட்டது. வானம் இருண்டு மழை பெய்யப்போகிறது. 'பளீர்! பளீர்!' என்று மின் வெட்டுகிறது. திருக்கோவலூரில் ஒரு வீட்டு வாசலில் ஒருவர் நின்று கொண்டு இரவில் படுத்துக்கொள்ள இடம் வேண்டுமென்று கேட்கிறார். வீட்டுக்காரர் அந்த வீட்டின் ஒடுக்கமான இடைகழியை ஒழித்துக் கொடுத்து, 'இதில் ஒருவர் படுக்கலாம்' என்று சொல் லிப் போகிறார். வந்தவர் அங்கே போய்ப் படுத்துக் கொள்கிறார்.

வெளியே மழைக்காற்று 'சிலீர்!' என்று வீசுகிறது. மழையும் சிலு சிலு வென்று பெய்கிறது. வேறொருவர் வாசலில் வந்து நிற்கிறார்; 'படுத்துக்கொள்ள இடம் கிடைக்குமா?' என்று கேட்கிறார். இடைகழியில் படுத் திருந்தவர், 'இங்கே ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்' என்று சொல்லி அவருக்கு இடம் கொடுக்கிறார்.

இருவரும் உட்கார்ந்து கொண்டிருக்கும்போது, வெளியே பெரு மழையும் காற்றும் கலந்தடிக்கின்றன. அப்போது இன்னொருவர் ஓடி வந்து, தமக்கு இடம் கிடைக்குமா என்று கேட்கிறார். இடைகழியில் இருந்த இருவரும், 'ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்!' என்று சொல்லி அவரையும் அழைக்கிறார்கள்.

மழை 'சோ!' என்று அடைத்துக் கொட்டு கிறது. இடையிடயே சடசடவென்று இடி முழக்கம் கேட்கிறது. 'நீர் யார்?' என்று அன்போடு ஒருவரை ஒருவர் விசாரித்துக் கொள்கிறார்கள்.

இவர்களில் ஒருவர் பொய்கையார் என்ற பக்தமணி; இந்தியாவிலுள்ள ஏழு புண்ணிய க்ஷேத்திரங்களில் ஒன்றென்று கருதப்படும் பழமையான நகரமாகிய காஞ்சீபுரத்தில் பிறந்தவர். இவரைப் பொய்கைப்பிரான் என்றும் சொல்வதுண்டு.

இன்னொருவர் 'கடல் மல்லை' யென்றும் 'மல்லைமா நகர' மென்றும் அந்த நாளில் பெயர் பெற்றிருந்த மாமல்லபுரத்தில்—அதாவது, தற்காலத்தில் 'மகாபலி புரம்' என்று சொல்லப்படும் தலத்தில்—பிறந்தவர். பூதத்தாழ்வார் என்று பெயர் பெற்ற இவரும் ஒரு பரம பக்தர். இவரைப் பூதயோகி யென்றும் சொல்வதுண்டு.

மூன்றாவதாக நின்றவரும் பிரசித்தி பெற்ற மெய் யடியார்களில் ஒருவர். கடவுளிடம் இவர் கொண் டிருந்த 'பக்திப் பைத்திய'த்திற்குப் பேயாழ்வார் என்று மக்கள் இவருக்கு இட்டிருந்த பெயரே சாட்சி. இவ ரைப் 'பிராந்தி யோகி' யென்றும் அழைப்பதுண்டு. 'தேன் அமர் சோலை மாடமா மயிலை' என்று பிரபந்தத் திலே வருணிக்கப்படும் மயிலாப்பூரில் தோன்றியவர்.

இவர்கள் தம்மோடொத்த உண்மையாளர்களைத் தரிசிக்க வேண்டுமென்று ஒரு நாள் இருந்த இடத்தில் மறுநாள் இராமல் ஊருக்கு ஓர் இரவாகத் தங்கி யாத் திரை செய்தார்கள். தெய்வச் செயலாகத் திருக்கோவ லூர் வந்து சேர்ந்தார்கள்.

இப்போது ஒருவரை யொருவர் தெரிந்து அளவளாவிக் கொள்கிறார்கள். இப்படிப்பட்ட பாகவத சிகாமணிகள் கூடி விட்டால் வேறு என்னதான் பேச முடியும்? பகவானுடைய கல்யாண குண வைபவத்தையே புகழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் இங்கே முன் இல்லாத நெருக்கம் ஏன்?

நாலாவது பேர்வழி, யாரோ ஒருவர், எப்படியோ, அங்கு வந்து தங்களுக்கிடையே புகுந்து நெருக்கிக் கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. என்ன ஆச்சரியம்! 'நம்மைத் தவிர இங்கே இப்படி வந்து நின்றவர் யாரோ?' தீபம் கிடைப்பதற்கோ, அந்த இருட்டிலும் மழையிலும், வழியில்லை.

இந்த நிலையில் பொய்கை யாழ்வார் ஒரு தீபம் கொண்டு வருகிறார். ஆ, எப்படிப்பட்ட தீபம்!

*வையம் தகளியா, வார்கடலே நெய்யாக,*
*வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய*
*சுடராழி யான்அடிக்கே சூட்டினன் சொல்மாலை—*
*இடராழி நீங்குகவே யென்று.*

[வையம்—பூமி. தகளி—அகல். வார்—நெடுமை. வெய்ய—உஷ்ணமான கிரணங்களையுடைய, கதிரோன்—சூரியன். செய்ய—சிவந்த. சுடர் அழி—ஒளியையுடைய சக்கரம். இடர் ஆழி—துன்பமாகிய சமுத்திரம்.] என்ற பாட்டு, சமுத்திரத்திலே சூரியோதயம் ஆகும் 'இயற்கை யற்புதத்தை எவ்வளவு நன்றாய்க் காட்டுகிறது!

அப்படிப்பட்ட சூரியோதயங்களில் எத்தனையோ பார்த்திருக்க வேண்டும் இவர்! பால சூரியன் ஜொலித்தெழும்போது கிழக்கே தகதகவென்று ஒரு தீப சிகை

போலத் தோன்றுகிறதல்லவா? அப்போது பார்க்க வேண்டும் சமுத்திரத்தை. இது தீபத்திற்கு நெய் போலவும், இதற்குப் பூமி ஒரு விளக்குத் தகழிபோலவும் காண்கிறது. இந்தக் காட்சியைப் பார்க்கும்போதெல் லாம், 'இப்படிச் செய்திருக்கிருனே ஈச்வரன்!' என்ற ஈடுபாடு இவருக்கு ஏற்படும்.

இந்த அழகையும் ஒளியையும் பார்த்துப் பார்த்து 'ஈச்வரனுடைய அழகும் ஒளியும் எப்படித்தான் இருக்குமோ?' என்று ஆச்சரியப்படுவார். உதய சூரி யன் அவனுடைய சக்கராயுதத்தையும் நினைவிற்குக் கொண்டு வரும். உடனே இறைவனை வாழ்த்தியதும், துன்ப சமுத்திரம் விலகி எங்கேயோ போய்விட்டது போலத் தோன்றும்.

இக்காட்சியை இப்போது ஞாபகப் படுத்திக் கொண்டு பாடுகிருர் பொய்கையார். இந்தப் பாட்டை இவர் பாடியதும், இருட்டறை யொன்றில் பளிச் சென்று திரை விலகி வெளிச்சம் உண்டானது போலி ருக்கிறது இவர்களுக்கு!

பூதத்தாழ்வார் வேருெரு விளக்கை ஏற்றுகிருர்:

*அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக,*
*இன்புருகு சிந்தை இடுதிரியா,—நன்புருகி*
*ஞானச் சுடர்விளக்(கு) ஏற்றினேன் நாரணற்கு,*
*ஞானத் தமிழ்புரிந்த நான்.*

[ஆர்வம்—விருப்பம். இன்பு—இன்பம். நன்பு— செவ்வையாய்.]

பொய்கையாழ்வார் பூமியை விளக்குத் தகழியாகக் கொண்டார்; பூதத்தாழ்வார் தம்முடைய அன்பையே தகழியாக்குகிருர். அவர் சமுத்திரத்தை நெய்யாக்கி

ஞர்; இவர் தம்முடைய உள்ளத்தினுள்ளே சமுத்திரம் போல் பொங்கிக் கொண்டிருக்கும் ஆசையையே நெய்யாக்குகிறார். அவர் சூரியனை விளக்கொளியாகக் கற்பனை செய்தார்; இவரோ உருகிக்கொண்டிருக்கிற தம்முடைய சிந்தையைத் திரியாக்கி ஞானத்தையே தீபச் சுடராக்குகிறார்.

இருவரும் ஏற்றிவைத்த ஞான தீபத்திலே—அது என்ன? ஆச்சரியத்திற்கு மேல் ஆச்சரியம்!—அக்கினி கோடானுகோடிக் கொழுந்துகள் விட்டுக் கிளம்புகிறது; இப்போது ஒரே ஜோதி வெள்ளகிறது! இரவு பகல், இன்று நாளை என்ற கால வரையறைகளைக் கடந்து பாயும் அந்த வெள்ளத்தின் நடுவிலே ஒரு சுழி; அந்தச் சுழியிலிருந்து எழுகிறது ஓர் உருவம்.

மாசற்ற அந்தப் பரம காந்திக்குக் கோடி சூரியர்கள் ஒன்றாகச் சேர்ந்து பிரகாசித்தாலும் நிகராகாதென்று தோன்றுகிறது. எனினும் முக மண்டலம் சந்திர பிம்பம்போல் மனோக்ஞமாகக் குளிர்ந்திருக்கிறது. சந்திரிகைக்குள்ளே சந்திரிகை அரும்புவது போலிருக்கிறது இள நகை. அந்த முகத்திலிருந்தும் கண்களிலிருந்தும் எல்லையற்ற தேஜோமயமாய்ப் பொங்குகிறது அழகு-வெள்ளம். ஒளி-ரூபத்தின் முடியிலே விளங்கும் கிரீடமும், இருபுறமும் எதிரெதிராகத் திகழும் சங்கு சக்கரங்களும் 'இவனே ராஜாதிராஜன்! இவனே தேவாதி தேவன்!' என்று அறிவிக்கின்றன.

கல்யாண குணங்களெல்லாம் அந்த மேனியில் திவ்ய வஸ்திர திவ்ய ஆபரணங்களாகி ஒன்றுக்கொன்று அழகாலும் ஒளியாலும் மிஞ்சிக் கிடக்கின்றன. நட்சத்

திரங்களெல்லாம் சேர்ந்து ஓர் ஆரமாய்க் கிடக்கின்றன அந்த மார்பிலே.

இப்போது அந்தத் திவ்ய மங்கள் விக்கிரகம் ஒரு நீலமேகம் போலக் காண்கிறது. மேகத்தினிடையே மின்னற்கொடி போலத் தோன்றிய லட்சுமியின் மேனி ஒரு சமயம் சுவர்ண மயமாகவும், ஒரு சமயம் நவரத்தின கசிதமாகவும் ஜொலிக்கிறது.

இப்படிப்பட்ட அதியற்புதமான தோற்றத்தைக் கண்டதும், ஆச்சரியத்திற்கும் அதீதமான ஓர் உணர்ச்சி உண்டாகிறது மூவருக்கும். பக்தர்கள் மத்தியில் வாசஞ் செய்யும் இஷ்டமூர்த்திதானே நான் காவது ஆளாக வந்தானென்று தெரிந்து கொண்டதும், இவர்கள் பேரின்ப வெள்ளத்தில் ஆழ்ந்து போகிறார்கள்.

பொய்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் உதவிய ஞான வெளிச்சத்திலே, அந்த ஞானனந்த சொரூபத்தைக் கண்டு அனுபவிக்கிறார் பேயாழ்வார், நெஞ்சென்னும் உட் கண்ணலே. பிறகு அந்த அநுபவத்தை,

*திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன், திகழும்*
*அருக்கன் அணிநிறமும் கண்டேன்,—செருக்கிளரும்*
*பொன்ஆழி கண்டேன், புரிசங்கம் கைக்கண்டேன்—*
*என்ஆழி வண்ணன்பால் இன்று*

[திரு—லட்சுமி. அருக்கன்—சூரியன். செரு—போர். கிளரும்—சிறந்து விளங்கும். ஆழி—சக்கரம். புரி—விரும்புகிற. ஆழிவண்ணன்—கடல் போன்ற நிறத்தை யுடையவன்.]

என்று பாஷையில் மொழிபெயர்க்க முயல்கிறார்.

அசாத்தியம் சாத்தியமாகி விட்டது. மனேபீஷ்டம் நிறைவேறி விட்டது, எதிர்பார்த்ததற்கு மேலாக. அந்த அநுபவ ஆனந்தத்தால் மூவரும் மயிர்க் கூச்செறிந்து கண்ணீர் சோர, நெகிழ்ந்த உள்ளத்தோடும் பரவசத் தொனியோடும் அமிர்தப் பிரவாகமான இசையோடும் இரவெல்லாம் பாடிக்கொண்டே யிருந்தார்கள்.

அந்தச் செந்தமிழ்ப் பாடல்களை அந்தப் பெருந்தமிழர்கள் வாயிலாகக் கேட்க வேண்டும் என்று தான் எம்பெருமானே அப்படி நேரில் வந்தானும். பக்திரஸம் ஒழுகும் இந்த ஞானத் தமிழைக் கொண்டு நாட்டை வாழ்விக்க வேண்டுமென்று தீர்மானித்தானும் அந்த நள்ளிரவிலே.

இப்படி இறைவனுல் அருளப்பெற்ற இந்த மூவரையும் ஸ்ரீவைஷ்ணவர்கள் முதலாழ்வார்கள் என்று சொல்லுகிருர்கள். இவர்களுடைய பாடல்கள் திவ்யப் பிரபந்தத்தில் 'இயற்பா' என்ற பகுதியில் முதல் மூன்று அந்தாதிகளாகச் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. இவை இவர்களுடைய ஆத்மானுபவங்களோடு, பாகவத தர்மத்தின் உயர்ந்த நோக்கத்தையும், உயிர் நிலையான சில கருத்துக்களையும் வெளியிடுகின்றன.

முதலாழ்வார்களைக் குறித்த கதை எவ்வளவு ரஸமாகவும் அர்த்தபுஷ்டி யுள்ளதாகவு மிருக்கிறது, பாருங்கள்! தன்னலமற்ற புண்ணிய புருஷர்களில் மூன்று பேர் ஓரிடத்தில் கூடிஞலும், அங்கே அவர்களுடைய ஈச்வர சக்தி விளங்குகிறது. நல்ல காரியத்திற்குப் பெருங் கூட்டம்தான் வேண்டுமென்பதில்லை. உண்மையான—அன்பு நிறைந்த—மூன்று இதயங்கள் கலந்து கொண்ட போதிலும், எப்படிப்பட்ட இருட்டிலும்

வெளிச்சம் ஏற்படுவது நிச்சயம். கடவுள் அந்த அன் பர்களைக் கைவிட மாட்டாராம்.

'ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்'—இது பக்த சிரேஷ்டர்களின் விசேஷ தருமம் தானா? சாமானியர்களுக்கு இதில் பங்கு இல்லையா? விருந்தாளிகளை வரவேற்று உபசரிப்பதிலும் இதுதானே லட்சியம்?

இன்னும் கொஞ்சம் பொறுங்கள். ஆழ்வார் கதை யல்லவா? இதன் ஆழத்தில் வேறு ஏதாவது பொருள் கிடைக்கிறதா?—பார்ப்போம்.

'ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்!'—என்ற பாகவத தருமமே நமது தேச சரித் திர தருமமாகவும் இருந்திருக்கலாமோ? 'நீ இங்கே குடியேருதே! அங்கே குடியேருதே!' என்று அன்னியர் களுக்குக் கதவை அடைத்த தேசமா இது? வந்தவர் களுக்கெல்லாம் இடம் கொடுத்து, 'வாருங்கள்; எங்க ளோடு ஒத்து வாழுங்கள்' என்று உபசரித்து வந்திருக் கிற நாடல்லவா?

நாம் வேருென்றும் செய்யவில்லை; பழைய கதை யைத் தான் புதிய சரித்திரக் கண்கொண்டு பார்க் கிருேம்.

கதைப் பிரியர்களான தமிழர்களை இந்த 'ஆழ்வார் கதை' மயக்கிவிட்டது.

*பாவரும் தமிழால் பேர்பெறு பனுவற்*
*பாவலர், பாதிநாள் இரவில்,.*
*மூவரும் நெருக்கி மொழி விளக்(கு) ஏற்றி*
*முகுந்தனைத் தொழுத நன்னடு*

[பா—பாட்டு. பனுவல்—நூல்கள்; பிரபந்தங்கள். பாவலர்—(பொய்கையாழ்வார் முதலிய) கவிஞர் பாதி நாள் இரவு—நடு ஜாமம்.]

என்று இந்தக் கதையையும், கதை பிறந்த நாட்டையும் பாரதம் பாடிய வில்லிபுத்தூரரின் குமாரரான வரந்தரு வார் வாயாரப் புகழ்ந்து பாடுவதைக் கேளுங்கள்.

இப்படிப்பட்ட அழகான கதைகளில் ஆழ்ந்த சமயக் கருத்துக்களைக் காண்பதுபோல், நமது தேசீய வாழ்க்கைத் தத்துவத்தையும் காணலாமென்று தோன் றுகிறது.

---

# 8. பொய்கையார் வாக்கு

ஒரு நாள் ஸ்ரீரங்கத்து வீதியில் சில பிள்ளைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் சில கோடுகளைத் தரையில் கிழித்து, 'இதுதான் கோவில்' என்று சொன்னான். வேறொருவன் வேறொரு கோடிழுத்து, 'இதுதான் பெரிய திருமண்ட பம்' என்றான். அதே சமயத்தில் அங்கே வந்து சேர்ந்தார் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்தாபனாசாரியரான ராமா னுஜர். உடனே அந்தச் சிறுவர்கள் காலாலே கீறி, 'இதோ உம்முடைய பெருமாள் திருமேனி!' என்று அவருக்குக் காட்டினார்களாம்.

ஆசாரிய சிரேஷ்டர் கோபித்துக் கொண்டாரா? வருத்தப் பட்டாரா? அலட்சியமாகப் போய்விட்டாரா? நமஸ்காரம் செய்தார். 'பிரசாதம் வாங்கிக் கொள்ளும்' என்று ஒரு பையன் மணலைக் கையிலெடுக்க, அதையும் பக்தியோடு பெற்றுக்கொண்டார்.

சிறு பிள்ளைகளின் விளையாட்டிலும் ஒரு சமய உண்மை கண்டார் அந்தப் பெரியார். அவருடைய பக்திக் கண்ணுக்குக் கோடுகளா தோன்றின? கோவி லும் மண்டபமும் பெருமாளும் காட்சி கொடுத்தனர்.

அந்தக் காட்சியை அவருக்குக் காட்டியது எது?

> தமர்உகந்த(து) எவ்வுருவம் அவ்வுருவம் தானே;
> தமர்உகந்த(து) எப்பேர்மற் றப்பேர்

[தமர்—தமக்கு வேண்டியவர்; பக்தர்.]

என்ற பொய்கையாரின்-வாக்கிய தீபம்தான். இந்த வாக்கின் கருத்தை மேலே சொன்ன கதையைக் கொண்டு விளக்கி வியாக்கியானஞ் செய்கிருர் பெரிய வாச்சான் பிள்ளை.

'கடவுளுக்கு உருவம் உண்டா, இல்லையா?' என்ற கேள்விக்கு இந்த ஆழ்வார் சொல்லும் பதிலைக் கவனிப்போம். பக்தர்கள் எந்த உருவத்தை விரும்புகிருர்களோ அந்த உருவத்தையே பகவான் தன் விக்கிரகமாக அங்கீகரிக்கிருனும். பக்தர்கள் அவனையே சார்ந்திருப்பவர்கள்; அவன் சொரூபமோ பக்தர்களின் விருப்பத்தைச் சார்ந்திருக்கிறது. அதாவது, அவனையே நம்பி அன்பு செய்கிறவர்கள் உகப்பது தான் அவனுக்குத் திருமேனி—அவனுக்குப் பெயர்! எவ்வளவு பொருத்தமான கொள்கை!

'கடவுள் தன் சாயலில் மனிதனைப் படைத்தான்' என்று கிறிஸ்து வேதம் சொல்லுகிறது. 'மனிதன் தன் சாயலில் கடவுளைப் படைத்துக் கொள்ளுகிருன்' என்ற கொள்கையையும் ஆழ்வார் அங்கிகரிக்கிருர்!

உண்மையில், கடவுளையாவது அவன் சாயல் அல்லது உருவத்தையாவது அறிந்து கொள்வது அருமை. இவற்றை அறிய முயலும்போது, அறிவு அறியாமையாகி விடுகிறது!

*உணர்வார்ஆர் உன்பெருமை ஊழிதோ றூழி?*
*உணர்வார்ஆர் உன்னுருவம் தன்னை?—உணர்வார் [ஆர்,*
*விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! [நால்வேதப்*
*பண்ணகத்தாய்! நீகிடந்த பால்?*

என்று பாடுகிருர் பொய்கையார், இறைவனை நோக்கி.

யுகக் கணக்காக ஆராய்ச்சி செய்துகொண்டே போனாலும், கடவுளுடைய பெருமையையும் அறிய முடியாது; எளிமையையும் உள்ளபடி அறிய முடியாதாம். கடவுளே தன்னை உணர்ந்துகொள்ள வில்லையாம்.

'அவன் அருளால் அவன் தாள் வணங்கி'ய வேத ரிஷிகள்தாம் முதல் முதல் இந்த உலகத்திலே, மனித நாகரிகத்தின் அருணோதய காலத்திலே, இப் படிப்பட்ட உண்மையை வெளியிட முயன்றார்கள் வேத ரூபமாகவும் கவிதாரூபமாகவும். இதைத்தான் வேதாந்திகள் தத்துவ ரூபமாகவும், பௌராணிகர்கள் பல்வேறு கதைகளாவும் வெளியிட முயன்றார்கள்.

விண்ணும் மண்ணும் சிருஷ்டியழகுகளாலும், வேத ரிஷிகளின் கவிதை பண்ணழகாலும், புராணங் களும் இதிகாசங்களும் அழகான கதைகளாலும் சுட்டிக் காட்டும் 'வேதாந்த உண்மை'க்குத்தான் பக்தர்கள் திருப்பதிமலை, ஸ்ரீரங்கம் முதலான ஸ்தலங்களில் அழகான கோவில்கள் கட்டிவைத்திருக்கிறார்கள்.

இந்த 'மந்திரப் பிரதிஷ்டை'களெல்லாம் வேதாந்த ஞானிக்குச் சிறு பிள்ளைகள் வரைகீறிக் கோவிலும் பெருமாளும் அமைத்துக் காட்டியதுபோலத் தோன்றலாம். எனினும், அந்தப் பிரதிஷ்டைகளைத் தனக்குப் 'பிராணப் பிரதிஷ்டை'யாகவே கொண்டு ஈச்வரன் ஸம்ஸாரிகளுடைய கலக்கங்களைப் போக்கு வதற்காக அங்கே வந்து விடுகிறான் என்று சொல்லு கிறது சித்தாந்தம்.

எனவே, கடவுளை 'வேங்கடத்தாய்!' என்று வாய் குளிர அழைப்பதில் பொய்கை யாழ்வாருக்கு விசேஷ திருப்தி. ஸர்வாந்தர்யாமியான ஸர்வேச்வரனை உணர

வும் முடியாத ஒரு சமுத்திரமாக உவமித்தால், அதிலும் செல்வதற்குரிய இன்பப் படகாகக் கொள்ளலாம் பக்தர் வழிபடும் வேங்கடம் (திருப்பதி) போன்ற ஸ்தலங்களையும், 'அவன் பாற்கடலில் பள்ளிக்கொண்டிருக்கிறான்!' என்பது போன்ற கதைகளையும். வைஷ்ணவர்களுக்கு, விஷ்ணுவின் உறைவிடமான பாலும் நீரும் அவனுடைய தெளிந்த—குளிர்ந்த—அருளுக்கு அறிகுறி.

உணர முடியாத கடவுளுடைய அருளுக்கும் பெருமைக்கும் சான்றாக அமைந்திருக்கின்றன சில அழகான புராணக் கதைகள். இவற்றுள் 'கடல் கடைந்த கதை' ஒன்று.

பகவான் .தேவர்களுக்கு ஆயுளும் வெற்றியும் உண்டாகுமாறு தன் உடம்பு நோவக் கடலைக் கடைந்து அமிர்தங் கொடுத்து அவர்களைச் சாவாமல் காத்தானும். அப்படிக் 'கடைந்த நுரையும் திரையும் மாறவில்லை'யே இன்னும்!—என்று தோன்றுகிறது பக்திக் கண்ணுக்கு.

ஒரு பிரயோஜனத்தை உத்தேசித்துப் பக்தி பண்ணின தேவர்களுக்கும் அப்படி அருள் செய்தவன், பிரயோஜனத்தை எதிர்பாராத அடியார்களுக்கு அனுக்கிரகம் செய்யமாட்டானா?

*........................ நீள் அரவைச்*
*சுற்றிக் கடைந்தான் பெயரன்றே, தொல்நரகைப்*
*பற்றிக் கடத்தும் படை ?*

[நீள் அரவைச் சுற்றி-வாசுகியாகிய சர்ப்பத்தைக் கடை கயிறாக (மலையைச்) சுற்றிக் கட்டி. தொல்-பழமை

யான. பற்றி—அள்ளி யெடுத்துக்கொண்டு போய். படை—கருவி.]

என்பது பொய்கையாழ்வார் சித்தாந்தம்.

இறைவன் பெயர் அவனுடைய குணங்களுக்கும் சக்திகளுக்கும் வாசகம். இந்தப் பெயரைச் சொல்லவே, பக்தர்களுக்குத் துன்பங்கள், கவலைகளெல்லாம் ஓடிப் போய்விடுமாம், குழந்தைக்குத் 'தாய் பேர் சொல்லக் கிலேசம் போமா(று) போலே'.

கடல் கடைந்த கதையைப்போல், உலகம் அளந்த கதையும் இறைவனுடைய பெருமையையும் அருளையும் வெளியிடுகிறது. அந்தக் கதை,

*அடியும் படிகடப்பத்*
*தோள் திசைமேல் செல்ல,*
*முடியும் விசும்பளந்த தென்பர்*

[படி—பூமி. முடி—கிரீடம். விசும்பு—ஆகாசம்.]

என்ற வாக்கிலே எவ்வளவு அழகாக வருகிறது!

இத்தகைய முடியை நீள்முடி யென்றும், அடியை நீள்கழல் என்றும் இவரே குறிப்பிடுகிறார். எல்லாப் பொருள்களுக்கும் முடிவாக நீண்டு செல்லும் அந்தக் கிரீடம், 'அவனே ராஜாதிராஜன், தேவாதி தேவன்' என்பதைக் காட்டுகிறது. முடி அற்புதமான பெருமையை வெளியிடுவதுபோல், ஏழைகள் தாழ்ந்தவர் வீழ்ந்தவர்வரை நீண்டு தாழும் அடிகள் அற்புத எளிமையை வெளியிடுகின்றன.

இந்த அடிகள், பூமியைத் தனதாகத் தானே எண்ணிப் பொருட் செருக்கோடும் வண்மைச் செருக்

கோடும் இருந்த மகாபலி என்ற அசுர சக்கரவர்த்தியை யும் தேடிப் போய், மூவடி மண் யாசித்து அந்தச் செருக்கை முடித்து,

*வாமனன் மண் இது!*

(நம்மாழ்வார்)

—அதாவது, உலகம் கடவுளுக்குத்தான் சொந்தம் —என்று சித்தாந்தப் படுத்திவிட்டனவாம்,

வணங்கா முடித் தனியரசு புரிந்த இரணியன் என்ற கொடிய அசுர சக்கரவர்த்தியை முடிக்க நரசிம்மாவதாரம் செய்த பெருமையையும் பொய்கையார் குறிப்பிடுகிறுர். எனினும், இறைவனுடைய கருணை விசேஷமாக வெளிப்படுவது ராமாவதாரத்திலும் கிருஷ்ணுவதாரத்திலுமே. இந்த இரண்டு அவ தாரங்களில், ராவண வதம் செய்து சாதுக்களுக்கு உலகத்தைக் கொடுத்த வீர சரித்திரத்தைக் காட்டிலும், கிருஷ்ணனுடைய அதிமானுஷ லீலைகள் பொய்கை யாரை வசீகரிக்கின்றன. ஸர்வ சக்தியின் '*ஸௌலப்ய' சரித்திரம் கிருஷ்ணுவதாரம்,

மறைகளும் தொடர்ந்து வர முடியாமல் ஏங்கும் படி மறைந்து போனவன் மாடுகளுக்குப் பின்னே காணப்பட்டான் என்றுல், அந்த மேன்மையையும் நீர்மையையும் பக்தர்களால் மறக்க முடியுமா?

*வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்த்*
*தேனாகிப் பாலாம் திருமாலே!—ஆனாய்ச்சி*
*வெண்ணெய் விழுங்க நிறையுமே, முன்னொருநாள்*
*மண்ணை உமிழ்ந்த வயிறு?*

* ஸௌலப்யம்—சுலபமாகும் தன்மை.

[மறி—(அலை) மறிந்து விழுகிற. மாருதம்—காற்று. ஆன் ஆய்ச்சி—பசு மேய்க்கும் குலத்தில் பிறந்த இடைச்சி. நிறையுமே—நிறையுமோ.]

என்று கிருஷ்ணன் உறி வெண்ணெயை விழுங்கிய பால லீலையில் எப்படி ஈடுபடுகிறார் பொய்கையார்!

இந்த வயிறு பிரளய காலத்தில் உலகத்தை வைத்துக் காப்பாற்றிப் பிறகு 'வெளிநாடு காண' உமிழ்ந்து விட்ட வயிறுதானும். அந்தப் பெருமையை ஒளித்து, வெண்ணெயோடு வெண்ணெய் போல உருகும் உள்ளங்களையும் களவு கொண்ட சீலம், பொய்கை யாழ்வாரைப் போன்ற பக்த சிரேஷ்டர்களின் விசேஷ உகப்பிற்கு விஷயமாவதில் ஆச்சரியமில்லையே.

இப்படிப்பட்ட கடவுளை இவருடைய உணர்வு நோக்கிக் கொண்டே யிருக்கிறது, திசையறி கருவி வடக்கு நோக்குவதுபோல:

*பெயருங் கருங்கடலே நோக்கும்ஆ(று); ஒண்பூ*
*உயரும் கதிரவனே நோக்கும்;—உயிரும்*
*தருமனையே நோக்கும்; ஒண் தாமரையாள் கேள்வன்*
*ஒருவனையே நோக்கும் உணர்வு.*

[பெயரும்—சலிக்கிற. ஒண்—அழகிய. கதிரவன்—சூரியன். தருமன்—(இங்கே) யமதருமன்; அதாவது, மரணம். கேள்வன்—புருஷன். தாமரையாள் கேள்வன்—லக்ஷ்மீநாராயண மூர்த்தி.]

இந்த உணர்வினால்தான்,

*என்னாகில் என்னே எனக்கு?*

[என்னாகில்—எப்படியானால்.]

என்று எப்படிப்பட்ட இன்ப, துன்பங்களையும் சமமாக அனுபவித்துக் கொண்டு கொஞ்சமும் கவலையில்லாமல், பயமில்லாமல் இறுமாந்திருக்கிறார் இவர்.

இந்த நிலைக்குக் காரணமான அபார நம்பிக்கையைப் பாருங்கள்:

*உளன்கண்டாய் நன்னெஞ்சே! உத்தமன்; என்றும்*
*உளன்கண்டாய்; உள்ளுவார் உள்ளத்(து)—*
*உளன்கண்டாய்;*
*வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும்*
*உள்ளத்தி னுள்ளான்என்(று) ஓர்*

[உள்ளுவார்—நினைப்பவர்கள். வெள்ளம்—(இங்கே) சமுத்திரம். மேயான்—வசிக்கிறவன். ஓர்—அறிந்துகொள்.]

'புருஷோத்தமன் ஒருவன் உண்டு; அவன் என்றும் இருக்கிறான்; அன்போடு நினைப்பவர் உள்ளத்தைப் பாற் கடலாகவும் திருப்பதியாகவும் கொள்ளுகிறான்!' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொள்வதுபோல், பிறரோடும் அந்த மகா விசுவாசத்தையும் இதய சாந்தியையும் பங்கு போட்டுக் கொள்கிறார்.

உள்ளம் தெளியத் தெளிய இக்கடவுளுண்மையும், தெளிவாகு மென்பது பொய்கை யாழ்வார் காட்டும் வழி. உள்ளம் தெளிவு பெற, இந்திரிய ஜயம் கைகூட வேண்டும். அப்போது ஞானம் மெய்ஞ்ஞானமாகும்.

*.............................. கூரிய*
*மெய்ஞ்ஞானத் தால்உணர்வார் காண்பரே*

என்றும்,

*புந்தியால் சிந்தியா(து), ஓதி உருஎண்ணும்*
*அந்தியால் ஆம்பயன் அங்(கு)என்?*

[புந்தி—புத்தி. அந்தி—சந்தியாவந்தனம் முதலான கர்மங்கள். என்—என்ன.]

என்றும் பொய்கையாழ்வார் உபதேசிக்கிறார்.

ஞான பக்தியால் 'மனமாசு தீரும்'. எப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலும்,

*...........திருமாலே! நின்அடியை*
*வந்திப்பார் காண்பர் வழி*

[வந்திப்பார்—வணங்குவோர்.]

என்று கடவுளே சாட்சியாக உறுதி கூறுகிறார்.

பக்தி ஒழுக்கமாகவும் கைங்கரியமாகவும் கனிய வேண்டும். அப்படிக் கனியாத பக்தி மலடு. கைங்கரிய லட்சணத்தை,

*சென்றால் குடையாம்; இருந்தால்சிங் காசனமாம்;*
*நின்றால் மரவடியாம்; நீள்கடலுள்—என்றும்*
*புணையாம்; மணிவிளக்காம்; பூம்பட்டாம்; புல்கும்*
*அணையாம் திருமாற்(கு) அரவு*

[புணை—தெப்பம். புல்கும் அணை—தழுவணை; அதாவது, பக்கத்தில் அணைத்துக்கொள்ளும் பஞ்சணை.]

என்று சேஷ சயனத்தின் உட்பொருளாகக் காட்டுகிறார் பொய்கையார்.

இவர் கவிதையை வைஷ்ணவரல்லாத பழைய தமிழ் உரையாசிரியர்களும் 'பொய்கையார் வாக்கு' என்று பாராட்டுகிறார்கள். வைஷ்ணவர்களோ இந்த வாக்கை,

... ... ...எம் பொய்கைப்
பிரான்மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ்
தன்னையும் கூட்டி, ஒன்றத்
திரித்(து)(அன்று) எரித்த திருவிளக்கு

[மறையின்குருத்து—வேதாந்த ஸாரம்.]

என்று போற்றுகிருர்கள்.

பின்னுளில் ஸ்ரீ பாஷ்யம் என்ற பேருரை கண்டு ஸ்ரீ வைஷ்ணவத்தை ஸ்தாபித்த ராமாநுஜரும் இத் 'திருவிளக்'கைத் தமக்கு ஒரு வழிகாட்டியாகக் கொண்டாரென்று இராமாநுச நூற்றந்தாதி தெரிவிக்கிறது. முதலாழ்வார்களிலும் முதலானவர் என்று மதிக்கப்பெறும் பொய்கையாரை ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தின் 'விடிவெள்ளி' யென்று சொல்லலாம்.

———

## 9. மகாபலிபுரத்துப் பக்தமணி

ஞக்கிராமம் உலகப் பிரசித்தி பெற்றுவிட்டது. விசித்திர வேலைப்பாடுகளைப் பார்க்கப் பார்க்க அவநம்பிக்கை உண்டாகிறது,—'நம்மைப் போன்ற மனிதர்கள் செய்திருக்க முடியுமா?' என்று. 'மகாபலிதான் தபோ பலத்தாலும் மந்திர பலத்தாலும் குன்றுகளையும் பாறைகளையும் இப்படி அழகுச் செல்வங்களாக மாற்றியிருக்கலாமோ?' என்றுகூட ஒரு பிரமை ஏற்படுகிறது.

ஆனால், 'இது அசுர சிருஷ்டியன்று, அரசர் சிருஷ்டி!' என்று தெரிவிக்கிறது அங்கேயுள்ள கல்வெட்டு.

காஞ்சீபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டிருந்த பல்லவ அரசர்கள்தாம் இந்த அற்புதங்களைச் செய்திருக்கிறார்கள். இந்தக் கிராமம் ஒரு காலத்தில் சிறந்த துறைமுகப் பட்டினமாயிருந்தது. அதைப் புதுப்பித்து விசேஷமாக அழகு செய்தவன் கி. பி. 7-ம் நூற்றாண்டில் ஆட்சி செய்த மகாமல்லன் என்ற முதல் நரசிம்ம பல்லவன். அவன் பெயரால் இந்த ஊர் மகாமல்லபுரம் என்ற காரணப் பெயர் பெற்றது. மகாமல்லபுரம் மகாபலிபுரமாகி விட்டது!

அந்த நாளில் இதன் இயற்பெயர் மல்லை. திருமங்கையாழ்வார் தாம் நேரில் பார்த்த மல்லை மாநகரத்தை,

*புலங்கொள்நிதிக் குவையோடு,*
*புழைக்கைம்மா களிற்றினமும்,*
*நலங்கொள்நவ மணிக்குவையும்,*
*சுமந்தெங்கும் நான்றொசிந்து*
*கலங்கள் இயங் கும்மல்லைக்*
*கடல்மல்லை*

[புலம்கொள்—இந்திரியங்களைக் கவர்கிற, நிதிக் குவை—பொற்குவியல். புழை—துளை. கை—தும்பிக்கை. மாகளிறு—பெரிய யானை. நான்று—தாழ்ந்து. ஒசிந்து—இற்று. கலம்—மரக்கலம். மல்லைக் கடல் மல்லை—வளமும் பெருமையும் பொருந்திய, கடற்கரையிலுள்ள, மல்லை நகரம்.]
என்று வருணிக்கிறார்.

அந்தத் துறைமுகத்திலே, பல தேசங்களிலிருந்து வரும் கப்பல்களின் நடமாட்டத்திற்கு ஓய்வுமில்லை, ஒழிவுமில்லையாம். அவை கண்டவர்கள் மருளுமாறு தங்கக் குவியல்களையும் நவரத்தினக் குவியல்களையும் சுமந்துகொண்டு வருகின்றனவாம். யானைகளும் கூட்டங் கூட்டமாக இறக்குமதி செய்யப்படுகின்றனவாம். 'சரக்குகளின் கனத்தாலே அங்கே முறிந்தது, இங்கே இற்றுப் போய்விட்டது' என்று பழுது பார்த்துவரும் நிபுணர்கள் எங்கும் காணப்படுகிறார்களாம்.

இவ்விதமாக வருணிக்கப்பெற்றிருக்கும் பழமையான துறைமுக நகரம் பலவகையான பொருட் செல்வங்களோடும் சிற்பச் செல்வங்களோடும் அலைகளின் கீழ் முழுகிப் போய்விட்டது என்றும், மிஞ்சியிருக்கும் சிற்ப விசித்திரங்களே தமிழர்களின் நாகரிக மாட்சிக்கும்

கலைச் செல்வத்திற்கும் கற்பனை சக்திக்கும் இன்னும் சாட்சி சொல்லிக்கொண்டிருக்கின்றன என்றும் கருது வோர் உண்டு.

பல்லவ மகாராஜ்யத்தின் சுவடுகளையும் காலவெள் ளம் அடித்துப் போய்விட்டது. சிற்பங்களும் கோவில் களும் கோவில்களிலுள்ள சிலாசாஸனங்களுமே அவர் களை ஞாபகப்படுத்துகின்றன, இல்லாவிட்டால், 'பல்ல வர்' என்ற பெயரே மறந்துபோயிருக்கும்

அவர்களை ஞாபகப்படுத்தும் கலைச் செல்வங்களில் அதிமுக்கியமான மகாபலிபுரச் சிற்பங்களை நோக்கி, 'உங்களை நிர்மித்த அரசரின் மகாபலம்தான் எது?' என்று ஒரு கேள்வி கேட்டால், மோனத்திலிருக்கும் அவை எப்படியோ வாய்திறந்து பேசுவதுபோல் தங்கள் இரகசியத்தை வெளியிடுகின்றன,—பக்தி என்ற ஒரே வார்த்தையில்!

மகாபலிபுரத்தை அழகுபடுத்திய மகாமல்லனும், அவனுடைய பாட்டன் முதலானவர்களும் விஷ்ணு பக்தர்கள். அவர்களுடைய பக்தியைத் தூண்டியிருக்கக் கூடிய முதலாழ்வார்களில் ஒருவரான பூதத்தாழ்வார் மகாபலிபுரத்திலே தோன்றினர். இவர் இந்த ஸ்தலத் தைத் 'தமர் உள்ளும் மாமல்லை'—அதாவது, 'பக்தர்கள் நினைத்துக் கொண்டிருக்கும் பெரிய மல்லைநகரம்— என்று குறிப்பிடுகிருர்.

பூதத்தாழ்வாராலும் வேறு பக்தர்களாலும் வளர்க் கப் பெற்ற பக்தியே மல்லைநகரத்தின் அழகுச் செல் வத்தை வளர்ப்பதற்கும் காரணமாயிற்று. தமது

காலத்திலிருந்த அரசர்கள் விஷ்ணுபக்தியில் சிறந்திருந் தார்கள் என்று பூதத்தாழ்வாரே குறிப்பிடுகிறார்.

பல்லவ ராஜதானிக்கும் அந்த ராஜ்யத்தின் முக் கியமான துறைமுகமா யிருந்த மகாபலிபுரத்திற்கும் நெருங்கிய கலைத் தொடர்பு இருந்தது, ‘பூம்பொழில் சூழ் கச்சிநகர்’ (அழகிய சோலை சூழ்ந்த காஞ்சீபுரம்) என்றும், ‘கல் உயர்ந்த நெடுமதில் சூழ் கச்சி’ என்றும் இயற்கை வளமும் செயற்கையரணும் உள்ளதாக விஷ்ணு பக்தர்கள் வர்ணித்திருக்கும் அந்த இராஜ தானி, இந்துக்களின் மதத்திற்கும் கலைகளுக்கும் அதி முக்கியமான அரண்களில் ஒன்றாக இருந்தது.

‘வடக்கே காசி; தெற்கே காஞ்சி’ என்று சொல்லும் படி அவ்வளவு பிரசித்தி பெற்றிருந்த காஞ்சீபுரத்தில், சைவ வைஷ்ணவங்களோடு ஜைன பௌத்தர்களுக் கும் செல்வாக்கு இருந்தது. அங்கே வட மொழியும் தென்மொழியும், வட நாட்டு நாகரிமும் தமிழ் நாகரிக மும் தழுவித் தோழமை கொண்டு வளர்ந்தன.

‘நெடுமாடம் ஓங்கி விளங்கிய கச்சி’ என்றும், ‘தேர் ஊரும் நெடு வீதிச் செழுங்கச்சி’ என்றும் பக்தர்கள் பாடும் அந்த நகரம் சிற்ப சாஸ்திர விதிகளுக்கு இணங்க வெகு நேர்த்தியான கட்டடங்களோடு அழ காக நிர்மாணஞ் செய்யப்பெற்றிருந்தது. ‘கச்சியுள் காக்கை கரிது!’—அதாவது காஞ்சீபுரத்தில் காக்கை தவிர மற்றவை யெல்லாம் நல்ல நிறமாகவும் அழகாக வும் இருக்கும்—என்பது கவிஞர் வாக்கு.

இந்த நகரத்திலேதான் ‘திருக்கச்சி மாநகரம் செழிக்க வந்தோன்’ என்று ஸ்ரீ வைஷ்ணவர் போற்றும் பொய்கையார் தோன்றினார். அவருடைய பாசுரங்கள்,

'நல்ல திருக்கடல்மல்லை நாதனார்' என்று போற்றப் பெறும் பூதத்தாரின் பாசுரங்களுக்கு முன்மாதிரியாக அமைந்தன என்று ஊகிக்கலாம்,—காஞ்சீபுரத்திலுள்ள கைலாசநாதர் கோவில் மகாபலிபுரச் சிற்பங்களுக்கு முன்மாதிரியென்று கலாரஸிகர்கள் ஊகிப்பது போல.

பொய்கையாரைப்போல் பூதத்தாரும் அம்மையப்ப னாகிய லக்ஷ்மீநாராயணமூர்த்தியைக் கடவுளாக வழி படுகிறார். 'ரட்சணத்திற்குக் கொடிகட்டியிருக்'கும் இந்த மூர்த்தி எங்கும் வியாபித்திருக்கிறானென்றும், இவன் இல்லாத இடமில்லை யென்றும் துணிகிறார்.

இருவருக்கும் இந்த மூர்த்தியின் அவதாரங்களில் விசேஷ பக்தியும் அபார நம்பிக்கையும் உண்டு. கடவு ளுக்கு மக்கள் மீதுள்ள அன்பையும் கருணையையும் அவதார புருஷர்களே நன்றாக வெளியிடுகிறார்கள் என்பது இவர்கள் கருத்து. எதிரம்பு கோத்து நின்ற அசுரர்களுக்கும் விரோதியாகிய சரீரத்தைப் போக்கி முடிவில் அருள் செய்தவர்களல்லவா?

'இத்தகைய கடவுளுடைய பெருமையையாவது சிறிது அறிந்து கொள்ளலாம்; அவனுடைய எளி மையை ஒருவரும் உள்ளபடி அறிய முடியாது!' என்ற கொள்கையைப் பொய்கை யாழ்வார் குறிப்பாக வெளி யிடுகிறார். பூதத்தாரோ,

*...... ......நெடுமாலே! நின் அடியை*
*யார்ஓத வல்லார் அறிந்து?*

என்று தெளிவாகச் சொல்கிறார்.

இந்த எளிமையே இறைவனை விக்கிரகங்களிலும் கோவில்களிலும் வந்து நிற்கச் செய்கிற தென்பதும் இந்த ஆழ்வார்களின் அபிப்பிராயம்.

புதைபொருளோடு கூடிய புராணக் கதைகளை நய மாக எடுத்தாளுவதிலும் பூதத்தார் பொய்கையாரைப் பின்பற்றுகிறார். உதாரணமாக, இருவரும் பூதனை வதத்தைக் குறிப்பிடுகிறார்கள். பெற்ற தாய்போல் வந்து பால் கொடுப்பதுபோல நஞ்சை ஊட்டிக் கிருஷ்ணனைக் கொல்ல வந்த அத்தப் பேய் வதம் செய்யப்பட்ட கதை, 'வேஷம் பலிக்காது' என்ற உண்மையை எவ்வளவு நன்றாக விளக்குகிறது!

வெளி வேஷத்தைக் காட்டிலும் ஆத்ம குணங்களே கடவுளுக்கு உகப்பானவை.

*...... ...... ...... 'அறம்தாங்கும்*
*மாதவனே !' என்னும் மனம்படைத்து, மற்றவன்பேர்*
*ஓதுவதே நாவினால் உள்ளு*

[உள்ளு—நினை.]

என்பது பூதத்தாழ்வார் வாக்கு. தருமவிரோதிகள் எப்படிப்பட்ட வேஷத்திற்குள் மறைந்துகொண்ட போதிலும், பூதனைபட்ட பாடுபடுவர் என்பது குறிப்பு.

பக்தியின் கனி கைங்கரியம் என்பதைப் பொய்கையாழ்வார் கஜேந்திர மோட்சம் என்ற புராணக் கதையைக் கொண்டும் குறிப்பிடுகிறார். இதே கதையைப் பூதத்தாழ்வாரும் எடுத்தாளுகிறார்.

பகவானை வழிபட வேண்டுமென்று கைப்பிடித்த பூவோடு முதலையிடம் அகப்பட்டுக் கொண்டதாம் யானை. அதன் துயரத்தைப்போக்க 'அரைகுலையத் தலைகுலைய' வந்து தோன்றிய ஈச்வரன் விரோதியைப் போக்கி அந்தத் தாமரையைத் தன் திருவடியில் இட்டுக்கொண்டானும்.

இந்த யானையின் நிலையிலிருக்கிறது ஜீவாத்மா. இடையூறுகளைப் போக்கி நாம் செய்யத் தொடங்கும் கைங்கரியத்தைப் பூர்த்தி செய்து அதைத் தன் அடிகளில் இட்டுக் கொள்ளச் சித்தமாயிருக்கிறது பரமாத்மா. 'நம் பக்கல் இடர் வந்ததாகில் முதலை பட்டது படும்!' என்பது அடியார்கள் நம்பிக்கை.

இப்படிப்பட்ட பக்திமார்க்கம் பரமபதத்தைப் போலவே இன்பமானதென்றும், நரகத்திற்குப் போகும் வழி நரகத்தைப் போலவே துன்பமயமானதென்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்லுகிறார்கள்.

இறைவனை 'ஞானத்தால் நன்குணர்ந்து' இதயத்தில் வைத்ததும்,

*மனத்துள்ளான், வேங்கடத்தான், மாகடலான், [மற்றும்*
*நினைப்பரிய நீள்அரங்கத் துள்ளான்*

என்று பூதத்தாழ்வாரால் போற்றப்படும் பக்தவத்ஸலன், 'திருப்பதிகளி லெல்லாம் மேலான திருப்பதி அடியார்களுடைய இதயம்தான்!' என்று உகந்தருளுகிறான்.

அந்த இதயத்திற்கு அடுத்தபடியாக அவன் உகப்பவைதாம் திருப்பதி, பாற்கடல், ஸ்ரீரங்கம் முதலியன. இந்த உண்மையை உணர்ந்துகொண்டதும்,

*கோல்தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே,*
*மால்தேடி ஓடும் மனம்*

[கோல்—கொழுகொழும்பு. கொழுந்து—(இங்கே) கொடி.]

என்பர்.

இத்தகைய பக்தியே பக்த ஜனங்களுக்குத் தவமென்பது பூதத்தார் கொள்கை. 'உடம்பு நோவப் பண்ணின தபசால் காண அரிய சிரமஹரமான வடிவையுடையவன்' பகவான் என்பது வியாக்கியானம்.

இந்த விதமான பக்தி மார்க்கம் சுலபமானதென்றும் பூதத்தாழ்வார் சொல்லுகிறார்:

*தாமுளரே; தம்முள்ளம் உள்ளுளதே; தாமரையின்*
*பூவுளதே; ஏத்தும் பொழுதுண்டே:—வாமன்*
*திருமருவு தாள்மருவு சென்னியரே! செவ்வே*
*அருநரகம் சேர்வ தரிது.*

[வாமன்—வாமனவதாரம் செய்த மகாவிஷ்ணு. மருவு—பொருந்திய. சென்னி—தலை. செவ்வே—நேராக.]

இந்தக் குதூகலம், 'யமபடர்களே! நரகவாசல்களைப் பலமாகப் பூட்டி விடுங்கள். இனி அந்தப் பக்கம் யார் வரப்போகிறார் இந்த ஜம்பூத்வீபத்திலிருந்து?' என்று உத்தரவு கொடுக்கும் பொய்கையாரின் எக்களிப்பை ஞாபகப் படுத்துகிறது.

நரகத்திற்கு நேரான பாதையில்லாமல் அடைத்துவிட்டதாம் பக்தி.

ஆகையால் 'முற்பட வணங்கிப் பின்னைத் தேகயாத்திரை பண்ணப் பாருங்கோள்!' என்பர் பெரியவாச்சான் பிள்ளை. 'முதல் முதல் கர்த்தருடைய பரமபத ராஜ்யத்தைத் தேடுங்கள்; பிறகு எல்லாம் உங்களுக்குச் சித்திக்கும்!' என்று உபதேசிக்கும் கிறிஸ்து நாதரைப் போல.

பக்தியும் பக்தர்களும் பகவானும்தாம் இவருக்குப் பகல்நினைவும் இராக்கனவும். பூக்களால் பகவானுடைய அழகிய பாதங்களை அலங்கரிக்கவேண்டுமென்று உபதேசிக்கிறவர் தமது நெஞ்சையே கோவிலாக இழைத்துப் பக்தியையே புஷ்பமாகக் கொண்டு எப்போதும் வழிபடுகிறார். பொய்கையாருடைய பக்தி யனுபவங்களுக்கும் பூதத்தாருடைய பக்தி யனுபவங்களுக்கும் ஸாராம்சத்தில் பேதமில்லை.

எனினும், பொய்கையாழ்வாருடைய ஞான பக்தியில் ஞானம் அதிகம்; பூதத் தாழ்வாருடைய ஞான பக்தியில் பக்தி அதிகம் என்று சொல்லலாம்,

*அன்(பு),ஆழி யானை அணுகென்னும்*

[ஆழியானை —மகாவிஷ்ணுவை. அணுகு—நெருங்கு.]

—அதாவது, 'கடவுளுடைய பெருமையை எண்ணிப் பயப்படாதே; அவனுடைய சீலத்தைப் பார்த்து நெருங்கி விடு' என்று அன்பு உபதேசஞ் செய்கிறதென்கிறார் பொய்கையாழ்வார். பூதத்தாழ்வாரோ,

*..................என்தன்*
*அளவன்றால் யானுடைய அன்பு!*

என்று முடிவாகக் கூறுகிறார்.

இப்படிப்பட்ட அன்பே பூதத்தாழ்வாரின் குணாதிசயத்தையும் கவிதையையும் பக்தி யனுபங்களையும் உருவாக்கி யிருக்கவேண்டும். இவருடைய உயர்தர வாழ்க்கைக்கு வழிகாட்டி உத்ஸாகமூட்டிய நட்சத்திரம் இதுதான். இவருடைய இதயமாகிய மலரின் வாசனையே இந்த அன்பு என்று சொல்லவேண்டும்.

தம்மையும் கடந்து பொங்கிய தெய்விக அன்பையே தாரகமாகக் கொண்டு லௌகிகப் பற்றில்லாமல் திரிந்து கொண்டிருந்தவரை உலகம் பூதத்தார் என்றும், பூதயோகி என்றும் அழைத்தது ஆச்சரியமன்று. மற்றப்படி, மகாபலிபுரத்தில் தோன்றிய இந்த மகாபுருஷருடைய இயற்பெயர் கூட நமக்குத் தெரியாது.

பொய்கையாரையும் பூதத்தாரையும் முக்காலமும் உணர்ந்த முனிவராக மதித்தார்கள் தமிழர்கள். ஸ்ரீவைஷ்ணவர்களோ,

*போதமிகும் பொய்கையார், பூதத்தார் வாழியே!*

[போதம்—ஞானம்.]

—அதாவது, ஞானமும் பக்தியும் ஒருங்கே வாழ வேண்டுமென்று இந்த இரண்டு பக்த சிரேஷ்டர்களையும் வாழ்த்துகிறார்கள்.

---

# 10. பேயாழ்வார் இதயம்

இராஜ சபையில் தர்க்க சாஸ்திரி ஒருவன் இருந்தான். அவன் வாக்கு வல்லபத்தால் எந்தக் கொள்கையையும் அழிப்பான், ஆதரிப்பான். அரசன் சமாதானப் பிரியனுக இருந்ததால் மற்ற அரசர்களோடு ஒத்து வாழ்ந்தான். சாஸ்திரியோ பல புலவர்களோடு வாதப் போர் புரிந்து சொற்களையும் சாஸ்திரங்களையும் வதைத்துத் திக்விஜயஞ் செய்துவந்தான்.

ஒரு சமயம் பள்ளிக்கூட உபாத்தியாயர் ஒருவரை வாதுக்கு அழைத்தபோது, அவருடைய பிரதிநிதியாக ஒரு மாணுக்கனே துணிந்து போய் இராஜ சமுகம் சேர்ந்தானும். அவனை நோக்கி வித்வான் வித்யாமதத்தோடு, 'பிள்ளாய்! நீ எதை "ஆம்" என்ருலும், நாம் அதை 'அல்ல' வென்று மறுப்போம்! விளங்குகிறதா?' என்று கர்ஜித்தான்.

சிறுவன் விளையாட்டாகச் சிரித்துக்கொண்டு, 'சாஸ்திரியாரே! உமது தாய் புத்திரவதி' என்ருன். 'அடடா! என்னைப் பெற்ற தாயை எப்படி மலடியென்று சித்தாந்தம் செய்வது?' என்று தார்க்கிகன் மூளையைக் குழப்பிக்கொண்டிருக்கும் போது, 'ஓ வித்வ சிரோமணியே! இந்த அரசன் தர்மவான்' என்ருன்.

'ஐயோ! இதை மறுப்பது இராஜத் துரோகல்லவா?' என்று பண்டிதன் விலவிலத்துப் போனுன். அப்போது இடிமேல் இடிவிழுந்தது போல விழுந்தது

மூன்ருவது வார்த்தை,—'இந்த இராஜ பத்தினி பதிவிரதை' என்று!

வாக்குவாதங்களால் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் செய்துவந்த வித்வஜன பயங்கரனே வாக்குஸ்தம்பம் செய்து, 'தர்க்கம் உண்மையைக் காண ஒரு கருவிதான்; உண்மையை மறைக்கும் குதர்க்கமாகக் கூடாது' என்ற பாடம் படிப்பித்த சிறு பிள்ளை, பின்னுளில் ஆளவந்தார் என்று பேரும் புகழும் பெற்ற ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர் ஆனதாகச் சொல்லுகிருர்கள்.

சாஸ்திர வாதமோ, சாஸ்திர வதமோ செய்து கடவுள் உண்டென்றும் இல்லையென்றும் முடிவுகட்டுவோர் உண்டு. ஆனல், ஆத்ம விஷயங்களைத் தர்க்க வாதங்களாலும் வித்தியா சாமர்த்தியங்களாலும் ஸ்தாபிக்க முயல்வதும், மறுக்க முயல்வதும் மேலே சொன்ன தர்க்க சாஸ்திரியின் முயற்சி போன்றவை தாம்.

பக்தர்களோ வீணை விவகாரங்களில் தலையிடுவதில்லை.

*இறையாய், நிலனுகி, எண்திசையும் தானுய்,*
*மறையாய், மறைப்பொருளாய், வானுய்,—பிறைவாய்ந்த*
*வெள்ளத் தருவி விளங்கொலிநீர் வேங்கடத்தான்*
*உள்ளத்தின் உள்ளே உளன்*

[இறை—தலைவன். மறை—வேதம். பிறை வாய்ந்த —இளஞ்சந்திரன் முடியிலே பொருந்தப்பெற்ற.]

என்று நம்புகிருர்கள்.

எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பரம்பொருளே நமக்கு அருள் செய்ய வேண்டு

மென்று திருப்பதி மலைமீது கோயில் கொண்டிருக்கிற தாம்; அதற்கும் சமீபமாக,—நமது உடம்பைக் காட்டிலும் சமீபமாக,—நமது உள்ளத்திலேயே கோயில் கொண்டிருக்கிறதாம்.

இந்தப் பொருளையே பொருளாகவும் அமிர்த மாகவும் 'அரு நரகம் தீர்க்கும் மருந்தா'கவும் விசுவசிக் கிறது பேயாழ்வார் இதயம். நம்பிக்கை அன்பின் நிலை; விசுவாசம் பக்தியின் நிலை. தெளிந்ததைக் கொண்டு தெளிதற்கு அரியதை நம்பி ஞானத்தை வளர்த்து, அனுபவ வழியாக அறியத்தக்க பொருளுக் குத் தர்க்கமாவது பகுத்தறிவாவது வழிகாட்ட முடியுமா? எனவே, இறைவனைக் காண்பதற்கு 'இருளாத சிந்தை' வேண்டும் என்கிறார்.

இந்தத் கொள்கையை

*உய்த்துணர் வென்னும் ஒளிகொள் விளக்கேற்றி*
*வைத்(து) அவனை நாடி வலைப்படுத்தேன்!*

[வலைப்படுத்தேன்—வசமாக்கிக் கொண்டேன்.]

என்ற வாக்கிலும் குறிப்பிடுகிறார்.

ஞானம் பிரகாசிப்பதற்கு உள்ளம் களங்கமற் றிருக்கவேண்டும். இதற்கு இந்திரிய ஜயத்தின் பயனாகிய நல்லொழுக்கம் அவசியமானது.

*அறிவென்னும் தாள்கொளுவி, ஐம்புலனும் தம்மில்*
*செறிவென்னும் திண்கதவம் செம்மி—*

[தாள்—தாழ்ப்பாள். கொளுவி—பூட்டி. தம்மில்—தமக்குள். செறிவு—அடக்குதல். திண்—வலிமை. செம்மி—இறுக அடைத்து,].

ஞானிகள் இறைவனிடம் சேர்க்கத்தக்க படிக்கட்டைக் காண்பார்கள் என்கிருர்.

*ஓர்த்த மனத்தராய் ஐந்தடக்கி, ஆராய்ந்து*
*பேர்த்தால், பிறப்பேழும் போர்க்கலாம்*

[ஓர்த்த—தியானிக்கிற. பேர்த்தால்—அழித்தால்.] என்றும் உறுதி கூறுகிருர் பேயாழ்வார்.

இப்படி இந்திரிய ஜயம் செய்வதற்கும் குறுக்கு வழி பக்திதான். இறைவனிடத்தில் மனம் சுழித்தோடக் கெட்ட ஆசைகளும் எண்ணங்களும் தாமே ஓடிப்போகுமாம். ஆகையால் உள்ளம் உருகிப் பக்தி செய்யவேண்டும்.

*செம்மையால் உள்ளுருகிச் செவ்வனே நெஞ்சமே!*
*மெய்ம்மையே காண விரும்பு*

[செவ்வனே—செவ்வையாக.]

என்று நெஞ்சை உத்ஸாகப்படுத்துகிருர்.

உண்மையாக உருகிப் உருகிப் பிரார்த்தனை செய்யும்போது மனம் சுத்தமாகிறது. களங்கம் முற்றும் போய்விட்டால், இறைவன் சேஷசயனத்தை விட்டு வந்து அந்த உள்ளத்திலேயே பள்ளிகொள்கிருனும்.

இந்த விதமாக 'அடிசேரப்பெற்று' ஒழுக்கத்திலே நிலைத்து வாழும் வகை அறிந்தவர்கள் தவம், காயக் கிலேசம் முதலானவற்றை விரும்புவார்களா?

*பொருப்பிடையே நின்றும், புனல்குளித்தும், ஐந்து*
*நெருப்பிடையே நிற்கவும்நீர் வேண்டா*

[பொருப்பு—மலை, புனல் குளித்து—(பனிநாளில்) குளிர்ந்த தீர்த்தங்களில் குளித்தும். ஐந்து நெருப்

பிடையே நிற்கவும்—(கோடைநாளில்) பஞ்சாக்கினி மத்தியில் தவஞ் செய்யவும்.]
என்பது பேயாழ்வார் புத்திமதி.

ஈசவரனை அடைந்தவர்களில் எவரே துன்ப மடைந்தார் என்று கேட்கிறவர், ஈச்வரனை அடைவதற்கும் நம்மை நாமே துன்புறுத்திக் கொள்ள வேண்டாம் என்கிறார்.

*'காண்! காண்!' எனவிரும்பும் கண்கள்*

என்று சொல்லுகிறபடி இனியனும் அழகனுமுள்ள ஈச்வரன் அருளாளனும் இருப்பதால் தவம் முதலான, கரடுமுரடாகவுள்ள, காட்டுப்பாதைகளில் போய் விழ வேண்டாம் என்பது குறிப்பு.

நெஞ்சு இயல்பாகவே ஆசைப்படும்படி யிருக்கிற தாம் சிரமங்களை யெல்லாம் போக்கக் கூடிய இறைவனுடைய நித்திய யௌவன சௌந்தரியம். கரையற்றதாகத் தோன்றும் நீலக்கடலும், எல்லையற்ற நீல வானமும், நீல மேகங்களும், நீல ரத்தினங்களும், நீல மலர்களும் சுட்டிக்காட்டும் சௌந்தரிய பூர்ணமன்றோ அவனுக்கு வடிவு?

மேகத்தையும் மின்னலையும் பார்க்கும்போதும், மரகத மணியைப் பார்க்கும்போதும், அந்த வானத்தின் வர்ண ஜாலங்களைப் பார்க்கும்போதும், லக்ஷ்மீ நாராயண மூர்த்தியின் வசீகர அழகு ஞாபகத்திற்கு வருகிறதாம் பேயாழ்வாருக்கு.

*எழில்கொண்டு, மின்னுக் கொடியெடுத்து வேகத்*
*தொழில்கொண்டு தான்முழங்கித் தோன்றும்—எழில்*
*[கொண்ட*
*நீர்மேகம் அன்ன நெடுமால் நிறம்போலக்*
*கார்வானம் காட்டும் கலந்து*

[எழில்—அழகு. மின்னுக்கொடி—மின்னற்கொடி. அன்ன—போன்ற.]

என்றும்,

*கலந்து மணிஇமைக்கும் கண்ணா! நின்மேனி*
*மலர்ந்து மரகதமே காட்டும்—நலம்திகழும்*
*கொந்தின்வாய் வண்டறையும் தண்துழாய்க் கோமானை*
*அந்திவான் காட்டும் அது*

[இமைக்கும்—பிரகாசிக்கும். நலம்—அழகு. கொந்தின்வாய்—பூங்கொத்திலிருந்து. அறையும்—சப்திக்கும். தண்—குளிர்ந்த.]

என்றும் பாடுவதைக் கேளுங்கள்.

இயற்கை யழகுகளும் செயற்கை யழகுகளும் ஒருங்கே ஞாபகப்படுத்தும் கடவுளழகைப் பெரியவாச்சான் பிள்ளை 'நோக்காலே அழிக்கினும் விடவொண்ணாத வடிவு' என்பர். அருளி நோக்காமல் அழிக்க நோக்கினாலுங்கூட 'ஐயோ! இந்த அழகனை விடமுடியாது!' என்று காதல் ஒரே பிடிவாதமாயிருக்கும் படி அமைந்திருக்கிறதாம் வடிவு.

'செங்கண் மால்' என்பதற்கு 'வாத்ஸல்யாமிர்தத்தை (உருக்கமான அன்பாகிய அமிர்தத்தை) வருஷிக்கும் கண்கள்' உடையவன் என்று வேறொரு சந்தர்ப்பத்தில் வியாக்கியானம் செய்கிறார் இந்த உரையாசிரியர். அநாதி காலம் நம்மைப் பெறுகைக்கு அவன் படுகிற பாட்டையும் ஞாபகப்படுத்துகின்றனவாம் இந்தக் கண்கள்.

அழகையும் வென்றுவிடுகிறது அருள் என்பது குறிப்பு. 'ஆச்ரிதரை(அடியாரை)த் தன்னை அழிய மாறியும் நோக்கும்' என்று கூறப்படும் இறைவன்,

தன்னுடைய அழகையும் அருளையும் தானே காட்டு கிறான். அவன் காட்டக் கண்டு அடியார் அடி தொழுததும், அந்த வடிவம் 'பிரஜை (குழந்தை) பால் குடித்தால் தாயுடம்பு நிறம் பெறுமா(று)போல'ப் புதிய அழகு பெறுகிறதாம்.

இத்தகைய அழகனை 'என்னுடைய மனம் ஆசைப் பட்டுக் கண்டுகொண்டது, அமிர்த மதன காலத்தில் மகாலட்சுமி அவனை நாடிக் கண்டுக்கொண்டதுபோல!' என்கிறார் பேயாழ்வார்.

இந்த உருவத்தை மனங் குளிரத் தியானித்து, அருளுக்கும் அழகுக்கும் வாசகமான திருநாமத்தையும் வாய் குளிரச் சொல்லிக்கொண்டிருந்தால்,

*தேசும் திறலும் திருவும் உருவமும்*
*மாசில் குடிப்பிறப்பும் மற்றவையும்*

[தேசு—தேஜஸ். திறல்—திறமை. திரு—ஐசுவ ரியம்.]

தாமே தேடிவந்து அடைகின்றனவாம். இந்த வாக் கோடு, 'மூப்பு உன்னைச் சிந்திப்பார்க்கு இல்லை, திரு மாலே!' என்ற பொய்கையார் வாக்கை ஒப்பிடலாம்.

இந்த அன்பர்கள் எந்த ஜாதியில் பிறந்திருந் தால் என்ன? அந்த ஜாதியே குற்றமற்ற 'குடிப்பிறப்' பாக மதிக்கப்பட வேண்டுமாம். சரணமடைந்தவர் களை 'ஏது நிலை? ஏது பிறப்பு?' என்று விசாரியாமல் சகல நன்மைகளையும் கொடுக்கக் காத்திருக்கிறான் 'ஆச்ரிதரை விடாத பெரும் பித்தன்'.

இப்படிப்பட்ட கடவுளை மகாவிஷ்ணுவாகத் தியா னித்த போதிலும், பேயாழ்வாரும் பொய்கையாழ்

வாரைப் போல் சைவ வைஷ்ணவ சமரச நிலை கண்டவர் தாம்.

*தாழ்சடையும், நீள்முடியும், ஒண்மழுவும் சக்கரமும்,*
*சூழ்அரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்*
*திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்(கு),*
*இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து*

[ஒண் மழு—ஒளியோடு கூடிய மழு. அரவு—பாம்பு. நாண்—அரைநாண் என்ற அணி.]

என்று தமக்கு உகப்பான திருப்பதி மலைமீது தாம் மனக் கண்ணால் கண்ட ஹரிஹர ரூபத்தை வருணிக்கிறார்.

மற்றும் சைவ வைஷ்ணவ இணக்கத்தோடு வேறு மதங்களுக்கும், இன்னும் தோன்றக்கூடிய புதிய புதிய மதங்களுக்கும் தமது வைஷ்ணவத்திலே இடங் கொடுக்க விரும்புகிறவரைப்போல்,

*நிறம்வெளிது, செய்து, பசிது, கரி(தென்று)*
*இறையுருவம் யாம்அறியோம், எண்ணில்!*

[வெளிது — வெளுத்திருக்கும். செய்து — சிவந்திருக்கும். பசிது—பசுமையா யிருக்கும்.]

என்றும்,

*பேசுவார் எவ்வளவு பேசுவர், அவ்வளவே*

என்றும் பாடுகிறார்.

மகாவிசுவாசத்தால் மகான்கள் அனுபவித்து வெளியிடும் இக்கொள்கைகளை அறிவினாலும் தர்க்க வாதங்களினாலும் சித்தாந்தஞ்செய்து விட முடியுமா? கையால் பூமணம் காண்பதுண்டா?

புருஷோத்தமனாகிய ஜகன்மோகன மூர்த்தியை மறந்தவர்களை 'மானிடமா வையேன்!' என்கிறார் பூதத்

தாழ்வார். பேயாழ்வாரோ அவர்களைப் பேய்கள் என்பர். அவர்கள் நிலையில் நில்லாத இவரும் அவர்களுக்குப் பேய் தான்!

இவர் மகாபலிபுரத்திற்கு வடக்கே சுமார் 30 மைல் தூரத்திலுள்ள மயிலாப்பூரில் பிறந்தார்.

*ஊர் திரை வேலை உலாவும் உயர்மயிலை.*

[ஊர்திரை—ஏறிப் பரவுகிற அலை. வேலை—சமுத்திரம்.]

என்றும்,

*மடல்ஆர்ந்த தெங்கின் மயிலை*

என்றும் திருஞானசம்பந்தர் பாடும் சிவஸ்தலம் இது.

இங்கேதான் தமிழுக்கும் சமரச சன்மார்க்கத்திற்கும் வாடாத ஒளிதந்த திருவள்ளுவரும் பிறந்தார். இந்த ஊருக்குத் தென்மெற்கே சுமார் 45 மைல் தூரத்திலுள்ளது பொய்கையார் தோன்றிய காஞ்சீபுரம். (இது சைவ-வைஷ்ணவ-ஜைன-பௌத்த சமரசம் கண்ட ஸ்தலம்.)

இந்த மூன்று ஊர்களும் பழைய காலத்தில் தமிழ் நாகரிகத்திற்கும் பக்தி மதத்திற்கும் ஒளியும் அழகும் தந்த மும்மணிகளாகத் திகழ்ந்தன. இந்த ஊர்களில் தோன்றிய ஞானபக்தி வைராக்கியங்களின் வடிவமான முதலாழ்வார்கள் ஒரு பெரிய பக்தி யுகத்தைத்தோற்றுவித்த மூல புருஷர்களான பாகவத மும்மணிகளாவர்.

## 11. தமிழால் கடவுளை அழைத்தது.

'அடடா, இந்த நந்தவனத்திலுள்ள பூஞ்செடி களையும் துளசிச் செடிகளையும் பிடுங்கித் தலைகீழாக நட்டு வைத்திருக்கிறான்! அதோ செடிகளுக்குத் தண்ணீர் வார்த்து வருகிறானே, அந்தக் கையிலுள்ள மண்குடத் தின் அழகைத்தான் பாருங்கள். நூறு துவாரங்கள் இருக்குமென்று தோன்றுகிறது; எடுக்கும் தண்ணீரில் ஒரு சொட்டாவது செடிக்குப் பக்கத்தில் வந்து சேரு கிறதா? பார்த்தீர்களா இந்தப் பேய்த்தன முள்ள பக் தனை? இப்படியும் ஒரு கொள்கை உண்டோ?' என்று கைகொட்டிச் சிரிக்கிறார் சித்தர், தம்மோடு வருகிறவர் களுக்கும் அந்த வேடிக்கையைச் சுட்டிக் காட்டி.

பேயாழ்வார் புன்முறுவல் பூத்த வதனத்தோடு திரும்பி அமைதியாகப் பதில் சொல்லுகிறார்:—'மதங்கள் தோறும் நுழைந்து நுழைந்து ஒன்றிலும் நிலை கொள்ளாத நெஞ்சினராய், உள்ளுக்குள்ளே நம்பிக்கை யில்லாமல், சேர்ந்தவர்களுக்கெல்லாம் இரட்சகர் என்று விருது கட்டிக் குதர்க்கம் செய்வதையே பொழுது போக் காகக் கொண்டு. அருமையான தமிழ்ச்சொற்களை அம்பு களாக வாரி வீசி எத்தனையோ நெஞ்சுகளைப் புண் ணாக்கித் திக்விஜயம் செய்து வருகிறீரே! இப்படி யெல்லாம் வாணாளை வீணாளாகக் கழித்துழன்று அட்ட காசஞ் செய்யும் பேய்த்தனத்தை உமக்குக் குறிப்பாகக் காட்டத்தான் இப்படிச் செய்கிறேன்."

வைராக்கியச் சுடராக விளங்கிய அந்த முகமும் கண்களும் சித்தரை வசீகரித்து விட்டன. தாம் தமது

வாழ்க்கையில் அதுவரை செய்து வந்த கண்டனங்களும் சண்டப்பிரசண்ட வாதங்களும் நாசவேலைகளும், அவர் செய்து காட்டிய அந்த விபரீதமான நந்தவன கைங் கரியம் போன்றவைதாமோ என்ற சந்தேகம் பளிச் சென்று தோன்றியது.

பக்தருடன் பேசப் பேச மனக்குழப்பம் ஒருவாறு தெளிந்தது. 'ஆம்' என்பதை 'அல்ல' வென்றும், 'அல்ல' வென்பதை 'ஆம்' என்றும் சித்தாந்தம் செய் வதற்குத் தாய்மொழியை உபயோகிப்பதைக் காட்டி லும், மனங் கசிந்து கடவுளைத் தோத்திரம் செய்ய உப யோகிப்பது நல்லதென்று தெரிந்தது. சித்திகளில் புத்தியைச் செலுத்திப் பிறரையும் மயக்கித் தம்மையும் மயக்கிக் கொள்வதைக் காட்டிலும் மேலான லட்சியம் உண்டென்பது புலனாயிற்று. பட்டமரம் தழைப்பது போலத் தழைக்கத் தொடங்கியது நம்பிக்கை.

பக்தரைச் சித்தர் வணங்கினார். அவரும் இவரைச் சிஷ்யராக ஏற்றுக் கொண்டு பக்திஸாரர் என்று புதிய நாமஞ் சூட்டினார். இவரைத் திருத்தினால் பாகவத தர்மம் ஒரு புதிய சக்தி பெறும் என்று எண்ணித்தான் பேயாழ்வார் இந்த முயற்சியை மேற்கொண்டார்.

பக்திஸாரர் திருமழிசை என்ற ஊரில் தோன்றியவர்; திருமழிசையாழ்வார் என்பது பிரசித்தமான பெயர். இவர் பார்க்கவ மகரிஷிக்கும் கனகாங்கி என்ற அப்ஸர ஸ்திரீக் கும் பிறந்தாரென்றும், அவர்கள் இவரை அநாதரித்து ஒரு பிரப்பம் புதரில் விட்டுப் போனார்களென்றும், பிரம்பு அறுக்கப்போன ஒரு குறவன் குழந்தையை எடுத்துக் கொண்டு போய் வளர்த்து வந்தானென்றும் குருபரம்பரைக் கதைகள் சொல்லுகின்றன. ஆனால்,

குலங்க ளாய ஈரி ரண்டில்
ஒன்றி லும்பி றந்திலேன்

[ஈரிரண்டு—நாலு.]

என்பது இவர் வாக்கு.

நாலு வர்ணங்களுக்கு உட்படாத ஒரு வகுப்பில் பிறந்ததாக ஒப்புக் கொள்கிறார். 'பிறந்திலேன்' என்பதற்கு 'வளர்ந்தேனில்லை' என்று பொருள் கொள்கிறார்கள் உரையாசிரியரும் குருபரம்பரை ஆசிரியர்களும்! வளர்ந்த குலத்தைக் கருதித்தான் இவரைத் 'தாழ்ந்த குல'த்தினராக அந்தக் காலத்திலுள்ள சிலர் மதித்தார்கள் என்பது ஸ்ரீவைஷ்ணவ ஆசிரியர்கள் கருத்து.

இளமையில் திருமழிசையார் கூடை முடைதல் முதலான ஜாதித் தொழிலைச் செய்து கொண்டிருந்தார். வயது வந்ததும் தல யாத்திரை செய்யப் புறப்பட்டார். எத்தனையோ நாடுகளிலும் காடுகளிலும் சஞ்சாரம் செய்து சித்தராகத் திரும்பினார். பேயாழ்வார் உபதேசத்தால் பக்தரானதும், அவர் தோன்றிய மயிலாப்பூருக்கு அருகே ஒரு வசதியான இடத்தில் அமர்ந்து இறைவனை மனங் குளிரப் பாடிப் புகழ்ந்து பக்தி யோகத்தில் ஈடுபட விரும்பினார்.

அந்த நாளில் திருவல்லிக்கேணி,

குரவமே கமழும் குளிர்பொழி லூடு
குயிலொடு மயில்கள்நின்(று) ஆல,
இரவியின் கதிர்கள் நுழைதல்செய்தறியா—

[குரவம்—ஒரு வகையான பூ. பொழில்—சோலை. ஆல—ஆட. இரவி—சூரியன்.]

—ஊராக விளங்கியது.

அந்தக் குளிர்ந்த சோலைகளும் பூக்களும் குயில்களும் மயில்களும் கடலும் மற்ற இயற்கையழகுகளும் இறைவனுடைய அழகையும் அருளையும் ஞாபகப் படுத்தி, சித்தி மார்க்கத்திலும் குயுக்தி மார்க்கங்களிலும் ஓடிக்கொண்டிருந்த மனத்தைப் பகவானுடைய திருவடிகளோடு பக்திக் கயிற்ருல் கட்டிவைப்பதற்கு உதவியாக இருந்தனவென்று ஊகிக்கலாம். நாளடைவில் பாகவத மார்க்கத்திலே இவருக்கு இதயப் பசியும் ஆத்ம தாபமும் தீர்ந்து விசுவாசமும் சாந்தியும் கைகூடின.

பல ஆண்டுகள் கழிந்துவிட்டன. வயது முதிர்ந்தவர்களும், தமிழ் நாட்டிலே பாகவத தர்மத்திற்குப் புதிய உயிரளித்த ஞான பக்தி வைராக்கிய சீலர்களுமான முதலாழ்வார்கள் தல யாத்திரை செய்துகொண்டே அந்த வழியாக வந்தார்கள். அவர்கள் இவருடைய அடக்கத்தையும், அந்தராத்மாவிலிருந்து பொங்கும் ஆனந்தத்தையும் முகத்திலே கண்டு, 'இந்த மகாநுபாவர் யாரோ?' என்று சந்தேகித்தார்கள். ஆனல், சிஷ்யர் விரைவிலே குருவைத் தெரிந்து கொண்டார்.

தமது உபதேசம் எவ்வளவு சிறந்த பலனை அளித்து விட்டதென்பதை அறிந்துகொண்ட பேயாழ்வாரும் ஆனந்தக் கண்ணீர் ததும்ப, 'என் அருமைப் பக்திஸாரரே!' என்று ஓடிப்போய்த் தழுவிக்கொண்டு க்ஷேமம் விசாரித்தார். பிறகு நால்வரும் பாலுடன் பாலும் தேனுடன் தேனும் கூடினாற் போலக் கூடியிருந்து, திருவல்லிக்கேணியிலும் மயிலாப்பூரிலும் கடவுளைத் தோத்திரஞ் செய்து பாகவத தர்மத்தை

அநுஷ்டானத்தாலும் உபதேசத்தாலும் பரப்பிக் கொண்டிருந்தார்கள்.

கொஞ்ச காலம் சென்றதும், முதலாழ்வார்கள் திருமழிசையாரிடம் விடை பெற்றுக்கொண்டு மறுபடியும் தேச சஞ்சாரஞ் செய்யப் புறப்பட்டார்கள்.

அப்பால் திருமழிசையார், பூதத்தாழ்வார் தோன்றிய மகாபலிபுரத்தைப் பார்த்து விட்டுப் பொய்கையார் அவதரித்த காஞ்சீபுரத்திற்குப் போனார். அங்கே வசிக்கும்போது கணிகண்ணன் என்ற ஒரு புலவன் இவருக்குச் சிஷ்யனாகவும் இணைபிரியாத நண்பனாகவுமிருந்தான். ஒரு தாசியும் இவரிடம் பக்தி பூண்டு இவர் இருக்குமிடத்தைச் சுத்தி செய்து மெழுகிக் கோலமிடுவதுண்டு. அவளை அந்த நகரத்தை ஆண்டு வந்த பல்லவ ராஜா கல்யாணம் செய்து பட்டமகிஷி யாக்கிக் கொண்டான். அவள் மூலமாக அவன் கணிகண்ணனைக் குறித்தும் திருமழிசையாரைக் குறித்தும் விசேஷமாகக் கேள்விப்பட்டான்.

ஒருநாள் அரசன் கணிகண்ணனை அழைத்து, 'ஐயா, உமது ஆசாரியரை நம்முடைய அரண்மனைக்கு அழைத்து வாரும்; அந்தப் பெரியவர் என்னை வாழ்த்திப் பாடவேணும்' என்று வேண்டிக்கொண்டான். அதற்கு, 'அவர் அரசர்களை மதித்துப் பாராரே; மேலும் அவருடைய தமிழ் கடவுளுக்கே உரியது!' என்றான் கணிகண்ணன்.

உடனே அரசன் கணிகண்ணனுக்கு முன் பொன்னையும் இரத்தினங்களையும் குவிக்கச் செய்து, 'நீராவது என்மேல் கவி பாடவேண்டும்' என்று நிர்ப்

பந்தித்தான். அந்தப் பொருள்களை யெல்லாம் ஓடாக வும் கல்லாகவும் மதித்த பாகவதன்,

*நாக்கொண்டு மானிடம் பாடேன்!*

என்ற தன் குருவின் வாக்கை வீணுக்குவதில்லை யென்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டான். அரசன் 'உன்னை நாடு கடத்தும்படி உத்தரவு செய்யப் போகிறேன்' என்று சீறினன்.

கணிகண்ணன் சடக்கென்று எழுந்து திருமழிசை யாரிடம் போய் நடந்ததை விண்ணப்பஞ் செய்து தனக்கு விடையருள வேண்டுமென்று பிரார்த்தித்தான். திருமழிசையார் இளநகை யரும்பி, 'பிரிய சிஷ்யனுகிய் நீ போவாயானல், நானும் இங்கிருக்கப் போவதில்லை' என்று பதில் சொன்னர்.

பிறகு ஆழ்வார் கோவிலுக்குப் போய்,

*கணிகண்ணன் போகின்ருன்; காமருபூங் கச்சி*
*மணிவண்ணு! நீகிடக்க வேண்டா!—துணிவுடைய*
*செந்நாப் புலவனும் செல்கின்றேன்; நீயும்உன்தன்*
*பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்!*

[காமரு பூங்கச்சி—அழகு மிகுந்த காஞ்சீபுரம்.]

என்று பாடி விட்டுச் சிஷ்யனைப் பின்தொடர்ந்தார்.

பெருமாளும் பளிச்சென்று படுக்கையைச் சுருட் டிக்கொண்டு லட்சுமிதேவியோடு ஆழ்வாருக்குப் பின்னே பிரயாணமானராம். முன்னே சீடன், பின்னே குரு, கடைசியாகப் பெருமாள்! இப்படி இவர்கள் போவதைக் கண்டு பக்த ஜனங்களும் சாது ஜனங்களும் இவர்களைத் தொடர்ந்து போனர்கள்.

ராமனைப் பிரிந்த அயோத்தி போலாகிவிட்டது காஞ்சீபுரம்! அரசன் பச்சாத்தாபமடைந்து ஒரே ஓட்டமாக வந்து கணிகண்ணனை வணங்கி ஊருக்குத் திரும்புமாறு பிரார்த்தித்தான். அப்போது திருமழிசையார் பெருமாளைப் பார்த்து,

*கணிகண்ணன் போக்கொழிந்தான்; காமருபூங் கச்சி*
*மணிவண்ணா! நீகிடக்க வேண்டும்!—துணிவுடைய*
*செந்நாப் புலவனும் செல்வொழிந்தேன்; நீயும்உன்தன்*
*பைந்நாகப் பாய்படுத்துக் கொள்!*

என்று தாம் முன் பாடிய செய்யுளையே மாற்றிப் பாடினார்.

பெருமாளும் பக்தர்களும் திரும்பியதும், நகரம் முன் போல் பொலிவுற்றது. தாம் சொன்னபடி செய்த பெருமாளுக்குத் திருமழிசையார் சொன்ன வண்ணம் செய்தபெருமாள் என்று ஒரு புதிய நாமம் சூட்டினார். திருமழிசையாரும் திருமழிசையாழ்வார் என்று பிரசித்தரானார். அரசனும் ஆழ்வாருக்குத் தொண்டு பூண்டான்.

பெருமாள் அன்பர்களின் தமிழுக்கு வசமாகிப் பின் சென்ற கதை தமிழ் நாட்டின் இதயத்தை வசீகரித்து விட்டதென்று சொல்லலாம். தமிழ், வடமொழிகளோடு இந்துஸ்தான பாஷையும் கற்று, வட இந்தியாவிலுள்ள மகம்மதிய அரசரையும் வசமாக்கிக் கொண்டவரென்றும், முருகக் கடவுளின் விசேஷ அருள் பெற்றவரென்றும் மதிக்கப்பெறும் சிவநேசச் செல்வரான குமரகுருபர சுவாமிகள்,

*பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற*
*பச்சைப் பசுங்கொண்டலே!*

[கொண்டல்—மேகம்.]

என்று பாடுவதிலிருந்து, அவர் உள்ளத்திலும் இந்தக் கதை ஊறிக் கிடந்ததென்று தெரிகிறது.

தமது குருவும் பூதத்தாழ்வாரும் புகழ்ந்திருக்கும் கும்பகோணத்தில் கடைசி நாள்களைக் கழிக்கத் தீர் மானித்துத் திருமழிசையாழ்வார் காஞ்சீபுரத்தை விட்டுப் புறப்பட்டார், வழியில் பெரும்புலியூர் என்ற ஊரிலே இளைப்பாறுவதற்காக ஒரு தெருத் திண்ணையில் உட் கார்ந்தார். அங்கே யிருந்து வேதம் ஓதிக்கொண்டிருந்த சில பிராமணர்கள் இழிகுலத்தவராகிய இவர் காதில் வேத வாக்கியம் விழலாகாதென்று அத்யயனத்தை நிறுத்தி விட்டார்கள். அவர்களுடைய நோக்கத்தைத் தெரிந்து இவர் அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டார்.

ஆனால், அவர்களுக்குப் பாகவதாபசாரத்தினால் மறதி ஏற்பட்டதாம். உடனே பரம தயாளுவான ஆழ் வார் அத்யயனத்தில் விட்ட இடத்தைக் குறிப்பாக ஞாபக மூட்டியதும், அவர்கள் 'ஜாதி கருதி இந்த மஹானை அவமதித்தோமே!' என்று வருந்தினார் களாம்.

இவர் அந்த ஊரில் எங்கெங்கே போனாலும், அந்த ஊர்ப் பெருமாளும் சன்னிதிக்குள் இருந்தபடியே அந்த அந்தத் திசைகளை நோக்கித் திரும்பியவண்ணமா யிருந் தாராம். இந்த அதிசயத்தைப் பார்த்தவர்கள் அதே ஊரில் யாகஞ் செய்து கொண்டிருந்த பிராமண சமூ கத்தினிடம் ஓடித் திருமழிசையாருடைய பிரபாவத்தை வெளியிட்டார்கள். 'அப்படி ஒரு மெய்யடியாரைக் காணக்கூடுமானால் அதுவே கண் படைத்த பயன்; இந்த யாகத்தின் பயனும் அதுதான்!' என்று கருதிய தீட்சிதர் வெளியே போய்த் தேடிப் பார்த்து ஒரு வீதி

யில் நின்று கொண்டிருந்த திருமழிசையாரை யாக சாலைக்குள் அழைத்துக் கொண்டு வந்து அக்கிராசனத் தில் வைத்துப் பூஜித்தார்.

இதைக் கண்ட வைதிகர்கள் யாகம் கெட்டுப்போய் விட்ட தென்று கோபித்துக் கடூரமான வார்த்தைகள் சொல்லிப் பழித்தார்கள் ஆழ்வார் நீறுபூத்த நெருப் புப் போலிருந்தார். தீட்சிதரோ பொறுக்க முடியாத வியாகுலமடைந்து, ' சுவாமி ! உண்மையை வெளியிட வேண்டும்' என்று கதறினர்.

ஆழ்வாருடைய மேனி அற்புதமாக ஜொலிக்கிறது: திடீரென்று அந்தத் தோற்றத்தில் ஒரு மாறுதல் ஏற்படு வதுபோலத் தோன்றுகிறது. அதே சமயத்தில் கடல் கோஷிப்பது போன்ற முழக்கம் கேட்கிறது. அது என்ன? அந்த மகாசர்ப்பத்திற்குத்தான் எத்தனை தலை கள்! இந்திர நீலவர்ணமுள்ள மேகமொன்று பர்வதத் தின் உச்சியில் சாய்ந்து கிடப்பதுபோலக் காண்கிறது. அது வரவரப் பெரிதாகி மின்னுகிறது,-பெருவெள்ளம் உண்டாகும்படி மழை பொழியப் போவது போல்.

ஆழ்வார் தமக்குள் அந்தர்யாமியா யிருக்கும் ஈச் வரனை நோக்கி,

*இக்குறும்பை நீக்கி, என்னை!*
*ஈசனுக்க வல்லையேல்,*
*சக்கரம்கொள் கையனே!*
*சடங்கர்வாய் அடங்கிட,*
*உட்கிடந்த வண்ணமே*
*புறம்பொசிந்து காட்டிடே!*

[சடங்கர்—வேதத்திற்கு உரிய ஆறு அங்கங்களை யும் அறிந்தவர். புறம் பொசிந்து—வெளிப்பட்டு,]

என்று பிரார்த்தித்ததும், பகவான் பாற்கடலோடும் அனந்த சயனத்தோடும் சங்கு சக்கரங்களோடும், லட்சுமியும் தானுமாகக் காட்சியளித்தானும், ஆழ்வார் திருமேனியிலேயே.

கடைசியாக ஆழ்வார் கும்பகோணத்தை அடைந்து அங்கேயே நித்தியவாசம் செய்து ஸ்ரீவைஷ்ணவப் பிரசாரஞ் செய்து வந்தார். பக்தரான பின் திருமழிசையார் வசித்த ஸ்தலங்கள் மூன்று என்று குறிப்பிடலாம். இவற்றுள் ஒன்று, குருவின் ஊரைச் சார்ந்த திருவல்லிக்கேணி. இவர் வாழ்ந்த இரண்டாவது ஸ்தலம் பொய்கையார் தோன்றிய காஞ்சீபுரம். தமது குருவும் பூதத்தாரும் பாடிய கும்பகோணத்தையே இவர் நிலையான இருப்பாகக் கொண்டு இங்கேயே தமது பிரபந்தங்களை இயற்றியதால், 'திருமழிசைப்பிரான் உகந்த இடம்' என்று இந்த ஸ்தலத்திற்குப் பெருமை சொல்லுகிறார் பெரியவாச்சான் பிள்ளை.

கும்பகோணத்திற்குக் குடமூக்கு என்றும், குடமூக்கில் என்றும் வேறு பெயர்கள் உண்டு. எனவே, திருமழிசையாழ்வாரைக் குடமூக்கிற்பகவர் (கும்பகோணத்துப் பாகவதர்) என்று ஒரு பழைய ஜைன ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

'முக்காலமும் உணர்ந்த இருடிக'ளில் (ரிஷிகளில்) ஒருவரென்றும் இவரைப் பாராட்டுகிறார் அந்த ஆசிரியர். இதனால், குருபரம்பரைக் கதைகள் எழுதப்படுவதற்கு முன்னமே பொய்கையார் பூதத்தாரைப்போல், திருமழிசையாரும் தமிழர்களால் போற்றப்பட்டாரென்று தெரிகிறது.

---

# 12. வித்தும் விளைவும்

காவிரியில் வெள்ளம் பொங்கிக் கொண்டிருந்தது. ஒருவர் கும்பகோணத்து ஆற்றங்கரையில் நின்று தாம் மூட்டையாகக் கொண்டுவந்திருந்த ஏடுகளையெல்லாம் அந்தப் புது வெள்ளத்திலே விட்டுக் கொண்டிருந்தார். எத்தனையோ சுவடிகள் பிரவாகத்தோடு விரைந்து போய் விட்டன. ஆனால் சில ஏடுகள் மட்டும் ஆற்றோட்டத்தோடு அப்படி ஒத்துழையாமல் தண்ணீரை எதிர்த்து நீந்தி வந்தனவாம்.

பெரியவர் அவற்றை எடுத்துப் பார்த்துக் கொண்டே ஊருக்குள் மறைந்துவிட்டார். இவரே திருமழிசையார்.

*முழுப்பெருக்கில் பொன்னிஎதிர்*
*மிதந்தசொல்லோன் வாழியே!*

[பொன்னி—காவிரி.]

என்று இவரை இன்னும் வாழ்த்திக் கொண்டிருக்கிறது ஸ்ரீவைஷ்ணவ சமூகம்.

திருமழிசையாழ்வார் தமது நீண்ட வாழ்நாளில் தத்துவ விஷயங்களைக் குறித்தும், தமது பகவதானுபவங்களைக் குறித்தும் எத்தனையோ பாடல்கள் பாடியிருக்கக் கூடும். அவற்றுள் கால வெள்ளத்தை எதிர்த்து வந்து நாதமுனிகள் கைக்கு எட்டியவை இரண்டு பிரபந்தங்கள் தாம். இவை 'திருச்சந்த விருத்தம்', 'நான்முகன் திருவந்தாதி' என்ற தலைப்புப்பெயர்களோடு திவ்யப் பிரபந்தத்தில் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

பக்த சரித்திரங்கள் பலவும் விசித்திரமாக எழுதப் பட்டிருக்கின்றன. அவற்றுள் சில, கலைச் சுவையோடு மனோபாவத்தைத் திருப்தி செய்யும்படி அழகாகச் சித் தரிக்கப்பட்டிருக்கின்றன. வேறு சில, பல திறப்பட்ட தத்துவங்களையும் மதபோதனைகளையும் பிரதிபலிக்கும் கதைகளாகக் கட்டப்பட்டிருக்கின்றன. பல பக்தர் களின் சரித்திரங்களில் சரித்திர உண்மை அகப்படாத போதிலும் வேறு உண்மைகளைப் பார்க்கக்கூடும்.

இக்கதைகள் ஒரே அச்சில் வார்த்தெடுத்தவை போலக் காணப்படுவது முண்டு. உதாரணமாக, மேலே காட்டிய திருமழிசையாழ்வார் கதையோடு, திருஞான சம்பந்த சுவாமிகளின் பதிகம் எழுதிய ஏடொன்று வைகையாற்றில் நீரோட்டத்தை எதிர்த்து வந்ததாகச் சைவர் சொல்லும் கதையை ஒப்பிடலாம்.

திருமழிசையார் விஷயமாகப் பேயாழ்வார் கை யாண்ட முறையைத்தான் பாருங்கள். அதன் சரித்திர உண்மை எப்படி யிருந்தபோதிலும் அது சுட்டிக் காட் டும் வித்யா தத்துவம் வசீகரமா யிருக்கிறதல்லவா? இவ்விதமான உபதேச முறை சீக்கிய மதத்தின் ஆதி குருவான நானக் என்பவராலும் கையாளப் பட்டதாக அந்த மதத்தினரின் குருபரம்பரைக் கதைகள் தெரிவிக் கின்றன.

குரு நானக் மகம்மதியரது புண்ணிய க்ஷேத்திர மாகிய மெக்காவுக்குப் போயிருந்த காலத்தில் அனுஷ் டித்த அதிசயமான உபதேச முறையும் திருமழிசை யாழ்வார் கதையை ஞாபகப்படுத்துகிறது. நானக் ஒரு நாள் நகரத்திற்கு வெளியே படுத்திருக்கும்போது, ‘ஆண்டவன் இருக்கும் திசையை நோக்கிக் காலை நீட்

டிக் கொண்டிருக்கிருயே!' என்று அராபிய குரு ஒருவர் அவரைநிந்தித்தாராம். அதுகேட்டு நானக், 'ஐயா, தயவு செய்து ஆண்டவன் இல்லாதபக்கமாக என் கால்களைத் திருப்பி வைத்து விடும்!' என்று வேண்டிக் கொண்டார். அராபிய குருவோ கோபத்தோடு சீக்கிய குருவின் கால்களைப் பிடித்துக் கரகர வென்று நாலு திசைகளிலும் சுற்றிச் சுற்றி இழுக்கத் தொடங்கினர். அந்த உடம்பு திரும்பிய பக்கங்களிலெல்லாம் திரும்பிக் கொண்டே யிருந்ததாம் ஆண்டவன் சன்னிதியும்.

இதனல் 'ஆண்டவன் இல்லாத இடமில்லை' என்ற உண்மை போதிக்கப்பட்டது. இந்தக் கதைக்கு வேருெரு பொருளும் சொல்லுகிருர்கள்,—'நகரம் முழுவதும் சீக்கியத் துறவியின் உபதேசத்தைக் கேட்டு ஆனந்தித்தது' என்று.

பெரும்புலியூரில் திருமழிசை யாழ்வார் எந்த எந்த இடத்திற்குப் போனலும் அந்த அந்தத் திசையை நோக்கிச் சன்னிதிக்குள் இருந்தபடியே பெருமாள் திரும்பிக் கொண்டிருந்தார் என்ற கதைக்கும் மேலே சொன்ன இரண்டு பொருளும் பொருந்துமல்லவா? திருமழிசையாருக்குச் சுமார் ஆயிரம் வருஷங்களுக்குப் பின் குரு நானக் பஞ்சாபில் தோன்றினர். வைஷ்ணவ குருபரம்பரைக் கதைகள் கி. பி. 15-ம் நூற்ருண்டுக்கு முன்னமே பிரசித்தமா யிருந்திருக்க வேண்டும். எனவே, தமிழ்க் கதை தான் உத்தர யாத்திரை செய்து புதிய உருவம் பெற்றிருக்கிறதென்று கூட ஊகிக்கலாம்.

திருமழிசையாழ்வாரின் கொள்கை நாலு திசையிலும் பரவிக்கொண்டிருந்த தென்பதோடு, இவருடைய

கொள்கையின் ஒரு சிறப்பியல்பு இன்னதென்பதையும் இந்தக் கதை வெளியிடுகிறது. 'கடவுள் எங்கே இருக்கிருன் ?' என்ற இரணியன் கேள்விக்கு, 'அவன் எங்கே இல்லை ? உன் கேள்வியிலும் இருக்கிருன்; 'இல்லை' என்று நீ சொல்லிக் கொண்டிருக்கும் நாஸ்திகச் சொல்லிலும் இருக்கிருன் !' என்று பிரகலாதன் பதில் சொன்னுனல்லவா ? இந்த மகத்தான உண்மையைத்தான் சீக்கிய குருவின் கதையும் ஆழ்வார் கதையும் நமது உள்ளத்திலே லேசாகப் பதித்து விடுகின்றன.

இதே உண்மையைத் திருமழிசையாழ்வாரின் பிரபந்தங்கள் எவ்வளவு நன்ருக வெளியிடுகின்றன! ஒரு மகா சமுத்திரம்; அதிலே தோன்றி அடங்கும் அலைகள் உலகங்களாம். புற உலகத்தைப் போல் உள்ளுலகமாகிய மனே வியாபாரங்களும் அந்தச் சமுத்திரத்திலே தான் தோன்றுகின்றனவாம், அடங்குகின்றனவாம். எல்லையில்லாத ஜோதி வெள்ளம்; நினைக்கவும் முடியாத சக்தி வெள்ளம்; உயிர்க்கெல்லாம் தாயாகிய கருணை வெள்ளம். அழகு வெள்ளமும் அதுதான்—ஆறித் தோன்றும் அழகும் சீறித் தோன்றும் அழகும்! அதுவே நமது உள்ளத்திற்குள்ளும் பொங்கிக் கொண்டிருக்கிறதாம். அந்தச் சமுத்திரத்தைத் திருச்சந்த விருத்தம் 'தேவ' னென்றும், 'ஆதிதேவ'னென்றும், 'தேவதேவ'னென்றும் அழைக்கிறது.

இதே கருத்தைத்தான் நான்முகன் திருவந்தாதியும்,

*தேருங்கால் தேவன் ஒருவனே என்றுரைப்பர் :*
*ஆரும் அறியார் அவன்பெருமை*

என்று சித்தாந்தம் செய்யத் தொடங்குகிறது.

இந்தக் கொள்கையின் அஸ்திவாரத்தை இன்னும் பலப்படுத்த விரும்பி,

*‘ நிற்கின்ற தெல்லாம் நெடுமால் !’ என்(று) ஓராதார்*
*கற்கின்ற தெல்லாம் கடை*

[ஓராதார்—அறியாதவர்கள். கடை—கீழானது.]

என்கிறார் திருமழிசையார்.

‘ எல்லாம் கடவுள் மயம் ’ என்ற அறிவு கல்வி யறிவின் முக்கிய அம்சமாகக் கருதப் படவேண்டுமாம். ராவணன் முதலானவர்களுக்கு அறிவுத் திறமையில் ஏதாவது குறைவுண்டா ? எனினும் ‘ கல்லாதவர் இலங்கை ’ என்கிறார். ‘ அங்கே கற்றவன் ஒருவன் தான் இருந்தான் ; அவன் விபீஷணன் : அவனையும் துரத்தி விட்டார்கள்!’ என்பது குறிப்பு. கல்வி சரியான கல்வியாக இருந்தால், ‘கற்கின்ற நூல் வலையில்’ அகப் படுகிறானும் ஸர்வேச்வரன்.

குருவைச் சந்தித்த பிறகு சீடர் திருவல்லிக்கேணி யில் வாழ்ந்த வாழ்க்கை எப்படிப்பட்ட தென்பதை,

*வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்*
*பூசித்தும் போக்கினேன் போது*

என்பது போன்ற குறிப்புக்களால் ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம். இப்படிப் போகாத நாள்களை யெல்லாம் நாள்களாகக் கருதவில்லை; ஆயுளை அறுத்து வந்த வாள்களாகவே கருதினார்.

இந்த நிலையிலிருந்தவர் தமது பக்திக் கல்வியின் பயனாகவே,

*மறந்து றந்து, வஞ்சம் மாற்றி,*
*ஐம்பு லன்கள் ஆசையும்*
*துறந்து நின்கண் ஆசை யேதொ*
*டர்ந்து நின்ற நாயினேன்*

என்று கூறும் மேலான நிலையை அடைந்திருக்க வேண்டும்.

மகாவிஷ்ணு இப்படிப்பட்ட நெஞ்சைத் திருப்பதியாகவும் பரமபதமாகவும் பாற்கடலாகவும் கொண்டு, நிற்பதும் இருப்பதும் கிடப்பதுமாகக் காட்சி தந்தாலும்: அவன் இப்படி யெல்லாம் 'சிந்தையுள் சென்றிருந்து தீவினைகள் தீர்க்'கும்போது 'ஏழை நெஞ்சே! நீ ஏன் துக்க சமுத்திரத்தில் கிடக்கிறாய்?' என்று கேட்கிறார் ஆழ்வார்.

'இந்திரிய ஜயம் பண்ணினேன்; உடம்பை அடக்கி யாண்டேன்' என்று சொல்லுகிறவர், உடம்பைக் கொடிய தவங்களாலும் விரதங்களாலும் ஹிம்ஸித்து எலும்புக் கூடாக்குவது அறியாமை யென்கிறார், முதலாழ்வார்களைப் போலவே.

*அன்பி லன்றி ஆழி யானை யாவர் காண வல்லரே?*

என்பது இவர் வாக்கு.

*அன்பாவாய்; ஆரமுதம் ஆவாய்; அடியேனுக்(கு)*
*இன்பாவாய்; எல்லாமும் நீஆவாய்!*

என்ற கொள்கையுடையவர், அன்புநெறியை உடம்பு விஷயமாகவும் கையாள வேண்டுமென்று வற்புறுத்துவது நியாயம் தானே?

திருமழிசையாரின் 'அன்புக் கல்வி' நாளடைவில் முதிர்ந்து முதிர்ந்து, வாய் என்ன சொல்லிக்கொண்டிருந்தபோதிலும், கை எந்தத் தொழிலைச் செய்து

கொண்டிருந்த போதிலும், உள்ளத்தை அன்பனாகிய இறைவனோடு ஒன்றி நிற்கச் செய்தது. வாழ்க்கையின் பிற்பகுதியில் இந்த உள்ளம் காலையிலும் மாலையிலும் இரவிலும் பகலிலும் அவனுடைய திருவடிகளிலேயே லயித்திருக்குமாம். சில சமயங்களில் அது அங்கே யிருந்து எளிதில் மீண்டதில்லை என்கிறார்.

ஒரு நாள் இத்தகைய பக்தி யநுபவம் உச்சநிலை அடைந்து விட்டதாம். தம்மை ஈடேறச் செய்வதற்காக இறைவன் அன்று இவர் இருந்த இடத்திற்கே வந்து விட்டது போலத் தோன்றியதாம், 'இவருக்குள்ளே தான் அவன் இருக்கிறானா? அவனுக்குள்ளே தான் இவர் இருக்கிறாரா?' என்று தெரியாதபடி தன்னுடைய திவ்ய மங்கள ஜோதியை இவருடைய ஆத்மாவோடு கலந்து விட்டானாம்.

'ஆதலால் நான் என்றும் மாறாத இன்பமாகிய விடுதலை பெற்றுவிட்டேன்!' என்று திருச்சந்த விருத்தத்தின் கடைசிப் பாட்டிலே தமது முடிவான அநுபவத்தை வெளியிட்டிருக்கிறார்.

இப்படி யெல்லாம் இவரது உள்ளத்தை விளைவித்துக் கொண்டவன் அவன் தானாம்.

*...... ...... ...... —விதையாக*
*நற்றமிழை வித்திஎன் உள்ளத்தை நீவிளைத்தாய்,*
*கற்றமொழி யாகிக் கலந்து*

[வித்தி—விதைத்து.]

என்று கூறுவதைக் கேளுங்கள்.

இந்தத் தமிழின் விளைவுதான் தம்முடைய பக்தி யநுபவ மெல்லாம் என்கிறார். இதே தமிழால் இவர்

கடவுளை அழைத்தாரென்றும், அவன் தமிழுக்குப் பின்னே சென்றனென்றும் கதை தோன்றி யிருக் கிறது.

திருமழிசையார் கொள்கையின் தனிப்பெருஞ் சிறப்பியல்பை வெளியிடும்

*நான் உன்னை அன்றி, இலேன்கண்டாய், நாரணனே!*
*நீஎன்னை அன்றி இலை!*

என்ற வாக்கை ஒரு மகாவாக்கிய மென்றே சொல்ல லாம்.

'நம்மை விட்டுவிட்டு அவனால் பரிபூர்ணனா யிருக்க முடியாது!' என்ற இந்தக் கொள்கையைப் பக்தர்களின் ஒரு மகாசாஸனம் என்றும் சொல்லலாம். இதை ஒரு சூத்திரமாகக்கொண்டு எவ்வளவு மகத்தான உண்மையை எவ்வளவு லேசாக ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறோம்!

பேயாழ்வாரின் சிஷ்யரா யிருந்தும், திருமழிசையா ரிடம் முதலாழ்வார்களின் சமரஸ உணர்ச்சி காணப்பட வில்லை. குருவின் வைராக்கியம் சீடர் உள்ளத்தில் வீர வைஷ்ணவமாகப் பரிணமித்தது. இவர் காலத் திலே சமய வாதங்கள் பெருகத் தொடங்கினவென்றும், சைவ வைஷ்ணவ வித்தியாசம் அதிகப்பட்டதென்றும் ஊகிக்கலாம். எனினும், இவருடைய வாழ்க்கையாலும் உபதேசங்களாலும் வைஷ்ணவத்திற்கு ஆழமும் வேக மும் அதிகரித்தன என்று சொல்ல வேண்டும்.

தமிழ்ப் பொது ஜனங்கள் இவரையும் முதலாழ் வார்களோடும் காரைக்காலம்மையார், திருமூலர் முத லான சிவனடியார்களோடும் சேர்த்துத் தமிழ்ப் பெரு முனிவராகவே கௌரவித்தார்கள்.

முதலாழ்வார்களும் திருமழிசையாழ்வாரும் தோன்றிய பிரதேசத்திற்கு அந்த நாளில் தொண்டை நாடு என்று பெயர். இங்கேயிருந்துதான் வைஷ்ணவ இயக்கம் தெற்கிலுள்ள சோழ நாட்டிலும் மலைநாடாகிய சேரநாட்டிலும் கடைக்கோடியிலுள்ள பாண்டிநாட்டிலும் பரவியது. இதுவரை கரைகட்டிய காவிரிபோல் உள்ளடங்கிப் பாயும் பக்தி சேர சோழ பாண்டிய நாடுகளில் கரை புரண்டோடும் பிரவாக மாகிறது.

---

## 13. தேவதேவியின் சபதம்

'அக்கா! பார் இந்தப் பூங்காவனத்தை. மா, பலா, விளா, வாழை, தென்னே, நெல்லி. மாதுளே, எலுமிச்சை, நாரத்தை, கமுகு முதலான விருட்ச சமூகங்கள் மலிந்திருக்கின்றன. குளிர்ந்த காற்ருேடு கம்மென்று வீசுகிறது, மல்லிகை, முல்லே, பச்சை, இருவாட்சி, பாதிரி, சண்பகம், வகுளம், மருக்கொழுந்து, தாழை முதலியவற்றின் வாசனே. இதோ பார் செந்தாமரைப் பூக்களே: அழகுத் தெய்வமான மகாலட்சுமி கொலுவிருப்பதற்காகவே ஜோடிக்கப் பெற்றனபோலிருக்கின்றன! அதோ பூஞ்செடிகளுக்கிடையே அந்த மயில் எவ்வளவு செருக்கோடு நாட்டியம் ஆடுகிறது! பூங்குயில் கிளி மைனு முதலான பட்சி ஜாலங்கள் நடத்தும் சங்கீதக் கச்சேரி செவிக்கு எவ்வளவு அருமையான விருந்தா யிருக்கிறது! பூக்களிலுள்ள தேனே உண்டு களித்துக் கிளம்பிய வண்டுகள் இந்தச் சோலேயின் சிங்காரத்தைத்தான் தங்கள் ரீங்கார பாஷையில் பாடிப் புகழ்கின்றனவோ? என்னடி, இந்த மயக்கம்! நாம் இந்த லோகத்தில்தான் இருக்கிருேமா? தேவேந்திரனுடைய உத்தியான வனம் என்று சொல்லுகிருர்களே, அதற்குள்ளே பிரவேசித்து விட்டோமா?' என்று மலர்ந்த முகத்துடன் கலகல வென்று பேசுகிருள், தேவியைப் பார்த்துத் தேவதேவி.

அவர்களேப் பார்த்தால், 'தேவலோகத்திலிருக்கும் கட்டழகிகள் தாமோ?' என்ற பிரமை உண்டாகிறது.

கொஞ்ச நேரம் ஒரு விருட்சத்தின் அடியிலே சிரம பரிகாரம் செய்துகொண்ட பின், மான்களைப் போலத் துள்ளிச் சுழன்று சோலையெங்கும் பார்த்துக்கொண்டே வந்தார்கள்.

தங்கை சொன்னதற்குத் தேவி, 'இங்கேயுள்ள அழகுகளும் அலங்காரங்களும் அழகிய மணவாளனை ஸ்ரீரங்கநாதனுடைய அருளுக்குச் சாட்சி சொல்வது போலிருக்கின்றன! இந்தப் புஷ்ப ஜாதிகளெல்லாம் அந்த அழகனை அழகு செய்து பார்க்க உதவுகின்றன; இந்தக் கனிகள் அவனுக்கு நிவேதனமாகின்றன. தங்காய்! இவற்றின் பாக்கியமே பாக்கியம்' என்று பதில் சொல்லுகிறாள்.

தேவதேவியோ அந்த வார்த்தையைக் காதில் வாங்காமலே, சில பூங்கொடிகளைப் பார்த்து, 'ஆஹா! இவற்றை யெல்லாம் இப்படிச் செல்லக் குழந்தைகளைப் போல் வளர்த்து விட்டிருக்கும் பாக்கியசாலி யாரோ?' என்று கேட்கிறாள்.

'விப்ர நாராயணர் என்ற மஹானை அதிபதியாகவுடைய இந்தச் சோலை வெகு பாக்கியமுடையது' என்று தமக்கை சொல்லும்போதே, சில செடிகளுக்குப் பண்ணை கட்டித் தண்ணீர் ஊற்றிப் பருவம் செய்துகொண்டிருந்தவரை அவர்கள் பார்த்துவிடுகிறார்கள்.

'ஆ, என்ன சாந்தமான தேஜஸ்!' என்று தேவதேவி பிரமித்துப் போனாள். அந்தத் துளசிமாலையும் தாமரை மணியும் பொன்னாபரணம் நவரத்தின மாலை முதலியவற்றைக் காட்டிலும் அந்த மேனிக்கு அழகு செய்வனவாகத் தோன்றின. சுத்தமாகவும் தாவள்ய

மாகவும் இருந்த ஆடையும் நெற்றிக்குறியும் அவரு டைய லட்சணத்தைச் சிறப்பாக எடுத்துக்காட்டின.

இறைவனுடைய மேன்மைக்கும் நீர்மைக்கும் வடிவழகுக்கும் வாசகமான திருநாமங்களை வாய் குளிரக் கீர்த்தனம் செய்துகொண்டே அவர் தம்முடைய வேலையில் கண்ணுங் கருத்துமா யிருந்தார். தேவதேவி ஆச்சரிய பரவசமானாள்.

கொஞ்ச தூரம் போனதும் இவள் தமக்கையை நோக்கி, 'அவர் பைத்தியக்காரரா?' என்று கேட்டாள். அந்தக் கேள்விக்குத் தமக்கை, 'நீதான் பைத்தியக்காரி! இந்த மாகாநுபாவர் மகாவிரக்தர், பரம பக்தர்; வேத சாஸ்திரங்களில் கரைகண்டவர். சகல சம்பத்தும் நிறைந்த மண்டங்குடி என்ற அக்கிரகாரத்தைச் சேர்ந்த எழுநூறு வீட்டுப் பிராமணருள் சிரேஷ்டரல்லவா? தங்காய்! ஸ்ரீரங்கநாதனுடைய கைங்கரியங்களில் ஈடு பட்டிருப்பவர் நம்மைக் கவனிப்பாரா?' என்று பதில் சொன்னாள்.

இந்தப் பேச்சு தேவதேவியின் அழகுச் செருக்கை விசிறி ஜொலிக்கச் செய்தது. அவள் தமக்கையைப் பார்த்து, 'பாகவதரும் மனிதர் தாமே! சரி; அவர் என் மோக வலையில் அகப்படாவிட்டால், அக்கா! ஆறு மாசம் உனக்கு நான் பணிவிடைக்காரி யாவேன்!' என்று பிரதிக்ஞை பண்ணினாள்.

பிறகு தன்னுடைய பட்டு வஸ்திரம் ஆபரணம் முதலியவற்றைக் கொடுத்து அனுப்பிவிட்டுக் காவி யாடை தரித்துத் துளசிமாலை அணிந்து அந்த ஸாத்விக வேஷத்தோடு, பூங்காவனத்தின் நடுவே

ஒரு பர்ணசாலையில் பூமாலை கட்டிக்கொண்டிருந்த விப்ர நாராயணர் முன் வந்து வணங்கி நின்றாள்.

'யார்?' என்று அவர் விசாரிக்க இவள், தான் ஜன்மாந்தர வினையால் ஒரு தாசியின் மகளாய்ப் பிறந்ததாகவும், அந்தப் பாவத் தொழிலை வெறுத்து வெளிக்கிளம்பியதாகவும், பகவத் பாகவத கைங்கரியங்களில் காலங் கழிக்க விரும்புவதாகவும் சொல்லி, அந்தச் சோலையில் எங்கேயாவது ஓரிடத்தில் வசித்துப் பணி செய்ய அனுமதி கொடுக்க வேண்டுமென்று பிரார்த்தித்தாள்.

விப்ர நாராயணர் முதல் முதல் அந்த வேண்டுகோளை அங்கீகரிக்கவில்லை. எனினும், கடைசியாக இவள் கண்ணீர் வடித்துக்கொண்டே, 'அடைக்கலம் அடியேன்!' என்று காலில் விழுந்ததும், அவர் அந்தக் கபட நாடகத்தை நம்பி நந்தவனத்தில் ஒரு கையாளாக இருந்து வேலை செய்யும்படி நியமித்தார்.

தேவதேவி பர்ணசாலைக்குள் போகாமல் வெளியே மரத்தடியில் தங்கிக் களையெடுப்பது, கொத்திக் கொடுப்பது, பூக் கொய்வது, தினுசு தினுசாக மாலை கட்டுவது முதலான வேலைகளை ஜாக்கிரதையாகச் செய்து அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாக நடந்து வந்தாள்.

சில சமயங்களில் அவர் சொல்லும் புண்ணிய கதைகளைப் பக்தியோடு கேட்பதுபோல் பாவனை செய்தாள். வேறு சமயங்களில் அவரைப்போல் நாம சங்கீர்த்தனம் செய்தாள்.

ஆனால், உலகம் தெரியாமல் ஏமாறிய பாகவதரைக் குறித்து உள்ளுக்குள்ளே நகையாடித் தன் மனோரதத்தின் முக்கியமான பகுதி நிறைவேறி விட்டதாகவே மகிழ்ந்தாள்.

விப்ர நாராயணரின் உள்ளமோ கொஞ்சமும் விகற்பமடையவில்லை. நாளடைவில் தேவதேவி தனக்குக் கர்வபங்கம் ஏற்பட்டதாக எண்ணத் தொடங்கினாள். 'அடடா, இவர் மனம் என்ன பாறையா, மலையா?' என்று அதிசயித்தாள்.

பிறகு அவர் இட்ட பணியே இன்பமாகத் தோன்றியது. அவர் கையால் அளித்த உணவு அமுதமாய் இருந்தது. பாசாங்குக்காரி காதலால் பரிதவிக்கலானாள்.

ஒரு நாள் தேவதேவி துளசிச் செடிகளுக்குப் பாத்தி கட்டிக்கொண்டிருக்கையில், பழைய நினைவுகள் வருகின்றன. ஆறு மாசத்திற்கு முன் இவள் தன் தமக்கைக்குச் செய்த பிரதிக்ஞை என்ன? இப்போது படும் அவஸ்தை என்ன? 'ஆ, ரங்கநாதா! என் கர்வத்திற்கு இவ்வளவு தண்டனையும் வேண்டும்' என்று செடிகளில் தண்ணீரும் கண்ணீரும் ஊற்றிக்கொண்டே பெருமூச்செறிகிறாள்.

இவளுடைய உள்ளத்தில் பெரும் புயல் வீசுகிறது; அவநம்பிக்கை ஒரே இருட்டாகப் படர்ந்திருக்கிறது. அச் சமயம் திடீரென்று வானமும் இருண்டு மேகம் திரளுகிறது. இருளைக் கிழித்துக்கொண்டு வரும் மின்னல் கண்ணைப் பறிக்கிறது; இடி இடிக்கிறது. பெருங் காற்றும் மழையும் கலந்தடிக்கின்றன.

'இந்தச் சோலையில் தங்குவதற்கு வேறு விடுதியும் இல்லையே! அவருக்கு இரக்கமும் கிடையாதா? பார்ப் போம்!' என்று நினைந்து கொண்டே பர்ணசாலையின் வெளிப்புறத்தில் ஒதுங்கி நிற்கிருள்.

விப்ர நாராயணர் கண்டு இரங்கி, 'பெண்ணே! முன்னமே சொன்னேனே இங்கு வசிப்பது கஷ்ட மென்று; உள்ளே ஒருபுறமாய் வந்திரு' என்று கட்டளையிடுகிருர். அவளும் ஈர வஸ்திரத்தோடு குளி ரால் ஒடுங்கி நடுங்கிக்கொண்டே வந்து நிற்கிருள்.

'பூவைப் போல் சுகுமாரமான இளம் பிராயத்தில் இவள் ஏன் இப்படிக் கஷ்டப்படவேண்டும்?' என்று வருந்துகிறது அவர் உள்ளம். உடனே 'இதை உடுத் திக்கொண்டு இந்தக் குடிசையிலேயே சிரம பரிகாரம் செய்து கொள்ளலாம்' என்று தம்முடைய உலர்ந்த உடைகளில் ஒன்றைக் கொடுக்கிருர்.

அன்பினுல் விரிந்த கண்களோடு இவள் வாங்கிக் கொள்ளும்போது அந்தக் கை அவர்மீது படுகிறது. அப்போது அவருக்கு ஒரு புதிய உணர்ச்சி உண்டாகிறது.

உடனே அது தவருனதென்று அறிவு சொல்லு கிறது. அந்த அறிவு உணர்ச்சியோடு போராடுகிறது. போராடப் போராடப் போராட, உணர்ச்சி பலமடை கிறது. 'ஐயோ, பகவானின் மாயை!' என்று பயப்படுகிருர்.

தேவதேவியின் சபதம் நிறைவேறி விட்டது. மறு நாள் காவியுடையையும் சமய சின்னங்களையும் ஒழித்து விட்டுத் தன்னுடைய திவ்ய வஸ்திராபணங்களை வர வழைத்துத் தரித்துக்கொண்டாள்.

இந்த மாறுதல் இவளுடைய ரூபலாவண்யங்களை அவர் கண்களில் அதிகமாய்ப் பிரகாசிக்கச் செய்தது. நந்தவனத்தை விட்டு இவள் வீட்டுக்கே வந்து விட்டார்!

ஒரு நாள் நள்ளிரவில் தேவதேவியின் தாய் அவரை வெளியே தள்ளிவிட்டாள். இந்த நிலையிலும் தேவதேவியை அவரால் மறக்க முடியவில்லை. 'ஸ்ரீரங்கநாதா! இதுவும் உன் மாயா சக்தியின் விசித்திரமா?' என்று புலம்பிக்கொண்டே அந்தத் தெருவில் ஒரு திண்ணையில் சிரமபரிகாரமாகப் படுத்து அப்படியே உறங்கிப்போய் விட்டார்.

அப்போது ஒருவன் ஒரு தங்கப் பாத்திரத்தோடு தேவதேவியின் வீட்டு வாசலில் நின்று, 'நான்தான் அழகிய மணவாளன்; விப்ர நாராயணர் அனுப்ப வந்தேன்' என்று கதவைத் தட்டினான். அவள் சடக்கென்று திறந்ததும், 'எஜமான் தந்தார்!' என்று பாத்திரத்தைக் கொடுத்துவிட்டு, விப்ரநாராயணரிடம் போய், "உம்மைத் தேவதேவி வரச் சொன்னாள்!" என்று சொல்லிப் போனான்.

பொழுது விடிந்ததும் கோவிலிலுள்ள தங்கப் பாத்திரம் காணவில்லையென்று பரிசாரகர்கள் அதிகாரிகளுக்கு அறிவிக்க, சோழ மகாராஜாவே அந்தக் களவை நேரில் விசாரிக்கத் தொடங்கினான். பாத்திரம் தேவதேவியின் வீட்டில் இருப்பதாகத் தெரியவந்ததும், 'அவளையும் அந்தப் பிராமணரையும் கைப்பிடியாகக் கொண்டுவாருங்கள்' என்று கட்டளையிட்டான்.

அவரோ, 'நான் இந்தப் பாத்திரத்தையும் அறியேன்; எனக்கு ஒரு தூதனும் இல்லை' என்று சொன்

ஞர். தீர விசாரியாமல் திருட்டுச் சொத்தை வாங்கிய குற்றத்திற்காக அரசன் தேவதேவியிடம் அபராதம் வாங்கிப் பாத்திரத்தைக் கோவிலுக்கு அனுப்பிவிட்டு, இன்னும் நன்ருக ஆராய்ந்து இவரைத் தண்டிப்போ மென்று காவலில் வைத்துப் போனன்.

அன்றிரவில் அரசன் ஒரு சொப்பனம் கண்டான். அதில் ஸ்ரீரங்கநாதன் தோன்றி, 'அவருக்காக நாமே நமது கோவிலிலுள்ள பாத்திரத்தை எடுத்துக்கொண்டு தேவதேவியிடம் தூது போனேம்!' என்று சொல்லி மறைந்தானும். அரசன் திடுக்கிட்டு விழித்துக்கொண்டு உடனே விப்ர நாராயணரை விடுதலை செய்து அவர் காலில் விழுந்து மன்னிப்பு வேண்டிக்கொண்டானும்.

விப்ர நாராயணரோ எல்லாத் தவறுகளுக்கும் ஒரே பிராயச்சித்தம் செய்துகொள்ள விரும்பினர். கழிந்ததற்குப் பச்சாதாபம் அடைந்து திருந்திய உள்ளத்தோடும் வாழ்க்கையோடும் பாகவத கோஷ்டியைச் சேர்ந்து கொள்ளவேண்டும்; அபேட்சையின்மையும் தியான சிலமும் சாந்தமும் துவேஷமின்மையும் சம நோக்கும் உடையவர்களான அந்தத் தொண்டர்களின் அடிப் பொடியே பரிசுத்தமானது; இதைத் தவிர வேறு உபாயமில்லை—என்று துணிந்தார்.

*ஆடிப்பாடி 'அரங்க! ஓ'என்(று)*
*அழைக்கும் தொண்டர் அடிப்பொடி*
*ஆடநாம்பெறில், கங்கை நீர்குடைந்(து)*
*ஆடும் வேட்கைஎன் ஆவதே?*

(குலசேகராழ்வார்)

[குடைந்து—மூழ்கி. வேட்கை—விருப்பம்.]

என்ற மனநிலையோடு ஸ்ரீரங்கநாதனுடைய சன்னிதியில் கூடியிருந்த ஸத்ஸங்கத்தைச் சேர்ந்து, 'கிருதார்த்தன் ஆனேன்!' என்று மனங் குளிர்ந்தார்.

இப்படிப்பட்ட கொள்கையுடையவர், 'கிராம குலாதிகளால் வரும் பெயர் அனர்த்த ஹேதுவாகையாலே' விப்ர நாராயணர் என்ற பழைய பெயரையும் துறந்து தொண்டரடிப்பொடி என்ற புதுப் பெயரைத் தம் புது வாழ்வின் அறிகுறியாக வைத்துக் கொண்டார்.

இந்த நிலையில், இதயத்தைத் தொண்டர்களுக்கும் பகவானுக்கும் அர்ப்பணஞ் செய்து, உடம்பை முன் போல் புஷ்பத் தொண்டிற்கும் துளசித் தொண்டிற்கும் உரிமையாக்கினர்.

*தொடைஒத்த துளவமும் கூடையும் பொலிந்து*
*தோன்றிய தோள்தொண்ட ரடிப்பொடி என்னும்*
*அடியனை, அளியன்என்(று) அருளி, உன் அடியார்க்(கு)*
*ஆட்படுத் தாய்! பள்ளிஎழுந்தரு ளாயே.*

[தொடை - மாலை. அளியன் - காக்கப்படத் தக்கவன்.]

என்பதுதான் இவருடைய முடிவான பிரார்த்தனை.

அந்தக் கூடையைத் தவிர வேறு உடைமை ஒன்றும் வைத்துக்கொள்ளவில்லையாம். 'இவ்விதமாக வாழும் தொண்டரடிப்பொடி என்னும் அடியேனை "இவன் உண்மையாக அன்புள்ளவன்; ரட்சிக்கத் தக்கவன்!" என்று நீ அருள்கூர்ந்து கருதினல், எனக்கு வேண்டிய வரம் ஒன்றுதான்' என்கிருர்

அந்த வரம் எது? தமக்கு மோட்சம் வேண்டுமென்று கேட்கவில்லை. கைங்கரிய ஸாம்ராஜ்யம்தான்

வேண்டுமென்கிறார். பகவத் கைங்கரியம் வேண்டு மென்று கூடப் பிரார்த்திக்கவில்லை; பாகவத கைங்கரி யம்தான் கடைசி வேண்டுகோள்.

இவ்வளவு தூரம் தம்மைத் தாழ்த்திக் கொண்ட வரை ஸ்ரீ வைஷ்ணவ சமூகம் அஞ்ஞான அந்தகா ரத்தை ஒழிக்கும் பன்னிரண்டு பக்திப் பெருஞ் சோதி களில் ஒருவரான தொண்டரடிப்பொடி யாழ்வாரென்று போற்றுகிறது.

முன்னமே இவரது ரூப சௌந்தரியத்தால் வசீ கரிக்கப்பட்ட தேவதேவி, இவரது ஞான சௌந்தரியத் தால் முன்னிலும் அதிகமாக வசீகரிக்கப்பெற்றுத் தன் உடைமைகளை யெல்லாம் துறந்து பரம ஸாத்விகை யாக வாழ்ந்து வந்தாள்.

———

# 14. ராஜகுலமும் ராஜ வைத்தியமும்

ஒரு ராஜா எவர் எதை விரும்பினாலும் இல்லை என்று சொல்லாமல் கொடுத்து வந்தானாம். குழந்தை போய்க் கற்கண்டு கேட்டால் அதைக் கொடுப்பான். வயது வந்தவன் இரத்தினங்களை விரும்பினால் அவற்றை அவனுக்குக் கொடுத்துவிடுவான். ஒரு சமயம் அங்கே போன ஒருவன் ஒன்றையும் விரும்ப வில்லையாம். அவனுக்கு அரசன் என்ன கொடுத்தான், தெரியுமா? தன்னையே கொடுத்தானாம்: அதாவது, அவனைத் தன்னுடைய நண்பனாக—உறவினனாக—ஏற்றுக் கொண்டானாம்.

*ஒன்றுமே வேண்டா(து),*
*உலகனைத்தும் ஆளுவர்காண்!*

என்றபடி, ஒன்றுமே விரும்பாதவனுக்கு ராஜகுலமே கிடைத்து விட்டதாம்.

ராஜாதிராஜனான பகவானும் இப்படியே நடந்து கொள்கிறான் என்று பக்திமதம் சொல்லுகிறது. இந்த அபிப்பிராயத்தை வேறொரு உதாரணத்தால் விளக்கு கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

முத்துக் குளிப்பவர்கள் துறையிலே முத்தைக் கொடுத்துப் பழம் கொள்வார்களாம்; நன்முத்தை நெல்லுக்கே மாற்றிக்கொள்வது முண்டாம். சரி: பசிய னுக்கு வேண்டியது உணவுதானே! முத்தின் விலையை அப்போது அவன் சிந்தித்துப் பயன் என்ன?

விலையறியும் செட்டிமார் கைப்பட்டதும், பெரு விலை ஏற்படுகிறது. எவ்வளவு தூரம் விலையேறிக் கொண்டே போனாலும், முத்தை விற்காதவர்களும் உண்டு. 'செருக்கரானார் இத்தைப் பூண்டு அனுபவிப் பார்கள்'—அதாவது, விலைக்குக் கொடுப்பதே கௌரவக்குறைவு என்று நினைக்கக்கூடிய பிரபுக்களும் ராஜ குலத்தினரும் பெருமிதத்தோடு உயர்ந்த முத்தை அணிந்து மகிழ்வார்கள்.

பிரயோஜனங்களை விரும்புகிறவர்களுக்குப் பிர யோஜனங்களைக் கொடுத்துத் தான் எட்ட நிற்கிறானும் பகவான். இவர்கள் உலகம் அளிக்கும் முத்தாகிய திரு நாமத்தைக் கண்டெடுத்தும் அனுபவிக்கக் கொடுத்து வைக்காதவர்கள்; நாடிய பொருள் கைகூடப் பெற்று மகிழ்ந்தபோதிலும், விலையுயர்ந்த முத்தை நெல்லுக்கும் பழத்துக்கும் பண்ட மாற்றுச் செய்யும் பேர்வழிகள்தாம்.

வேறு சிலர் இப்படி மோசம் போகாமல் இறைவன் திருநாமத்தைக்கொண்டு பல வேறு சூட்சும சாதனங்களையும் உபாயங்களையும் அவற்றால் கிடைக்கும் சித்திகளையும் சக்திகளையும் அடைய விரும்புவார்கள். பக்தியுலகில் செட்டிமார் இவர்கள்; பகவானோடு வாணிபஞ் செய்யப் பார்க்கிறார்கள்; வட்டி, தொடர் வட்டிகளோடு லேவாதேவி செய்ய முயலுகிறார்கள்.

இன்னும் சிலர் வேறு பலனையாவது சாதனத்தை யாவது இச்சியாமல், 'ஆயிர *மோலி அரும்பரஞ்சுட'ரின் திருநாமத்தை விலை பேசாது, ஆபரணமாகப் பூண்டு அனுபவிப்பார்கள். இவர்களே தொண்டக் குலமென்ற ராஜ குலத்தைச் சேர்ந்தவர்கள். இவர்

* மோலி—கிரீடம்.

களுக்குப் பக்தியும் கைங்கரியமுமே பிரயோஜனம்; வேறு பிரயோஜனம் தேவையில்லை.

பக்தியின் இந்த நிலைகளை மனசில் கொண்டு தொண்டரடிப்பொடியாழ்வார் கதையைப் பார்ப்போம். இவருள்ளம் ஒரு சமயம் காதலை நாடியது.

*மாதரார் கயற்கண் என்னும் வலையுட்பட்(டு)*

அழுந்திக் கொண்டிருந்த அக்காலத்தில், பகவான் இவருக்காகத் தூது போனும்.

அதே உள்ளம் துன்பத்தால் சுடப்பட்டுச் சுத்தமான தங்கமானதும்,

*'போதரே!' என்று சொல்லிப்*
*புந்தியுள் புகுந்து, தன்பால்*
*ஆதரம் பெருக வைத்த*
*அழகனூர் அரங்க மன்றே*

[போதரே—(இங்கே) வாராய். புந்தி—புத்தி. ஆதரம்—அன்பு.]

என்று மகிழும்படி பகவதநுபவம் ஏற்பட்டது.

இவருடைய நெஞ்சு பழைய வாழ்க்கையிலிருந்து மீண்டது. 'பாழிலே பாய்கிற நீரைப் பயிரிலே வெட்டி விட்டாற்போலே' இவருடைய அன்பைக் கரை புரளப் பண்ணிப் பயன் படுத்திக் கொண்டானும் இறைவன்.

இத்தகைய அழகனேடு, வேறு உபாயம் அல்லது சாதனத்தைக் கொண்டு வாணிபம் நடத்த இவர் முயலவில்லை. மகாவிசுவாசத்தோடு பகவந்நாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு,

*ஆவியே! அமுதே! என்தன்*
*ஆருயிர் அனைய எந்தாய்!*

என்று தம்மை மோகிப்பித்த வடிவழகைக் கூவியழைத்துச் சரணுகதி பண்ணுகிருர்.

தம்மைப்போல் மற்றவர்களும் பக்தி பண்ணிக் கொண்டிருந்தால்,

*பொறியில்வாழ் நரகம் எல்லாம்*
*புல்எழுந்(து) ஒழியு மன்றே!*

[பொறி—இந்திரியங்கள். புல் எழுந்து—காடாகப் போய்.]

என்று குதூகலப்படுகிருர்.

இந்திரிய சுகமான சிற்றின்பமே இன்பமென்று எண்ணுகிறவர்கள், 'அக்கினியை அணைந்து விடாய் தீர நினைப்பாரைப் போலேயும், ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்கிக் கிலேசம் தீர நினைப்பாரைப் போலேயும், விஷ பட்சணத்தைப் பண்ணித் தரிக்க நினைப்பாரைப் போலேயும், துக்க சாதனத்தைச் சுக சாதனமாகப் பிரமிக்கிருர்கள் என்பர் பெரியவாச்சான் பிள்ளை. இப்படிப்பட்டவர்களுக்கு வழிகாட்டியாகத் தொண்டரடிப்பொடி யாழ்வாரை ஈச்வரன் அவதரிப் பித்தான் என்று பட்டர் என்ற ஆச்சாரியர் கூறினுராம்.

ஸ்ரீரங்கநாதனிடம் கொண்டிருந்த பக்திப் பெருங் காதலும், இதன் பயனுக விளைந்த கைங்கரிய ஆசையும் இவர் வாழ்க்கையின் முக்கிய அம்சமென்று பாடல்களி லிருந்து தெரிகிறது. இவரை ஆட்கொண்ட ஸ்ரீரங்க நாதனை ஸ்ரீரங்கராஜாவென்றும், ஸ்ரீரங்கத்தை அவ னுடைய ராஜதானியென்றும் சொல்வதுண்டு.

இந்த ராஜதானிக்கும் ராஜாவுக்கும் ஒருங்கே மாலை யாக அமைந்திருக்கும் காவிரி இவரது பக்திக் கண்களில்

கங்கையைக் காட்டிலும் பரிசுத்தமான நதியாகிறது. இந்த ஆற்றுக்கிடையே அமைந்திருக்கும்

*வண்டினம் முரலும் சோலை,*
*மயிலினம் ஆலும் சோலை,*
*கொண்டல்மீ(து) அணவும் சோலை,*
*குயிலினம் கூவும் சோலை,*
*அண்டர்கோன் அமரும் சோலை*

[ஆலும்-ஆடும். கொண்டல்-மேகம். அணவும்-அணுகும்.]

என்ற ஸ்ரீரங்கத்தின் இயற்கை யழகே தெய்விக அழகாகக் காண்கிறது.

இந்த ஸ்தலத்தில், 'என்னைக் கொள்வாருண்டோ?' என்று கிடக்கிருனும் அழகனுன ஸ்ரீரங்கநாதன்:

*குடதிசை முடியை வைத்துக்*
*குணதிசை பாதம் நீட்டி,*
*வடதிசை பின்பு காட்டித்*
*தென்திசை இலங்கை நோக்கிக்*
*கடல்நிறக் கடவுள் எந்தை*
*அரவணைத் துயிலு மாகண்(டு),*
*உடல்எனக்(கு) உருகு மாலோ!*
*என் செய்கேன், உலகத் தீரே?*

[குடதிசை—மேற்குத் திசை. குணதிசை—கிழக்குத் திசை.]

மேற்குத் திசை வாழும்படி முடியை வைத்து, உலகங்களெல்லாம் தொழுதேத்தும் திருவடியைக் கிழக்குத் திசை வாழும்படி நீட்டிக்கொண்டிருக்கிருனும்.

'வடதிசை பின்பு காட்டி' என்பதற்கு வடமொழியை நிலை கண்டுணர்ந்த பெரியவாச்சான் பிள்ளை, 'வடக்குத் திக்கு ஆரிய பூமியாகையாலே, ஸம்ஸ்கிருத முரணராய் ஆழ்வார்கள் ஈரச்சொல்லும் நடையாடாத தேசமாகை யாலே, அத்திக்கைத் திருத்தும்போது பின்னழ கெல்லாம் வேண்டுமென்றிருந்தார்!' என்று தமிழபி மானமும் 'தென்திசை' யபிமானமும் தோன்ற வியாக்கி யானமிடுகிறார்.

குழந்தைக்குப் பால் கொடுத்து முகமலர்ச்சி காணப் பாங்காகச் சாயும் தாய்போல் இலங்கை வரையுள்ள தமிழ்நாட்டைக் கடாட்சித்துக் கொண்டிருக்கிறானும் ஸ்ரீரங்கநாதன்.

இந்த நிலையைக் கண்டு ஆழ்வாருக்கு உள்ளத் தோடு உடம்பும் உருகுகிறது. 'இறைவனைத் தரிசித்து உருக வழியுண்டோ?' என்று கேட்கும் உலகத்தை நோக்கி, 'இப்படி உருகாமலிருக்க நீங்கள் கண்டு பிடித் திருக்கும் உபாயம் தான் எதுவோ?' என்று இப்போது கதறுகிறார்.

இவர் இப்படி ஈடுபட்டதும், இந்த நிலைக்குத் தகுந்தபடி தம்முடைய லட்சியத்தை மிகவும் உயர்ந்த தாக வைத்திருந்தாரென்று ஊகிக்கலாம்.

*ஐயனே! அரங்கனே! உன்*
*அருள்என்னும் ஆசை தன்னால்*
*பொய்யனேன் வந்து நின்றேன்!*
*பொய்யனேன், பொய்யனேனே!*

என்று இக் 'குழந்தை யுள்ளம்' கதறுவதையும் கேளுங்கள்.

ஈச்வர சன்னிதியிலே—அதாவது, இறைவனுடைய பார்வையிலே—இவர் செய்துகொள்ளும் தற்சோதனை எவ்வளவு கடுமையானது! ஆ, அந்தச் சோதனை யொளி மன மெய்மொழிகளிலும் எப்படி ஊடுருவிச் செல்லுகிறது! சிறு தவறும் பிரமாதப்படுகிறது, சுத்த வெண்ணிறத்திலே சிறு கரும்புள்ளியும் தெளிவாகத் தெரிவதுபோல, இத்தகைய சோதனை முறைகளாலும் இவர் குறைகளை யெல்லாம் வென்று ஞானகுண பூர்ணராகப் பரிணமித்திருக்க வேண்டும்.

இவருக்கு இத்தகைய மோட்ச மார்க்கமும் மோட்ச இன்பம் போன்றதுதான்! எனினும், இந்தப் பிற்கால வாழ்க்கையில், தமக்கு மோட்சங்கூட வேண்டுமென்று விரும்பவில்லை!

இவர் விரும்புவது பக்திச் சுவையும் கைங்கரியச் சுவையும் தான்.

*‘ பச்சைமா மலைபோல் மேனிப்*
*பவளவாய் கமலச் செங்கண்*
*அச்சுதா ! அமரர் ஏறே !*
*ஆயர்தம் கொழுந்தே !’ என்னும்*
*இச்சுவை தவிர, யான்போய்*
*இந்திர லோகம் ஆளும்*
*அச்சுவை பெறினும் வேண்டேன்,*
*அரங்கமா நகரு ளானே!*

[அமரர்ஏறு—தேவர்களின் அதிபதி.]

என்று கண்ணும் குளிர்ந்து நெஞ்சம் குளிரும்படி—சகல தாபங்களும் கண்டபோதே ஆறும்படி—இருக்கிறதாம் திருமேனி.

பச்சை மலையில் பவளம் படர்ந்தது போலிருக்கிற தாம் அடியார்களின் க்ஷேமத்தை வினவத் துடித்துக் கொண்டிருக்கும் வாய். இவ்வளவு வசீகரத்துக்குத் தப்பினவர்களையும் அகப்படுத்திக்கொள்ளும் கண்கள் வாய் சொல்லாததையும் சொல்லி முடித்து விடு மென்றும், வாத்ஸல்யம் முதலான குணங்களெல்லாம் அங்கே அலை யெறிகின்றன என்றும் உரையாசிரியர் குறிப்பிடுகிறார்.

இவ்வளவு அழகிற்கும் அறிகுறியாக, 'அச்சுதா! அமரர் தலைவா! ஆயர்குலக் கொழுந்தே!' என்ற திரு நாமங்களால் மனமும் வாயும் குளிர அழைத்துப் பக்தி பண்ணிக் கைங்கரியம் பண்ணி மற்றவர்களுக்கும் உப கரித்துக் கொண்டிருப்பதிலுள்ள சுவை அந்த மோட் சத்தையும் மறுக்கச் செய்கிறதென்கிறார் தொண்டரடிப் பொடி யாழ்வார்.

பகவானைக் கட்டிப்பொன் என்றும், 'ஓராயிரமாய் உலகேழ் அளிக்கும் பேரான' திருநாமத்தைப் பணிப் பொன் (ஆபரணங்களாக மாறிய பொன்) என்றும் பக் தர்கள் சொல்லுகிறார்கள். கட்டிப் பொன்னைக் காதி லும் கழுத்திலும் அணிந்து கொள்ள முடியுமா? திரு நாமமாகிய பணிப் பொன்னையோ இஷ்டப்படுகிறவர்க ளெல்லாம் அணிந்து கொள்ளலாம்; எந்தக் காலத்தி லும் அணிந்து கொள்ளலாம்.

இதற்கு ஒரு சாதனம் வேண்டாம்; சடங்கு வேண் டாம். இடறினவன் 'அம்மே!' என்னும் போது ஒரு சடங்கு வேண்டுமா? இப்படிப்பட்ட பக்தர்களுக்கு ஜாதியும் வேண்டாம்: ராஜ குலமே பிறந்து விடுகிற தாம் இவர்களுக்கு.

சில வைத்தியர்கள் போடும் பத்தியம் நோயோடு நோயாளியையும் தீர்த்து விடுகிறது! ஆனால் தொண் டரடிப்பொடி யாழ்வாரோ நம்மை நோக்கி, 'உங்க ளுடைய மகாரோகத்திற்கு நல்ல மருந்து பகவந் நாமம் தான். இந்த மருந்திற்குப் பத்தியம் கிடையாது. வேர்த்த போது நீராடிப் பசித்தபோது உண்டு களைப் படைந்தபோது உறங்கிக் கொள்ளலாம், என்கிறார்.

'மருந்தோ நரக பயத்தைப் போக்குவதோடு யம பயத்தையும் போக்கி, கைங்கரிய வாழ்வாகிய ஆரோக் கிய வாழ்வில் நிலைபெறச் செய்கிறது. இது நான் ஸ்வானுபவத்திலே கண்டது!' என்றும் உபதேசஞ் செய்கிறார்.

'அவர் அரங்க நகர் எம்பெருமான்; இவர் தொண் டரடிப்பொடி எம்பெருமான்!' என்று ஸ்ரீவைஷ்ணவ உலகம் போற்றும்படி விளங்குகிறார் இந்த ராஜவைத் தியர்.

---

## 15 பக்தி யநுபவமும் கவிதாநுபவமும்

ஆயுள் முடிந்த பூலோகவாசிகளை கொண்டு வருவோமென்று சூலம் பிடித்துப் பாசம் சுழற்றிப் பயங்கரமாக மீசைகளை முறுக்கித் தடபுடலாகப் புறப்பட்டார்களாம் யம படர்கள், தங்கள் தலைவனை வணங்கி விடை பெற்றுக்கொண்டு. அந்தப் படாடோபங்களைக் கண்ட யமராஜா அவர்களைத் திரும்ப அழைத்து அருகே வரச் செய்து, 'ஆனைபோல் செருக்கிச் செல்லுகிற நீங்கள் " கடவுளே சரணம் " என்று வாழும் ஸாத்விகர்களைக் கண்டால் பூனை போல் ஒடுங்கிச் சாந்தமாகத் தண்டனிட்டபின் மரியாதையாய்ப் போகவேண்டும்!' என்று காதிலே ஓதி எச்சரிக்கை செய்து அனுப்பினனும்.

*நாமார்க்கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம் !*

என்ற அப்பர் கொள்கையைத்தான் மேலே சொன்னபடி ஒரு யமபுரக் காட்சியாகக் காட்டுகிருர் திருமழிசையாழ்வார்.

இதே கொள்கையைத் தொண்டரடிப்பொடி யாழ்வார் இன்னும் சுவாரஸ்யமாகச் சித்தரிக்கிருர்:

*காவலில் புலனை வைத்துக்*
*கலிதனைக் கடக்கப் பாய்ந்து,*
*நாவலிட்(டு) உழிதர் கின்ரூேம்*
*நமன்தமர் தலைகள் மீதே;*
*மூவுல(கு) உண் (டு)உமிழ்ந்த*
*முதல்வ ! நின் நாமம் கற்ற*
*ஆவலிப்(பு) உடைமை கண்டாய்,*
*அரங்கமா நகரு ளானே!*

[நாவலிட்டு—‘ நாவலோ !’ என்று ஜயகோஷஞ் செய்து கொண்டு. உழிதர்கின்றோம்—சஞ்சரிக்கிறோம். நமன் தமர்—யமனைச் சேர்ந்தவர்கள். ஆவலிப்பு—கர்வம்.]

‘ முன்பு யமாதிகள் பேர் கேட்க அஞ்சிக்கிடந்தவர் திருநாமத்தை அண்டை கொண்ட பலத்தாலே யமன் வாசலிலே சென்று அறை கூவுகிறார் இப்போது,-வாலி பேர் கேட்க அஞ்சிச் சுரமடைந்து கிடந்த மஹாராஜர் (சுக்கிரீவன்) பெருமாளை (ராமனை) அண்டை கொண்ட பலத்தாலே கிஷ்கிந்தா த்வாரத்தில் (கிஷ்கிந்தாபுரி வாசலிலே) சென்று அறை கூவினாற்போலே!’ என்பது வியாக்கியானம்.

‘ நாவலோ நாவல் !’ என்று தோற்றவர்கள் முன்னே ஜயித்தவர்கள் செய்யும் கோஷத்தைச் செய்து கொண்டு கர்வத்தோடு நிற்கும் அந்த நிலை, ‘ பாபத்துக்கு நீ எழுதி வைத்த பட்டோலையைக் கொண்டு வர வல்லையாகில் புறப்படாய்!’ என்று சொல்வது போலிருக்கிறதாம். சுக்கிரீவனுக்கு ராமன் பக்கத் துணையாக இருந்தான்; தொண்டரடிப்பொடி யாழ்வாரோ, பகவானுடைய பெயரை வைத்துக் கொண்டே இப்படி நிர்ப்பய சஞ்சாரம் பண்ணுகிறார் ! யமபுரி வாசலில் மட்டு மல்ல ; யமன், யமபடர் தலைகளிலும் அடியிட்டுச் சஞ்சரிக்கிறாராம்.

மரண பயம், நோய், கவலை முதலியவற்றை யெல்லாம் விளையாட்டாக மிதித்துத் தள்ளி விடுகிறாராம். தாமே அப்படியெல்லாம் செய்துவிட்டதாக இவர் அபிமானிக்குமாறு தோன்றாத் துணையாக இருந்து உபகரிக்கிறது இறைவன் திருநாமம்.

'சஞ்சரிக்கிறேன் !' என்று சொல்லாமல், 'சஞ் சரிக்கிறோம் !'என்று பன்மையால் பேசுகிறார் அல்லவா? இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை இரண்டு விதமாக வியாக்கியானம் செய்கிறார். 'திரு நாமம் ரஸிக்க வாயிலே பட்டவாறே இவர் சத சாகமாகப் பணைத்த படி !' என்பது முதலாவது பொருள். நாவில் இனிக் கத் திருநாமத்தை அனுபவித்து உச்சரித்துக்கொண் டிருக்கும் போதே, அந்த ரஸத்தால் 'இவர் ஒருவரல் லர் !' என்று சொல்லுமாறு தழைத்தோங்குகிறாராம்,— தளிரோடி இலை வீசி நூற்றுக் கணக்கான கிளைகளோடு வளரும் மஹாவிருட்சம்போல. மரணத்தை வென்ற ஸ்வாநுபவத்தை மற்றவர்களோடும் பங்கிட்டுக் கொள்கிறார் என்பது இரண்டாவது பொருள்.

இவ்விதமான பக்தி யநுபவத்தில் மூட நம்பிக் கைக்கு இடமில்லை யென்பதையும் பெரியவாச்சான் பிள்ளை சுட்டிக் காட்டுகிறார். 'லோகத்திலே பாபம் பண்ணினார், தத்பலானுபவத்துக்கு அஞ்சி யமன்பேர் இடுவார், அவனுடைய லேககன் பேர் இடுவாராய், "யமம் தர்ப்பயாமி, சித்ரகுப்தம் தர்ப்பயாமி" என்று ஆராதியா நிற்க, திருநாமத்தை அண்டை கொண்ட பலத்தாலே அவர்கள் தலையிலே அடியிடுகிறோம் என்கிறார்' என்ற வியாக்கியானம் கூர்ந்து கவனிக்கத் தக்கது.

நடுநடுங்கி யமனையும் அவனுடைய பரிஜனங்களை யும் கும்பிட்டு வாழும் உலகத்திலே அவர்கள் பயப்படு மாறு தலையிலே அடியிட்டுத் துவைக்கும் பலத்தை ஸாத்விகரான பக்தர்களுக்குக் கொடுக்கிறதாம் திருநாம ஸங்கீர்த்தனம்.

திருநாமம் கற்ற பெருமிதத்தினுலும், அதனுல் தமக்குப் பிறந்த ராஜகுலப் பெருமையினுலும் பலத்தினுலும், தாம் இந்திரிய ஜயம் செய்து பயத்தையும் பாவங்களையும் கடந்து விட்டதாகத் தொண்டரடிப் பொடியாழ்வார் சொல்லுகிருர். 'அராஜகமாய்க் கிடந்த காலம் குறும்பு செய்தாரை' ஒழுங்கான அரசாங்கம் ஏற்பட்டதும் அந்தப் பலத்தைக் கொண்டு காவலில் வைப்பது போல், தவருன வழிகளில் மண்டித் திரிந்த இந்திரியங்களை அடக்கி வழிப்படுத்திக் கொண்டாராம்.

அப்போது பாப சமுத்திரம் வந்து கழிந்ததென்று தெரியாமல் ஓட்டம் பிடித்ததாம்,—அனுமன் தாவிப் பாய்ந்த வேகத்தில் தென் சமுத்திரம் எதிரே ஓடிப் போய் விட்டதாகத் தோன்றியது போல!

இப்படிப் பாப சமுத்திரத்தை மட்டுமா கடந்தார்?

*கலிதனைக் கடக்கப் பாய்ந்து*

[கலி—பாவம்; கலியுகம்.]

என்பதற்குக் கால வெள்ளத்தையும் ஒரு தாண்டுத் தாண்டிக் கிருதயுக புருஷராகி விட்டார் என்றும் பொருள் கூறுகிருர் உரையாசிரியர்.

உண்மைதான்: சோம்பிப் படுத்துக் கும்பகர்ண உபாசனை செய்கிறவர்களுக்கே கலியுக மென்றும், எழுந்து உட்கார்ந்ததும் துவாபர யுகம் பிறந்து விடுகிற தென்றும், நிமிர்ந்து நின்ருல் திரேதாயுக புருஷராகிருரென்றும், லட்சியத்தை நோக்கி நடக்கும்போது கிருத யுகம் எதிர்கொண்டு ஓடிவருமென்றும் ஓர் அறிஞர் கூறியுள்ளார்.

ஞானவீரம் என்ற தெய்வ சம்பத்தையே கீதாசாரி யனும் ஞான வாழ்க்கையின் அதிமுக்கிய அம்சமாக வற்புறுத்துகிறார். வீரமில்லாதவனுக்கு இம்மையு மில்லை, மறுமையுமில்லை. உலகப் பெருஞ் சமயங்க ளெல்லாம் பரம ஸாத்விக வீரர்களையே போற்று கின்றன. தொண்டரடிப்பொடி யாழ்வாருடைய பிற் கால வாழ்க்கையில் ஒரு பெரும் புரட்சி ஏற்பட்டு அவரை இத்தகைய வீரருள் வீரராகப் பரிணமிக்கச் செய்திருக்க வேண்டும். இந்த அனுபவத்தின் ஓர் அம்சம்தான் மேலே காட்டிய பாட்டில் வெளிப்படு கிறது.

திருநாமத்தைச் சொல்லிச் சொல்லி,

*... ... ... கடல்வண்ணா! கதறு கின்றேன்;*
*காரொளி வண்ண னே!என் கண்ணனே! கதறு*
*[கின்றேன்*

என்று கதறிக் கதறிப் பயத்தைப் போக்கிக்கொண்ட பின்புதான், திருநாமத்தின் சுவை சரியாகத் தெரிந்த தாம் ஆழ்வாருக்கு.

உண்மை: சுரம் இருக்கும்போது பால் ரஸிக்குமா? சுரம் போய்ச் சுவை முதிர்ந்த பூர்ண ஆரோக்கிய நிலை யிலே, தெய்வக் காட்சி ஏற்படுகிறது: ஏற்பட்டதும்,

*கனியிருந் தனைய செவ்வாய்க்*
*கண்ணனைக் கண்ட கண்கள்*
*பனிஅரும்(பு) உதிரு மாலோ!*
*என்செய்கேன், பாவியேனே?*

என்று கதறுகிறார்.

கண்ணனைக் கண்ட கண்கள் அப்படியே குளிர்ந்து போய் ஆனந்தக் கண்ணீரைச் சொரிகின்றனவாம்.

அந்தக் கண்ணீரே இடைச் சுவர்போல இப்போது காட்சியை மறைப்பதால், 'பாவியாகிய நான் என்ன செய்யப் போகிறேன்?' என்று ஈடுபடுகிருர்.

சாதுஜனங்களை ரட்சிக்க வேண்டுமென்று, மேன்மைக்கு எல்லையான 'பரத்வத்தை அழிய மாறி அவதரித்த நீர்மை' எல்லா அவதாரங்களுக்குமே பொதுவானது. அவதாரங்களில், கிருஷ்ணவதாரத்தைப்போல் ராமாவதாரமும் தொண்டரடிப்பொடியாழ்வாரின் பக்தியைத் தூண்டுகிறது. எனினும், அவதாரங்களைக் காட்டிலும் விசேஷமாக அர்ச்சாவதாரம் (விஷ்ணுவை விக்கிரக ரூபத்தில் வழிபடும் நிலை) தான் இவருடைய பக்திக் காதலை வளர்ப்பதற்கு இன்றியமையாத தூண்டுகோலாகிறது.

'அவதாரத்திலே தேங்கின மடு அர்ச்சாவதாரம்' என்பர் ஸ்ரீவைஷ்ணவ ஆசிரியர்கள். இப்படிப்பட்ட கோயில்களிலெல்லாம் 'கோயில்' என்றும், 'பெரிய கோயில்' என்றும் ஸ்ரீவைஷ்ணவர்களால் சிறப்பாக மதிக்கப்படும் ஸ்ரீரங்கத்தையே தொண்டரடிப்பொடியாழ்வாருடைய பக்தி யநுபவங்களின் வளர்ப்புப் பண்ணை யென்று சொல்ல வேண்டும்.

ஸ்ரீரங்கநாதனை முன்னிட்டு இவருக்கு ஆரம்பத்திலே உண்டான மூன்று ஆசைகளையும்,

*போதெலாம் போது கொண்(டு)உன்*
*பொன்னடி புனைய மாட்டேன்;*
*தீதிலா மொழிகள் கொண்(டு)உன்*
*திருக்குணம் செப்ப மாட்டேன்;*

*காதலால் நெஞ்சம் அன்பு*
*கலந்திலேன்! அதுதன் னாலே*
*ஏதிலேன் அரங்கர்க்(கு): எல்லே!*
*என்செய்வான் தோன்றி னேனே?*

[எல்லே—அதிசய இரக்கச் சொல்.]

என்று கவிதானுபவத்தோடு வரும் வாக்கிலே காணலாம்.

புஷ்பத் தொண்டு செய்து அவனுடைய பொன் னடிகளை அலங்கரித்துப் பார்க்கவேண்டு மென்பது முதலாவது ஆசை. திருநாமத்தை வாயாரப் பாடி அதனால் குறிக்கப்படும் குண விசேஷங்களை எல்லா ருக்கும் எடுத்துச் சொல்லவேண்டுமென்பது இரண்டா வது ஆசை. இறைவன் விஷயமாகவும் அடியார் விஷயமாகவும் நெஞ்சு நிறைந்த அன்பும் காதலும் ஏற்பட வேண்டுமென்பது மூன்றாவது ஆசை.

இப்படியெல்லாம் ஒழுகி வந்தால்தான், 'கேசவன் தமர்'—அதாவது, பகவானுடைய சுற்றத்தார்—என்று உபசரிக்கப்படும் பக்தர் கூட்டத்தில் சேர்ந்து கொள்ள லாம்; இல்லாவிட்டால், பகவானோடு ஒரு சம்பந்தமு மில்லாமல் அன்னியனாகவே காலங் கழிக்க வேண்டும். 'ஐயோ! அப்படியானால், நான் எதற்காகப் பிறந்தேன்?' என்று பெருமூச்சு விட்டுத் தம்மைத் தாமே ஆச்சரியத் தோடு கேட்டுக் கொள்கிறார்.

இவருடைய லட்சியம்,

*பணிவினால் மனம தொன்றிப்*
*பவளவாய் அரங்க னார்க்குத்*
*துணிவினால் வாழ மாட்டாத்*
*தொல்லைநெஞ் சே!நீ சொல்லாய்*

என்ற அடிகளில் வெளியிடப் பெறுகிறது. பணிவினுல் இறைவனேடு மனம் ஒன்றுபட்டு அவனுக்கே வாழ்க்கையை உரிமையாக்கும் துணிவு அல்லது வீரத்தை இவர் ஆதியில் விரும்பி, நாளடைவில் அடைந்தாரென்று ஊகிக்கலாம்.

இவருடைய ஆசையும் லட்சியமும் ஸ்ரீரங்க நாதனையே கொழுகொம்பாகக் கொண்டு படர்ந்தன என்பது திண்ணம். ஒரு சமயம்,

*தெளிவிலாக் கலங்கல் நீர்சூழ்*
*திருவரங் கத்துள் ஓங்கும்*
*ஒளியுளார் தாமே அன்றே*
*தந்தையும் தாயும் ஆவார்:*
*எளியதோர் அருளும் அன்றே*
*என்திறத்(து)! எம்பி ரானுர்*
*'அளியன்,நம் பையல்' என்னுர்;*
*அம்மவோ! கொடிய வாறே!*

என்று முறையிட்டுக் கொள்கிருர்.

அந்தகாரத்தில் தீபம்போலிருக்கும் அந்த வடிவத்தைச் சுட்டிக் காட்டி 'இவரே எனக்குத் தந்தையும் தாயும்; அப்படியிருந்தும், "இவன் நம்முடைய பையன்; இரங்கத் தக்கவன்" என்று ஒரு வார்த்தையும் சொல்லவில்லையே, என்ன கொடுமை!' என்கிருர் தம்முடைய ரட்சணத்திற்கு மலையை எடுக்க வேண்டாம்; வில்லும் கோலும் எடுத்து வர வேண்டாம்; 'குளிர ஒரு வார்த்தை கேட்கத்தானே ஆசைப்படுகிறேன்!'—என்ற முறையீட்டில், பிற்காலப் பெருவாழ்வின் விதையைப் பார்க்கிருேம்.

இவர் பாடல்களில் சில, கடவுளோடு நேர்முக மாகப் பேசுவது போலவும், அவனை அழைப்பது போலவும் அமைந்திருக்கின்றன. அழைத்ததும், ஸ்ரீரங்கநாதனே 'ஏன்?' என்று வந்து உதவி செய்த தாகவும், அந்தராத்மாவாகக் குரல் காட்டி ஐயங்களைப் போக்கியதாகவும், வேஷத்தில் பிரயோஜன மில்லை யென்று உணர்த்தியதாகவும் அமைந்திருக்கின்றன வேறு சில பாடல்கள். இன்னும் சில பாடல்கள் இவருடைய பரிபூர்ண நம்பிக்கையையும், கடுமையான தற்சோதனைகளையும் வெளியிடுகின்றன.

சில பாடல்கள் சொந்த அநுபவம் பேசுகின்றன; சில பாடல்கள் பரோபதேசம் செய்கின்றன.

*... ... அயர்த்துவீழ்ந்(து) அளிய மாந்தர்*
*கவலையுள் படுகின் றார்என்(று)*
*அதனுக்கே கவல்கின் றேனே!*

என்று இவர் கூறுவதைக் கேளுங்கள்.

பிற்கால வாழ்க்கையில் பிறர் கவலையே இவர் கவலையாக இருந்ததாம்; தன்னைப் பற்றிய கவலையே யில்லையாம். எனவே, ஸம்ஸாரிகள் அநர்த்தப்படுவ ரென்று இரங்கிச் செம்பிலும் கல்லிலும் வெட்டி வைப்பதுபோலப் பிரபந்தத்திலே இட்டார் தாம் கண்டனுபவித்த உண்மைகளை—என்று தொண்ட ரடிப்பொடி யாழ்வார் பிரபந்தங்களைக் குறித்து ஸ்ரீவைஷ்ணவ அறிஞர்கள் சொல்லுகிறார்கள்.

இந்த ஆழ்வார் ஸ்ரீரங்கநாதனுக்குப் பூமாலையோடு பாமாலையும் சமர்ப்பித்தார். பூமாலைகள் இத்தனை என்ற கணக்கு நமக்குத் தெரியாது. பாமாலைகளில் இரண்டு—திருமாலை, திருப்பள்ளி யெழுச்சி என்பவை

—நமக்குக் கிடைத்திருக்கின்றன. இந்தப் பாடல்-தொண்டே இவர் செய்த வாடாத கைங்கரியம்.

திருமாலையில் இவரைப் பெருமாள் துயில் உணர்த்தினரென்றும், திருப்பள்ளி யெழுச்சியில் இவர் பெருமாளைத் துயில் உணர்த்துகிருரென்றும் சொல்வதுண்டு. இவரை அஞ்ஞான நித்திரையிலிருந்து விழிக்கச் செய்த பக்தி யநுபவங்களைத் திருமாலையில் காணலாமென்பதும், யோக நித்திரையிலிருக்கும் இறைவனைப் பெருங் காதலால் விழித்துக்கொள்ளும்படி பாடும் பக்தி யநுபவங்களைத் திருப்பள்ளி யெழுச்சியில் காணலாம் என்பதும் அதன் பொருள்.

திருப்பள்ளி யெழுச்சியில் இயற்கை யழகுகள் வருணிக்கப்பட்ட போதிலும், கவிதாநுபவத்திலும் பக்தி யநுபவத்திலும் ஒருங்கே சிறந்தது திருமாலை என்பது ரஸிகர் துணிபு. இந்தப் பிரபந்தத்தைக் குறித்து, 'கடல் பேராழமா யிருக்கச் செய்தேயும் நீர்த் தெளிவாலே தரை தோற்றுமாபோலே, சப்தத்தின் செவ்வையாலே *ப்ரமேயம் கனத்திருக்கச் செய்தேயும் உள்ளது அடங்கத் தோற்றும்படி யிருக்கை' இதன் சிறப்பு—என்பர் பெரியவாச்சான் பிள்ளை.

இப்பாடல்கள் பக்தர்களோடு ரஸிகர்களுக்கும் நல்ல தமிழ் விருந்து. சுமார் பன்னிரண்டு நூற்றாண்டுகளாக இவை எத்தனையோ இருதயங்களுக்கு ஆறுதலும் எத்தனையோ செவிகளுக்கு இன்பமும் அளித்து வருகின்றன!

---

*ப்ரமேயம்—சொல்லப்படும் பொருள்.

# 16. பாகவத ஸம தரிசனம்

'நாங்கள் பிரம குலம்; ரிஷி பரம்பரை' என்று பிராமணர்கள் பெருமை பாராட்டிக் கொள்ளுகிறார்களல்லவா? அவர்களை நோக்கி ஸ்ரீரங்க நாதன் 'நீங்கள் சிருஷ்டி கர்த்தாவான பிரம தேவன் முதல் உங்கள் அளவும் தொடர்ந்து ஒரு பழுதுமில்லாமல் வரும் வம்சப் பிரவாகத்தை உடையவர்களாயிருந்தாலும் சரி; பரம்பரைக்குத் தகுந்தபடி நாலு வேதங்களையும் அத்தியயனம் செய்து, இன்னும் பல சதுர் வேதங்கள் தோன்றினாலும் அவற்றையும் ஓதி உருவேற்றித் தலைகீழாய் ஒப்பிக்கக் கூடிய ஆற்றலுடையவர்களாய் இருந்தாலும் சரி; உங்களுக்கு ஒரு வார்த்தை!' என்று சொல்லத் தொடங்கினானாம்.

'என்னதான் ஸ்ரீரங்கராஜா சொல்லப் போகிறானோ?' என்று வைதிகர்கள் வாய் பார்த்திருக்க, 'இழிகுலத்தார்கள்' என்று அவர்களால் கருதப்படும் வகுப்பினரைக் குறித்துப் பிரஸ்தாபித்தானாம் பகவான். 'அவர்களும் நம் அடியார்களானால்....' என்று சொன்னதும், 'அதற்கு நாங்கள் செய்யக் கூடியதென்ன?' என்று பிராமண சமூகம் உள்ளுக்குள்ளே ஒரு கேள்வி போட்டுக் கொண்டதாம்.

உடனே பகவான் சாதி கர்வமும் வித்யாகர்வமும் கொண்டவர்களெல்லாம் திகைத்துப் போகும்படி, 'நீங்கள் இவர்களைத் தொழுங்கள்!' என்று சொன்னானாம். மேன்மேலும், அவர்கள் திடுக்கிடும்படி இரண்டு, மூன்று வார்த்தைகளும் சொன்னானாம்.

ஸ்ரீரங்க நாதன் பிராமணர்களை நோக்கிச் செய்த இந்தப் பிரசங்கத்தைத் தொண்டரடிப் பொடியாழ்வார்,

*‘பழுதிலா ஒழுகல் ஆற்றுப்*
*பலசதுப் பேதி மார்கள்!*
*இழிகுலத் தவர்க ளேனும்,*
*எம் அடி யார்க ளாகில்,*
*தொழுமின்நீர்! கொடுமின்! கொண்மின்!’*
*என்றுநின் னோடும் ஒக்க*
*வழிபட அருளி னய்போல்,*
*மதிள்-திரு அரங்கத் தானே;*

[ஒழுகல் ஆறு—நீண்டுவருகிற வம்சப் பிரவாகம். சதுப்பேதிமார்கள்—சதுர் வேதிகள்; அதாவது, நாலு வேதங்களையும் அத்தியயனம் பண்ணினவர்கள், தொழுமின் – தொழுங்கள். நின்னோடும்—உன்னோடும். ஒக்க—ஒப்பாக. போல்—போலும்.]
என்ற பாட்டில் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தப் பாட்டில் அபாரமான குலப் பெருமையும் கல்விப் பெருமையும் பிராமணர் விஷயமாகக் கற்பனை செய்யப்பட்டிருக்கின்றன அல்லவா? அதற்குத் தகுந்தபடி ‘இழிகுலத்தவர்களேனும்’ என்பதற்கு, ‘இதில் கீழ்ப்பட்டதில்லை என்று சொல்லப்படும் சாதியில் பிறந்தவர்களானாலும்’ என்று பொருள் கொள்கிறார் உரையாசிரியர்.

இப்படிப்பட்ட அடியார்களையும், அப்படிப்பட்ட பிராமணர்களும் தொழவேண்டுமாம். எப்படித் தொழ வேண்டும், தெரியுமா? ‘தொழுமின் நீர்’ என்பதற்கு ‘நீங்கள் அவர்கள் காலில் விழுங்கோள்!’ என்று

பொருள் கூறுகிறார் பெரிய வாச்சான் பிள்ளை. அவ்வளவு சாதி கர்வமும் வித்தியா கர்வமும் போவதற்கு அதுதான் வழியாம்.

மேலும், தன்னை வழிபடுவது போலவே அவர்களையும் வழிபட வேண்டுமென்று பகவானே உபதேசிக்கிறான் அல்லவா? 'எனக்கு மேல் பூஜ்யர் இல்லாமையாலே, என் மாத்திரமாகிலும் (எனக்குச் சமானமாயாவது) அவர்களை ஆராதித்து நல்வழி போங்கோள்' என்று அருளினான் என்பது வியாக்கியானம்.

'கொடுமின்! கொள்மின்!' என்கிறாரே, அது என்ன செய்தி? 'அவர்களுக்கு ஞானத்தை ஒளியாமல் கொடுங்கள்' என்றும், 'அவர்கள் அறிவாளிகளாயிருந்தால் நீங்கள் ஞானத்தைப் பெறுங்கள்' என்றும், இந்த ஆத்ம சம்பந்தம் சாதிசம்பந்தம் போல் நீர்மேல் எழுத்தாகாமல் நித்திய சம்பந்தமாகுமென்றும் பொருள்பட வியாக்கியானம் செய்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

போஜனம் தீர்த்தம் முதலியவற்றைக் கொள்வதிலும் கொடுப்பதிலும் கூட உரையாசிரியருக்கு ஆட்சேபமில்லை. பொதுவாக, மேன்மைக்குக் காரணம் பிறப்பன்று, வித்தையுமன்று, புத்தியுமன்று; பக்தியுடன் அடியார்களுக்குத் தொண்டு பூண்டு ஒழுகுவதுதான். தொண்டு செய்வதில் சாதியைக் கருத வேண்டாம். பக்தர்களுக்குள் உயர்வு தாழ்வு இல்லை. பக்தர்களையும் பகவானுக்குச் சமானமாகத் தொழுது தொண்டு செய்வதே உண்மைத் தொண்டு. இந்த உத்தமமான கொள்கையே இப்பாட்டின் தேர்ந்த பொருள்.

தொண்டு செய்வோர் உள்ளத்தில் கர்வம் கொஞ்சமும் இடம் பெறலாகாது. பக்தியும் சிரத்தையும் பணிவும் நிறைந்திருக்கவேண்டும். 'தொழுது கொடுங்கள்' என்றும், 'தொழுது கொள்ளுங்கள்' என்றும், கடவுளே கட்டளையிடுவதாக ஆழ்வார் கூறுவது விசேஷ கவனத்திற்கு உரியது.

மேலே சொன்னபடி பரம்பரையோடும் வித்தையோடும் விஷ்ணு பக்தியுமுள்ள பிராமணர்களானலும், தொழுது தொண்டு செய்வதை விட்டு, அடியார்களின் சாதிகருதி இகழத் துணியலாகாது. அப்படி இகழ்வோர் பிராமணத் தன்மையை இழந்து வைஷ்ணவத் தன்மையையும் இழந்து விடுகிருர்களாம்,

*"அமரவோர் அங்கம் ஆறும், வேதம்ஓர் நான்கும் ஓதித்*
*தமர்களில் தலைவ ராய சாதிஅந் தணர்க ளேலும்*
*நுமர்களைப் பழிப்ப ராகில், நொடிப்பதோர் அளவில் [ஆங்கே*
*அவர்கள் தாம் புலையர் போலும், அரங்கமா நகரு ளானே*

[அமர — சாவதானமாக. தமர்கள் — பக்தர்கள். நுமர்களை—உம்முடைய அடியார்களை. நொடிப்பதோர் அளவில்—அந்தக் கணத்திலேயே. ஆங்கே—அந்த இடத்திலேயே.]

என்று தாம் கூறுவதற்குப் பகவானையே சாட்சியாக்குகிருர் தொண்டரடிப் பொடியாழ்வார்.

முதல் முதல் பகவான் சொன்னதை அறிந்து பிராமணர்களுக்கு வெளியிட்டவர் இப்போது தாமாகவும் ஓர் எச்சரிக்கை செய்கிருர். சாதிச் செருக்கு, கல்விச் செருக்குகளைக் கண்டித்ததுபோல் பிறரைப் பழிக்கும்

பக்திச் செருக்கையும் கண்டித்துப் பேசுகிருர். வைதிக பிராமணர்களுக்குச் சொன்னதை ஸ்ரீவைஷ்ணவ பிரா மணர்கள் விஷயமாக முன்னிலும் கடுமையாய்ச் சொல்லித்தீர்த்து விடுகிருர்.

'தொண்டர் யார்?' என்பதற்கு விடையாக, சாதியை மறந்து தொண்டு செய்வோரே தொண்டர் என்று குறிப்பிட்டவர் இப்போது 'நீசர் யார்?' என்று தீர்மானிக்கிருர். 'நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன்!' என்று தன்குறையை உணர்ந்து திருந்தாமல் பிறரைப் பழிக்கலாகாது. குற்றங்குறைகளைச் சொல்லி நிந்திப் பது தான் பழிப்பா? பக்தனைச் சாதிகருதிப் புலையன் என்று நினைப்பதே பழிப்பு, அப்படி நினைப்பவனே புலையனுகி விடுகிருனும். பக்தனுடைய சாதியைத் துலக்குவதே பாகவதாபசாரம் என்ற கொள்கை எவ்வளவு உயர்ந்த கொள்கை பாருங்கள்!

பகவானுக்கு அபசாரப்படுவதைக் காட்டிலும் பாகவதாபசாரம் கொடியது; பகவத் கைங்கரியத்தைக் காட்டிலும் பாகவத கைங்கரியமே சிறந்தது. இது ஸ்ரீவைஷ்ணவ ஸாரமான கொள்கை. பெருமாள் உறங்கும் பெருமாள் என்ருல், பாகவதன் உலாவும் பெருமாளாக மதிக்கப்பட வேண்டும். இந்தக் கொள் கையை, சிவபக்தனை 'நடமாடும் கோயில்' என்று திருமூலர் குறிப்பிடுவதிலும் காணலாம்.

'சாதி கருதித் தொண்டர்களைப் பழிப்பவர்களே புலையர்கள்' என்று ஆழ்வார் கூறுவதைச் சிந்தியுங்கள். திருநாராயண புரத்துக் கோவிலுக்குள் வருஷத்தில் மூன்று நாள் ஹரிஜனங்கள் போகலாமென்று ராமா நுஜர் ஏற்பாடு செய்தாரல்லவா? இந்த ஏற்பாட்டின்

படி முதல் முதல் அவர்கள் பிரவேசித்தபோது, ஒரு பிராமணர், 'ஐயோ! நீசர்கள் வந்து விட்டார்களே' என்று கோபுரத்தில் ஏறிக்கொண்டாராம்.

அப்போது அர்ச்சகர் மீது பகவானுடைய ஆவேசம் வந்து, 'கோபுரத்திலிருக்கும் நீசனை வெளியே அனுப்புங்கள்; பிறகு தான் எனக்குப் பூஜை நடக்க வேணும்' என்று கட்டளை யிட்டதாம். 'நுமர்களை' — அதாவது, 'உம்முடைய ஜனங்களை' — என்று கடவுளை நோக்கி ஆழ்வார் கூறுவதை நன்ருகக் கவனியுங்கள்.

இது பின்ஞல் ராமாநுஜர் 'பறையரை'த் 'திருக் குலத்தார் என்ற இனிமையான—பொருள் பொதிந்த — பெயரால் அழைத்ததையும், இந்நாளில் காந்தியடிகள் ஹரிஜனங்கள் என்ற பரிசுத்தமான பெயரால் அழைத்த தையும் ஞாபகப்படுத்துகிறதல்லவா?

பாகவதாபசாரத்திற்குத் தண்டனை மறு பிறப்பில் அன்று; வெகு காலத்திற்குப் பின்னுமன்று; 'நொடிப்ப தோர் அளவில்' — அந்தக் கணத்திலேயே — புலையர் கள் என்று பிறரைச் சொன்ன மிகச் சொற்பமான அந்தக் கால அளவிற்குள்ளேயே தண்டனை கிடைத்து விடுகிறதாம். தண்டனை பெறும் இடமும் வெகு தூரத்திலன்று; 'ஆங்கே' — புலையர் என்று சொன்ன அந்த இடத்திலேயே—சொன்னவர்கள் புலையராகிருர் களாம்.

'இப்படிப் பிராமணன் புலையனுவதுண்டா? பூணூல் இல்லையா?' என்ருல், திரிசங்கு என்ற அரச னுக்குச் சாபத்தாலே கழுத்திலுள்ள வீரசங்கிலி தோல்வார் ஆனதுபோல், 'இவனுக்கும் மார்பில்

இட்ட பூணூல் தானே வாராய்விடும்!' என்பர் பெரிய வாச்சான் பிள்ளை. பிராமணத் தன்மை இருக்கும் போதுதான் பூணூலும் பூணூலாக இருக்குமாம்.

ஈச்வரன் ஆத்மாவைத் தன் நெஞ்சில் அணிந்து கொள்ளும் கௌஸ்துப மணிபோல் மதிக்கிறுன் என்ருல், பக்தனை முடியிலே அணிந்துகொள்ளும் துளசி போலவே விரும்பிப் போற்றுகிருனும். இப்படி 'ஸர்வேச்வரத்வம்' நிறம் பெறுகிறதாம்; அழகு பெறுகிறதாம்.

இத்தகைய பக்தர்களுக்குப் பணிசெய்வது இவர் களுடைய மனத்திலே திகழும் ஸர்வேச்வரனை வணங்குவதே யாகும். இவர்கள் விஷயத்தில் செய் யும் அபசாரமோ இந்த மாசற்ற சிந்தையில் கோயில் கொண்டிருக்கும் ஈச்வரனுக்கே துரோகம்.

*மாசற்றுர் மனத்து ளானை*
*வணங்கிநாம் இருப்ப தல்லால்,*
*பேசத்தான் ஆவ துண்டோ?*
*பேதைநெஞ் சே!நீ சொல்வாய்*

என்று தொண்டரடிப்பொடி யாழ்வாரே தமது நெஞ்சை நோக்கி உபதேசம் செய்துகொண்டாரென்ருல், பக்தர் மூலமாக ஈச்வரனை வழிபடும் முறை மிகவும் சிலாக்கிய மானதென்று தெரிகிறதல்லவா?

மாசில்லாத உள்ளத்தைத் தான் கோயில்களிலெல் லாம் சிறந்த கோயிலாக ஈச்வரன் கொள்கிருன் என்ப தும், எக் குலத்தினராயினும் மனச் சுத்தமுள்ளவர் களே பெரியவர்கள் என்பதும், அவர்களுக்குப் பணி செய்வதே புருஷார்த்தம் என்பதும் குறிப்பு.

இப்படிப் பணி செய்கிறவர்களுக்குச் சாதி கர்வ முண்டா? வேறு கர்வம்தான் இருக்க முடியுமா? இப்படிப் பணி செய்யாதவர்களையும் நீசர்கள் என்பர் தொண்டரடிப்பொடி யாழ்வார்.

*'தண் துழாய் மாலை மார்பன்*
*தமர்களாய்ப் பாடி ஆடித்*
*தொண்டுபூண்(டு) அமுதம் உண்ணுத்*
*தொழும்பர்சோ(று) உகக்கு மாறே!'*

[தண்-குளிர்ந்த. துழாய் மாலை மார்பன்-துளசி மாலையை மார்பிலணிந்த மகாவிஷ்ணு. தமர்கள் - (இங்கே) அடியார்கள். தொழும்பர்-இழிவானவர்; நீசர். உகக்குமாறே - விரும்பும் வகை என்ன அதிசயம்!]

என்று இவர் ஆச்சரியப்படுவதைப் பாருங்கள்.

ஆத்மாவுக்கு நன்மை கருதிக் கைங்கரியமாகிற அமிர்தத்தை உண்ணுதவர்கள் அநித்தியமான உடம்புக்கு மாத்திரம் நன்மை கருதிச் சோற்றை விரும்புகிறார்களே என்ற ஆச்சரியத்தில், எவ்வளவு அநுதாப உணர்ச்சியும் கலந்திருக்கிறது!

பொய்கை யாழ்வார் முதலானவர்களைப் போல் இவரும் கஜேந்திரன் கதையை ஞாபகப்படுத்திக் கைங்கரிய நெறியில் ஏற்படும் இடையூறுகளை ஈச்வரனே போக்கி அருள்வான் என்று தைரியம் சொல்லுகிறார். அன்று மடுவிலே ஒரு முதலையிடம் அகப்பட்ட யானைக்கு அருள் செய்தவன், இன்று ஸம்சார சமுத்திரத்திலே அஞ்சு முதலையிடம் அகப்பட்டுக் கொண்டவர்களுக்கு அருள் செய்ய மாட்டானு?—என்பது வியாக்கியானம்.

ஆனால் 'நான் என்ன கைங்கரியம் செய்யப் போகிறேன்? வசதியுள்ள வேறு யாராவது செய்ய வேண்டியதுதான்!' என்று சும்மா இருப்பவர்களுக்குப் பகவானுடைய அருளும் பயன்படுவதில்லை. 'யாராவது செய்ய வேண்டியதுதானே! நான் ஏன் இதைச் செய்யக்கூடாது?' என்ற சங்கற்பத்துடன்,

*குரங்குகள் மலையை நூக்கக்*
*குளித்துத்தாம் புரண்டிட்(டு) ஓடித்*
*தரங்கநீர் அடைக்க லுற்ற*
*சலமிலா அணில்*

[நூக்க - தள்ள; எறிய. தரங்கம் - அலை, கடல். சலம் - வஞ்சனை.]

என்று தொண்டரடிப்பொடி யாழ்வாரால் பாராட்டப் படும் அணிற்பிள்ளை சேது பந்தனத்திற்கு உதவியது போலாவது பகவத் பாகவத கைங்கரியங்களில் கலந்து கொள்ளலாமல்லவா?

'நான் அற்ப ஜந்து; என்னால் என்ன ஆகும்? வானர வீரர்கள் இருக்கிறார்களே!' என்று அணில் சும்மா இருக்கவில்லையாம். கடலிலே குளித்து மண லிலே புரண்டு அதை உதிர்த்துக் கடலை அடைக்க முயன்ற அந்தப் பிராணியும் திருவருளுக்குப் பாத்திர மாகவில்லையா?

ஆத்மாக்களுக்கெல்லாம் அந்தராத்மாவாக இருப் பவன் ஈச்வரன் என்ற கொள்கைதான் தொண்டரடிப் பொடி ஆழ்வாருக்கும் பாகவத கைங்கரியத்தில் விசேஷ விருப்பத்தை உண்டாக்கியது. இந்தக் கொள்கைதான்,

*ஊரிலேன்; காணி இல்லை;*
*உறவுமற் றொருவ ரில்லை*

[காணி - பூமி.]

என்றபடி இவரை உலகம் மதிக்கக்கூடிய பொருள்களை யெல்லாம் துறக்கச் செய்து, பக்தியையே தனமாகவும் தவமாகவும் கொண்டு ஈச்வர கைங்கரியத்திலும் பாகவத கைங்கரியத்திலும் ஈடுபடுத்தியது.

இக் கொள்கை பிறவிக் குருடனுக்கு கண்ணைக் கொடுத்தாற் போலவும், இருட்டறையில் விளக்கேற்றிக் காட்டினுற் போலவும் இருக்கிறதென்பது பெரிய வாச்சான் பிள்ளை அபிப்பிராயம். இந்த உண்மையைத் தெளிவாக உணர்ந்து ஒழுகிய பக்த மணிகள் பலர் அந்த நாளில் ஸ்ரீரங்கநாதன் சன்னிதியை அலங்கரித்தார்கள்.

சாதி வேற்றுமை கருதாது கூடியிருந்த இவர்களைக் குறித்துத் தொண்டரடிப்பொடி ஆழ்வார்,

'மேம்பொருள் போக விட்டு,
மெய்ம்மையை மிகஉ ணர்ந்து
ஆம்பரி(சு) அறிந்து கொண்டு,
ஐம்புலன் அகத்த டக்கிக்
காம்பறத் தலைசி ரைத்(து)உன்
கடைத்தலை இருந்து வாழும்
சோம்பரை உகத்தி போலும்,
சூழ்புனல் அரங்கத்தானே!'

[மேம்பொருள் - (பிறர்) மேன்மையாகக் கருதும் பொருள்கள்.]

என்று பாடுகிருர்.

பிறர் பிரமாதமாக மதிக்கக்கூடிய பொருள்களை எல்லாம் அநாயாசமாகத் துறந்துவிடும் சக்தியை உடையவர்கள் பாகவதர்கள். உண்மையை நன்ருகப் பற்றிக்கொண்டு எப்படிப்பட்ட மகத்தான தியாகங்களையும் செய்துவிடுகிருர்கள். கைங்கரியம் என்ற வெகுமதியைத் தவிர வேறு வெகுமதிகளையும் விரும்புவதில்லை. எனினும், கைங்கரிய நெறியிலேயே இந்திரிய ஜயம் முதலான பலன்களும் கிடைத்துவிடுகின்றன. கர்வம் முதலியவற்றையோ மறுபடியும் முளைக்காதபடி களைந்துவிடுகிருர்கள். 'எப்போதும் ஈச்வர சன்னிதியிலே வாழ்கிருேம்!' என்ற உணர்ச்சியோடு வாழ்கிருர்கள்.

இவர்களைச் சோம்பர் என்று ஆழ்வார் நிந்தாஸ்துதியாகக் குறிப்பிடுகிருர். ஆனல் வாழும் சோம்பர் அல்லவா ? 'ஸ்வஹிதத்தில் (சொந்த லாபம் தேடுவதில்) சோம்பினவர்கள்' என்பது வியாக்கியானம்.

இவர்களுடைய செயல்களெல்லாம் நிஷ்காமமாகவும் கைங்கரிய ரூபமாகவும்தான் இருக்குமாம். இவர்களைப் பரம பாகவதரென்றும், பகவரென்றும் சொல்வது உண்டு. மூன்று தண்டங்களையுடைய இந்தப் பகவர்கள் ஸ்ரீரங்கத்தைச் சுற்றி வாழ்ந்ததாகத் திருமழிசை ஆழ்வாரும் குறிப்பிடுகிருர். இப்படிப்பட்ட பகவர்களாகவே முதலாழ்வார்களும் திருமழிசை ஆழ்வாரும் வாழ்ந்திருக்கவேண்டும்.

கடைசியாகத் தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் இதே ஸத்ஸங்கத்தை விரும்பி அடைந்தார் என்று

சரித்திரம் கூறுவதை இவர் வாக்கும் ஆதரிக்கிறது. இத்தகைய ஸங்கத்தின் பெருமையால்,

*எனக்கினிக் கதிஎன்? சொல்லாய்*
*என்னை ஆளுடைய கோவே!,*

என்று முறையிட்டவர் ஸ்ரீ வைஷ்ணவத்திற்கே கதியான பன்னிருவருள் ஒருவராகப் பரிணமித்து விட்டார்.

---

# 17. பாட்டினுல் வாழ்ந்த பாணர்

ஒவ்வொரு நாளும் சூரியோதயத்திற்கு முன் காவிரியில் நீராடித் தென் கரையில் யாழும் கையுமாக நின்று கோபுர வாசலைத் தரிசித்தபடியே பாடுவார், ஆடுவார், நாம ஸங்கீர்த்தனம் செய்வார். ஒரு சமயம் இறைவனுடைய வடிவழகை அகக் கண்ணுலே அநுப வித்துக் கொண்டு ஆடிப் பாடி இன்ப வெறி கொள் வார்; ஒரு சமயம் அவருடைய கீதங்களிலே எல்லை யற்ற சோகம் தொனிக்கும்.

ஸ்ரீரங்கத்திற்குச் சமீபத்திலுள்ள உறையூர் ஒரு காலத்தில் பெரிய நகரமாய் இருந்தது. மாடகூட சோபிதமாயிருந்த நகரத்திலே, பாணர்கள் என்ற ஒரு வகுப்பினர் ஊருக்கு வெளியே ஒதுக்குப் புறமாகக் குடிசைகளில் வசித்து வந்தார்கள். அவர்களைத் தீண்டத் தகாதவர்களென்று அப்படி ஒதுக்கி வைத் திருந்தார்கள். அவர்கள் நற்கலைகளான ஆடல் பாடல் களில் பழக்கமுள்ளவர்கள். யாழையே தெய்வமாகப் போற்றி வந்தார்கள். இந்த வகுப்பைச் சேர்ந்தவர் நமது இசைச் செல்வர். ஸ்ரீரங்கநாதனுடைய புகழை யாழ் கொண்டு பாடுவதே இவருக்குப் பொழுது போக்கு.

இவரைப் 'பாணன்' என்ற பெயராலேயே மக் கள் அழைத்து வந்தார்கள்; இயற் பெயரைக்கூட மறந்துவிட்டார்கள்.

இந்தப் பாணருடைய உள்மனம் ஸ்ரீரங்கநாதனை அநவரத பாவனை செய்துகொண்டிருந்தது. சிருஷ்டி

யின் ஆச்சரியங்களெல்லாம் இவருக்கு அந்தப் பெருமானுடைய அழகுகளையும் ஆச்சரிய சக்திகளையும் வெளியிட்டன.

நீல வானமும் நீலக் கடலும் அவனுடைய எல்லையற்ற நீல மேனியை ஞாபகப்படுத்தின. அந்தி வானம் அவனுடைய பீதாம்பரத்தை நினைப்பூட்டியது. வானத்தில் உள்ள மேகங்கள் நிறத்தை ஞாபகப்படுத்தியது போல் கருணையையும் ஞாபகப்படுத்தின. தாமரைப் பூ கண்களுக்கும் திருவடிகளுக்கும் விசேஷ அறிகுறியாய் இருந்தது. உந்தியாகிய தாமரையிலிருந்து உலகமே பூத்ததென்று புராணம் பேசுகிறதல்லவா?

இப்படிப்பட்ட சிருஷ்டி முழுதும் ரங்கநாதனுடைய மாயக் கூத்தென்பதும், உதய சூரியன் இருளை ஓட்டுவது போல் 'இருளின் சக்தி'களான அஞ்ஞானம், அதர்மம் முதலியவற்றை ஈச்வர சக்தி ஓட்டிக் கொண்டிருக்கிறதென்பதும், வெண்ணெய் போல் உருகக்கூடிய உள்ளத்தைக் கவர்ந்து அந்த மகாசக்தி அருள் செய்யும் என்பதும் நமது பாணர் கொள்கை. இப்படிப்பட்ட கொள்கையோடு கூடிய உள்ளம் அந்த அடித் தாமரைகளுக்கு வண்டாகிப் பாடிக் கொண்டிருந்ததும் ஆச்சரியமாகுமோ?

இவர் ஒரு நாள் தமது இசைக் கருவியை மார்பில் தாங்கி விரல்களால் தடவி மீட்டிக்கொண்டே, உபய காவேரி மத்தியிலுள்ள பிரதேசத்தில் அடியிடவும் துணியாமல் சன்னிதியை நோக்கி நின்று, அகமும் முகமும் மலர எல்லாச் செல்வங்களையும் ஒருங்கே பெற்றவரைப் போல் பெருமிதம் கொண்டு பாடிக் கொண்டிருந்தார். அப்போது அந்த வழியாக ஸ்ரீரங்க

நாதனுக்குத் தீர்த்த கைங்கரியம் செய்யும் லோக சாரங்கர் பொற் குடத்தில் திருமஞ்சனம் கொண்டுவரப் போனார். அவருடைய வித்தையையும் புத்தியையும் நியம நிஷ்டைகளையும் கண்டவர்கள் லோகசாரங்க மகாமுனிவர் என்று அவரை அழைப்பதுண்டு.

பாணரைக் கண்டதும் அவருக்குக் கோபம் வந்து விட்டது,—'துறைக்குச் சமீபமான வழியில் நிற்கும் பஞ்சமன் விலகிக் கொள்ளவில்லையே' என்று. 'போ, போ, தீண்டாதே!' என்று பலமுறை கூவினார். 'பக்தி வசப்பட்டிருக்கிறார்!' என்பதுகூட அந்தக் கோபத்தில் தெரியவில்லை.

'காதிற் படவில்லையோ? என்ன மூர்க்க குணம் அந்த ஈன ஜாதிக்காரனுக்கு!' என்று அருவருத் தார்கள் முனிவரோடு வந்தவர்கள். அவர்களில் சிலர், 'இங்கே சண்டாளன் நிற்பது நீதியோ? உன் குலத் திற்கும் இந்தத் தலத்திற்கும் துரோகமாச்சே! புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக்கொண்டதுபோல், தொண்டர் வேடம் போட்டுக் கொண்டிருக்கிறாயே!' என்று வாயில் வந்தபடி திட்டிக்கொண்டே விலகிப் போனார்கள்.

ஒருவன், 'அடா, அவனுக்குத்தான் என்ன செருக்கு! என்ன முரட்டுத்தனம்! துரத்தாமல் விடுவ தில்லை' என்று வீரவாதஞ் செய்து ஒரு கல்லை வீசினான். இவர் திடுக்கிட்டு விழித்து, 'பொறுத்தருள வேணும்' என்று சொல்லிக்கொண்டே பின்வாங்கிக் கடுநடையாகப் போய்விட்டார்.

பாணர்மேல் கல் விழுந்ததும் லோகசாரங்கர் உள்ளமும் திடுக்கிட்டது. 'அவர் குற்றமற்றவர்; கானயோகி

போலும்!' என்று எண்ணினார். பிறகு அந்த நிகழ்ச்சியை மறந்துவிட முயன்றார்.

ஆனால், கோவிலுக்குப் போய்ப் பெருமாளைத் தரிசித்ததும், 'அருளின் கோலமாய் எல்லாவற்றையும் உணர்ந்துகொண்டே உறங்குவான் போலிருக்கிறான்!' என்று தமக்குள் தாமே சொல்லிக்கொண்டார். அப்பால் வீடு சென்றார். வழக்கம்போல் நியம நிஷ்டைகளில் புத்தி செல்லவில்லை.

என்ன ஆச்சரியம்! கோவிலில் உறங்குவது போலிருந்த ஸ்ரீரங்கநாதன் கண்களை மலர விழித்துக் கொண்டு வீடு தேடி வந்துவிட்டான்; இதோ, இவர் கண் முன்னேதான் இருக்கிறான்! என்ன உற்பாதமோ? நெற்றியில் இரத்தப் பெருக்கோடு உள்ளம் கலங்கியவனாகக் காணப்படுகிறானே!

'நம்முடைய மேனியை இப்படி நோகச் செய்தது நீதியோ?' என்று கேட்கிறான். முனிவரும் 'ஸர்வ சக்தியுள்ள பெருமாளை இப்படிச் செய்யத் துணிந்தவர் யார்? ஐயோ! எப்படிக் காயம் பட்டது? அழகிய மணவாளனான உன்னையும் இப்படிச் செய்ய எவருக்கு மனம் வந்தது?' என்று கவலையோடு கேள்விகளை அடுக்குகிறார்.

பகவான் 'அந்த அன்பருடைய உள்ளத்தில் இருந்தேன்; அப்போது பட்ட காயம்தான்!' என்று பதில் சொன்னதும், முனிவர் நடுங்கிப் போகிறார். 'பயப்படாதே; இன்றைய தினம் நீ அவரை நம்முடைய கோவிலுக்குள்ளே கொண்டுவர வேண்டும்' என்று கட்டளையிடுகிறான் ஸ்ரீரங்கநாதன். முனிவர் வேர்த்துப்போய்க் கண்ணை விழிக்கிறார்.

விடியற்காலமாகி விட்டதென்று தெரிந்து கொண்டார். சொப்பனத்தை நினைத்து நினைத்து அதிசயித்தார். 'இன்று விடிவு நமக்கும் விடிவாயிற்று; இந்தப் பிறவி இன்றே பிரயோஜனத்தை அடைந்தது!' என்று தீர்மானித்ததும், தம்முடைய இருதயம் பரிசுத்தமாகி விட்டதென்று உணர்ந்தார்.

கடு நடையாகப் போனார். போகும்போதே, 'இன்று வருகிறாரோ, வரமாட்டாரோ?' என்ற ஐயமும் ஒருபுறம் உள்ளத்தை வருத்தியது தூரத்திலிருந்து கானம் வந்து காதில் விழுந்ததும் ஓட்டமாகப் போனார்.

கல்லும் கரைய, புல்லும் உருக, பட்ட மரமும் தழைத்து மலர, யாழிசையும் கண்டமும் ஒன்றுபட்டுத் திவ்ய கீதங்கள் பொங்கிய வண்ணமாய் இருக்கின்றன. 'தேவ கானமோ, நாரத கானம்தானோ?' என்று செவியும் மனமும் குளிர, நெருங்கி வருகிறார் முனிவர்.

தாமரை மணி துளசிமணிகளால் இயன்ற தாழ்வடங்களை அணிந்து, நெஞ்சுருகிக் கண்கள் ஆனந்த அருவி சொரியப் புளகாங்கிதமாய்ப் பாடுகிறார் பாடகர், ஞானச் சுடர் போலே நின்று! கீதமே அப்படி ஓர் உருவம் கொண்டு சிந்திப்பதும் தெளிவதும் கை கூப்புவதுமாய் இருக்கிறதோ? — என்று மயங்குகிறார் லோக சாரங்கர்.

முனிவர் தம்மை நெருங்கி வருவதைக் கண்டு கொண்ட பாணர், 'அடியேன் பாணன், பாணன்!' என்றார். முனிவரும், 'அடியேன் லோகசாரங்கன்!' என்று அவர் அடிகளில் விழுந்து பகவானுடைய நியமனத்தை விண்ணப்பஞ் செய்தார்.

பாணர் அந்தக் கிருபாதிசயத்தை வியந்தார்: 'ஆனால் அந்த க்ஷேத்திரத்தை அடியேன் மிதித்திடலாமா?' என்று பின்வாங்கப் பார்த்தார்.

உடனே முனிவர், 'அப்படியானால் தேவரீர் மிதிக்க வேண்டாம்; அடியேன் தோள்மேல் கொண்டு போவேன்!' என்று அவரைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டார். பாணரோ சொற்குழறி யாழ் மீட்டிப் பாடிய வண்ணமாய், இறைவனுக்கே தம்மை அர்ப்பணஞ் செய்து மெய்ம்மறந்திருந்தார்.

சோலை வழியாகப் போகும்போது பூக்கள் உதிர்ந்தன: தேவர்கள் பூமாரி பொழிந்தது போலத் தோன்றியது முனிவருக்கு!

பாணருக்கோ சிந்தையிலும் கண்களிலும் இறைவன் திருவுருவம் மெள்ள மெள்ளப் பிரகாசிக்கத் தொடங்கியது. பட்சபாத மில்லாமல் எல்லாருக்கும் அருள் செய்ய வேண்டுமென்று உலகத்தை அளந்த திருவடியையும், அகிலலோக ஆட்சிக்கும் மாட்சிமைக்கும் அறிகுறியாக அண்ட கடாகத்திலே ஓங்கி நிமிர்ந்த திருமுடியையும் மற்ற அவயவங்களையும் பாடிக் கொண்டே போனார்.

லோகசாரங்கர் 'இவரையோ வெறுத்தேன்? இவருடைய கீதமாகிய காவேரி அசுத்தங்களை அடித்துச் சென்று நிர்மலமாக விளங்குகிறதல்லவா?' என்று எண்ணமிட்டுக்கொண்டே நடந்தார்.

ஆர மார்பதன் றோ,அடி
யேனை ஆட்கொண் டதே?

என்று மார்பையும்,

*செய்ய வாய்,ஐயோ, என்னைச்*
*சிந்தை கவர்ந்ததுவே!*

என்று வாயையும்,

*கரிய வாகிப் புடைப ரந்து மிளிர்ந்து*
*செவ்வரி ஓடி நீண்டஅப்*
*பெரிய வாய கண்கள் என்னைப்*
*பேதைமை செய்தனவே!*

[புடை—பக்கம்.]

என்று தம்மைப் பைத்திய மாக்கிவிட்ட கண்களையும் பாடிய பின்னர், பாணருக்கு நீலமேனி முழுதும் முடி வில்லாத அழகோடு மனக் கண்முன் இலக்காகிறது.

உடனே அந்த அநுபவ அதிசயத்தை வெளியிட முடியாமல் வெளியிட்டு,

*கோல மாமணி ஆரமும்,முத்துத்*
*தாமமும் முடிவில்லதோர்எழில்*
*நீல மேனி,ஐயோ,நிறை*
*கொண்டதென் நெஞ்சினையே!*

[கோலம்—அழகு. தாமம்—வடம். எழில்—அழகு.]

என்று பரவசமாகிறார்.

பிரளய காலத்திலே தன் வயிற்றில் உலகங்களை யெல்லாம் வைத்து ரட்சித்துக்கொண்டு நீலச் சுடராகிய நிர்மலமூர்த்தி கண்வளர்கிறது என்று புராணம் சொல்லுகிறது. அப்படிப்பட்ட நீலமேனியே ஸம்ஸார மாகிய பிரளயத்திலிருந்து அடியார்களை ரட்சிக்க வேண்டுமென்று காவேரியை மாலையாக அணிந்து கொண்டு, ஸ்ரீரங்கம் என்ற நித்திய வசந்தமான

சோலையிலே வந்து கண்வளர்ந்துகொண்டிருக்கிறதாம். அது ஆபரணத்திற்கும் ஆபரணமான திருமேனியாம்.

அதைச் சிந்தித்துச் சிந்தித்து இப்போது நெஞ்சையும் பறி கொடுக்கிறார் இவர்,—உழக்கைக் கொண்டு கடல் நீரை அளக்கப் புகுந்து, அந்த உழக்கையும் பறிகொடுத்தவனைப்போலே!

அளவுகடந்த விசுவாசத்தோடும் மகிழ்ச்சியோடும் லோகசாரங்கர் பாணரை ஸ்ரீரங்கநாதனுடைய விக்கிர கத்துக்கு முன் இறக்கிவிடுகிறார். தமது ஞானானந்த அநுபவங்களுக் கெல்லாம் காரணமா யிருந்த திவ்ய மங்கள விக்கிரகத்தைக் கண் விருந்தாய் அநு பவிக்கும் பாணர்,

*கொண்டல் வண்ணனைக்*
*கோவல னாய்வெண்ணெய்*
*உண்ட வாயன்என்*
*உள்ளம்க வர்ந்தானை,*
*அண்டர் கோன்அணி*
*அரங்கன்என் அமுதினைக்*
*கண்ட கண்கள் மற்*
*றொன் றினைக் காணாவே!*

[கொண்டல்—மேகம். கோவலன்—கோபாலன்.]
என்று கடைசியாகப் பாடி அந்த ஆனந்தத்திலே முழு கிப் போகிறார்.

இறைவனுடைய எளிமை இப்போது நன்றாக விளங்கி விடுகிறது. ‘அன்று வெண்ணெய் திருடிய அந்தத் திருடன்தான் என் உள்ளத்தையும் திருடிக் கொண்டு, இப்படி இங்கே உறங்குவது போலப் பள்ளி கொண்டிருக்கிறான்!’ என்று அவனை அமிர்தமாகப்

பருகுகிறார். பருகியதும் அந்தக் கண்கள், 'மற்றொன்றையும் பார்க்கமாட்டோம்!' என்கின்றனவாம்.

அந்த மேனியுடனே ஸ்ரீரங்கநாதன் பாணரை அங்கீகரித்துக் கொண்டான் என்பது ஐதிகம். ஒரு கணமாவது காண வேண்டுமென்ற ஆசையோடு வந்தவரை ஒரு கணமும் பிரிந்திருக்க முடியாதென்று தீர்மானித்து விட்டானும்.

குழலிசையால் பசுக்களையும் அன்பர்களையும் வசீகரித்த ஜகன்மோகன கோபாலனை யாழிசையால் வசீகரித்து, 'முனிவாகன'ராய் வந்த பாணரைப் 'பாட்டினால் கண்டு வாழும் பாணர்' 'பாண் பெருமாள்' 'திருப்பாணாழ்வார்' என்றும், இவர் பாடல்களை,

*காண்பனவும் உரைப்பனவும் மற்றொன்(று)இன்றிக்*
*கண்ணனையே கண்டுரைத்த கடியகாதல்-*
*பாண்பெருமாள் அருள்செய்த பாடல்பத்தும்*
*பழமறையின் பொருள் என்று பரவுமின்கள்*

[கடிய—மிகுதியான.]

என்றும் போற்றுகிறது ஸ்ரீவைஷ்ணவ உலகம்.

தொண்டரடிப்பொடி யாழ்வாரின் 'பாகவத ஸம தரிசன'த்தை உள்ளபடி உணர்ந்துகொள்வதற்குத் திருப்பாணாழ்வாரையும் அறிந்துகொள்ள வேண்டுமல்லவா?

---

# 18. திருப்பாணாழ்வார் வாக்கும் வாழ்க்கையும்

' நான் செல்லுகிறபடி செய்; செய்கிறபடி செய்யாதே! ' என்பதுபோல் உபதேசங்கள் செய்து வரும் குருமாரைப் பலரும் அறிவர். உபதேசத்தைச் செயலில் காட்டும் மனவலிமை அருமையான தென்பதைத் திருவள்ளுவர்,

*' சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்*
*சொல்லிய வண்ணம் செயல்*

என்று தெளிவுபடுத்துகிறார்.

இந்தக் கருத்தை மனத்திற்கொண்டு பெரிய வாச்சான் பிள்ளை அடியார்களைக் குலம் பாராது வழி பட வேண்டுமென்று பிராமணர்களுக்குப் பகவான் உப தேசம் செய்ததாக வரும் தொண்டரடிப் பொடியாழ்வார் வாக்கிற்கு வியாக்கியானம் செய்யும் போது, ' உபதேச மாத்ரமேயாய்ப் போகாமே, கோயிலிலே வந்து லோக ஸாரங்க மஹாமுனிகள் தலையிலே திருப் பாணாழ்வாரை வைத்து, இவ்வர்த்தத்தை வ்யாபரிப்பித்து(தொழிற் படுத்தி)க் காட்டி'னான்.—என்று சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீரங்கநாதன் தன்னுடைய உபதேசத்தை அநுஷ்டானத்திலும் காட்டினானும். 'பஞ்சம' குலத்தி னரென்று கருதப்பட்ட திருப்பாணரை லோக ஸாரங்க முனிவர் தோள்மேல் ஏறி வரச் செய்தானல்லவா? அவரும் வீணா பாணியாய் அவன் அடிகளில் நிரந்தர

ஸேவை பண்ணிக் கொண்டு இன்னும் சாட்சியாக இருக்கிருராம். ' முனிவாகனர் ' என்று பிரசித்திபெற்ற திருப்பாணுழ்வார் கதையையும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டே தொண்டரடிப்பொடியாழ்வார் தமது பாகவத சமய சமூக லட்சியங்களைப் பாடி வைத்திருக்கக்கூடும்.

' தாழ்ந்தார்க்கு முகம் கொடுக்கிற நீர்மை ' ஸ்ரீரங்கநாதனுக்கு விசேஷமாக உண்டென்பது தொண்டரடிப் பொடியாழ்வார் கருத்து. ஆகாசத்திலிருந்து மழை குடகு மலையில் பொழிந்து அங்கேயிருந்து காவேரியாய்ப் பெருகி நாட்டிற்கு உதவுவதுபோல், ஆண்டவன் பரமாகாசமாகிய பரமபதத்திருந்து திருப்பதி மலையில் வந்திறங்கி ஸ்ரீரங்கத்தில் மதுர ஆருகப் பெருகியிருக்கிருனும்.

ஆற்றுக்குள்ளே தண்ணீரைக் கண்டு அனுபவிப்பது போல், வேதங்களுக்கும் எட்டாத ஸர்வேச்வரனை ஸ்ரீரங்கத்திலே கண்டு அனுபவிக்கலாம் என்றும், பரதன், ' என் தலையில் சுமைவாங்கினுல் அல்லது எழுந்திரேன் !' என்று கிடந்தாற்போலே ' உங்கள் சுமைகளை என் தலையில் வைத்தால் அல்லது எழுந்திரேன் !' என்று கிடக்கிருன் ஸ்ரீரங்கநாதன் என்றும் உரையாசிரியர்கள் ஆழ்வார் கருத்தை வின்னியாசப் படுத்தியிருக்கிருர்கள்.

எவ்லாரும் சமானர்களாய் நின்ற நின்ற நிலைகளிலே பேறு பெறும்படி ஸர்வ சுலபனும் ஸர்வ ரட்சகனுமாக விளங்கும் ரங்கநாதனை,

*'இத்தனை அடிய ராஞர்க்(கு)*
*இரங்கும்நம் அரங்கனுய*
*பித்தன்!*

[இத்தனை — இவ்வளவு.]

என்று நிந்தாஸ்துதி செய்கிறார் தொண்டரடிப் பொடியாழ்வார்.

இப்பேர்ப்பட்ட 'பித்தனை'ச் 'சுத்தன்' என்று பொருள்படும் 'அமலன்' என்ற பதத்தால் குறிப்பிடுகிறார் திருப்பாணாழ்வார், தமது முதற் பாட்டின் தொடக்கத்திலேயே. இதே பாட்டில், இதே பொருளுள்ள 'விமலன்' 'நிமலன்' 'நின்மலன்' என்ற பதங்களாலும் 'நீதிவானவன்' என்ற பெயராலும் கொண்டாடுகிறார், தம்மிடம் இரக்கம் கொண்ட அந்தப் பெருமானை.

'இவன் சுத்தனாகையாவது, தான் ஒருத்தன் சுத்தனாகையன்று; தன்னோடு ஸம்பந்தித்தாரையும் சுத்தராக்கவல்ல அடி (அருள்) உடைமை' என்பது வியாக்கியானம். எவ்வளவு உண்மையான கொள்கை, பாருங்கள்!

உடம்போடு உள்ளத்தையும் சுத்தமாகவைத்துக் கொள்கிறவனைச் சுத்தன் என்று சாதாரணமாகச் சொல்லுகிறோம். அவனையும் சுத்தன் என்று ஒப்புக் கொள்ளமாட்டார் பெரிய வாச்சான் பிள்ளை. அவன் பிறரோடு கலந்து கொள்ளாமல் விலகியிருந்து 'நான் சுத்தனாகிவிட்டேன்!' என்று எண்ணிக் கொள்ளலாம். அப்படியானால் சுயநலக்காரன் தான்! தன்னோடு எந்த வகையிலாவது சம்பந்தப்பட்டவர்களையும் சுத்தராக்கக் கூடிய இரக்கமே உண்மையான சுத்தம், — உண்மையான ஆசாரம். இந்தக் கொள்கையைப் புருஷோத்தமனான ஸ்ரீரங்கநாதனே அநுஷ்டித்துக் காட்டினானும், பாணரையும் தன் சன்னிதிக்குள் வரச்செய்து.

' நீயே கதி, என்று வந்தவர்களையெல்லாம் சுத்த ராக்கக் கூடிய, அருளுக்கு அறிகுறியான, திருவடிகளை யுடையவனே ' நீதிவானவன் ' என்று போற்றத் தக்க கடவுள். ' அற்றவர் சேர் திருவரங்கப் பெருமாள்' — அதாவது, வேறு புகலிடமில்லாதவர்கள் யாவரும் அடைகிற ஸ்ரீரங்கநாதன்—என்பர் அழகிய மணவாள தாசரும்.

' கடினமான நிலத்தைப் பிளந்து உழுது பயிரிடும் உழவன் பக்கத்திலும், கற்களை உடைத்துப் பாதை அமைக்கிறவன் பக்கத்திலும் இருப்பான், என்றும், 'அவர்களோடு வெயிலிலும் மழையிலும் தன் பொன் னுடை (பீதாம்பரம்) புழுதிபடியக் கலந்திருப்பான்!' என்றும், ' பரம ஏழைகளும் மிகமிகத் தாழ்ந்தவர்களும், பிறரால் கைவிடப்பட்டவர்களும் இருக்கும் இடமன்றோ உன் திருவடி நிலை?' என்றும் வங்க நாட்டுக் கவியாகிய ரவீந்திர நாதர் தமது கீதாஞ்சலியில் கூறுவதையும் நாம் இந்தச் சந்தர்ப்பத்தில் ஞாபகப் படுத்திக் கொள்ளலாம்.

இத்தகைய உண்மைகளை எவ்வளவு நன்ருக விளக்குகிறது திருப்பாணுழ்வார் கதை!

> ' குலங்க ளாய ஈரி ரண்டில்
> ஒன்றி லும்பி றந்திலேன்

[ஈரிரண்டு — நாலு.]

என்ற திருமழிசை யாழ்வார் வாக்கு இவருக்கே விசேஷமாகப் பொருந்தும் என்பது ஆசாரியர்கள் அபிப்பிராயம்.

' திருப்பாணுழ்வார் ' என்ற பெயரே இவர் பாணர் வகுப்பைச் சேர்ந்தவர் என்று தெரிவிக்கிறது.

பறையரைப் போல் பாணர்களும் 'இழிகுலத்தவர்' களாகக் கருதப்பட்டார்கள். நாயன்மாரில் ஒருவரான நந்தனுர் பறையர் வகுப்பைச் சேர்ந்தவர். இவ்வகுப் புக்கள் காலப் போக்கில் தாழ்ந்தும் தாழ்த்தப்பட்டு மிருக்கவேண்டும்.

இவர்களில் பாணர்கள் ஆடல் பாடல்களில் பழக்க முள்ளவர்களாய் யாழையே தெய்வமாகப் போற்றி வந்தார்கள். 'பாண்' என்ற சொல்லுக்கே பாட்டு என்றும், 'தாழ்மை' என்றும் பொருள்கள் உண்டு. ஆதியில் 'பாட்டு' என்று பொருள் பட்ட சொல் 'தாழ்மை' என்று பொருள் படுவதற்குள் எவ்வளவு காலம் சென்றிருக்கவேண்டும்! எத்தனை விதமான காரண காரியங்கள் ஏற்பட்டிருக்கவேண்டும்!

தமிழ் நாடு மகோன்னத நிலையிலிருந்த காலத்தி லும், பாணர்கள் ஊர்களுக்கு வெளியே ஒதுக்குப்புற மாகக் குடியிருந்தார்கள்; நாட்டில் செல்வம் பொங்கி வழிந்த காலத்திலும் பரம ஏழைகளாய்க் கஷ்ட ஜீவனம் செய்து வந்தார்கள். இவர்கள் பசிதீர்ப்பதை அக்காலத் தமிழரசர்கள் முக்கிய கடமையாகக் கொண்டி ருந்தார்கள். சைவ வைஷ்ணவ சமயங்களும் ஒரு காலத்தில் ஒரு விதமாக இவர்களுடைய இதயப் பசி தீர்க்கும் விஷயமாய்க் கவனம் செலுத்தினவென்று ஊகிக்கலாம்.

இம்முயற்சிகள் 'அங்கே ஒரு நந்தனுர், இங்கே ஒரு திருப்பாணுழ்வார்' 'இங்கே ஒரு நம்பாடுவார்; அங்கே ஒரு திருநீலகண்ட யாழ்ப்பாணர்' என்றபடி சில பக்தர்களைத்தான் தோற்றுவித்தன, குறித்த வகுப்புக்களைப் பொதுவாக முன்னேற்றமடையச் செய்யவில்லை என்பது சரித்திர உண்மை.

எனினும், நந்தனர், திருப்பாணாழ்வார் முதலானவர்களுடைய கதைகளும் பக்தியநுபவங்களும் தற்காலத் தமிழர்களுக்கும் வழிகாட்டத் தக்க சில உண்மைகளை வெளியிடக் கூடும். நந்தனரும் திருப்பாணாழ்வாரும் எத்தனையோ கஷ்டங்களுக்கும் வசதிக்குறைவுகளுக்குமிடையே எவ்வளவு உயர்ந்த லட்சியத்தை மனக் கண்முன் வைத்துக் கொண்டு வெற்றி அடைந்தார்கள்!

நந்தனர் செய்த 'அக்கினி ஸ்நான'த்தைத் திருப்பாணாழ்வாரும் மானஸீகமாயாவது அநுபவித்துத் தானிருக்க வேண்டும்! நந்தனர் கதையிலுள்ள 'அக்கினி' பொதுவாகப் பக்த மணிகளின் வாழ்க்கையைப் பரிசுத்தமான தங்கமாகச் சோதித்துக் காட்டும் ஞானக்கினியின் அறிகுறிதான்.

நந்தனர் 'பூலோக சிவலோக' மென்று சைவர்கள் கொண்டாடும் சிதம்பரத்தை நாடினர்; திருப்பாணாழ்வார் வைஷ்ணவர்களுடைய 'பூலோக வைகுண்ட'த்தை நாடினர். நந்தனர் பக்தித் தொண்டு புரிந்தார்; ஆழ்வார் பக்தியோடு பாடல் - தொண்டும் புரிந்தார். தில்லை வாழ் அந்தணர்களாலும் போற்றப்பட்டார் நந்தனர்; திருப்பாணாழ்வாரோ,

*முனிதோளில் வந்தபிரான் வாழியே, வாழியே!*

என்று வைஷ்ணவ சமூகத்தால் வாழ்த்தப்பட்டார்.

'மேன்மைக்குக் காரணம் பிறப்பன்று' என்பதை இந்த இரு பக்தர்களும் சைவ வைஷ்ணவ சமயங்கள் உள்ளவரை ஞாபகப்படுத்திக் கொண்டிருப்பார்கள் அல்லவா?

திருப்பாணாழ்வார், தம்மை ஆட்கொண்ட அருளாளனை மானஸ ஸாக்ஷாத்காரம் செய்து கோவிலுக்குப் போகும் வழியிலே ஒன்பது பாட்டுப் பாடினாரென்றும், ஸ்ரீரங்கநாதனுடைய விக்கிரகத்தைப் பாதாதிகேசம் சேவித்துப் பத்தாவது பாட்டைப் பாடி முடித்தாரென்றும் சொல்லுகிறார்கள். இந்தப் பாடல்கள், 'அமலனாதி பிரான்' என்ற பெயருள்ள சின்னஞ்சிறு பிரபந்தமாக நாலாயிரப் பிரபந்தத்தோடு சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

இந்தப் பாடல்களைக் கொண்டே இவருடைய பக்தியநுபவங்கள் எப்படி யிருந்திருக்க வேண்டும் என்று ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்.

திருப்பாணாழ்வார் வாழ்க்கை துயரங்களால் இழைக்கப் பட்டதாகவே இருந்திருக்க வேண்டும். எனினும், இவருக்குக் கடவுள்மீது அவநம்பிக்கை உண்டாகவில்லை; உலகம் அநீதி நிறைந்ததென்ற வெறுப்பும் உண்டாகவில்லை. ஆழ்ந்த தியானத்தின் பயனாகக் கடவுள் என்ற அழகுப் பெருங்கடல் இவருக்கு அருள்மயமாகவும் நீதிமயமாகவும் காண்கிறது.

இந்தக் கடவுளுடைய உந்தி பூத்த தாமரை அல்லவா சிருஷ்டி என்பது? இதில் அநீதி நிலைக்குமா?

கமல பாதம்வந்து
என்கண்ணின் உள்ளன!

—அதாவது, நீதிமூர்த்தியின் அருளுக்கு அறிகுறியான மலரடிகள் தாமே என்னளவும் தாழ்ந்து வந்து கண்ணுக்கு இலக்காகி என்னை ஆட்கொண்டன— என்று ஈடுபடுகிறார்.

'அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன்' என்று கூறுவதால், இவரும் தொண்டரடிப்பொடியாழ்வாரைப்

போல் பாகவத கைங்கரியத்திலும் ஈடுபட்டவர் என்று தெரிகிறது.

ஸ்ரீ ரங்கநாதனுக்குப் பக்கத்திலேயிருந்து தரிசனம் பண்ண விரும்பியதுபோல், இவர் இருதயம் அடியார் கூட்டத்திலும் கலந்து தொண்டுசெய்ய ஆசைகொண்டிருக்கவேண்டும். இத்தகைய தொண்டுகளில் கருத்தைச் செலுத்திக்கொண்டே 'கடல்போல் குளிர்ந்த வடிவை உடையவன்' (ஓத வண்ணன்) என்று கடவுளைத் தியானிப்பவருக்கு, மாலை வேளையில் கடற்கரையிலே நிற்பவர்களுக்குச் சிரமம் போவதுபோல், துயரமும் கவலையும் போய்விடு மல்லவா?

இக் கடவுளுடைய பூலோக வைகுண்டமும்

*மதுர மாவண்டு பாட*
*மாமயில் ஆ(டு)அ ரங்கம்*

[மதுரமா—மதுரமாக.]

என்றால், இசைச் செல்வரான திருப்பாணாழ்வாருடைய சௌந்தரிய உணர்ச்சி திருப்தி அடைவதற்குக் கேட்பானேன்?

பகவான் தம்மை ஒதுக்கிவிடாமல் தம்முடைய இருதயத்திலும் பிரவேசித்தான் என்று தெரிந்து கொண்டதும், இவர் பட்ட கஷ்டமெல்லாம் கஷ்டமாகத் தோன்றவில்லையாம். 'அப்படி என்ன பிரமாதமாகத் துன்பமடைந்துவிட்டேன்? கோரமான மகா தபசைப் பண்ணினேனோ?'' என்று தம்மைத் தாமே கேட்டுக் கொள்கிறவர்,

*ஆர மார்பதன் றோ,அடி*
*யேனை ஆட்கொண்டதே!*

[ஆரமார்பு—ஆரத்தையுடைய மார்பு.]
என்று தம்மை ஆட்கொண்ட பேரழகில் ஈடுபடுகிறார்.

பிறகு யோக க்ஷேமத்தை வினவத் துடித்துக் கொண்டிருப்பது போலச் சிவந்து தோன்றிய வாய் இவருடைய சிந்தையைக் கவர்ந்து விடுகிறதாம்.

*செய்ய வாய் ஐயோ,*
*என்னைச் சிந்தை கவர்ந்ததுவே!*

[செய்ய—சிவந்த.]
என்று ஈடுபடுகிறவர், பகவானுடைய பூர்ண மேனியின் சௌந்தரியத்தையும்,

*நீல மேனி,ஐ யோ,நிறை*
*கொண்டதென் நெஞ்சினையே!*

என்று அநுபவித்துப் பரவசமாகிறார்.

நீலக்கடல் அலைமேல் அலையெறிந்து கொண்டிருக்கிறது. அந்த நீரை ஒருவன் அளந்து பார்க்கத் தொடங்குகிறானும் கையிலுள்ள உழக்கைக் கொண்டு. திடீரென்று கிளம்பி வந்த ஓர் அலை அந்த உழக்கையும் பறித்துக்கொண்டு போய் விடுகிறதாம். இதே கதியை அடைந்து விடுகிறது, இறைவன் என்ற அழகுக் கடலை அநுபவிக்கப் புகுந்த திருப்பாணாழ்வாரின் நெஞ்சமும்.

இந்த நிலையில் இவரைப் பைத்தியமாக்கி விடுகின்றனவாம் உலகங்களையெல்லாம் கடைக்கணிக்கும் கண்கள்.

இப்படியெல்லாம் மயக்கித் தம்முடைய உள்ளத்தைக் களவாடிப் போன ஸ்ரீரங்கநாதனது விக்கிரகத்தைக் கோவிலுக்குள் கண்டதும், 'என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!' என்று

ஆனந்தத்தில் முழுகிப் போகிறார். இவரைப் 'பாட்டி னால் கண்டு வாழும் பாணர்' என்றும், இவர் பாடல் களை 'வேதஸாரம்' என்றும் வைஷ்ணவ உலகம் மதிக்கிறது.

கடவுளைத் தவிர வேறொருவரையும் வேறொன்றை யும் இவர் பார்த்ததில்லையாம். ஏன்? எல்லாம் கடவுள் மயமாகத் தானே இவருக்குக் காட்சி யளித்திருக்க வேண்டும்? ,இவர் பேசியதும் இதே விஷயம்தான்! எங்கும் எல்லா உள்ளங்களிலும் கண்ணனையே கண்டு அவனையே பாடிக்கொண்டிருந்தவருக்கு வீண் பேச்சிற் காவது விவகாரங்களுக்காவது நேரமேது? 'என்ன கடுமையான பக்திக் காதல்!' என்று அதிசயிக்கிறீர்கள் அல்லவா?

பெருமாளையே காதலித்துப் பக்தி பண்ணிக் கொண்டிருந்த இவரைத் தமிழர்கள் 'பாண் பெருமாள்' என்று வாய்குளிர அழைத்துவந்திருக்கிறார்கள். இவ ருடைய பாடல்களை உருக்கமான தோத்திரப் பாடல் களாக மட்டும் மதிக்காமல் 'தமிழிலே பெய்து வைத்த வேதப் பொருள்' என்று ராமாநுஜர் முதலான ஆசாரிய சிரேஷ்டர்களும் போற்றினார்கள். இவர் வாக்கைப் போல் இவர் கதையும் அவர்களுக்கு வழி காட்டியது.

---

# 19. பெரிய கோயிலை அழகு செய்த பெரியார்

'பெரிய கோயிலுக்கு மதில் கட்டுவதென்றால், எவ்வளவு பெரிய கைங்கரியம்!' என்று மக்கள் கூடிப் பேசினார்கள். 'இவர் எவ்வளவு பெரிய பக்தரா யிருக்கவேண்டும்! இந்தக் காரியங்களில் துணிந்து தலையிடுவதற்கு எவ்வளவு பெருஞ் செல்வமும் செல் வாக்கும் வேண்டும்! கோபுரம், மண்டபம், பிராகாரம் முதலான பல பணிகளையும் செய்து வருகிறாராமே!' என்று பல இடங்களிலுமுள்ள பக்தர்கள் ஆச்சரியப் பட்டார்கள்.

நகர வாசிகளும் தேசாந்தரிகளும், 'இன்று மதில் எவ்வளவு தூரம் வந்திருக்கிறது? கட்டி முடிய இன்னும் எவ்வளவு காலம் பிடிக்குமோ?' என்று ஒருவரை யொருவர் கேட்ட வண்ணமா யிருந்தார்கள். ஒரு சமயம் மதிலைப் பார்க்க வந்தவர்கள், 'அந்தப் பிரா காரம் இப்போது எவ்வளவு அழகாயிருக்கிறது! மதிலை அடுத்துத் தெருக்களும் அழகாக நிர்மாணஞ் செய்யப் படும்' என்று சொல்லிக் கொண்டார்கள்.

அவர்களில் சிலர்மட்டும், 'அந்த அழகான நந்த வனம் போய்விடும்; ஐயோ! அவருக்கு உயிரல்லவா புஷ்பத் தொண்டு?' என்று இரக்கப்பட்டார்கள். மற்ற வர்களோ, 'பரமசாது; குடிசை தூக்க வேண்டியது தான்! எவ்வளவு சிரமத்தோடு இந்த மகத்தான கைங்கரியம் நடந்து வருகிறது! மேலும், இவருடைய

அதிகார ஆடம்பர வைபவங்கள்தாம் கொஞ்சமா?' என்று பதில் சொன்னார்கள்.

மதில் நந்தவனத்திற்கு நேரே வந்துவிட்டது. ஆனால், மக்கள் எதிர் பார்த்தபடி, அரசர் நந்த வனத்தை அழித்துக் குறுக்கே கட்டிக்கொண்டு போக வில்லை. 'அந்தப் புஷ்ப கைங்கரியத்திற்கு விக்கினம் வாராது மதிலை ஒதுக்கிக் கட்டுங்கள்; அமைதியாக வேலை செய்யுங்கள்' என்று உத்தரவு செய்துவிட்டுப் பூந்தோட்டத்திற்குள்ளே போய்க் குடிசையிலிருந்த தொண்டு கிழவரைப் பயபக்தியோடு ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தார்.

அவரும் எழுந்து இவரை வணங்கினார். இருவரும் அளவளாவிக் கொண்டார்கள். அரசர் செய்துவந்த மகா கைங்கரியத்தைப் பெரிதும் பாராட்டிக்கொண் டிருந்த கிழவர் இடத்தைக் காலிசெய்துவிடத் தயா ராகவே இருந்தார். இப்போது நடந்ததை அறிந்து கொண்டதும், அந்த அருளை வியந்து மன்னருக்கு 'அருள்மாரி'[1] என்று ஒரு பட்டமும் சூட்டினார்.

மங்கை வேந்தன், ஆலிநாடன், கலியன், [2]கலிகன்றி, பரகாலன், கொற்றவேலோன், [3]ஆடல்மா வலவன், [4]அடையார் சீயம், நாலுகவிப் பெருமாள், [5]லோக திவாகரன்—என்ற பல பட்டங்களோடு

---

1 அருள் மாரி—அருள்மழை.

2 கலிகன்றி—கலிதோஷத்தை அழித்தவன்.

3 ஆடல்மா—குதிரையின் பெயர். வலவன்—வெற்றி யாளன்.

4 அடையார் சீயம்—பகைவர்களுக்குச் சிங்கம்போன்றவன்.

5 லோக திவாகரன்—லோகத்திற்குச் சூரியன் போன்றவன்.

விளங்கிய அரசருக்குக் கிழவனர் சூட்டிய பட்டமே மேலானதாகத் தோன்றியது. தமது கைங்கரியத்தை அவரே புகழ்ந்து பேசியது இவரை நாணித் தலை குனியச் செய்துவிட்டது; உள்ளமோ குளிர்ந்து பூரித்துப் போயிற்று.

கிழவர் வேறு யாருமில்லை; ஸ்ரீரங்கநாதனுக்குப் பாமாலை பூமாலைகள் சூட்டிக்கொண்டிருந்த தொண்ட ரடிப்பொடியார்தாம். அரசரோ 'திருமங்கை மன்னன்' என்று நாடெங்கும் பிரசித்தி பெற்றிருந்த திருமங்கை யாழ்வார்.

திருமங்கை யாழ்வார் தொண்டரடிப்பொடி யாழ் வாரின் மகிமையைக் கேள்விப்பட்டிருக்க வேண்டும்; இவர் பாடல்களையும் கேட்டிருக்கவேண்டும். இப் பாடல்களின் பொருளைத் திருமங்கை யாழ்வார் உத்ஸாகமாகத் தமது பிரபந்தங்களில் எடுத்தாளுகிறார். பொருளை மட்டுமா?

*சுரும்(பு)அமர் சோலை சூழ்ந்த*
*அரங்கமா கோயில் கொண்ட*
*கரும்பினைக் கண்டு கொண்(டு),என்*
*கண்ணிணை களிக்கு மாறே!*

[சுரும்பு—வண்டுகள்,]

என்று தொண்டரடிப்பொடி யாழ்வார் பாடியிருக்கும் அடிகளைத் தாம் பாடியுள்ள திருக்குறுந்தாண்டகத்தில் அப்படியே அன்போடு எடுத்தாளுகிறார்.

தொண்டரடிப்பொடிகளின் உருக்கமான பாடல் களைக் கேட்டுக் கேட்டு, ஸ்ரீரங்கம் என்ற நித்திய வசந்த மான சோலையில் கண்ணால் பருகும் கரும்பாயிருக்கும்

பகவான் மீது இவருக்கும் விசேஷ பக்தி ஏற்பட்டிருக் கக் கூடும். ஸ்ரீரங்கநாதன் அடிக்கீழ்—அதாவது, அவன் அருள்—நிழலிலே—அவன் உகந்த கைங்கரிய மும் அடியார் உகந்த கைங்கரியமும் செய்து வாழ்வதே வாழ்வென்றும், அப்படிச் செய்யாமல் வேறு சாதனங் களையும் வேஷங்களையும் மேற்கொள்கிறவர்கள் அஸ்தி வாரத்தைக் கவனியாமல் வெளிச் சுவரை அலங்கரிப்ப வர்கள்தாம் என்றும் தொண்டரடிப்பொடி யாழ்வார் பாடியிருக்கிறார். இந்தக் கொள்கை திருமங்கையார் உள்மனசிலும் கிடந்து, நாளடைவில் மனக் கண்முன் ஓர் உயர்ந்த லட்சியமாக உதயம் செய்திருக்க வேண்டும்: இந்த லட்சியத்திற்கே இவர் தம்மை ஒப்படைத்துவிட்டார்.

ஸ்ரீரங்கநாதனுக்குத் தருமமே மதிலாய் இருக்கிற தென்று தொண்டரடிப்பொடி யாழ்வார் வருணித்திருந் தார்: இந்தப் பெருமானுக்கு ஸ்தூலமாகவும் மதில் முதலியவை நிருமித்து, இயற்கை அழகுவாய்ந்த திருவரங்கப் பெருநகரைச் செயற்கை அழகுகளாலும் அலங்கரிக்கத் தொடங்கினார் திருமங்கை யாழ்வார்.

கைங்கரியம் பூர்த்தி யடைந்துவிட்டது. ஒருநாள் நகரமெங்கும் கொடிகள் பறந்துகொண்டிருந்தன. எள்ளும் விழ இடமில்லாமல் கூடியிருந்த ஜனத் திரளுக்கிடையே திருமங்கை யாழ்வார் மெள்ள மெள் ளச் சன்னிதிக்குப் போனார். 'ஜய, ஜய, விஜயீபவ ராஜேந்திரா!' என்றும், 'அருள் மாரியே! வருக, வருக' என்றும் கோஷங்கள் விண்ணைப் பிளந்தன. 'இவரே பாக்கியசாலி!' என்று சன்னிதியில் இருந்தவர்களெல் லாம் ஒரு முகமாக வாழ்த்தினார்கள்.

திருமங்கை யாழ்வாரோ ஸ்ரீரங்கநாதனை வணங்கி யெழுந்து 'சுவாமி! தேவரீருக்குத் தங்கத்தினால் மதில் முதலியவை கட்டவேண்டியிருக்க, அதற்குச் சக்தியற்ற வனாய்ப் பாக்கியஹீனனான அடியேன் கல்லினால் கட்டினேனே!' என்று வருந்தினார். உடனே ஓர் அசரீரி பிறந்ததாம்:—'ஆழ்வாரே! உம்முடைய தங்க மான உள்ளத்தைப் போல் நீர் செய்த கைங்கரியங்களை யும் நாம் தங்கமாகவே அங்கீகரித்தோம்!' என்று. அப்போது—என்ன ஆச்சரியம்!—விமானம் மண்டபம் முதலியவை எல்லாம் ஒரு கணம் தங்கமயமாகவே ஜொலித்தனவாம்.

ஆழ்வாரும் திருப்தியடைந்து,

*செம்பொன் ஆரும்மதிள் சூழ்ந்(து)அழ*
*கார்தென்அ ரங்கமே*

என்றும்,

*ஆயபொன் மதிள் சூழ்ந்(து)அழ*
*கார்தென்அ ரங்கமே*

என்றும் பாடினாராம்.

இந்தத் திருப்தி குதூகலமாகப் பரிணமித்திருக்க வேண்டும், தொண்டரடிப்பொடி யாழ்வாரும் மன முவந்து, 'மதிள்திரு அரங்கத்தானே' என்றும், 'நீள் மதிள் அரங்கத்தம்மான்' என்றும் முறையே தமது கைங்கரியத்தைக் குறிப்பிட்டதுபோல் ஸ்ரீரங்கநாதனைத் தோத்திரம் செய்தபோது.

திருமங்கை யாழ்வார் சில வருஷம் ஸ்ரீரங்கத்திலே தங்கிப் பாடல் - தொண்டு மூலமாகவும், பாகவத கைங் கரிய மூலமாகவும் ஸ்ரீவைஷ்ணவத்தைப் பிரசாரம் செய்து பிரகாசிப்பித்துக் கொண்டிருந்தார். பகவத்

கைங்கரியத்தைக் காட்டிலும் பாகவத கைங்கரியமே மேலானதென்ற கொள்கை இவருக்கும் உண்டு.

*ஞானத்தின் ஒளிஉருவை*
*நினைவார்என் நாயகரே!*

என்றும்,

*ஆர்எண்ணும் நெஞ்சுடையார்,*
*அவர்எம்மை ஆள்வாரே!*

என்றும்,

*கொண்டாடும் நெஞ்சுடையார்*
*அவர்எங்கள் குலதெய்வமே!*

என்றும் பாடுவதைக் கேளுங்கள்.

பாகவதர்களைத் தமக்குத் தலைவராகவும் அரசராகவும் குலதெய்வமாகவும் கொண்டிருந்தவர், 'அவன் உகந்த கைங்கரிய'த்தைக் காட்டிலும் 'அடியார் உகந்த கைங்கரிய'த்தையே பரம புருஷார்த்தமென்று மதித்ததில் ஆச்சரியமில்லை.

*எம்பெருமான் தாள்தொழுவார் எப்பொழுதும்*
*என்மனத்தே இருக்கின்றாரே!*

என்று ஸர்வாந்தர்யாமியான 'ஒளியுருவை' அடியார்களான ஞானிகள் மூலமாகத் தொழுவதில் தமக்குள்ள விசேஷ திருப்தியையும் வெளியிடுகிறாரல்லவா?

இத்தகைய திருப்தியுடன்,

*............................எம்பெருமான்*
*அடியார் தம்மைக்*
*கண்டேனுக்(கு) இதுகாணீர் என்நெஞ்சும்*
*கண்ணிணையும் களிக்குமாறே!*

என்று தமது விசேஷ மகிழ்ச்சியையும்,

*......................எம்பெருமான்*
*தாளை நாளும்*
*சிந்திப்பார்க்(கு) என் உள்ளம் தேனூறி*
*எப்பொழுதும் தித்திக்குமே!*

என்று தமது விசேஷ இன்பத்தையும் தெரிவிக்கிறார்.

பாகவதர்களோடு விசேஷ நட்புக் காதல் கொண்டு,

*பேராளன் பேரோதும் பெரியோரை*
*ஒருகாலும் பிரிகிலேனே*

என்று விரதம் பூண்டு, அவர்களுக்காக எப்படிப்பட்ட தியாகங்களையும் செய்யத் தயாராயிருந்தார்.

தம்முடைய லட்சியமாகிய கைங்கரியம்—பாகவத கைங்கரியமானாலும் சரி, பகவத் கைங்கரியமானாலும் சரி—இனிது நிறைவேறுவதற்குத் தம்மால் இயன்ற முயற்சிகளை யெல்லாம் மேற்கொண்டார் திருமங்கை யாழ்வார். அதற்குப் பொருள்—பெரும் பொருள்—மேலும் மேலும் பொருள் வேண்டுமல்லவா? அதை எப்படியாவது சேர்த்துக் கைங்கரியத்தைத் தடையற நடப்பிக்கத் துணிந்தாரென்று குருபரம்பரைக் கதைகள் சொல்லுகின்றன.

இக்கதைகளில் சில, தற்கால அபிப்பிராயங்களுக் களுக்கும் லட்சியங்களுக்கும் பொருத்தமில்லாம லிருக் கின்றன: வேறு சில கதைகளிலிருந்து தற்காலத் தமிழரும், 'உயர்ந்த லட்சியத்திற்காக வாழ்க்கை முழுவதும் அர்ப்பணம் செய்யப்பட வேண்டும்' என்பது போன்ற சில பாடங்களைக் கற்றுக் கொள்ளலாம்.

சோழ மண்டலத்திலே திருமங்கை என்னும் நாட்டில் திருவாலி திருநகரி என்ற தலத்திற்கு மிகவும் அருகிலுள்ள குறையலூரில் கள்ளக்குடியிலே தலைவனாயிருந்த நீலன் என்பவனுக்குப் புதல்வராகப் பிறந்தவர் இந்த ஆழ்வார். இவருக்கும் நீலன் என்றே பெயரிட்டார்களாம்.

'நீலன் மகன் நீலன்' என்று இளமையிலேயே பிரசித்தி பெற்றிருந்த இவரைக் குறித்து ஜனங்கள் 'அவரை போட்டால் துவரை முளைக்குமா? தமது குடிக்கு ஏற்றபடி மல் வித்தை, வில் வித்தை, குதிரை யேற்றம், யானை யேற்றம் முதலிய உடல் வலிப் பயிற்சிகளில் நிபுணராயிருக்கிறார்' என்று அந்த நாளிலேயே பேசிக் கொண்டார்களாம்.

போர்க் கலையில் இவருக்குள்ள தேர்ச்சியைக் கண்டு சோழராஜன் இவரைச் சேனாதிபதி-உத்தியோகத்தில் அமர்த்திக் கொண்டான். இவரும் கடும் போர் நேரும் காலங்களில் முன்சென்று எதிரிகளைப் பலமுறை வென்றதால் பரகாலன் என்ற பெயர் பெற்றார். இவருடைய சௌரிய-வீரிய-சாதுரியங்களையும் புலமையையும் கண்டு சோழன் சந்தோஷித்துத் திருமங்கை நாட்டிற்குச் சிற்றரசராக்கி வைத்தான். படிப்படியாக இவருள்ளம் பகவத் பாகவத கைங்கரியங்களில் ஈடுபட்டதால் தம்முடைய திரவியங்களை யெல்லாம் அந்தத் துறைகளில் தட்டுத் தடையில்லாமல் செலவழித்துக் கொண்டிருந்தார். இதைக் கண்டு பொறாமை கொண்டவர்களில் சிலர் சோழ மன்னனிடம் போய், 'ஆலிநாட்டரசன் உமக்குச் செலுத்த வேண்டிய பகுதிப் பொருள்களை வீணாகக் கண்டவர்களுக்கெல்லாம் வாரி யிறைத்துக் கொண்டிருக்கிறான்!' என்று புகார் செய்தார்கள்.

அரசன் ஏவலாளரை அனுப்பி நயமாகவும் பயமாக வும் எச்சரிக்கை செய்து பார்த்தான். அவர்களுக்கு அவர் 'காலை, மத்தியானம், மாலை, இரவு, நாளை, பின் னிட்டு!' என்றெல்லாம் தவணைகள் சொல்லிக் கால தாமதம் செய்துவந்தார். சோழ மன்னன் சீறி இவரைக் கைப்பிடியாகப் பிடித்து வரவேண்டுமென்று சேனா சமூகத்தோடு புறப்பட்டு நாலு திசையிலும் வளைத்துக் கொண்டான். திருமங்கை மன்னரோ, 'ஆடல்மா' என்னும் பிரசித்தி பெற்ற தமது குதிரை மேல் ஏறி எதிர்த்துச் சோழனுடைய சேனைகளை வெருட்டி யடித் தார். பிறகு அவன் பாகவத வேஷம்பூண்டு கபடத்தி னால் இவருடைய நாட்டை யாசித்துப் பெற்று இவரை யும் ஒரு விஷ்ணு கோவிலில் சிறை வைத்தான்.

இவர் உணவில்லாமல் மூன்று நாள் பட்டினி கிடந்தார். எனினும், தமக்கு நேர்ந்த ஆபத்தைக் குறித்துக் கவலை கொள்ளவே யில்லை. 'இன்று தொட்டு அந்தக் கைங்கரியம் நடைபெருதே!' என்று தான் வியாகுலப் பட்டார். இவ்விதம் சோகித்துச் சோர்ந்து கிடக்கையில், சொப்பனத்திலே ஸ்ரீவரத ராஜன் பிரசன்னமாய் அபயமளித்து, 'பொய்கை யாழ் வார் அவதரித்த நமது ஸ்தலத்திற்கு நீர் வந்தால் உம்முடைய கவலை தீரும்!' என்று சொல்லி வேகவதி நதிக்கரையில் புதையல் இருக்குமிடத்தை அடையாளத் தோடு காட்டினனும். பொழுது புலர்ந்ததும் இவர் விருப்பத்திற்கு இணங்க அதிகாரிகள் மஹாராஜாவின் அநுமதி பெற்று, இவரைப் பரிவாரங்களால் ஜாக்கி ரதையாகக் காவல் செய்துகொண்டே காஞ்சீபுரத்திற்கு அழைத்துப் போனர்கள். குறிப்பிட்ட இடத்தில் பூமி யைத் தோண்டிச் சோதித்துத் திரவியம் இருக்கக்

கண்டு, பகுதித் தொகையை அதிகாரிகளிடம் சேர்த்து மிகுதியாயிருந்த பொருளைக் கைங்கரியத்திற்கு வைத்துக் கொண்டாராம். 'கொடுக்க வேண்டிய தானியப் பகுதிக்கு என்ன சொல்லுகிறீர்!' என்று அவர்கள் கேட்டதும், இவர் ஆற்றங்கரை மணலைத் திரட்டி மரக்காலால் அளந்து கொடுத்தாராம். அந்த மணல் ராஜ மனுஷ்யர் கண்ணுக்குத் தானியமாகவே பரிணமித்து விட்டதாம்.

பாண்டிய ராஜாவின் பொருளைச் சிவ கைங்கரியத்திற்கும், சிவனடியார் கைங்கரியத்திற்குமாக உபயோகித்து அந்த அரசனால் காவலில் வைக்கப்பட்டு நரிகளைப் பரிகளாக்கிக் காட்டிய மாணிக்கவாசக சுவாமிகளின் கதை இந்தச் சந்தர்ப்பத்தில் ஞாபகத்திற்கு வருகிறதல்லவா? இந்த ஆழ்வாரும் மாணிக்கவாசகரைப்போல் பௌத்தர்களை வாதில் வென்றார் என்ற ஒரு கதையும் சில 'குருபரம்பரை' ஏடுகளில் காணப்படுகிறது.

தமது பகவத் பாகவத கைங்கரியங்களாலும், ஆலயத் திருப்பணிகளாலும், பாடல்-தொண்டினாலும் திருமங்கை யாழ்வார் ஸ்ரீரங்கம் என்ற புண்ணிய ஸ்தலத்தைப் பாரத தேசமெங்கும் புகழ்பெற்று விளங்கும் பிரபல ஸ்தலங்களில் ஒன்றாக்கினார். ஸ்ரீரங்கநாதனுடைய பேரையும் புகழையும் பரப்புவதற்காகத் தமது வாழ்க்கையின் முக்கியமான பகுதியை அர்ப்பணம் செய்த இவர் தமது லட்சியத்தை எப்போதும் மனக் கண்ணால் இமையாது நோக்கிக் கொண்டே யிருந்தார்.

சுயநலமே கருதாமல் ஒரே புத்தியோடு தமது கனவை நனவாக்க முயன்று, தெய்விக உத்ஸாகத்

தோடு கைங்கரியம் செய்துவந்த திருமங்கை மன்னர் பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவராகப் போற்றப்படுகிருர். இவருடைய புகழும் பாரத தேசமெங்கும் பரவியிருக்கிறது.

லட்சியத்திற்காக வாழ்க்கையை அர்ப்பணம் செய்துவிட வேண்டும் என்ற உண்மை சாமானியமானதா? இது பக்தி மதத்தின் ஸாரமான கொள்கைகளில் ஒன்று. இதை வாசாஞானமாக அறிந்து வாசாகைங்கரியம் செய்வது போதாது என்பது திருமங்கை யாழ்வார் கதைகளின் படிப்பினை.

———

# 20. *குமுதவல்லி கல்யாணம்

'சித்திரம் உயிர் பெற்று நிற்கிறது! உருக்கி வார்த்த தங்கச் சிலையில் ஜீவ உணர்ச்சி பொங்கி வழி கிறது! ஆஹா, பூங்கொடி இசை மயமான காற்றில் மனோஹரமாக இசைந்து இயங்குகிறது! அடடா, மின்னற் கொடி நடனம் பண்ணுகிறது, கிண் கிண் என்று ஒலிக்கும் கிண்கிணிகளோடு!' என்றெல்லாம் பிரமித்துப் போகிறார்கள்.

அரசரோ, 'இன்னிசைகளுக்கிடையே சங்கீத சரஸ்வதி தான் இப்படி ஸ்வர்ண சோபிதமாக உரு வெடுத்து வந்து அபிநயம் என்னும் தெய்விக பாஷை யால் உள்ளங்களை வசீகரிக்கப் பார்க்கிறாள்!' என்று அதிசயப்படுகிறார்.

நீலமலர் போன்ற கண்களில் உள்ளம் அலை யெறிய, ஸ்வாரஸ்யமாகத் தென்றலை அநுபவித்துத் தலையாட்டும் அல்லிமலர் போலக் கைகளும் விரல்களும் அசைகின்றன. விரைவில் சரீரம் முழுவதும் சலனங் களாலும் பாவங்களாலும் பேசத் தொடங்குகிறது. ஆ, அந்தச் சலனங்களில் கவிதாரஸம் சொட்டுகிறது; கற் பனைத்திறமோ அபாரமாயிருக்கிறது. அரசர் நடிகையை மறந்து, நடனத்தையே பார்த்துக்கொண்டிக்கிறார்.

இப்போது பெண்கொடி, தானும் பாடிக்கொண்டே ஆடுகிறாள். அரசர் உள்ளமும் கூத்தாடுகிறது. மோகன

---

* இந்தக் கதைப் போக்கு, பெரும்பாலும் வடிவழகிய நம்பி தாசர் 'குருபரம்பரை'யைத் தழுவியது.

மாக ஒளிரும் முகசந்திரனும், காந்த சக்தியோடு மிளிரும் கண்களும் கை கால்களும்—ஏன், சுடர் போல் ஜொலிக்கும் அந்த மேனியின் அசைவுகளெல்லாம்—பாவனுரஸத்தைக் கொட்டுகின்றன. அராவிக் கூர் செய்த ஆயுதம்போல் பளிச்சுப் பளிச்சென்று பாவனைகளுக்கு ஏற்றபடி உதவுகிறது வீணுகானம் போல் கொஞ்சும் குரல்.

ஒரு சமயம் சீதாராமர்களின் காதலேயும், ஒரு சமயம் கோபிகாரமணிகளின் கிருஷ்ணவிரகத்தையும் அபிநயிக்கிருள். பிறகு சுபத்திரா பரிணயம் நடக்கிறது. அப்பால் உஷா ஸ்வப்னம். இந்தக் காட்சிகளில் நவரஸ பாவங்களும் நடித்துக் காட்டப் பெறுகின்றன. அந்தக் காதலர்களின் செய்கைகளும், சோகம் ஏமாற்றம் பயம் கருணை முதலான உணர்ச்சிகளும், நடிகையின் குரலிலும் விழிகளிலும் சைகைகளிலும் மீண்டும் அற்புதமாக உயிர் பெறுகின்றன. அரசர் ரஸாநந்தத்தில் முழுகி நடனத்தையும் மறந்து, ராமாயண பாரத பாகவத காலங்களில் வாழ்ந்து வருகிருர்.

நாட்டியம் முடிந்ததும், ஏதோ ஒரு தேவ நடனம் பார்த்து மீண்டதுபோலத் தோன்றுகிறது ரஸிகர்களுக்கெல்லாம். அரசர் இப்போதுதான் அவளுடைய ரூப ஸௌந்தரியத்தை நன்ருகக் கவனிக்கிருர், 'தேவாமிர்தத்தை வகுத்துச் செய்ததோ?'' என்று எண்ணும்படியிருந்த வடிவம் 'இவள் ஒரு தேவ கன்னிகை தானே?' என்று திகைக்கச் செய்கிறது.

தன்னுடைய நடன சூட்சுமங்களே விசேஷமாக ரஸித்துக் கொண்டிருந்த அந்த ரஸிக சிகாமணியை நடிகையும் இடையிடையே கவனித்து வந்தாள்.

வீட்டுக்குப் புறப்படும் போது சேடி ஒருத்தியைப் பார்த்து, 'என்ன ரஸாநுபவம்! இவர் யாரோ?' என்று கேட்கிருள். அதற்கு அவள், 'ஒரு சிற்றரசர்; எனினும் "அவர் சோழ மன்னர், இவர் திருமங்கை மன்னர்" என்று சொல்லும்படி பிரசித்தி பெற்றிருக்கிருர். பல கலைகளிலும் பயிற்சியுள்ளவர். ஆடல் பாடல்களைக் காண்பதும் கேட்பதும் இவருக்குப் பொழுதுபோக்கு' என்று உத்ஸாகமாகப் பதில் சொல்லுகிருள். அது கேட்ட நடிகை அவரைக் கடைசியாக ஒரு பார்வை பார்த்துப் புன்னகை செய்து விட்டுத் தோழிகள் சூழ்ந்து மங்களம் பாட ஒய்யாரமாக அடியிட்டுப் போகிருள்.

அவள் தோழியிடம் பேசியதும் அவருக்குப் பாட்டைப்போல் இனிமையாகத் தோன்றியது; நடையும் நடனம்போல் அழகாகத் தோன்றியது. பார்வையோ மோகனுஸ்திரம் போட்டது போலிருந்தது. அந்தப் புன்னகையொளி இல்லாவிட்டால் தமது வாழ்க்கையே இனி இருண்டு போகுமென்று நம்பினுர்.

திருவெள்ளக் குளத்துக் கோவிலில் நடனம் நடைபெற்றது. வழி யெல்லாம் திருமங்கை மன்னர் நடனத்தைக் குறித்தும் நடிகையின் சௌந்தரிய அதிசயத்தைக் குறித்தும் பேசிக் கொண்டே போனுர். தருமக் கொழுந்தாக விளங்கிய ஒரு ஸ்ரீவைஷ்ணவ வைத்தியர் வீட்டில் கருணை யிளங்கொழுந்தாக விளங்கிவரும் அந்த நடிகையை ஜனங்கள் வாஸ்தவமாகவே தெய்வப் பெண்களில் ஒருத்தியாக மதிக்கிருர்களென்று தோழர்கள் சொன்னுர்கள்.

'பல வருஷங்களுக்கு முன் இந்த ஊர்த் தாமரைத் தடாகத்திற்குப் பக்கத்திலுள்ள பூஞ்சோலையில் தேவ லோகத்துப் பெண்களில் சிலர் ஒரு விமானத்திலே வந்திறங்கிப் பூக் கொய்து கொண்டிருந்ததாகவும், ஒருத்தி மாத்திரம் புறப்படவேண்டிய சமயத்தையும் மறந்து குமுத மலர் கொய்வதில் ஈடுபட்டிருந்ததாக வும், மற்றவர்கள் அவளை மறந்து விமானமேறிப் போய் விட்டதாகவும் ஒரு கதை கேட்டிருக்கலாமே! அவளைத் தான் அந்த வைத்தியர் தம் வீட்டிற்கு அழைத்துப் போய்க் குழந்தை இல்லாததால் புதல்வியாக வளர்த்து வருகிறாராம். குமுத மலரும் கையுமாயிருந்தது காரண மாகக் குமுதவல்லி என்று பெயரிட்டிருக்கிறாராம். அப்ஸரஸ் ஆனதால்தான் அவ்வளவு நடனத்திறமை ஏற்பட்டியிருக்கிறதாம்' என்று தெரிவித்தார்கள்.

அப்போது திருமங்கை மன்னர் பதில் சொன்னார்: 'அந்தப் பாடல்களிலும் அபிநயங்களிலும் ஆட்டங் களிலும் தெய்வ ஒளி வீசுகிறது. அந்த வைத்தியர் வீட்டுக்கு எத்தனையோ பாகவதர்கள் வந்து போகிறார் களல்லவா? அவர்களுடைய பஜனைகளையும் காலட்சே பங்களையும் பார்த்துப் பார்த்து அவளுக்கும் பக்தி ஏற்பட்டிருக்க வேண்டும். மேகத்தைக் கண்டு மயில் ஆடுவதுபோல் பகவானாகிய நீலமேகத்தைத் தரிசித்து, அவளும் தன் பக்திக் காதலை அப்படிப்பட்ட ஆடல் பாடல்களால் வெளியிட்டிருக்க வேண்டும். அவ்வளவு நடிப்புத் திறமையையும் தேவார்ப்பணமாக்கி அந்த நடனப் பணியால் கோவிலையே ஒரு கலாநிலையமாக்கி விட்டாள்; கலையையும் தெய்வக் கலையாக்கி விட்டாள்.'

இரவு யுகமாகக் கழிந்தது. அது என்ன? கனவு காண உறங்கவுமில்லையே! அவள் வந்து வழிகாட்டி

விழி காட்டித் தம்மை எப்படியோ அழகும் இசையும் கலந்த ஒரு புதிய உலகத்திற்கு அழைத்துப் போனதாக வும், அங்கே தன் மாயவித்தையால் ஏதோ ஒரு அற்புத மான் புதைபொருளைக் காட்டியதாகவும் தோன்றியது.

பொழுது புலர்ந்ததும் தோழர்கள் பெண் பேசப் போனார்கள். அவர்கள் வைத்தியரோடு பேசிக் கொண் டிருக்கையில், குமுதவல்லி பக்கத்திலிருந்த தோழியை நோக்கினாள். அவளும் 'ஆம், நேற்று நாம் கோவிலில் பார்த்தவர் தாம்: செவிக்கும் இனியவர், கண்ணுக்கும் இனியவரல்லவா?' என்று குறும்பாகச் சிரித்தாள். 'ஆனால், விஷ்ணுபக்தராகத் தெரியவில்லையே!' என்று பெருமூச்சு விட்டாள் குமுதவல்லி.

இதைக் கேள்விப்பட்ட திருமங்கையார், 'அவ ளோடு கல்யாணமேடையில் வீற்றிருக்கக்கூடுமென்றால் எதுதான் அரிது?' என்று திவ்யமாகத் திருமண் காப்பு அணிந்து தாமரைமணி துளசிமணி தரித்து ஸ்ரீவைஷ் ணவக் கோலத்தோடு விரைந்து வந்தார். குமுத வல்லியோ, 'இனி நீர் நித்தியமாகக் குறைந்த பட்சம் ஏழைகளான ஆயிரத்தெட்டுப் பாகவதர்களை ஒரு வருஷமாவது அமுது செய்வித்து வரவேண்டும்' என்று நியமம் கூறினாள்.

இவர் அப்படியே பாகவத கைங்கரியம் செய்து மீண்டதும், மணச்சடங்கு இனிது நிறைவேறியது. பிறகு காதலியின் விருப்பத்திற்கிணங்க இவர் அப்படிப் பட்ட பாகவத கைங்கரியத்தை நித்திய நியமமாகவே கொண்டார்.

பொருளெல்லாம் செலவாகிவிட்டது. சோழனுக் குக் கட்ட வேண்டிய கப்பமும் பாகவதர்களுக்கே

வினியோகப்பட்டது. பிறகு கடன் வாங்கிச் செலவு செய்தார். கொஞ்ச காலத்தில் கடன் கொடுப்பதற்கும் ஆளில்லை என்று தெரிந்தது. காதலியின் ·முக மலர்ச்சிக்காக எப்படியாவது கைங்கரியத்தைத் தொடர்ந்து நடத்திவர வேண்டுமென்று தீர்மானித் தார்.

எத்தனையோ போர்களில் தமக்குப் படைத் துணை யாக இருந்த சில பராக்கிரமசாலிகளைப் பழக்கி அவர் களுடைய நூதன ஆற்றல்களுக் கேற்றபடி நீர்மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான், தாளூதுவான், சாயை பிடிப் பான், உயரத் தொத்துவான் முதலான பட்டப் பெயர்கள் கொடுத்தார். வில், அம்பு, வேல், வாள், தடி, கவண், சமுதாடு முதலான ஆயுதங்களையும் ஏராளமாகத் தயா ரித்துக் கொண்டார். அந்தக் கூட்டத்திற்கு வழக்கறிஞ ஞகத் தோலா வழக்கன் என்பவனை நியமித்தார்.

திடீரென்று உறையூர், காவிரிப்பூம்பட்டினம், காஞ்சீபுரம், மலைநாடு போகும் வழிகளிலெல்லாம் கொள்ளைகள் அதிகப்பட்டன. 'ஆனால் என்ன விநோதமான திருடர்கள்! ஏழைகளையும் சாதுக்களையும் கொள்ளையடிப்பதில்லை. தப்பித் தவறி அவர்கள் பொருள் பறிபோனாலும் மறுபடியும் எப்படியோ வீடு தேடி வந்துவிடும்!' என்று ஜனங்கள் ஆச்சரியமாகப் பேசிக்கொண்டார்கள்.

ஒருநாள் இரவு: நல்ல நிலா. ஒரு காட்டு வழியிலே ஆண்களும் பெண்களுமாகப் பெருங் கல்யாணக் கூட்டம் ஒன்று போய்க்கொண்டிருந்தது. இரண்டு பக்கங்களிலும் பதிவிருந்த கள்வர்கள் அந்தக் கூட்டத் தின் மேல் பாய்ந்தார்கள். அவ்வளவு பெரும் பொருள்

வேறு எந்த நாளிலும் கிடைத்ததில்லை. தலைவர் மூட்டைகளை யெல்லாம் தோழர்கள் மூலமாக அனுப்பி விட்டார்.

தாமும் போவதற்கு முன் ஓர் அரச மரத்தின் கிளையிலேறி, 'இன்னும் யாராவது வருகிறார்களா?' என்று பார்த்தார். அதிர்ஷ்டத்திற்கு மேல் அதிர்ஷ்டம்! புது மணவாளக் கோலம் பூண்ட பிராமண இளைஞர் ஒருவர் தமது மணவாட்டியோடு வந்துகொண் டிருந்தார்.

'ஓ, ஓ! இவருடைய பரிவாரம்தானா? கொழுத்த பணக்காரராய் இருக்கவேண்டும்!' என்று தமக்குள் சொல்லிக்கொண்டே இறங்கி வந்து, தம்பதிகள் முன் கைகளைக் கொட்டிக் கொட்டிக் கூத்தாடத் தொடங்கி னார். ஆயுதபாணியாய் இருந்த அவரைக் கண்டதும் மணவாளப்பிள்ளை வாட்டமடைந்தவர்போல் நின்று, 'வேட்டகத்திலிருந்து வருகிறோம். நீர் ஏன் எங்களை மறித்துக் கொண்டு துள்ளுகிறீர்?' என்று உள்ளுக் குள்ளே ஏற்பட்ட பயத்தை மறைக்க முயல்கிறவரைப் போல் பேசினார்.

இவர், 'மணவாளப் பிராமணரே! பயப்பட வேண்டாம். எனக்கும் உம்மைப்போல் மனைவியுண்டு. என் உயிரான குமுதவல்லிக்கு இதோ மகாலட்சுமி போலிருக்கும் உம்முடைய தேவியும் ஒப்பாக மாட்டாள்!' என்று பெருமையோடு பதில் சொல்லத் தொடங்கினார். அவளைத் திருப்தி செய்வதற்காகத் தாம் பாகவத கைங்கரியம் செய்து வருவதாகவும், அந்தக் கைங்கரியத்தில் பொன் மணி பூஸ்திதி எல் லாம் போய்விட்ட பின், வழிப்பறியில் மூண்டிருப்பதாக

வும் சொல்லி, 'என் வாழ்க்கையின் நெருக்கடியான சந்தர்ப்பத்தில் நீங்கள் விலை மதிப்பற்ற வஸ்திராபரணங்களோடு இப்படி வருவதென்றால், நான் ஆட மாட்டேனா!' என்று கொக்கரித்தார். அப்போது மாப்பிள்ளை, 'கள்வனிடத்தில் அல்லவா அகப்பட்டுக் கொண்டோம்?' என்று மனைவி முகம் பார்த்தார்.

''மயிலே, மயிலே, இறகு போடு என்றால் பலிக்குமா?'' என்று தடியை ஓங்கினார் குமுதவல்லி மணாளர். உடனே நகைகளைக் கழற்றிக் கழற்றிப் போட்டாள் மணவாட்டி. பிறகு வேலைக் காட்டியதும், மணவாளர் தம்முடைய பொருள்களையும் கொடுத்து விட்டார். மாங்கலியத்தைக் கழற்றவேண்டாமென்று மணப் பெண்ணுக்குச் சொல்லிவிட்டு மாப்பிள்ளையை நோக்கி, 'அந்த மோதிரத்தையும் கொடுத்துவிட வேண்டியது தான்!' என்று நெருங்கினார். அவரோ, 'இறுகியிருக்கிறதே; எப்படிக் கழற்றுவேன்!' என்றதும், 'இப்படிக் கழற்றுவேன்!' என்று கையை எட்டிப் பிடித்துக் கொண்டு பல்லால் கடித்து வாங்கினார். பின்பு அந்தப் பொருள்களை எல்லாம் சுலபமாகக் கட்டிக்கொண்டு போகப் பார்த்தார்.

ஆனால்,சுமையை எடுக்க முடியவில்லை. திருமங்கை மன்னர் ஆச்சரியப்பட்டு முழுப் பலத்தோடும் தூக்க முயன்றார். அது அசைவதாகவே காணப்படவில்லை. உடனே வாளை உருவிக்கொண்டு, 'பிராமணா, என்ன மந்திரவாதம் பண்ணினாய்?' என்று கேட்க, மாப்பிள்ளை நெருங்கி, 'மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம், வாரும்!' என்று அவர் கழுத்தைக் கட்டிக் கொண்டு, செவியில் 'ஓம் நமோ நாராயணாய' என்ற

சர்வவேத ஸாரமான அஷ்டாட்சர மகா மந்திரத்தை உபதேசம் செய்தார். அது அதற்கு முன் கொடுத்த நிதிகளுக்கெல்லாம் எவ்வளவோ மேலான நிதியாகத் தோன்றியது!

எதிரே நின்ற தம்பதிகள் மறைந்து விட்டார்கள். தம்மை அறியாமலே ஆகாசத்தைப் பார்த்தார். அங்கே ஒரு பொன்மலே; அந்த மலேமீது நீலமேகம் படிந்து மின்னலோடு உலாவுகிறது! கருடாரூடனுய் அருள் வடிவமான மகாலட்சுமியோடு காட்சியளிக்கும் பகவானைத் தேவர்களும் முக்தர்களும் திரள் திரளாக வணங்கிக் கொண்டிருக்கிருர்கள். அவர்களுடைய முகங்கள் தம்மால் கொள்ளேயடிக்கப் பட்டவர்களின் முகங்களே ஞாபகப்படுத்துகின்றன.

ஆஹா, கொஞ்ச நேரத்திற்கு முன் மணவாளக் கோலமாய் வந்தவன் அழகிய மணவாளனுன சர்வேச்வரன் தான்! ஒரு நிமிஷம் ஸ்தம்பித்து நிற்கிருர்; பிறகு, 'அந்தோ! உன் தேவியையும் வழிப்பறி பறித்தேனே! என் வாயால் எச்சிலாக்கி மோதிரத்தையும் கவர்ந்தேனே! இந்தப் பாறையில் தலேயை முட்டிக் கொண்டு உயிரை விடுவேன்' என்று கதறுகிருர்.

அப்போது புல்லாங்குழல் இசைப்பது போன்ற குரலில் ஓர் அசரீரி பிறக்கிறது:— 'ஆழ்வாரே! நாம் உம்மை விளேயாட்டுக்கொண்டு, குழந்தை சொல்லும் மழலேச் சொல்லுக்கு இன்புறும் தாய்போல இன்புற்ருேம். பாமாலே மணக்கும் அந்த வாயால் நமது புகழைப் பாடுவீர். நம்மை உமக்கு உறவாக்கிய குமுதவல்லியோடு உலகம் உய்யும்படி பணிகள் செய்ய

வேண்டும். முக்கியமாக உமது பாடல்-தொண்டினால் நாடு உய்யவேண்டும்.'

பகவான் பரிவாரங்களோடு அந்தர்த்தானமாகி விட்டான். அந்தத் திவ்ய சௌந்தரியம் தம்முடைய உள்ளத்திற்குள்ளே புகுந்து மறைந்ததாகத் தோன்றியது திருமங்கையாருக்கு. பழைய அஞ்ஞான இருள் ஒழிந்து அங்கே ஞானச் சுடர் உதயமாயிற்று. உயிர் பிரிந்த உடம்பில் அந்த உயிர் மீண்டும் நுழைய இந்திரியங்கள் பிரகாசமடைவது போல், ஒரு புத்தப் புதிய ஜீவ ஒளி தோன்றுகிறது முகத்திலே!

அந்த அநுபவமும் ஆனந்தமும் உள்ளடங்காமல் பொங்க, வாக்குப் பிரவாகம் உண்டாகிறது.

*வாடினேன், வாடி வருந்தினேன் மனத்தால்*
*பெருந்துயர் இடும்பையில் பிறந்து*

[இடும்பை—தீமை; அச்சம்.]

என்று 'கொம்பை இழந்த தளிர்போலே' தாம் வருந்தி வாடிக்கொண்டிருந்த பழைய துன்ப நிலையைப் பிரஸ்தாபித்து,

*ஓடினேன், ஓடி உய்வதோர் பொருளால்*
*உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து*
*நாடினேன், நாடி நான்கண்டு கொண்டேன்*
*நாராயணா என்னும் நாமம்!*

என்று தாம் கண்டுகொண்ட பெரு வாழ்வைக் குதூகலமாகப் பாடுகிறார்.

இப்படிப் பாடுகிறவர் ஒரு புதிய ஞானப் பிறவியை அடைந்துவிட்டாரென்றே சொல்ல வேண்டுமல்லவா? 'இனி நானாக மீள முடியாது' என்று ஓடி இளைத்து விழுந்த இடத்திலே பகவத் கிருபையால்

ஞானபக்தி கிடைத்ததாம். அதற்கு அறிகுறியான திருநாம வைபவமும் தெரிந்து விட்டதாம். இதைக் காட்டிலும் ஓர் அற்புதம் உண்டோ?

குமுதவல்லியின் காதலே, கைங்கரியத்தில் ஒரு முகப்படுத்திப் பக்திக் காதலராக்கி இவருக்கு நாராயண நாமம் என்னும் புதைபொருளையும் காட்டிக் கொடுத்த தென்ற கருத்தை உள்ளிட்டு ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள்,

*வலம்திகழும் குமுதவல்லி*
*மணவாளன் வாழியே!*

என்று திருமங்கை யாழ்வாரை வாழ்த்தி யிருக்கிறார்கள்.

---

# 21. கள்வரும் கள்வனும்

பசியின் கொடுமையால் களவு செய்கிறவனைக் கள்ளன் என்று சாதாரணமாகச் சொல்லுகிறோம். வஞ்சகத்தாலோ, வேறு தவறான வழிகளாலோ, பிறர் பொருளை அபகரிப்பவனும் கள்ளன்தான், பேராசை யோடு திக்விஜயம் செய்து நாடு திருடும் அரசனையும் கள்ளன் என்றே பேரறிஞர்கள் துணிகிறார்கள். பக்தர் களோ, ஈச்வரனுக்குரிய ஆத்மாவை 'எனது' என்று அபிமானிப்பவனையும் ஆத்மாபஹாரம் செய்யும் கள்ள னென்று தீர்மானிக்கிறார்கள். இந்தப் பொருளில்தான் திருநாவுக்கரசு சுவாமிகள் தம்மைக் 'கள்ளத்தேன்' என்று சொல்லிக் கொள்கிறார், தாம் சிவபக்தராவதற்கு முந்திய நிலையை நினைத்து.

இதே பொருளில் தொண்டரடிப் பொடி யாழ்வாரும்,

> *சூதனாய்க் கள்வ னாகித்*
> *தூர்த்தரோ(டு) இசைந்த காலம்*

என்று தமது அஞ்ஞான தசையைக் குறிப்பிடுகிறார். இவரைப் பின்பற்றித் திருமங்கை யாழ்வாரும் கடுமை யான தற்சோதனைகள் செய்து பார்த்து,

> *சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து*

என்றும்,

> *கள்வனேன் ஆனேன்*

என்றும் தம்மைக் குறித்துப் பேசுகிறார்.

இந்த ஆழ்வார் ஆதியில் சேனைத் தலைவராகவும் சிற்றரசராகவும் இருந்ததால், தமது மன்னனுக்காகப் போர் புரிந்து நாடு திருடியதையும் பிறர் பொருளைக் கொள்ளையிட்டதையும் ஞானம் பிறந்தபின் வெறுக்கி கிருரோ என்று சந்தேகிக்கவும் இடமுண்டு. எப்படி யானலும் இதற்குமேல் ஊகஞ் செய்வது சரியன்று

ஆனல் இத்தகைய குறிப்புக்களிலிருந்து திரு மங்கை யாழ்வார் திருட்டுத் தொழிலில் முனைந்திருந்தா ரென்று பிற்காலக் கதைவிநோதர்கள் கட்டிவிட்டார்கள்! இவர் 'கள்ளர்' வகுப்பில் பிறந்ததும் இப்படிக் கதை கட்டியதற்கு ஒரு காரணமா யிருந்திருக்கலாம்.

மேலே காட்டிய திருமங்கையாழ்வார் வாக்குக்களில் முந்திய அடியிலுள்ள 'களவு' என்பதற்குக் 'களவுத் தொழில்' என்ற பொருளோடு 'ஆத்மாபஹாரக் களவு' என்ற பொருளும் தருகிருர் பெரியவாச்சான் பிள்ளை. பிந்திய அடியிலுள்ள 'கள்வன்' என்பதற்கோ, 'ஆத்மா பஹாரக் கள்வன்' என்ற பொருள் மட்டும் தருகிருர்.

இந்த இடத்தில், 'விறகு களவு கண்டவனிற் காட்டில் (விறகு திருடினவனைக் காட்டிலும்) ரத்நா பஹாரம் பண்ணினவனுக்குப் பாபம் ப்ரசுரமாயிருக்கும் (மிகுதியாயிருக்கும்)....திரவியங்களில் தலையான ஆத்ம வஸ்துவை ஆயிற்று அபஹரித்தது,—ஸர்வேச்வரன் உடைமையை ஆயிற்று "என்னது" ('என்னுடை யது') என்று போந்தது"—என்ற வியாக்கியானம் கவனத்திற்கு உரியது.

'நான் திருடின பொருளோ சிறந்த இரத்தினத் திற்கும் மேலான ஆத்ம வஸ்து: இந்த ஜீவ ரத்தினமோ ராஜாதி ராஜனை ஸர்வேச்வரனுடையது.

அவன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே செய்த இந்தக் களவிற்கு மேற்பட்ட களவும் உண்டோ?' என்ற பக்தர் மனநிலை நன்ருகப் பிரதிபலிக்கிறது வியாக்கியானத்தில்.

ஆனல், திருமங்கையாழ்வார் இழிவான களவு முறைகளையும் கையாண்டார் என்ற கதை உரைகாரருக்கும் உடன்பாடுதான் என்பதை நினைத்துப் பார்க்கும்போது, அந்தக் கதை நெடுங் காலமாக நாட்டில் வழங்கி வந்திருக்கிறதென்று ஊகிக்கலாம்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் இப்படிப்பட்ட கதைகளை மத விசுவாசத்தோடு போற்றி வந்தபோதிலும், ஆழ்வார் களவாடிக் கைங்கரியம் புரிந்தார் என்பதற்கும், பகவான் அந்தச் செயலை நற்செயலாகவே கொண்டு அருள் புரிந்தான் என்பதற்கும் இவர் வாக்குக்களில் துளியும் ஆதாரம் கிடையாது. இக்கதையை மறுக்கும்படி அமைந்திருக்கின்றன இவர் பாசுரங்கள் என்றே சொல்லலாம்.

உதாரணமாக, 'கள்வனேன் ஆனேன்' என்று தொடங்கும் பாசுரத்தின் முற்பகுதியைக் கேளுங்கள்:

*கள்வனேன் ஆனேன்; படிறுசெய் திருப்பேன்!*
*கண்டவா திரிதந்தே னேலும்,*
*தெள்ளியேன் ஆனேன்; செல்கதிக்(கு) அமைந்தேன்,*
*சிக்கெனத் திருவருள் பெற்றேன்!*

[படிறு—கொடுமை; அடங்காத்தனம்.]

இங்கே தமது பழைய வாழ்க்கையையும் புதிய வாழ்க்கையையும் முரண்பட வைத்துக் காட்டுகிருர் திருமங்கையாழ்வார். உள்ளம் தெளிந்து திருவருள் பெற்றதும், 'மனமே ராஜா; மதியே மந்திரி' என்

றிருந்த நிலைபோய் ஒரு புதிய பிறப்பே வந்துவிட்ட தாம்.

இதற்குப் பின் இவர் பழைய வாழ்க்கைக்குத் திரும்பவே யில்லை என்பது குறிப்பு. இக்குறிப்பை,

*இனிஎப் பாவம்வந்(து) எய்தும்? சொல் லீர்! எமக்(கு),*
*இம்மை யேஅருள் பெற்றமை யால்?*

என்ற வாக்கு வெளிப்படையாகவும் ஆதரிக்கிறது.

திருவருள் பாவங்களுடன் கவலைகளைப் போக்கிய தோடு, புதிய வாழ்க்கைக்கு அறிகுறியான ஒரு புதிய உத்ஸாகத்தையும் அளித்தது.

*... ... உன்அருள் என்னிடை வைத்தாய்;*
*ஆரேன்,அது வேபரு கிக்களிக் கின்றேன்!*

[ஆரேன்—திருப்தியாகாதவனாய்.]

என்று கடவுளை நோக்கிக் கூறுவதைக் கேளுங்கள்.

அருளையே அமுதமாகப் பருகிப் பருகித் திருப்தி அடையாமல், மேலும் மேலும் வெறிகொண்டு அந்த அருளாளனை நோக்கி, 'என் உள்ளம் கொண்ட கள்வா!' என்று கண்கள் ஆனந்த பாஷ்பம் சொரிய அழைத்தார். தம்மை 'ஆத்மாபஹாரக் கள்ளன்' என்றவர், இறைவனைத் தம்முடைய 'உள்ளத்தை அப கரித்துக் கொண்ட கள்ளன்' என்றார், உள்ளத்தில் (அந்தராத்மாவாக) நித்திய வாசம் செய்தும் தன்னைக் காட்டிக் கொள்ளாததால், 'நிழலில் ஒதுங்குவா'னுக் கும் மேற்பட்ட கள்ளனல்லவா பகவான்? அவன் களவுதான் இவர் களவை வெளிப்படுத்தியது!

இவர் கூப்பிட்டும் முகம் காட்டாமல் உள்ளே நின்று கொண்டிருந்தானும்: அப்படியிருந்தும் உள்ளம்

குளிர்ந்து போயிற்று. இந்த அநுபவத்தை நினைத்து, ' கள்வா ! உன்னை எப்படி மறப்பேன்?' என்று உருகிஞர். உருக உருக, அந்தக் கள்வன் தமது 'கண்ணும் நெஞ்சும் வாயும் இடம் கொண்'டதாக உணர்ந்தார்.

உள்ளங்களில் ஒளித்திருந்தும், பட்சபாதமில்லாத ஞான சந்திரனுக உதயம் செய்தும் உயிர்களுகெல்லாம் தாயாக அருள் செய்கிருனென்றும், அவனே பரிசுத்த மூர்த்தி யென்றும் அறிந்து,

*தூயாய்! சுடர் மாமதி போல்,*
*உயிர்க் கெல்லாம்*
*தாயாய்அளிக் கின்றதண்*
*தாமரைக் கண்ணு!*

என்று அழைத்து மறுபடியும், ' உன்னை எப்படி நான் மறப்பேன்?' என்று கொஞ்சுகிருர்.

இந்த உருக்கமும் தெய்விக உத்ஸாகமும் நாளடைவில்,

*போந்தேன், புண்ணிய னே!*
*எய்தி, என் தீவினைகள் தீர்ந்தேன்!*

என்று சொல்லும்படி தீவினை தீர்ந்த தெய்வ வாழ்க்கையை அடைவித்தன.

புண்ணிய மூர்த்தியை அடைந்தவர் புண்ணிய புருஷராஞர். ' சத்தியமே கடவுள் ' என்று விசுவசித்து,

*பொய்வண்ணம் மனத்தகற்றிப்*
*புலன்ஐந்தும் செலவைத்து,*
*மெய்வண்ணம் நினைந்தவர்க்கு*
*மெய்ந்நின்ற வித்தகனை*

என்று பாடியவர், பிரபந்தம் சொல்லுகிறபடி ‘ பொய்ம் மொழி ஒன்றில்லாத மெய்ம்மையாள’ ராஞர். இப்படிப் பட்ட கடவுளை ஸ்ரீரங்கத்திலே தரிசித்ததாகச் சொன் னவர், அந்த மூர்த்திக்குத் திருப்பணிகள் செய்யும் போது, பொய்ந்நெறியில் பொருள் தேடினுரென்று கூறுவது சரியன்று. சத்திய சம்பன்னர்களான பாக வதர்களுக்குக் கைங்கரியம் செய்வதற்காக அப்படிப் பொருள் சேர்த்தாரென்று கருதுவதும் சரியன்று.

‘ ஸாட்சாத் தர்மமே ஈச்வரன்!’ என்ற உறுதி யோடு,

*அறம்தா ஞய்த்திரி வாய்! உன்னை*
*என்ம னத்தகத்தே திறம்பா மல்கொண் டேன்!*

என்று அவனையே தமக்கு அந்தரங்கனுக்கி, ‘ இதோ பார்த்துக்கொள்!’ என்று இதயத்தைத் திறந்து காட்டி யவர் தருமம் தவறி வழிப்பறி செய்தார் என்பது பொருந்துமா?

இவர் தமது வாழ்க்கையின் முற்பகுதியிலே,— போர் செய்வதிலும் வேட்டை யாடுவதிலும் விருப்ப முள்ளவராயிருந்த காலத்தில், — தருமமும் நீதியும் தவறிப் பாவம் செய்ததாக ஒப்புக்கொள்கிருர்; ஜீவ ஹிம்ஸை செய்ததாகவும் ஒப்புக்கொள்கிருர். (அந்த நாளிலும் களவுத் தொழில் செய்த பிரஸ்தாபமே கிடையாது.)

*கோடிய மனத்தால் சினத்தொழில் புரிந்து*
*திரிந்து, நாய் இனத்தொடும் திளைத்திட்(டு)*
*ஓடியும் உழன்றும் உயிர்களே கொன்றேன்!*

[கோடிய—வளைந்த; நெறி தவறிய.]

என்ற வாக்கில், பழைய திருமங்கை மன்னருடைய வாழ்க்கைச் சித்திரமொன்று கிடைக்கிறது.

கூட்டம் கூட்டமாகப் போகும் நாய்களோடும், கோபாக்கினி வீசும் கண்களோடும், காடெங்கும் ஓடியும் சுழன்றும் திரிந்து வேட்டையாடும் வீரரைப் பார்க் கிறோம். இது போர் நடைபெறாத காலங்களில் பொழுது போக்கு. போர் வந்துவிட்டாலோ, அதிகமாக ஜொலிக் கும் கோபத் தீயும், கூட்டங் கூட்டமாகப் போகும் போர் வீரர்களும், மிருக வேட்டைக்குப் பதில் மனித வேட்டையும் தான்!

இந்த விதமாக,

*கொன்றேன் பல்லுயி ரைக்,குறிக்*
*கோள்ஒன் றிலாமையினால்!*

என்றார். 'அந்த நாளில் உயர்ந்த லட்சியம் எனக்குக் கிடையாது. நல்ல ஞானமில்லை. புத்தி கோணற் புத்தி யாகவே இருந்தது!' என்று சொல்லுகிறவர், மன ஒருமையோடு லட்சியத்தைக் கண்டதும்,—அதாவது, பகவத் ஸம்பந்தம் பெற்றதும்,

... ... ... ... ... ... *உயிர்க் கெல்லாம்*
*செற்றமே வேண்டித் திரிதர்வேன், தவிர்ந்தேன்!*
[செற்றம்—வெறுப்பு.]

என்று சொல்லுகிறார். ஹிம்ஸை நெறியை விட்டு விலகி அஹிம்ஸா தர்மமாகிய நேர்வழி பிடித்தார் பிற்கால வாழ்க்கையில் என்பது கருத்து.

இந்தக் கருத்தை விளக்கும்போது, பெரியவாச்சான் பிள்ளை சொல்வதைக் கேளுங்கள்: 'ஒருவனுக்கு பகவத் சம்பந்தம் உண்டு, இல்லை என்று தனக்கே

அறியலாமென்று பலகாலும் அருளிச் செய்வர் *ஜீயர். ஒருவன் நோவு படக் கண்டால் "ஐயோ!" என்று இரக்கம் பிறந்திருக்கில், "நமக்கு பகவத் சம்பந்தம் உண்டு" என்றறியலாம்; "அத்தனையும் வேணும்" என்றிருந்தானாகில், "நமக்கு பகவத் சம்பந்தம் இல்லை" என்றிருக்கலாம்.' எவ்வளவு எதார்த்தமான வாதம்! திருமங்கை யாழ்வார் கண்ட புதைபொருள் இது.

இதை அறியாத நிலையில் 'கற்றிலேன் கலைகள்!' என்று எண்ணினார். வாதப்போர் புரிவதிலும் செய்யுள் புனைவதிலும் வல்லவரான பெருந் தமிழ்ப் புலவராக இருந்தும் அவையல்ல கல்வியின் நோக்கம் என்று கண்டு, பக்தியையும் அஹிம்ஸா தர்மத்தையும் சத்தியத்தையுமே கலைப் பயிற்சியின் உயிர்நிலையாகக் கருதி ஒழுகி வந்தார். இதனால், இவர் 'கற்றார் பரவும் மங்கையர்கோன்' என்றும், 'அருள்மாரி' என்றும், 'அலைநீர் உலகுக்கு அருளே புரியும் †காரார் புயற்கைக் கலிகன்றி' என்றும் கொண்டாடப் பெற்றார்.

"வாள் வீசும் பரகாலர்' அஹிம்ஸா தர்ம வீரரானார். இந்த வீரம் முதிர முதிர, பகவத் சம்பந்தமும் முதிர்ந்து கனிந்து,

> *... ... காதல்செய்(து)என் உள்ளம்கொண்ட*
> *கள்வனை இன்று கண்டுகொண் டேனே!*

என்று குதூகலிக்கும் மகோந்நத நிலையில் கொண்டு விட்டது.

ஆசையோடு இவர் உள்ளத்தை அபகரித்துக் கொண்ட கள்ளன் கடைசியாக அகப்பட்டுக்கொண்

---

* ஜீயர்—நஞ்சீயர் என்ற ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்.

† காரார் புயற்கைக் கலிகன்றி—கரு மேகம் போன்ற வள்ளன்மையுடைய திருமங்கையாழ்வார்.

டான். அந்தக் கள்ளனைக் கண்டவர்களுக்குப் பாவ மேது? பிணி ஏது?

*அரும்பிணி பாவம் எல்லாம்*
*அகன்றன என்னை விட்டு!*

என்று ஆனந்தப்படுகிறார். பாவத்திலிருந்து இப்படித் திரும்பாதவர்கள், சாந்தி பெறாதவர்கள், ஒருமையுள்ளம் பெறாதவர்கள் ஞானத்தினால்கூட ஆத்ம ஸாட்சாத்காரம் பெற முடியாதென்று உபநிஷதம் சொல்லுகிறதல்லவா?

சக்திகளையெல்லாம் ஒருமுகப்படுத்திப் புது வாழ்வு பெறவும், லட்சியத்திற்கே மனமொழி மெய்களை அர்ப்பணம் செய்யவும், மேன்மேலும் உத்ஸாகப் படுத்துவதற்காக ஒரு சொல்—ஒரு மந்திரம்—தேவையாக இருந்தது இவருக்கு. தொண்டரடிப்பொடியாழ்வாரைப்போல் திருநாம வைபவத்தை அறிந்து,

*எம்பிரான் நாமம் நாளும்*
*ஏத்திநான் உய்ந்த வாறே*

என்று பாடுகிறவர் பகவானுடைய நாமங்களிலும் மகாமந்திரம் என்று சொல்லப்படும் நாராயண நாமத்தை தமது புதிய யுத்த கோஷமாக்கிக் கொண்டார். 'நாவலோ நாவல்!' 'அறையோ அறை!' என்பன போன்ற பழைய கோஷங்களுக்கு முன் எதிரிகள் ஓடி ஒளிந்தது போல், இந்தப் போர் முழக்கத்திற்கு முன் கெட்ட எண்ணங்களும், சுயநல விருப்பங்களும் ஓட்டம் பிடித்தன.

எனவே,

*நல்லா னுடைய நாமம் சொல்லில்*
*நமோநா ராயணமே!*

என்று சொல்லித் 'தேனும் பாலும் அமுது'மாக அந்த நாமத்தை அநுபவித்து,

*நற்றுணை யாகப் பற்றினேன் அடியேன்,*
*நாராய ணுஎன்னும் நாமம்*

என்று தாம் பகவத் சம்பந்தம் பெற்ற பகிரங்க இரகசியத்தை வெளியிடுகிறார்.

எவ்வளவு உருக்கமாக—எவ்வளவு உண்மையாக—இவர் பக்தி பண்ணினார், பகவந்நாம சங்கீர்த்தனம் செய்தார்!

*உள்ளெலாம் உருகிக் குரல்தழுத் தொழிந்தேன்;*
*உடம்பெலாம் கண்ணநீர் சோர,*
*நள்ளிருள் அளவும் பகலும்நான் அழைப்பன்,*
*நாராய ணுஎன்னும் நாமம்*

[தழுத்தொழிந்தேன் — தழுதழுக்கப் பெற்றேன்: தழுதழுத்தல்—பேச்சுத் தெளிவின்றித் தடுமாறுதல். சோர—சொரிய.]

என்ற வாக்கில் இவரது பிற்கால வாழ்க்கைச் சித்திரமொன்று கிடைக்கிறது.

திரௌபதிக்கு நூற்றுவர் எதிரில் புடவை சுரந்ததுபோல், இப்படிப்பட்ட பக்த சிரேஷ்டருக்கும் நாராயண நாமத்தின் மகிமையால் மகத்தான பகவத் பாகவத கைங்கரியங்களைத் தொடர்ந்து செய்யத் தக்க திவ்ய சக்தி சுரந்து கொண்டிருந்தது என்று ஊகிக்கலாம்.

நாராயண நாமத்தை நினைக்கும்போதே இதயம் நீராய் உருகத் தொடங்குகிறது. வாய்விட்டுச் சொல்லத் தொடங்கும் போதே குரல் தழுதழுத்துத் தடுமாறுகிறது. ஆனந்தக் கண்ணீர் மாலைமாலையாகப் பெருகுகிறது. அந்த நாமம் தெளிவில்லாமல்தான் வெளிப்படுகிறதாம்.

ஆனால் அது என்ன, அவ்வளவு தெளிவு—அவ்வளவு பிரகாசம்—உள்ளத்தின் ஆழத்திலே? ஹா! ஹா!! மந்திரம் கள்ளனைக் காட்டிக் கொடுத்துவிட்டது.

---

## 22. பக்தர் சொல்லும் காதற் கதைகள்

'கோழி கூவிப் பொழுது விடியும்' என்பார்களல்லவா? இவளோ, 'கோழி கூவுவதுமில்லை, பொழுது விடிவதுமில்லை!' என்று சாதிக்கிருள். 'சூரியன் எங்கே போய் ஒளித்துக் கொண்டதோ?' என்று அதிசயப்படுகிருள்.

சமுத்திரமும் தன்னைப்போல் உறக்கமில்லாமல் பித்துக்கொண்டு கத்துகிறதோ?—என்று சந்தேகப் படுகிருள். நிலாமுற்றத்திலே நிலாவை அநுபவிக்கப் போனல், 'அடடா, அந்தக் கிரணங்கள் சீறுகின்றன; என்ன செய்வேன்?' என்று பதறுகிருள். 'பெற்ற தாயும் சீறுகிருளே!' என்கிருள் ஒரு நிமிஷம்.

நெஞ்சைத் தொட்டுப் பார்த்துக் கைகளையும் பார்த்து, 'கள்ளன் உள்ளேதான் இருக்கிருன். எனினும் வளைகள் போய் விட்டன: என்ன மாயமோ?' என்கிருள் ஒரு நிமிஷம்.

'அவன் எண்ணும் எண்ணம் தான் என்ன? நமக்குத் தெரியவில்லையே' என்கிருள் ஒரு சமயம். 'அவன்தான் என்னை நினைப்பதேயில்லையே!' என்று பெருமூச்சு விடுகிருள் ஒரு சமயம். தென்றல் வீசும் போது, தீ வீசுகிறதென்கிருள்.

மழைவாடையாவது குளிர்ந்திருக்க வேண்டாமா? அதோ பாருங்கள் கறுத்துக் கொழுத்த மேகங்களை! இப்போது மழைத் துளிகள் விழுகின்றன, வானத்தின்

கண்ணீர்த் துளிகள்போல! அந்தத் துளிகளினூடே வருகிறது ஈர வாடை. ஆனால், 'அதில் ஈரமும் இல்லை; அது வாடையு மில்லை!' என்கிறாள். 'ஆ, என்ன குற்றம் செய்தேன்? மரம் அறுப்பது போல் என் உயிரை அறுத்துத் தள்ளுகிறதே!' என்று நடுங்கு கிறாள்,

இவ்வளவு கொடிய தண்டனைக்குரிய குற்றத்தை இவள் வாக்கு மூலமாகவே தெரிந்துகொள்வோம்:

*தாரும் மார்வமும் கண்ட தண்டமோ?*
*சோரும் மாமுகில் துளியி னூடுவந்(து)*
*ஈர வாடைதான் ஈரும் என்னையே!*

[தார்—மாலை. தண்டம்—தண்டனை. சோரும்—விழும். மாமுகில்—கரிய பெரிய மேகங்கள். ஈரும்—ரம்பம் போட்டு இழுத்து அறுப்பதுபோல் அறுக்கும்.]

'அந்த மாலையும் மார்பும் கண்டதற்கு இவ்வளவும் வேண்டியதுதான்!' என்று துயரப் படும்போதே, மழையும் அதிகப்படுகிறது. கண்ணீரும் மழைபோல் பெருகுகிறது. ஐயோ! 'ஒரு நாள் நோவுபட்டாள், ஒரு நாள் சுகமாயிருந்தாள்? என்பது'ண்டா?

இப்படி ஆற்றாமை கரை புரண்டு தத்தளித்துக் கொண்டிருக்கும் காதலியை மறுபடியும் பூங்காவனத்திலே பார்க்கிறோம். 'எரிகிற நெருப்பைச் சென்று கிட்டுவாரைப் போலே' நெருங்குகிறாள் அந்தப் பூக்களை!

அவற்றினிடையே 'நாயகனும் நாயகியு'மாகத் தேனுண்டு மகிழும் வண்டுகளை நோக்குகிறாள். ஒரு கணம் பெண் வண்டை முன்னிட்டு முகஸ்துதி

செய்து, 'நீ தூது போய் என் நிலைமையை எடுத்துச் சொல்ல வேண்டும்!' என்று வேண்டிக் கொள்கிறாள். அடுத்த நிமிஷம் ஆண் வண்டையும் தொழுது தூது விடுகிறாள். அவன் குறிப்பை அறிந்து வரும்படி, தான் அங்கே கண்ட வேறு பறவைகளையும் தூதனுப்பு கிறாள்.

போன வண்டு வருமளவும் பொறுத்திருக்க முடியாமல்,

*செங்கால மடநாராய்! இன்றே சென்று*

... ... ...

*என்காதல் என்துணைவர்க்(கு) உரைத்தி யாகில்,*
*இதுஒப்ப தெமக்கின்பம் இல்லை ...*

[செங்கால மட நாராய்—சிவந்த கால்களும் அறியாமையும் உடைய நாரையே.]

என்று நாரையை நோக்கி வேண்டுவதைப் பாருங்கள்.

தூதனுக்குக் கூலியுண்டல்லவா? 'சோலையைச் சேர்ந்த காட்டை ஏகபோகமாகத் தருவேன்!' என்று தாராளமாக வாக்குக் கொடுக்கிறாள். இனி நாரை பல இடங்களிலும் அலைந்து திரியவேண்டியதில்லையாம்.

*இங்கேவந்(து) இனிதிருந்(து)உன் பெடையும் நீயும்*
*இருநிலத்தில் இனிதின்பம் எய்தலாமே*

என்று இன்பத்திற்கு இன்பம் கைம்மாறு தருவதாகச் சொல்வதும், இவளுக்கு ஒரு பணி செய்து இவ்வளவு லேசாகத் தான் இன்ப வாழ்க்கை பெறலாமென்பதை அறியாமலிருக்கும் நாரையை 'மட நாராய்!' என்று நிந்தாஸ்துதி செய்வதுபோலக் கொண்டாடுவதும், எவ்வளவு சாதுரியமா யிருக்கின்றன!

தன் காரியம்தான் இவளுக்குப் பெரிது: பட்சி ஜாதிக்கும் சொந்தக் காரியங்கள் இருக்குமே என்ற கவலை கிடையாது. ஏற்கெனவே விட்ட தூதுகளோடு திருப்தி அடையாமல், காக்கையைக் கண்டதும்,

*கரையாய், காக்கைப் பிள்ளாய்!*
*கருமா முகில்போல் நிறத்தன்*
*உரையார் தொல்புகழ் உத்தம னவரக்*
*கரையாய், காக்கைப் பிள்ளாய்!*

என்று வாய்மணியம் செய்வதைப் பாருங்கள்.

தனக்கு உபகாரம் பண்ண வேண்டிய அந்தப் பிராணியைக் 'காக்கைப் பிள்ளாய்!' என்று அருமையாகவும் அழைத்து, 'நீ வீணுகக் கத்துக் கொண்டிராமல், என் காதலன் வரும்படி அந்தக் "கா-கா பாஷை" யிலே "சிபார்சு" செய்வாய்!' என்று வேண்டிக் கொள்கிருள்.

குயில் கூவுவதைக் கேட்டதும், அந்த உருக்கமான குரலிலேயே தன் காதலன் வரக் கூவவேண்டு மென்கிருள் இந்தக் காரியவாதி. பச்சைக் கிளியைப் பார்த்ததும், 'ஓ, கிளிப்பிள்ளாய்! உனக்குத்தான் பேசத் தெரியுமே; இனிமையாக ஒரு வார்த்தை சொல்ல வேண்டும் எனக்காக' என்று கொஞ்சுகிருள்.

மோகம் முற்றிப் போகிறது. தான் ஏதோ சொல்வதாகவும் அவன் பதில் சொல்வதாகவும் சில வார்த்தைகள் புறப்படுகின்றன காதலி வாயிலிருந்து, தாய்மார் தோழிமார் முன்னிலையில்! 'இது என்ன பிரமை?' என்று அவர்கள் கேட்க, இவள் சொல்லுகிருள்:

*'காவிஐப் பார்,கட லேயும் ஒப்பார்,*
*கண்ணும் வடிவும் நெடியராய், என்*
*ஆவிஐப் பார்இவர் ஆர்கொல்?' என்ன*
*'அட்ட புயகரத் தேன்' என்ருரே!*

[காவி—ஒரு நீலமலர். அட்டபுயகரம்—காஞ்சீ புரத்தைச் சார்ந்த ஒரு ஸ்தலம்.]

'இவர் யார்?—என்று ஒரு பக்கமாகத் திரும்பி வேறு யாரையோ கேட்பதுபோலக் கேட்டேன். உடனே "நான்தான்; தெரியவில்லையா?" என்று ஊரைச் சொன்ஞர்' என்ற வார்த்தையிலிருந்து, பக்கத்திலிருந்தவர்கள் காதலியின் நிலையைக் குறித்தும், காதலன் விஷயமான சில விவரங்களைக் குறித்தும் உள்ளபடி ஊகஞ் செய்திருக்கக்கூடு மல்லவா?

எனவே தாய்,

*கண்டவர்தம் மனம்வழங்கும் கண்ணபுரத்(து)*
*அம்மானைக் கண்டாள் கொலோ?*

[அம்மான்—சுவாமி.]

என்று ஆச்சரியப்பட்டு, அப்படிக் கண்டிருந்தால்தான் இவள் தன் மனத்தை அந்த அழகனுக்கே இப்படி வழங்கியிருக்கக்கூடும் என்று அபிப்பிராயப் படுகிருள்.

கடைசியாகத் தாய் காதலியைக் காதலனுக்குச் சுட்டிக் காட்டி 'இவள் விஷயத்திலே நீ என்ன செய்ய நினைத்திருக்கிருய்? சொல்லு, எங்கள் பயம் தீரும்படி' என்று கேட்கிருள். இப்படிக் கேட்கும்போதே, 'எப்படி இருந்தவள் எப்படி மாறிவிட்டாள்!' என்பதையும் சொல்லுகிருள்:

*துளம்படு முறுவல்*
*தோழியர்க்(கு) அருளாள்*

[துளம்—மாதுளை. படு—தோன்றும்.]

என்கிறாள். பற்கள் சிறிது தோன்ற ஒரு புன்சிரிப்புச் சிரிப்பாளாம், தோழிகளை நோக்கி. அப்போது அந்தப் பற்கள் மாதுளை விதை போலத் தோன்றும்; அந்தப் புன்சிரிப்பு அந்தத் தோழிகளுக்கு ஏதோ ஒரு தெய்வமே அப்படி வந்து அருள் செய்வதுபோல் இருக்குமாம்.

அது இப்போது கனவாய்க் கதையாகிவிட்டது. கண்கள் மை கண்டு, கூந்தல் மலர் கண்டு, எவ்வளவோ காலமாகிவிட்டது! சந்தனம் பூசி முத்து மாலை அணிந்தாலும், நெருப்பை வாரிக் கொட்டுவது போலவே இருக்கிறது! சில சமயங்களில் ஒன்றும் சொல்லத் தெரியாமல் 'ஓ!' என்று கதறுகிறாள். அதற்கு மேல் ஏதாவது சொல்ல நேர்ந்தால், 'என்ன செய் வேன்? சொல்லுங்கள்' என்ற புலப்பம்தான்! காதலன் பெருமையைச் சொல்லத் தொடங்கிவிட்டாலோ 'அப்படிச் செய்தான்; இப்படிச் செய்தான்' என்று விரிவாகச் சொல்லிக்கொண்டே இருக்கிறாளாம்.

இப்படி யெல்லாம் சொல்லிக் காட்டி,

*ஏழைஎன் பொன்னுக்(கு)*
*என்னினைந் திருந்தாய்?*

என்று பெற்றவள் இதயம் பரிதவிக்கும் காட்சி எவ்வளவு நன்றாக அமைக்கப்பட்டிருக்கிறது!

ஆனால், காதற் கதைகளில் பெரும்பாலும் தாய் இந்த விதமாக நடந்துகொள்வதில்லை.

*பந்தாடு கழல்மருவாள்; பைங்கிளியும்*
*பாலூட்டாள்; பாவைபேணுள்!*

[கழல்—பெண்கள் விளையாட உபயோகிக்கும் கழற்சிக் காய்கள். மருவாள்—நெருங்க மாட்டாள். பாவை—பொம்மைகள். பேணுள்-விரும்பமாட்டாள்.] என்றும்,

*அந்தோ! வந்(து) என்மகளைச் செய்தனகள்*
*அம்மனைமீர்! அறிகிலேனே*

என்றும் பக்கத்து வீடுகளிலுள்ள ஸ்திரீகளிடம் புகார் செய்கிறவள், 'நம் குடிக்கு இதுவோ நல்லது?' என்று காதலைத் தடுக்க முயல்வதுமுண்டு.

*என்சிறகின் கீழடங்காப்*
*பெண்ணைப் பெற்றேன்,*
*இருநிலத்(து)ஓர் பழிபடைத்தேன்:*
*ஏ, பாவமே!*

என்று பிறரிடம் முறையிட்டுக் கொள்ளும் தாய்க்கும் பெண்ணுக்கும் அந்தரங்கம் இருக்க முடியுமா?

'என் பேதை என் சொல் கேளாள்' என்று சொல்லுகிறவள் காதலை அறியாதவள் என்று தானே காதலி முடிவுகட்டுவாள்? தாயிடம் விசேஷ அன்புள்ள வளாய் இருந்தால், 'என்ன செய்தால் மறக்கலாம்? மனமே!' என்று தற்சோதனை செய்து பார்க்கக்கூடும். மறக்கும் முயற்சி ஞாபகத்தைக் கூராகத் தீட்டிவிடுவது முண்டு; கேள்வியும் சோதனையுமே மனத்தைச் சுடுவது முண்டு.

துணிந்த காதலி அந்த மனமே துணையாகக் காதலனிடம் சொல்லுகிறுள். தாயின் துயரம் அதிகப்

படுகிறது. 'என்ன காரியம் செய்தாள்? எப்படித் துணிவு வந்தது?' என்று கலங்குகிருள். காதலனையே துணையாகக் கொண்டுதான் போனுளென்று தெரிந்தாலும்,

*கெண்டைஒண் கண்மிளி ரக்கினி*
*போல்மிழற் றிநடந்து*

[கெண்டை—ஒருவகை மீன். ஒண்கண்—இயற்கை யழகு வாய்ந்த கண்கள். மிழற்றி—கொஞ்சிப் பேசி.] அவன் பின் எப்படிப் போயிருப்பாளோ?—என்ற கவலை தாயின் நெஞ்சை விட்டு நீங்குவதில்லை.

'பெற்றவள் என்ற இரக்கமில்லையே! என்மேல் இரக்கமில்லாவிட்டாலும் தந்தையைக் குறித்தாவது இரக்கப்படலாகாதா?' என்று ஏங்குவாள். அவள் இருந்து ஆடிய ஊஞ்சலும் விளையாட்டுச் சாமான் களும் அவளை ஞாபகப்படுத்திக்கொண்டே இருக்கும்.

*மின்னையும் வஞ்சியும் வென்றிலங்*
*கும்இடை யாள்நடந்து*

போகும் அழகையும், 'அன்னமென நடந்து' போன 'பூங்கொடியாள்' கொடுமையையும் எப்படி மறக்கும் அந்தப் பேதை நெஞ்சு!

இதோ பாருங்கள், காதலனை எதிர்பார்த்து நீண்ட நேரமாகக் காத்திருக்கும் ஒரு காதலியை. முதல் முதல் தானும் அந்திப்பொழுதுமாய் இருந்தாள், சிந்தையை அவனிடம் அனுப்பிவிட்டு. பிறகு தோழி வந்தாள். அவள் வந்ததை அறிந்து, 'நாம் இதற்கு என்ன செய்வோம்?' என்று துயரத்தை அவளோடு பங்கு போட்டுக்கொள்ளப் பார்க்கிருள் ஒரு கணம்.

அடுத்த கணத்திலேயே அவளையும் மறந்தவள் போல,

*ஊரும் துஞ்சிற்(று), உலகமும் துயின்ற(து);*
*ஒளியவன் விசும்பியங்கும்*
*தேரும் போயிற்று, திசைகளும் மறைந்தன;*
*செய்வதொன்(று) அறியேனே!*

[துஞ்சிற்று, துயின்றது—உறங்கியது. ஒளியவன்—சூரியன். விசும்பு—ஆகாயம்.]
என்று பிரலாபிக்கிருள்.

இப்போது இரவும் தானும் தோழியுமாக இருந்து,

*கரிய நாழிகை, ஊழியிற் பெரியன,*
*கழியுமா(று) அறியேனே!*

என்று கதறுகிருள். ஒவ்வொரு நாழிகையும் யுகங்களைக் காட்டிலும் நீளமாகப் போய்க்கொண்டேயிருந்தால் இரவு கழிவதுதான் எப்படி?

இவள் தன்னுடைய காதலனைக் குறித்துத் தோழியிடம் பிரஸ்தாபிக்கும்போது,

*... ... என்மனமும் கண்ணும்ஓடி*
*எம்பெருமான் திருவடிக்கீழ் அணைய, இப்பால்*
*கைவளையும் மேகலையும் காணேன்; கண்டேன்*
*கனமகரக் குழைஇரண்டும் நான்கு தோளும்!*
*'எவ்வளவுண்(டு) எம்பெருமான் கோயில்?' என்றேற்(கு)*
*'இதுவன்றே எழில்ஆலி' என்றார் தாமே*

[எழில் ஆலி – அழகான திருவாலி என்ற ஊர்.]

என்று பழைய அநுபவத்தைச் சொல்லுகிருள்.

அவனைக் கண்டதும் தலை குனிந்து அவன் அடிகளையே நோக்கினாளாம்; காதலுணர்ச்சி அதிகப்பட்ட

தும் இன்னது செய்கிறோமென்று தெரியாமலே நிமிர்ந்து பார்த்தாளாம், குண்டலங்களோடு கூடிய முக மண்டலத்தையும் வீரத் தோள்களையும். 'எவ்வளவு தூரத்தில் இருக்கிறது உன் இருப்பிடம்?' என்று கேட்டதற்கு, 'இந்த அழகான ஊர் நம்முடைய ஊர் தான்' என்று சுட்டிக் காட்டினனும். பிறகு,

*என்நலனும் என்நிறையும்*
*என்சிந் தையும்*
*என்வளையும் கொண்டென்னை*
*ஆளுங் கொண்டு,*
*பொன்அலர்ந்த நறுஞ்செருந்திப்*
*பொழிலி னூடே*
*புனல்அரங்கம் ஊரென்று*
*போயி னரே!*

[நலன் - அழகு. பொன் அலர்ந்த - பொன் போலே மலர்ந்த.]

என்கிறள்.

அவனை இனி எங்கேயாவது காணலாமென்ற நம்பிக்கை உண்டா? அப்படியானல் பழைய அநுபவத்தை நினைத்து ஜாக்கிரதையாக நடந்து கொள்ளலாமல்லவா? அந்த நம்பிக்கையையும் தன் உத்தேசத்தையும் சேர்த்து இவள் தோழியிடம் வெளியிடுவதைக் கேளுங்கள் :

*கள்ளூரும் பைந்துழாய் மாலை யானைக்*
*கனவிடத்தில் யான்காண்பன்; கண்ட போது*
*'புள்ளூரும் கள்வா! நீ போகேல்' என்பன்*

[கள் ஊரும்—தேன் பெருகும். புள் ஊரும்—கருடனை வாகனமாய் நடத்தும். போகேல்—போகாதே.]

இந்த வார்த்தையில் கள்ளங் கவடற்ற—காதல் நிறைந்த—குழந்தை யுள்ளத்தைப் பார்க்கிறோம்.

'அவனை என் இருதயத்தில் பூட்டிக் கொண்டு வெளியே விடமாட்டே' னென்றும், 'எப்போதும் அவனையே நினைத்து நினைத்து உருகிக் கொண்டே யிருப்பே'னென்றும் இவள் சொல்லும்போது, நாமும் தோழியைப் போல் இத்தகைய காதலியை இந்த வித மாகத் தவிக்கவிட்ட காதலன்மீது ஆத்திரமடைகிறோம்.

காதலி உருகி உருகிக் காதலனைப் பாடிக் கொண் டிருக்கிறாள். இதைக் குறித்துத் தாய் மற்ற ஸ்திரீக ளோடு பேசும்போது,

*சொல்லுயர்ந்த நெடுவீணை முலைமேல் தாங்கித்*
*தூமுறுவல் நகைஇறையே தோன்ற நக்கு,*
*மெல்விரல்கள் சிவப்பெய்தத் தடவி, ஆங்கே*
*மென்கிளிபோல் மிகமிழற்றும் என்பே தையே!*

[தூமுறுவல்—சுத்தமான புன்சிரிப்பு. நகை—(இங்கே) பல்வரிசை. இறையே—கொஞ்சமாக. நக்கு-சிரித்து.]

என்று தன் பேரன்பு தோன்ற எவ்வளவு உருக்கமாகச் சித்தரிக்கிறாள்!

தன் ஆருயிர்ப் புதல்வியின் அருமையான ஸ்பரிச விசேஷத்தால் வீணைக்கே ஒரு புதிய நாதம் உண்டாகி விட்டதாம். அதை அவள் மார்போடு அணைத்துக் கொண்டு அந்த நெஞ்சிலுள்ள காதலையே இசையாகக் கொட்டும்போது, வீணை பேசுவதற்குக் கேட்பானேன்? அந்த வீணுகானத்தோடு கிளிபோலக் கொஞ்சும் குரல் எவ்வளவு அற்புதமாக இசைந்து விட்டது!

அப்போது அருகேயிருந்த கிளியும் இவள் காதலன் பேரைச் சொல்லிப் பாடத் தொடங்குகிறதாம். உடனே மகிழ்ச்சி பொங்குகிறது காதலிக்கு.

*வளர்த்ததனுல் பயன்பெற்றேன்; வருக என்று*
*மடக்கிளியைக் கைகூப்பி வணங்கி ஞளே!*

என்று சொல்லி முடிக்கிருள் தாய்.

கதைகள் எப்படி? திருமங்கையாழ்வாரின் பக்திக் காதல்தான் இப்படிப்பட்ட காதற் கதைகளாகப் பரிண மித்திருக்கிறது.

---

# 23. திருமங்கை மன்னர் தேச யாத்திரை

'ஆலி நாடர் வந்தார்! அருள்மாரி வந்தார்! [1]மங்கை வேந்தர் வந்தார்! நம் [2]கலியர் வந்தார்! [3]நாலுகவிப் பெருமாள் வந்தார்! நீல நிறத்து [4]நிமலர் வந்தார்! [5]கொற்றவேற் பரகாலர் வந்தார்! [6]பரவாதி மத்தகஜ கண்டீரவர் வந்தார்!' என்று முழக்கிக் கொண்டு வந்தார்கள் பரிஜனங்கள்.

'முத்தமிழுக்கும் நாலு வேதங்களுக்கும் மன்னர் இவரே!' என்று சிலர் எக்காளங்களையும் சங்குகளையும் எடுத்து ஊதினார்கள். வேறு சிலர் ஜயபேரிகை கொட்டி ஜய கோஷம் செய்தார்கள்.

வட இந்தியாவில் சில முக்கியமான க்ஷேத்திரங்களைத் தரிசித்துத் தென் இந்தியாவிலும் யாத்திரை செய்து விஷ்ணு கோவில்களைத் தரிசித்துக்கொண்டு, வேத நிந்தனை பாகவத நிந்தனை செய்த புறச்சமயிகளை வாதில் வென்று ஸ்ரீவைஷ்ணவத்தைப் பிரகாசிப்பித்து வரும் திருமங்கையாழ்வார் ஊருக்குத் திரும்பிவிட்டாரென்றால், உத்ஸாகத்திற்குக் குறைவுண்டா?

---

1. மங்கை வேந்தர்—திருமங்கை என்ற நகரத்தின் அரசர். 2. கலியர்—சேனைத் தலைவர். 3. நாலுகவிப் பெருமாள்—ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் பாட வல்லவர். 4. நிமலர்—கள்ளங் கவடில்லாதவர்: சுத்தர். 5. கொற்றவேற் பரகாலர்—வெற்றியைத் தரும் வேலையுடையவரும், பகையரசர்களுக்கு யமன்போலிருந்தவருமான திருமங்கை மன்னர். 6. பரவாதி மத்தகஜ கண்டீரவர்—எதிரிகளான மத யானைகளுக்குங் சிங்கம் போன்றவர்.

சீர்காழியை நெருங்கிவிட்டது பரகாலப் பெரு வெள்ளம். அப்போது அந்த ஊர்வாசிகளில் சிலர் திடீரென்று தோன்றி, 'எங்கள் சமயாசாரியர் உள்ள இடத்தில் நீங்கள் இப்படி யெல்லாம் விருதூதிப் போகலாகாது' என்று தடுத்தார்களாம்.

பிறகு ஆழ்வாரும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் சந்தித்தபோது, சீடர்கள் ஒரு பெரிய வாதப் போரை எதிர்பார்த்தார்கள். சம்பந்தமூர்த்திகளோ விளையாட்டாக, *'ஒரு குறளைப் பாடுங்கள், இவர்கள் தங்கள் கவித் திறத்தைக் காணும்படி!' என்று வேண்டிக் கொண்டாராம். அவர் குறிப்பை அறிந்த திருமங்கை மன்னரும் 'ஒரு குறளாய்' என்று தொடங்கி, மகாவிஷ்ணுவின் வாமனவதாரத்தையும் அந்த க்ஷேத்திரத்தையும் ஒருங்கே சிறப்பித்து ஒரு விருத்தம் பாடினாராம். அப்படியே மளமள வென்று பத்து விருத்தங்களைப் பாடி அவற்றை அந்த ஊர்ப் பெருமாளுக்கு ஒரு தமிழ் மாலை ஆக்கினார்.

இந்த ஆழ்வார் பாடல்களில் பலவும் சைவர்களுக்குச் சம்பந்தர் பாடல்களின் எதிரொலி போல் கம்பீரமாகத் தோன்றின. இயற்கை யழகுகளும் இறைவனுடைய அழகுகளும் அலங்காரமான சப்த ஜாலங்களோடு கணீர்-கணீர் என்று வெண்கல மணி அடிப்பது போன்ற குரலில் வெளிப்பட்டதைக் கேட்டவர்கள், 'தகும், தகும் இவருக்கு இந்த விருதுகளெல்லாம்' என்று ஏக கண்டமாக ஒப்புக்கொண்டு உபசரித்தார்களாம்.

---

* ஒரு குறளை—ஒப்பற்ற வாமன வடிவம் கொண்ட பெருமானை.

அப்பால் திருஞானசம்பந்தர் ஆழ்வாரை,

*படிஉண்ட பெருமானைப்*
*பறித்துப் பாடிப்*
*பதம் பெற்ற பெருமானே!*

[படி உண்ட பெருமான்—விஷ்ணு. பறித்து—வழிப்பறி செய்து.]

என்று விளித்து, காதலன் வரவு கண்ட காதலியின் நிலையைத் தாய் அறிவிப்பதாக ஏதோ ஒரு கதை சொல்வதுபோல்,

*... ...தமியேன் பெற்ற*
*கொடிஒன்று நின்பவனிக்(கு)*
*எதிரேசென்று கும்பிட்டாள்,*
*உயிர்ஒன்றும் கொடுவந்தாளே!*

என்று சொன்னாராம்.

'திருமாலையே வழிப்பறி செய்து அவருடைய பரமபத ராஜ்யத்தையும் பறித்துக்கொண்டவரே! உம்முடைய பவனிக்கு எதிரே போன என் பெண் கொடியையும் இப்படி வழிப்பறி செய்யலாமா? திரும்பி வரும்போது உயிரொன்றுதானே கொண்டுவந்தாள்; ஐயோ, அவள் இதயத்தையும் பறித்துக்கொண்டீரே!' என்ற தாயார் வாக்கில் தம்முடைய இதயத்தை மறைத்து வைத்து, அவர் வருகை தம்மை எப்படி உருக்கிவிட்ட தென்பதைத் திருஞானசம்பந்தர் ஒருவாறு ஹாஸ்ய உணர்ச்சியோடு கலந்து வெளியிட்டார் என்று ஊகித்துக்கொள்ளலாம்.

திருமங்கை யாழ்வாரும், தம்மைப்போல் நாஸ்திக வாதங்களைக் கண்டித்து நாட்டிலே அன்புக் கொள்கை

யைப் பரப்பி வந்த 'திருஞானசம்பந்தரைக் காண வேணும், காணவேணும்!' என்று தவித்துக்கொண் டிருந்தாராம். அந்தத் தவிப்பைத் தாமும் காதல்-துறையிலே அமைத்து வெளியிட விரும்பி,

*அருள்குலவு மயிலேதனில்*
*அனலால் வெந்த*
*அங்கத்தைப் பூம்பாவை*
*ஆக்கி னேம்என்(று)*

*இருக்கும்அது தகவன்று;*
*நிலவால் வெந்த*
*இவளேயும்ஓர் பெண்ஆக்கல்*
*இயல்பு தானே*

என்று காதலனைக் காணது வருந்திய காதலியின் தன்மையைத் தாய் அறிவிப்பது போலத் தாமும் ஒரு கதை சொன்னராம்.

ஆழ்வார் கடவுளேயே கொள்ளேயடித்துப் பதவி பெற்ற அற்புதத்தை நாயனர் கேள்விப்பட் டிருந்தது போல், மயிலாப்பூரில் (பாம்பு கடித்து இறந்து) தகனம் செய்யப்பட்ட பூம்பாவை என்ற பெண்ணின் எலும்பு களேயும் சாம்பலேயும் இவர் முன்போல் பெண்ணுக்கி வைத்த அற்புதத்தையும் ஆழ்வார் கேள்விப்பட்டிருந் தாராம். எனவே, தாமும் அதை வைத்துக்கொண்டு கொஞ்சம் ஹாஸ்யமாகவே, 'அனலால் வெந்த உடம்பைப் பூம்பாவை ஆக்கிய அற்புதம்கூட உமது தகுதிக்கும் பெருமைக்கும் ஏற்றதன்று; உம்மை நினேத்துக் கொண்டிருந்தவளோ நிலவினுலேயே வெந்து போனுள்; இவளேயும் ஒரு பெண்ணுக்கித் தரவேணும்!' என்று தமது நட்புக் காதலேயும் குறிப்பிட்டாராம்.

இந்த ஆழ்வார்-நாயனுர் நட்பும் சந்திப்பும் தமிழர்கள் மனேபாவத்திலே இப்படி ஒரு ரஸமான கதையாக வளர்ந்திருக்கின்றன. வைஷ்ணவ குரு பரம்பரைகளெல்லாம் சந்திப்பை ஒருமுகமாக வற்புறுத்துகின்றன; சிநேகத்தையும் வற்புறுத்து கிறது திவ்ய சூரி சரிதம் என்ற பழைய நூல்.

இருவரும் வேதோபநிஷதங்களை மூல பொக்கிஷ மாகக் கொண்ட ஆஸ்திக சமயத்தை நிலைநிறுத்தப் பாடுபட்டார்கள். இவர்களுடைய பக்திக் கொள்கை களில் நாம் ஒற்றுமை காண்பது போல், பாடல்களின் அமைப்பு முறைகளிலும், சாமானிய விஷயங்களையும் வாக்கு வளத்தால் கனக்கப் பேசும் தோரணையிலும், வருணனைகளிலும் கூட ஒற்றுமை காணலாம். உதாரணமாக,

*கொல்லை முல்லை*
*மெல்லரும்(பு) ஈனும்*
*குற்றுலம்*

என்ற சம்பந்தமூர்த்திகளின் குற்றுல வருணனை அப்படியே திருமங்கை மன்னர் வாக்கில்,

*கொல்லை முல்லை*
*மெல்லரும்(பு) ஈனும்*
*குறுங்குடியே*

என்ற திருக்குறுங்குடி வருணனையாகிவிடுகிறது.

இவ்வளவு ஒற்றுமையோடு அடுத்த ஊர்களில் வாழ்ந்து தேசப் பிரசித்தி பெற்றிருந்த மெய்யன்பர்கள் இருவரும் இதய ஒற்றுமையான பரஸ்பர நேசத் தோடு அளவளாவிக்கொண்டார்கள் என்பது சைவ

வைஷ்ணவ சமரசத்தை நாடும் தமிழர் உள்ளங்களைக் குளிரச் செய்கிறது. ஆனால் இந்த நட்பு அந்த நாளி லேயே சைவ-வைஷ்ணவ நட்பாக மலராதது தமிழ் நாட்டின் துரதிர்ஷ்டம்தான்.

திருமங்கை மன்னர் வட இந்தியாவில் இமயமலைச் சாரிலுள்ள க்ஷேத்திரங்களையும் தரிசித்தார். (ஆல்மோரா ரயிலடிக்குச் சுமார் 135 மைல் தூரத்தில்) இப்போது நந்தப்ரயாகை என்று சொல்லப்படும் திவ்ய ஸ்தலத்திலிருந்து இயற்கையின் பனிக் கோயிலான மலையரசையும் மலையருவிகளையும் அங்கே இருந்த விஷ்ணு கோயிலோடு சேர்த்துப் பாடுகிறார்.

ஹரித்வாரத்திற்கு வட கிழக்கே 175 மைல் தூரத் தில் உள்ள பத்ரிகாசிரமத்தை வருணிக்கிறார். வேதம் போல நித்தியமான ஜீவ நதி என்று கருதப்படுவதும், ஆகாசத்திலே வெண்ணிறமான (கொடிகளின்) துணி போல விரிந்து மலைபிளந்து போகும்படி முட்டிப் பூமி நடுங்கும்படி பல முகமாக ஓடும் நீர் நிறைந்த பள்ளங் களை உடையதுமான கங்கை ஆற்றையும், பொன்னோடு புண்ணியம் விளைக்கும் அதன் கரைகளையும் வருணிக் கிறார். கண்டகி நதி தீரத்திலும் நைமிசாரணியத்திலும் பக்தி பண்ணுகிறார்.

மலைகளையும் காடுகளையும் பகவானாகவே காண் கிறார். ஸ்ரீராமன் பிறந்த அயோத்தியையும், ஸ்ரீ கிருஷ் ணன் பிறந்து வளர்ந்த வட மதுரை, ஆய்ப்பாடி, துவாரகை முதலான தலங்களையும் கண் குளிர நோக்குகிறார்.

பிறகு அகோபிலம் என்ற சிங்கவேள் குன்றத்திற்கு வந்து நாய்கள், கழுகுகள், புலிகள், யானைகள், —

வேடர்களின் ஆரவாரங்கள் - தேய்ந்த மூங்கில்கள் - காட்டுத் தீ - சில்லென்ற ஓசைகள், இவற்றுக்கிடையே காட்சி வழங்கும் நரசிங்கப் பெருமாளைத் தொழுகிறார்.

தமிழ் நாட்டின் வட எல்லையான திருப்பதி மலையை அடைந்ததும், கடவுளோடு நெருங்கி உறவு கொண்டாடத் துணிந்து, 'அப்பா!' என்றும், 'அண்ணா!' என்றும், 'ஆரா அமுதே!' என்றும், 'சிந்தா மணியே!' என்றும் ஆசைதீர அழைத்து, 'அடியேனை ஆட்கொண்டருளவேணும்' என்று பிரார்த்தனை செய்துகொள்கிறார். தென்னாட்டுக்குத் திரும்பியதும் உள்ளம் உருகி உருகிப் பக்தி ஒரு கங்கையாகப் பெருகுகிறது.

பேயாழ்வார் தோன்றிய தலமான மயிலாப்பூருக்கு மிக அருகிலுள்ளதும், திருமழிசை யாழ்வார் கொஞ்ச காலம் பக்தி பண்ணிக் கொண்டிருந்ததுமான திருவல்லிக்கேணியில் தாமும் பக்தி பண்ணிப் பார்த்தசாரதியின் அருமை பெருமைகளைப் பாடி விட்டுப் பூதத்தாழ்வார் தோன்றிய மாமல்லபுரத்திற்குப் போகிறார்.

கடல்மல்லை என்று அந்நாளில் பிரசித்திபெற்றிருந்த அந்தப் பெருந் துறைமுகப் பட்டினத்தின் பொருட் செல்வங்களையும் அழகுச் செல்வங்களையும் திருமங்கை மன்னர் நன்றாகப் பார்த்திருக்கவேண்டும். எனினும், பக்தர்களால் பொன்னைக் காட்டிலும் விலை உயர்ந்ததாகப் போற்றப்பட்டு வந்த பக்திச் செல்வமே இவரது விசேஷ கவனத்திற்கு உரியதாகிறது.

அங்கே ஒரு பெரும் பாறையில் கலா நிபுணர்களும் இரசிகர்களும் பிரமிக்கும்படி செதுக்கப் பெற்றிருக்கும் சிற்பத் தொகுதி ஒன்று, கங்கை கொணர்ந்த பகீரதப் பிரயத்தனத்தைக் குறிக்கிறது. இந்தப் பெருஞ் சிற்பத் திற்குப் பக்கத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் கோவர்த்தன மலையைக் குடையாகக் கவித்து மனிதர்களையும் மாடு களையும் காப்பாற்றிய கதை ஒரு குகைக் கோயிலில் சிற்பமாகக் காட்டப்பட்டிருக்கிறது. மகாவிஷ்ணுவும், சிவபெருமானும் லோகோபகாரமாகச் செய்த அற்புதங் களைக் குறிக்கும் இச் சிற்பங்கள், முற்காலத்தில் இந் நாட்டிலே சைவ வைஷ்ணவ வித்தியாசங்கள் அதிக மாக இல்லையென்றும் அறிவிக்கின்றன அல்லவா?

இத்தகைய சமரச பக்தியை வெளியிடும் சிற்பச் செல்வத்திற்குப் பேர்பெற்ற மாமல்லபுரத்தில் மகா விஷ்ணு சிவபெருமானோடு இணங்கிக் கோயில் கொண் டிருப்பதாகப் பாடுகிறார் திருமங்கை யாழ்வார். பின்ன ளிலேதான் இந்த இணக்கத்தைச் 'சேராச் சேர்த்தி' யென்று சைவ வைஷ்ணவர்கள் கருதத் தொடங்கி யிருக்கவேண்டும்.

தொண்டை நாடு நடுநாடு கடந்து திருமங்கை யாழ்வார் சோழ நாட்டில் 'கோயில்' என்றும், 'பூலோக சிவலோகம்' என்றும் சைவர்களால் போற்றப்படுவ தும், வைஷ்ணவர்களால் 'தில்லைத் திருச்சித்திரகூடம், என்று மதிக்கப்படுவதுமான சிதம்பரத்திற்கு வந்தார். காயக்கிலேசம் முதலான ஜைனக் கொள்கைகளைக் கண்டித்துத் தீவினைகளை ஒழிப்பதற்குப் பக்திமார்க் கமே சிறந்த மார்க்கமென்று போதித்தார். அங்கே யிருந்து இவர் சீர்காழி வழியாகப் போகும்போதுதான்

திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளைச் சந்திக்க நேர்ந்தது.

சீடர்கள் ஜயமங்களம் பாடத் தமது பிறப்பிடத்திற்கு அருகிலுள்ள திருவாலியை அடைந்து அவ்வூரிலும், தமது தேவியின் பிறப்பிடமான திருவெள்ளக்குளம் முதலான தலங்களிலும் கோயில்கொண்டிருக்கும் இஷ்டமூர்த்தியைப் போற்றிப் பாடினர்.

பிறகு தமது 'பூலோக வைகுண்ட'மான ஸ்ரீரங்கம் போனர். அங்கே உத்தேசித்த கைங்கரியங்கள் நிறைவேறியதும், மீண்டும் யாத்திரை தொடங்கிப் பல க்ஷேத்திரங்கள் வழியாகப் பாண்டி நாட்டிற்குப் போனர்.

திருக்குறுங்குடியிலிருந்து மலைநாட்டிற்குப் போய் அங்கேயிருந்து மறுபடியும் வந்து 'கள்ளழகர் கோயில்' என்று பிரசித்தமாயிருப்பதும், வைஷ்ணவத்தின் பழைய வளர்ப்புப் பண்ணைகளில் ஒன்றென்று கருதப் படுவதுமான சோலைமலை முதலான தலங்களைத் தரிசித்து யாத்திரையை முடித்தார்.

கடைசியாகத் திருமங்கை யாழ்வார் திருக்குறுங்குடியிலேயே தங்கித் தமது ஜீவ யாத்திரையையும் முடித்துக் கொண்டாரென்று குரு பரம்பரைகள் சொல்லுகின்றன.

திருமங்கை யாழ்வார் இமயமலை முதல் கன்னியாகுமரி வரை யாத்திரை செய்தவர். இவர் இலங்கைத் தீவிற்குப் போய்வந்ததாகவும் ஒரு கதை உண்டு. சீன தேசம் போய்வந்தார் என்றுகூட ஒரு கதை வழங்குகிறது!

இந்தக் கதைகளின் உண்மை எப்படி இருந்தாலும், இவர் அகில இந்திய யாத்திரை செய்தார் என்பதும், போன இடங்களில் இயன்றவரையில் கோயில்களைப் புதுப்பித்துப் பக்தர்களோடு அளவளாவி வைஷ்ணவப் பிரசாரம் செய்தாரென்பதும் நிச்சயமான விஷயங்கள்.

இவர் பல திருப்பதிகளையும் 'பாடிப் பரபரப்பாய்த் திரிந்தார்' என்பர் வைஷ்ணவ ஆசாரியர்கள். 'தேசம் அறிய உமக்கே ஆளாய்த் திரிகின்றோம்!' என்று இந்த ஆழ்வாரே பகவானை நோக்கி விண்ணப்பம் செய்தார் என்றும், தேவியான குமுதவல்லியும் உடன் சென்றாள் என்றும் குரு பரம்பரைகள் தெரிவிக்கின்றன.



## 23. குலசேகரர் குணதிசயம்

தனிமையாக இருக்கிருள் காதலி. தாஞக விரும்பி அழைக்கும்வரை அந்தச் சிங்காரத் தோட்டத்திற்கு ஒரு தோழியும் வரக்கூடாதென்பது கண்டிப்பான கட்டளை. தருக்கள் பூஞ்செடிகள் கொடிகள் முதலியவற்றின் தோழமையே தனக்குப் போதுமானதென்று இப்போது எண்ணிக்கொண்டிருக்கிருள்.

எவ்வளவு தனிமையாக இருந்தாலும் இவளை விட்டுப் பிரியாத தோழி ஒருத்தி உண்டு. அந்தத் தோழிக்கு மட்டும், 'இங்கே வரவேண்டாம்!' என்று கண்டிப்பாக உத்தரவு போடுவதில்லை. இவ்வளவு பூர்ண நம்பிக்கை பெற்ற பாக்கியசாலி யார்? காதலி அருமையாக வளர்த்து வரும் பச்சைக் கிளிதான்!

கிளி ஒரு மரத்தின் கிளையிலிருக்கிறது, மரகதம் போலே. பாலைப் பக்குவமாகக் காய்ச்சிக் கிண்ணத்தில் வைத்துக்கொண்டு, 'என் உயிர்த்தோழி! உனக்கு இந்த அமிர்தத்தை என் கையிஞலே ஊட்டுவேன்' என்று கெஞ்சுகிருள். அதற்குக் கூலி வேண்டுமென்றும் கேட்கிருள். அப்படிப்பட்ட தோழிக்கும் கூலியில்லாமல் வேலை செய்ய இஷ்டமில்லை.

அது என்ன கூலி, தெரியுமா? 'அவர் பெயரை ஒரு தரமாவது என் காதில் விழும்படி நீ உன் வாய் திறந்து சொல்லவேண்டும்' அவ்வளவுதான்.

*இன்னமுதம் ஊட்டுகேன், இங்கேவா; பைங்கிளியே!*
*தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்,—பொன்னின்*
*சிலைசேர் நுதலியர்வேள், சேரலர்கோன், எங்கள்*
*குலசே கரன்என்றே கூறு*

[சிலை — வில். நுதலியர் — புருவத்தையுடைய பெண். வேள் — மன்மதன். சேரலர் கோன் — சேர ராஜா.]

என்று கொஞ்சிக் கொஞ்சி மன்றாடும் காதலியின் மன நிலையைப் பாருங்கள்.

காதலர் ஆண்மையைப் போல் அழகிலும், அழகைப் போல் பக்தியிலும், பக்தியைப்போல் கவி பாடும் ஆற்றலிலும் சிறந்தவர். அவரைப்பற்றி எத்தனையோ நினைவுகள், கனவுகள் அலையலையாகப் பொங்கிக் கொண்டிருக்கின்றன காதலி இதயத்திலே!

ஒரு சமயம் அவருடைய கவிதை என்ற மாய மந்திரம், ஒரு சமயம் அவருடைய வீர சௌந்தரியம். ஒரு சமயம் அந்த ரூப சித்திரம் இவளை மயக்குகின்றன. சில சமயங்களில் இவை யெல்லாம் ஒன்றாகக் கூடிச் சதி செய்து ஹிம்ஸை செய்கின்றன!

இப்படிப்பட்ட சமயங்களில் அவர் பெயரையாவது 'கிளித் தோழி' வாயிலாகக் கேட்டு ஆறுதல் அடைய விரும்பிக் குரலிலே ஒரு புதிய மகிழ்ச்சியும் வடிவிலே ஒரு புதிய அழகும் தோன்றப் பேசுகிறாள்.

இந்தக் காதலி யார்? காதலன் யார்? 'காதலி' யதிராஜரான ராமானுஜர்! திடுக்கிட வேண்டாம்; 'காதலர்' பிரசித்தி பெற்ற சேர ராஜாவான குலசேகராழ்வார் தாம்!

ஸ்ரீ வைஷ்ணவ ஸ்தாபனாசாரியரான ராமாநுஜர் குலசேகர பக்தராகப் பாடிய பாட்டு இது. ஸாராம்சத்தில், பக்தியும் காதல்தானே!

பக்திக் காதலின் ஒரு பூர்ணமான கவிதா ரூபம் என்று சொல்ல வேண்டும் குலசேகரரை. இவர் இராஜ்யாபிஷேகம் செய்து கொண்டதும், பல கலைகளிலும் தமக்குள்ள பயிற்சியைப் பெருக்கிக்கொள்ள முயன்றார். போர்க் கலைகளிலும் விசேஷமாகப் பயிற்சி பெற்றுச் சோழ பாண்டிய நாடுகளையும் ஜயித்து முத்தமிழ் நாடுகளுக்கும் தனி யரசாக இருந்தாரென்று குரு பரம்பரைக் கதைகள் சொல்லுகின்றன.

போரின் கொடுமைகளை நேரில் கண்டு வெறுத்துச் சமாதானமாக நாடாளத் தொடங்கியதும், இவர் பண்டிதர்களோடு சாஸ்திர ஆராய்ச்சிகள் செய்வதிலும், முக்கியமாக ஆதிகாவியமான இராமாயணத்தைப் பக்தியுள்ள பௌராணிகர் வாயிலாகக் கேட்பதிலும் பொழுது போக்கி வந்தார். வால்மீகியின் கவிதை இவருள்ளத்தை வசீகரித்தது.

ராமாநுஜர் பின்னாளில் 'எங்கள் குலசேகரன்' என்று இவரைக் குறித்துப் பெருமை பாராட்டிக் கொண்டது போல், இவரும் 'எங்கள் குலத்து இன்னமுதே!' என்று வால்மீகியின் காவிய நாயகனைக் குறித்துப் பெருமை பாராட்டிக் கொண்டார். அவனுடைய சுக துக்கங்கள் இவருக்குத் தம்முடைய சுக துக்கங்களாகவே தோன்றின.

ராமபக்தரான பௌராணிகர் கவிகளைப் பாடிக் கொண்டே வாக்கு வன்மையோடு கதையை நடத்துகிறார். குலசேகரர் ஏன் அப்படித் துடிக்கிறார்?

சூர்ப்பணகை முறையிட்டதைக் கேட்டுக் கரதூஷ ணாதியர் அதியுக்கிரமாகச் சேனைகளைத் திரட்டிக் கொண்டு வந்ததையும், உடனே ராமன் சீதைக்குக் காவலாக லட்சுமணனைப் பர்ணசாலையிலே நிறுத்தி விட்டு ஒருவரும் துணையின்றித் தனியே போருக்குச் சென்றதையும் வருணிக்கும்போது, அ ர ண் ம னை மறைந்து பழைய ஆரணியம் கண்முன்னே ஓடி வரு கிறது. பதினாலாயிரம் துஷ்ட அரக்கர்கள் தர்மாத்மா ஒருவனை வளைந்து கொண்டு முரட்டுத்தனமாகச் சண்டை போடுவதை அதோ பார்த்துவிடுகிறார் குலசேகரர், காலத் திரையைக் கிழித்துவிட்டு!

'என்ன அநியாயம்! வாளும் வில்லும் கொண்டு பின் செல்ல ஒருவருமில்லையா? ஐயோ! களைத்துப் போனால் என்ன செய்வது? ஆபத்து வந்து விடுமே! சுவாமி, இதோ அடியேன் இருக்கிறேன்!' என்று உருகி அவசரமாக ஆயுதபாணியாகிறார், தம் சேனை களையும் தொடர்ந்து வரும்படி உத்தரவு செய்துவிட்டு,

பக்கத்தில் இருக்கிறவர்கள் இன்னது செய்வ தென்று தெரியாமல் திகைத்துப் போகிறார்கள். ஆனால், பௌராணிகர் கெட்டிக்காரர்: பளிச்சென்று, 'ராமன் ஒருவனாகவே நிர்ப்பயமாகச் சத்துருக்கள் அத்தனை பேரையும் ஜயித்துவர, அவனைச் சீதாதேவி குதூகலமாகத் தழுவிக் கொண்டாள்' என்று அந்தப் பிரபல யுத்தத்தை முடிக்கிறார். உடனே குலசேகரர் ஆனந்த மடைகிறார்.

அது முதல் பௌராணிகர் எந்தெந்தப் பாகத்தில் ராமனது விஜயப் பிரஸ்தாபம் வருகிறதோ அந்தந்தப் பாகத்தையே வளர்த்திச் சொன்னார்; ராமனுக்குத்

துன்பம் நேரிடும் இடங்களை யெல்லாம் சுருக்கி விட்டார்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் ஏதோ அசந்தர்ப் பத்தினால் அந்தப் பௌராணிகர் காலக்ஷேபம் சொல்லத் தம் ஸ்தானத்தில் தமது குமாரரை அனுப்பி வைத்தார். இளைஞரான அவர் குலசேகரர் மனநிலையை அறியாதவராய்க் கொஞ்சம் படபடப்பாக, 'மகா கண்டகனான ராவணன் ராமன் பிரிந்திருக்கும் சமயம் பார்த்துத் திடீரென்று வந்து சீதாபிராட்டியைக் கவர்ந்து கொண்டு போனானே; ஐயோ! லட்சுமண னும் சீதை சொல்லைக் கேட்டு ராமபிரானைத் தேடிக் கொண்டு போய்விட்டானல்லவா?' என்று அந்த விசனகரமான செய்தியை வற்புறுத்தி, அரசரும் பிறரும் தமது உபந்யாஸத் திறமையை மெச்சவேண்டு மென்று, மடமட வென்று பேசிக்கொண்டே போனார்.

குலசேகரர் மனம் பதைத்து வாளை உருவிக் கொண்டு, 'இந்தக் கணமே போய் அந்தப் பாவியின் தலைகளைத் துணித்து என் தாயை மீட்டு வருவேன்!' என்று சொன்னபோதுதான் புதிய பௌராணிகர் திடுக்கிட்டுத் தமது பிரசங்கத்தை நிறுத்தினார். அரசரோ வெகு விரைவாகப் போய்விட்டார்.

எங்கே? இலங்கையை நோக்கித்தான்! 'இதன் முடிவு என்னாகுமோ?' என்று மந்திரிகளும் மக்களும் பின் தொடர்ந்தார்கள். பௌராணிகரும் அதிவேக மாகப் போனார்.

குலசேகரர் சமுத்திரத்திலே இறங்கி நீந்தத் தொடங்கினாராம். 'அப்படியே நீந்தி ராவணனுடைய

இலங்கைக்குப் போய்விடலாம்' என்று பிரமை கொண்டிருந்தாராம்.

முதல் மந்திரியின் ஆலோசனைக்கு இணங்கிப் பௌராணிகர், 'இதோ வந்துவிட்டான் ராமன் சீதா லக்ஷ்மண சமேதனுக! ராவண வதம் செய்து வெற்றி கொண்டு வந்து விட்டான்!' என்று உரத்த குரலில் கோஷித்ததும், குலசேகரர் கவலை தீர்ந்து உள்ளம் குளிர்ந்து கரை யேறினுராம்.

பகவானுடைய பெருங்கதைகளைக் கேட்பதில் இவ்வளவு ஆசையுடையவர் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தின் மகிமையையும், அங்கே நித்தியவாசம் செய்யும் பாகவதர்களுடைய மகிமையையும் கேட்டு அங்கே போய் வர வேண்டுமென்று தீர்மானித்தார். பக்தராவதற்கு முன் நாடு பிடிக்கும் ஆசையோடு ஏற்கெனவே ஸ்ரீரங்கம் போய்ப் பார்த்தவர்தாம். ஆனுல், அந்த ஸ்ரீரங்கம் வேறு, இப்போது பக்திக் காதலால் மனக் கண்முன் காணும் ஸ்ரீரங்கம் வேறு.

இந்த நிலையில் ஸ்ரீரங்கநாதனுடைய தரிசனமும், அங்கேயுள்ள அடியார்களுடைய பழக்கமும் தமக்கு இன்றியமையாதன என்று கருதினுர். மந்திரிகளோ அந்த யாத்திரையை எப்படியாவது தடுத்துவிட வேண்டுமென்று நிச்சயித்தார்கள்.

அங்கே போனுல் திரும்பி வரமாட்டாரென்றும், அரசியலை மறந்து அந்த க்ஷேத்திரத்திலேயே நித்திய வாசம் செய்யத் துணிவாரென்றும் கருதி, அவர்கள் ஓர் உபாயம் செய்தார்கள். ஸ்ரீரங்கத்தை அரண்மனைக்கே அழைத்துவிட வேண்டுமென்பதுதான் அந்த உபாயம். அது எப்படி?

அந்த நாளில் ஸ்ரீரங்கத்தைப் புனிதமாக்கிய சற்குண சம்பன்னரான பரம பாகவதர்கள் நாடெங்கும் சஞ்சரித்துப் பாகவத தர்மத்தைப் பரப்பி வந்தார்கள். அவர்களை வரவழைத்து இவர் முன் அனுப்பினால் 'பகவானைக் காட்டிலும் முக்கியமானவர் பாகவதர்' என்ற கொள்கையை அறிந்த இவர் ஸ்ரீரங்க யாத்திரையை மறந்து அடியார்களை உபசரிப்பதில் ஈடு படுவாரல்லவா? இந்த உபாயத்தைக் கையாண்டு அடியார்களைக் கொண்டு விட்டு மந்திரிகள் இவர் யாத்திரை தொடங்கும் போதெல்லாம் தடுத்து வந்தார்கள்.

இவரும் நந்தனாரைப் போல் 'நாளைப் போவேன்! என்ற நம்பிக்கையோடு ஸ்ரீரங்கத்தை மறந்துவிடாமலே பாகவத கைங்கரியத்தில் அகம் களித்த அன்போடு ஈடுபட்டிருந்தார்.

தலைநகரமெங்கும் பாகவதர் கூட்டம் மிகுந்தது. பெரிய அரசராயிருந்தும் குலசேகரர் அவர்களைத் தெய்வ மாகவே மதித்தார். அரண்மனையிலும் சபாமண்டபத் திலும், இன்னும் அந்தரங்கமான இடங்களிலும் அவர்கள் சிறிதும் தடையில்லாமல் போய் வருவார்கள். 'என்ன? நமது அரசரிடம் இவர்கள் வரம்பு கடந்த சுதந்திரம் பாராட்டுகிறார்களே; அடடா, கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதே!' என்று மந்திரிகள் பொறாமை கொண்டு குலசேகரருக்கு வெறுப்பை உண் டாக்கி அவர்களைத் துரத்திவிட வேண்டுமென்று தீர்மானித்தார்கள்.

இப்படி யிருக்கையில், ஸ்ரீராம நவமி உத்ஸவம் வந்தது. கொடிகள், தோரணங்கள் நாட்டியும், வாழை

மரங்கள் நிறுத்தியும், பூம்பந்தல்கள் அமைத்தும் நகர முழுவதும் அலங்கரிக்கப்பட்டது. அரண்மனையைச் சார்ந்த கோவிலோ விசேஷமாக அலங்கரிக்கப்பட்டது. அர்ச்சகர் ராம விக்கிரகத்துக்குரிய ஆபரணங்களை யெல்லாம் களைந்து வைத்தார்; வாத்திய கோஷம், வேத கோஷங்களோடு திருமஞ்சனம் நடந்தது.

பின்பு ராமபிரானுக்கு அலங்காரம் செய்யும்போது அர்ச்சகர் திடுக்கிட்டு, 'ஐயோ, அந்த நவரத்தின மாலையைக் காணவில்லையே!' என்று கூச்சலிட்டார். அது கேட்டுக் குலசேகரர் மந்திரிகளை அழைத்து, 'கள்ளனைத் தேடிப் பிடியுங்கள்!' என்று கட்டளை யிட்டார்.

அவர்களோ, 'புதிய கள்ளன் ஒருவன் வந்து அஞ்சாமல் இந்தத் தொழிலைச் செய்துவிட்டானா? இல்லை, இல்லை; அவர்கள்—பாவம்!—ஏழைகளல்லவா? எங்கும் எப்போதும் தட்டுத் தடையில்லாமல் திரிய இடங் கொடுத்துவிட்டோமே!' என்று பாகவதர்கள் மீது அடாப்பழி சுமத்தினார்கள். அந்தச் சொல் குலசேகரர் காதில் நாராசம் போலப் புகுந்தது.

தாங்கள் சொன்னதை அரசர் கொஞ்சமும் நம்ப வில்லையென்று தெரிந்து, மந்திரிகள் ஒரு பெரிய விஷப் பாம்பைக் குடத்தில் அடைத்து ராஜ சபை முன் வைத்தார்கள். வைத்து, 'மகாராஜாவே! எங்களுக்கும் அவர்களிடம் அபிமானத்திற்குக் குறைவில்லை! ஆனால், ஊர்வாயை எப்படி மூடுவது? பெரியவர்கள் திருடவில்லை யென்றால் இந்தக் குடத்தில் கைவிட்டுப் பிரமாணம் செய்து விடலாமே; சாமானிய மக்களுக்கும் நம்பிக்கை பிறந்து விடும்' என்று தந்திரமாகப் பேசினார்கள். அப்படிச் செய்யத் துணிந்தவர்களை விஷ

ஸர்ப்பம் கடித்துக் கொன்றுவிடு மென்பதும், மற்ற வர்கள் ஓடிப் போய் விடுவார்களென்பதும் மந்திரி களின் நம்பிக்கை.

ஆனால், அப்போது என்ன நடந்தது? ஆ, ஆ, குலசேகரரே அந்தப் பாம்புக் குடத்தில் கைவிட்டார்! 'இந்த விஷ்ணு பக்தர்கள் ஒரு போதும் அந்தக் காரியம் செய்திருக்க மாட்டார்கள். செய்திருந்தால் இந்தப் பாம்பு இப்போதே என்னைக் கொல்லட்டும்!' என்று சத்தியம் செய்தார். அந்தக் கொடிய பாம்பும் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு அவரைக் கடிக்கவில்லை யாம்.

மந்திரிகள் நடுநடுங்கிக் களவுபோன ஆபரணத் தைக் கொடுத்து விட்டார்கள். உண்மையில், அவர் களே பாகவதர்கள்மேல் பழி போடுவதற்காக அதை ஒளித்து வைத்திருந்தார்கள். 'தரித்திர நாராயணர்'க ளான பாகவதர்களிடம் ராஜாதி ராஜரும் வீராதி வீரரு மான குலசேகருக்குத்தான் என்ன நட்பு!—எவ்வளவு நம்பிக்கை!

ஆம்: குலசேகரர் குணாதிசயமே பக்திப் பெருங் காதலாலும் மகாவிசுவாசத்தாலும் இழைக்கப் பெற்றது தான். இப்படிப்பட்டவருக்கு மேலே சொன்ன அநு பவத்திற்குப் பின் ஸ்ரீரங்க யாத்திரை உடனே கைகூடிய தென்று சொல்லவும் வேண்டுமா?

———

## 25. மலைநாட்டில் பக்தி மழை

இந்தப் பெரிய தேசத்தின் தெற்குக் கோடியி லிருக்கிறது நமது பாரத ராணியின் அந்தரங்கமான பூங்காவனம். இதைத் தமிழ்மலை என்ற பொதிய மலையும் அதன் தொடர்ச்சியான மலைகளும் இந்தியாவின் மற்றப் பாகங்களிலிருந்து பிரித்து வைத்திருக்கின்றன: அடர்ந்த காடுகளும் குன்றுகளும் தென்னந் தோப்பு களும் இதை ஆகாய விமானிகளும் பார்த்து விடாதபடி மறைத்திருக்கின்றன.

மலைகளும் சமுத்திரமும் சூழ்ந்திருக்கும் இந்தப் பிரதேசத்தில், அரேபியக் கதைகளில் வரும் அதிசயங் களைப் போல வருகின்றன பசுமையான பள்ளத்தாக்கு கள், மைதானங்கள், வயல்கள், சோலைகள், தோட்டங் கள்; அங்கங்கே முடிமன்னர் போலச் செருக்கோடு நிமிரும் உன்னத சிகரங்கள், அருவிகள், பீடபூமிகள், காயல்களாக விரியும் நதிகள், முதலைகள்—மனோரம்ய மான கடற்கரை, யானை மந்தைகள், புலி, கரடி முதலான துஷ்ட மிருகங்கள், தேக்கு, கருங்காலி முத லான ஜாதி மரங்கள், மூங்கில்களுக்கிடையே மலைப் பாம்புகளோடு கூடிய புதர்கள்; இயற்கைக்கு அடங்கி யும், இயற்கையை அடக்கியும் ஆடம்பரமற்ற வாழ்க்கை நடத்தும் ஜனக் கூட்டங்கள்!

உயர்ந்த மலைச் சிகரமொன்றிலிருந்து ஒருவன் மேற்கு முகமாக நோக்கிக் கடல் வரையிலும் சரிந்து கிடக்கும் இந்தப் பூமியைப் புதிதாகப் பார்த்துவிட்டால்,

'இது ஒரு புதிய உலகமோ?' என்று தோன்றும். அவன் இந்தக் கண்கொள்ளாக் காட்சிகளைப் பார்த்து விட்டு, நீலப் பாய்மீது முத்தாரங்கள் விரித்தாற் போலத் தோன்றும் எல்லையில்லாத இன்பமாகிய அந்தச் சமுத்திரத்தையும் பார்த்துவிடவேண்டும் கரையி லிருந்து: 'அடடா! கந்தர்வ பூமியில்தான் அடிவைத்து விட்டோமா?' என்று பிரமித்துப் போவான்!

இப்படி இந்த மலைநாட்டை இயற்கை யழகு களுக்கும் வளங்களுக்கும் ஒரு பொக்கிஷ சாலை ஆக்கு வது இங்கே பெய்யும் பருவ மழைதான். மேலைக் கடலி லிருந்து வரும் நீராவியை மேகமாக்கி இந்த மழையைப் பெய்விக்கிறது மேற்குத் தொடர். இதே மலைநாட்டில் சுமார் பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் ஓர் அற்புதமான மழை பெய்து ஜனங்களை வாழ்வித்தது.

தொண்டை நாடு, சோழ நாடுகளிலிருந்து வீசிய பருவக் காற்றை உபயோகித்துக்கொண்டு பக்தி-மழை பெய்வித்து இராஜ்யத்தைத் தர்ம ராஜ்யமாக்கிய குணப் பெருங் குன்றங்களில் ஒருவர் குலசேகரப் பெருமாள்.

சேர நாட்டில் எத்தனையோ அரசர்களும் அரசி களும் ஆண்டிருக்கிறார்கள்: இவர்களில் வீரர் பலர்; நாட்டின் நன்மை குறித்துப் பல அரிய தியாகங்கள் செய்தவர்களுமுண்டு. எனினும் ஆத்ம வீரரான குலசேகரப் பெருமாளைத் தமிழர்கள் தெய்வ சமான ராகத் தங்கள் இதயத்திலே பிரதிஷ்டை செய்து கொண்டார்கள்.

குலசேகரர் மேலைக் கடற் கரையிலுள்ள கோழிக்கூடு என்ற கள்ளிக்கோட்டையை இராஜதானியாகக்

கொண்டு சேர ராஜ்யத்தை அரசாண்ட திட்விரத பூராஜ தேவனின் புதல்வராகப் பிறந்தாரென்று சொல்லுகிறார்கள். அந்நாளில் சேர ராஜ்யத்திலே குடகு, மலையாள தேசங்களோடு சேலம், கோயம்புத்தூர் ஜில்லாக்களும் அடங்கி யிருந்தன. இந்த ராஜ்யத்தைச் சேர்ந்த துறைமுக மொன்றில் கிரேக்கர்களுடைய கப்பல்கள் பொன்னோடு வந்து மிளகோடு போயின என்று பழைய புலவர் ஒருவர் பாடி யிருக்கிறார். இப்படிப் பட்ட ஒரு மகாராஜ்யத்தை ஆளப் பிறந்த குலசேகரர் நாளடைவில் விற்போர், வாட்போர், வேற்போர்களில் வல்லவராய்ப் பெரிய பெரிய சேனைகளுக்குத் தலைமை வகித்துப் போய்ப் பகைவர்களை அடக்கி வந்தாரென்று பிரபந்தத்திலுள்ள குறிப்புக்களிலிருந்து ஊகிக்கலாம்.

மேலும்,

*கொல்லி காவலன், கூடல் நாயகன்,*
*கோழிக்கோன், குலசேகரன்*

[கொல்லி காவலன்—கொல்லி என்ற நகரத்தைத் தலைநகரமாகவுடைய அரசன். கூடல்—மதுரை. கோழி—உறையூர்.]

என்ற விருதுகளிலிருந்து, இவர் பாண்டிய சோழர்களுக்கும் தலைவரா யிருந்தார் என்றாவது, அவர்களுடைய தலைநகரங்களிலும் இவருக்குச் செல்வாக்கு இருந்தது என்றாவது, அவர்களுடைய வம்சங்களோடு தொடர்பு இருந்தது என்றாவது ஊகித்தல் கூடும். எப்படியானாலும் குலசேகரப் பெருமாள் தம் காலத்தில் ஒரு பேரரசராக விளங்கினார் என்பதில் சந்தேகமில்லை.

எதிரிகளை அடக்கிச் சமாதானத்தை நிலைநிறுத்திய பின் நடுநிலை தவறாமல் செங்கோல் செலுத்தி வந்தாரென்றும், ஒரு பெரிய வள்ளலாக இருந்து அறிஞர்களை ஆதரித்து அவர்களோடு கலைகளையும் சாஸ்திரங்களையும் ஆராய்ந்து வந்தாரென்றும் தெரிகிறது. ஆனால், இந்த முயற்சிகளில் ஒன்றும் உள்ளத்திற்கு ஆறுதல் அளிக்கவில்லை.

மலையாள தேசத்தின் வளமும் வனப்பும் பகவானுடைய அழகையும் அருளையும் ஞாபகப்படுத்திய வண்ணமாகவே யிருந்தன. அடிக்கடி நெஞ்சுருகி அந்த அழகனுடைய கல்யாண குணங்களாகிய அமுத வெள்ளத்திலே ஆழ்ந்து முழுகிப் போனார்.

ஒரு நாள் நித்திரை குலைந்தெழுந்தும் படுக்கையிலிருந்தபடியே இறைவனுடைய சொரூபத்தையும் எல்லை யில்லாத செல்வச் சிறப்பையும் தியானித்துக் கொண்டே அசையாமலிருந்து விட்டாராம். அருணோதயமாகவே, துயிலுணர்த்துகிறவர்கள் வழக்கப்படி வீணகானம் செய்தார்கள்; வேறு இசைக் கருவிகளையும் இனிமையாக முழக்கிப் பார்த்தார்கள். அரசர் வெளியே வரவில்லை. அந்தரங்க வேலைக்காரர்கள் அந்தக் கோலத்தைக் கண்டு திடுக்கிட்டுக் கும்பிட்டு வெளியில் வந்து, வாய் திறந்து சொல்ல வகையற்று விழித்தார்களாம்.

அப்போது மந்திரிமார் கலங்கி ஒருவரோடொருவர் கலந்து பேசி உள்ளே போய் அஞ்சலி அஸ்தமும் ஆனந்தக் கண்ணீருமா யிருக்கும் நிலையைக் கண்டு வியப்படைந்தார்களாம். நெடுநேரம் கழிந்த பின் விழித்து வெளிப்பட்ட குலசேகரர் தம்மைச் சூழ்ந்

திருந்தவர்களை நோக்காமலே முதல் மந்திரியை மாத்திரம் ஒரு புறமாய் அழைத்துப்போய், 'அம்மை யப்பனாகிய ஸ்ரீரங்க ராஜா என்னையும் ஒரு பொருளாக மதித்துப் பரம கிருபையோடு தரிசனம் தந்து ஆட் கொண்டான்: இனி இந்தப் பதவியும் செல்வமும் நெருப்பு!' என்று சொன்னாராம்.

பிறகு கொஞ்ச காலம் ராமாயண காலட்சேபம் செய்வதிலும், திருமழிசை யாழ்வார் முதலான பெரியோர் அருளிய பிரபந்தங்களைப் பாராயணம் செய்வதிலும் ஈடுபட்டுக் கடவுளுக்கு இதயத்தை உரிமையாக்கித் தோட்டில் ஒட்டாத புளியம்பழம் போலவும், தாமரை இலையில் ஒட்டாத நீர்த் திவலை போலவும், சேற்றில் ஒட்டாத பிள்ளைப்பூச்சி போலவும் உலக வாழ்க்கையைப் பற்றியும் பற்றுதவராய்ச் சிங்காசனத்தில் வீற்றிருந்து ராஜ காரியங்களைக் கவனித்து வந்தார் என்று குருபரம்பரைக் கதைகள் சொல்லுகின்றன.

இந்த விதமாக வாழ்க்கை நடத்திய வீர மன்னரை உலகம் எப்படி மதித்திருக்கும்? 'உண்டியும் உடை களும் சுக போகங்களுமே புருஷார்த்தம்!' என்று மதிக்கும் உலகத்தைத்தான் இவர் எப்படி மதித்திருப் பார்? இந்தக் கேள்விகளுக்கு விடை கிடைக்கிறது,

*பேய ரேஎனக்(கு) யாவரும்: யானும்ஓர்*<br>*பேய னேஎவர்க்கும்! இது பேசிஎன்?*<br>*ஆயனே! அரங்கா!என்(று) அழைக்கின்றேன்:*<br>*பேய னாய்ஒழிந் தேன்எம்பி ரானுக்கே!*

என்ற வாக்கிலே.

பொருளும் போகமும் விரும்பிப் பரம்பொருளை மறந்தவர்களைப் பேயர்களென்று சொல்லி விட்டார் லட்சியத்தை அறிந்து பரம புருஷார்த்தத்தை விரும்பியவர்! 'சிங்காசனத்திலிருந்தும் கொடுத்து வைக்கவில்லையே! இப்படியும் ஒரு பைத்தியமா?' என்று கருதிய அவர்களும், 'இது மனிதனல்ல, பேய்தான்!' என்று இவரையும் கைவிட்டார்களாம். இவருடைய மனக் கண்ணாடியில் அவர்கள் முகம் பார்க்க விரும்ப மாட்டார்கள்: இவரோ அவர்கள் மனக் கண்ணாடியில் முகம் பார்த்து ஆறுதல் அடைகிறார்! 'சரி: ஸ்ரீரங்கநாதன் விஷயத்தில் பித்தேறிவிட்டது வாஸ்தவம்தான், இவர்களும் சாட்சியல்லவா?' என்ற உத்ஸாகத்தில், 'ரங்கா! கோபாலா!' என்று தைரியமாக, பகிரங்கமாக அழைக்கத் தொடங்குகிறாராம். இனி, 'மற்றவர்கள் சேரர் பெருமானாகிய நம்மைக் குறித்து என்ன நினைப்பார்களோ?' என்ற கவலை கொஞ்சமும் இல்லை.

இது பேயாழ்வாரின் மனநிலை யென்று ஏற்கெனவே தெரிந்திருக்கிறோம். முதலாழ்வார்களுடைய சரித்திரமும் உபதேசங்களும் இந்த நிலையில் இவர் வாழ்க்கையை உருவாக்கி யிருக்கக்கூடும்.

இவருக்கு ராஜ வாழ்க்கையிலுள்ள அதிகார ஆடம்பரங்களும் இன்பங்களும், மற்றவர்கள் பயந்து செலுத்தும் ராஜபக்தியும் விஷமாகத் தோன்றி யிருக்க வேண்டும்.

*கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து*
*இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்!*

[கம்பம்—எல்லாரையும் நடுங்கச் செய்யும்.]

என்று சங்கற்பம் செய்து கொள்வதைக் கேளுங்கள்.

இந்தப் பிரதிக்ஞை பாகவதர்களின் தோழமையால் மேன்மேலும் உறுதிப்படுகிறது. அவர்கள் ஸ்ரீரங்கத்தை இராஜதானியாகக் கொண்டு தேசமெங்கும் சஞ்சாரம் செய்து, ராஜாதிராஜனும் தேவாதிதேவனுமான ஸ்ரீரங்கநாதன் பெயரால் எத்தனையோ உள்ளங்களை முடிசூடா மன்னர்களாய் ஆண்டு வந்தார்கள்.

இதே ராஜகுலத்தில் மாறிப் பிறக்க விரும்பிய குலசேகரர் இவர்களைக் குறித்து,

*ஆதி அந்தம் அனந்தம் அற்புத*
*மான வானவர் தம்பிரான்*
*பாத மாமலர் சூடும் பத்தியி*
*லாத பாவிகள் உய்ந்திடத்*
*தீதில் நன்னெறி காட்டி எங்கும்*
*திரிந்(து)அ ரங்கன்எம் மானுக்கே*
*காதல்செய் தொண்டர்க்(கு) எப்பி றப்பிலும்*
*காதல் செய்யும்என் நெஞ்சமே!*

[எம்மான்—எமது சுவாமி.]

என்று எவ்வளவு உருக்கமாகப் பாடுகிறார்!

பாவிகளெல்லாம் பிழைக்கும் வழியை ஒழுக்கத்தாலும் உபதேசங்களாலும் வெளியிடுகிறார்களாம் பாகவதர்கள். எல்லாரும் உய்யும்படி அவர்கள் காட்டும் சன்மார்க்கத்தைத் 'தீதில் நன்னெறி' என்று போற்றுகிறார் குலசேகரர். இப்படி ஒரு ராஜபாதை இருக்கும்போது, கரடு முரடான காட்டு வழிகளிலும் அபாயகரமான புதர்களிலும் பள்ளத்தாக்குகளிலும்

அலைந்து திரிவோரும் இருக்கிறார்களே!—என்று ஆச்சரியமும் பரிதாபமும் கொள்கிறார்.

ஆனால், அவர்கள் பாதை வேறு;

*தீதில் நன்னெறி நிற்க,அல் லாதுசெய்*
*நீதி யாரொடும் கூடுவ தில்லையான்*

என்று உறுதிகொள்ளும் இவர் பாதை வேறு. வழியல்லாத வழிகளில் செல்லுகிறவர்களை 'நீதியார்' என்று கூறுவதைப் பாருங்கள். அவர்களுக்கு அநீதியே நீதி! வெளிச்சத்தை வெறுக்கும் பிராணிகளைப்போல், அவர்களும் தீமை கலவாத நன்னெறியை வெறுக்கிறார்களாம்.

இந்த விதமான கொள்கையுடையவர் பாகவதர்களிடத்தில் எவ்வளவு அபிமானமும் பக்தியும் வைத்திருக்க வேண்டும்; எப்படிப்பட்ட மகாவிசுவாசம் கொண்டிருக்க வேண்டும்! இந்த நிலையைத்தான், அவர்களுக்காக இவர் பாம்புக் குடத்தில் கையிட்டுச் சத்தியஞ் செய்தார் என்ற கதை வெளியிடுகிறது. 'பொங்கு குடப்பாம்பில் கையிட்ட வீரன்' என்று இவரைப் போற்றும் வைஷ்ணவர்கள், "அஞ்சல்!" எனக் குடப்பாம்பில் கையிட்டான் வாழியே!' என்று வாழ்த்துகிறார்கள்:

*ஆரம் கெடப்பரன் அன்பர்கொள்*
*ளார்என்(று) அவர்களுக்கே*
*வாரம் கொடுகுடப் பாம்பில்கை*
*இட்டவன், மாற்றலரை*
*வீரம் கெடுத்தசெங் கோல்-கொல்லி*
*காவலன், வில்லவர்கோன்*
*சேரன் குலசேகரன்முடி*
*வேந்தர் சிகாமணியே!*

[வாரம்—பட்சபாதம். மாற்றலர்—சத்துருக்கள்.] என்று பெருமை கொள்கிறார்கள்.

இவ்வளவு அன்பிற்கும் நம்பிக்கைக்கும் உரிய பாகவதர்கள் வாயிலாக இவர் பகவானுடைய சரித்திரங்களையும் குணாதிசயங்களையும் எவ்வளவு ஆவலாகக் கேட்டு ஆனந்தித்திருக்க வேண்டும்!

*எம்பெருமான் தன் சரிதை செவியால் கண்ணால்*
*பருகுவோம்; இன்னமுதம் மதியோ மன்றே!*

என்று இவர் ரஸிக்கும்படி அவர்களும் ராமாயணம் முதலான கதைகளைச் சொல்லிச் சொல்லிப் பாகவத தர்மத்தில் இவரை ஈடுபடச் செய்திருக்க வேண்டும்.

ஸ்ரீரங்கவாஸம் விஷயமாக இவருக்கு ஏற்பட்டிருந்த மோகத்தைச் சுவாலை செய்ததும் பாகவதர் தோழமைதான். அவர்களே இவருள்ளத்தைத் 'திருடி' ஸ்ரீரங்கநாதனுடைய அடிகளுக்கு உரிமையாக்கினார்களென்று துணிந்து கூறலாம். எனவே குலசேகரர்,

*... அடிசூடும் அரசை அல்லால்*
*அரசாக எண்ணேன்மற் றரசு தானே!*

என்று பகவானுடைய பாதாரவிந்தத்தைச் சிரமேற் கொள்வதையே கிரீடாபிஷேகமாகப் பாவித்துத் தம்முடைய கிரீடத்தைத் துறந்து சென்றார்.

இக்காலத்தில் இவரை நாம் கொண்டாடுவதற்குக் காரணம் இவருடைய போர்த் திறமையன்று, கொடைச் சிறப்பன்று, அரசாட்சிப் பெருமையன்று; பக்திப் பெருக்கும் துறவுப் பெருமையும்தான்! பக்தி மழை

பெய்வித்து நாட்டை வாழ்வித்த சேரகுல சிகாமணி பாகவதகுல சிகாமணியானுர். மலையாளத்தின் அழகும் வளமும் இவர் பக்திக் காதலை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வைஷ்ணவத்திற்கு ஒரு புதிய நிறமும் சோபையும் தந்திருக்கின்றன.

---

# 26. இவர் கேட்ட வரங்கள்

ராஜபோகம் என்பதையே அறியாமல் ராஜ்ய பாரத்தைத் தோளிலே நிறுத்தித் தம்மை ஈசுவரன் என்ற ஸர்வசக்தியின் பிரதிநிதியாக மதித்து ஆட்சி செலுத்தி வந்த வீர மன்னர் நாளடைவில் ஈசுவர னுக்கும் அடியார்களுக்கும் அடியாராகி வாழத் துணிந் தார். இது பழைய தோழர்களுக்குப் பிடிக்கவேயில்லை. இந்த மனமாற்றம் அவர்களுக்குப் புரியவுமில்லை.

இவருடைய ஒப்பற்ற ராமபக்தி அவர்களுக்கு ஒரு மனப்பிராந்தியாகவே தோன்றியது: அளவு கடந்த பாகவத விசுவாசமோ, மன்னர்பிரானது மாட்சியையும் அந்த மணிமகுடத்தின் சோபையையும் குறைத்து விட்டதாகவே தோன்றியது. ஒரு குடும்பமா யிருந்த அரசருக்கும் அதிகாரிகளுக்கும் இடையே பிளவு ஏற்பட்டுப் பெரிதாகி வந்தது.

'ஸ்ரீரங்கம்தான் போய் வரலாமே! கொஞ்சம் சாந்தி கிடையாதா? பார்ப்போம்' என்ருல் அந்த யாத்திரைக்குக்கூட அவகாசம் ஏற்படாதபடி விக்கினங் கள், அரசியற் கவலைகள், துயரங்கள், தொல்லைகள், அவமானங்கள் விளைந்த வண்ணமா யிருந்தன. 'இவை யெல்லாம் ஈசுவர சோதனை!' என்று நம்பிய குலசேகரர், 'ஸர்வசக்தியே! நீ பிணைத்த பிணையலை நீதான் அவிழ்த்துப் போட வேணும்!' என்று பிரார்த்தனை செய்து கொண்டார்.

ஆனல் துயரம் மேலும் மேலும் பொங்கிக் கொண்டே யிருந்தது: அந்த வெள்ளத்திற்குக் கரையு

மில்லை, திசையுமில்லை யேன்று தோன்றியது. 'நீ வர வேண்டாம், உன்னை வெறுத்து விட்டேன்!' என்று அவனே கைவிட்டுப் புதிய புதிய கைவிலங்கு, கால் விலங்குகளையும் கழுத்துக் கட்டுகளையும் பூட்டி வருகிறான் என்ற எண்ணம் அன்பால் இழைக்கப் பெற்ற அந்த இதயத்தை ஹிம்ஸிக்கத் தொடங்கியது.

இப்படிப்பட்ட நினைவுகளோடு சில 'பகற்கனவு' களும் தோன்றின. அருளே உருவான தாய் மடியில் தலை வைத்துக் கண்ணயர்கிறது குழந்தை. அவள் அன்பொழுகும் மலர்க்கைகளால் தடவிக் கொடுக்கிறாள். திடீரென்று, அடடா, என்ன கொடிய கோபம் நோன்பு நோற்றுப் பத்து மாசம் சுமந்து பெற்றவளுக்கு! 'அரிந்து போட வேணும் இந்தச் சனியனை!' என்று சொல்லுகிறாளாம். அந்த நிலையிலும் அந்த அறியாத பிள்ளை என்ன செய்கிறது? அவள் காலைக் கட்டிக் கொண்டு அழுகிறது. அதற்கு வேறொன்றும் செய்யத் தெரியவில்லை

பளிச்சென்று வேறொரு கனவு: தாயும் குழந்தையும் மறைந்து காதலனும் காதலியும் தோன்றுகிறார்கள். சிநேகத்தைப் போல் கலகங்களும் அவர்களுடைய காதலை வளர்த்துக்கொண்டுதா னிருந்தன! ஆனால் இப்போது அவன் காதலே இல்லாமல் கண்டவர்கள் இகழத்தக்க காரியங்களைச் செய்து அவளுக்கு அவமானமும் துன்பமும் தருகிறான். அவளோ அவனுடைய இரக்கத்தையும் பழைய விசுவாசத்தையுமாவது மறுபடியும் பெறலாம் என்று மாறாத பொறுமையோடும் அன்போடும் நடந்துகொள்கிறாள். 'இவள்தான் உண்மையான காதலி; இவளே குலமகள்!' என்று

பாராட்டுகிருர் குலசேகரர் அந்தக் குழந்தை யுள்ளத்தை.

இன்னும் ஒரு காட்சி: வாளால் அறுத்துச் சுடு கிருன் ஒருவன் மற்றவனை; சுடப்பட்டவன் சுட்டவன் வருகையை எதிர்பார்த்திருக்கிருன் ஆவலோடு! சரி, சரி; 'மருத்துவனும் நோயாளியும்' என்று தெரிந்து கொள்கிருர்.

ஒரு சமயம் குலசேகரர் வெளியே போய்க்கொண் டிருக்கும்போது, 'பயிரே, பயிரே! நான்தான் உன்னை மறந்து விட்டேனே!' என்று அங்குமிங்கும் பறந்து போகிறது மேகம். எனினும் இந்தக் கறுப்பை நோக்கி வாட்டத்தோடு பச்சை, 'மழையே, மழையே! நீ மறந் தாலும் நான் மறப்பேனு? உன் முகத்தையே பார்த்துக் கொண்டிருக்க விரும்புகிறேன்' என்று முறையிடு கிறது. இந்தச் சம்பாஷணை பக்கத்தில் போகிறவர்கள் வருகிறவர்கள் காதிலே விழாமல் இவருக்கு மட்டும் கேட்கிறது.

பிறகு அந்தச் சோலையையும் வயல்களையும் போஷிக்கிற நதியைப் பார்த்துக் குலசேகரர், 'நீ மலை யிலே பிறந்து எத்தனையோ காடுகளையும் காட்சிகளையும் தாண்டி வருகிருயே; வழியில் ஓரிடத்திலும் நிற்ப தில்லையே!' என்று வியந்து பேசுகிருர்.

அந்த நதியும் இவரை நோக்கி, 'ஆம், ஆம்; என்னைப் போலவே மற்ற ஆறுகளும் எங்கெங்கே ஓடி ஞலும் முடிவாகக் கடலையே அடைகின்றன. வழியிலே எங்களால் நிற்க முடியாது' என்று பதில் சொல்லி, 'பெரியவரே! நீரும் புறப்பட வேண்டும். இங்கே இனி ஒரு கணமும் நிற்க வேண்டாம்; உமக்காகக் காத்துக்

கொண்டிருக்கிறது கருணைக்கடல்' என்று ஞாபகப் படுத்துகிறது.

வித்துவக்கோடு என்ற தலத்தில் கோயில்கொண்டிருந்த பெருமாளைக் குலசேகரர் இஷ்ட தெய்வமாகப் போற்றி வந்தார். தமது மலைநாட்டிலே 'ஸ்ரீரங்கநாதன் வீடு அது' என்பது இவர் அபிப்பிராயம். மதிலும் வயல்களும் சோலைகளும் வித்துவான்களுடைய இல்லங்களும் கோவிலைச் சூழ்ந்து அழகு செய்தன. இவர் அந்த வித்துவான்களோடு வித்துவானாகப் பழகுவதும், அந்தப் பெருமானோடு முகமுகமாக நின்று தமது குறைகளை யெல்லாம் சொல்லி ஆறுதல் பெறுவதுமுண்டு.

இன்று குலசேகரர் பழைய வித்வ நண்பர்களோடு வாதப் பிரதிவாதங்கள் செய்ய விரும்பாமலே சன்னிதிக்குள் ஏகாந்தமாகப் போய், 'இதோ வந்து விட்டேன்! துன்பத்தைப் போக்காவிட்டாலும் உன்னைத் தவிர எனக்கு வேறு கதி ஏது?' என்று முறையிட்டுக் கொள்கிறார்.

*அரிசினத்தால் ஈன்றதாய்*
*அகற்றிடினும் மற்றவள்தன்*
*அருள்நினைந்தே அழும்குழவி*
*அதுவேபோன் றிருந்தேனே!*

[அரிசினம்—அரிந்து போட வேணும் என்ற கோபம். ஈன்ற—பெற்ற. குழவி—குழந்தை]

என்று உருகிப் புலம்புகிறார்.

பிறகு அப்பெருமானைக் காதலனாகவும் ராஜாதி ராஜனாகவும் வரித்துத் தமது காதலையும் பக்தியையும் உறுதிப்படுத்துகிறார். அந்த ரட்சாமூர்த்தியை மருத்துவ

ஞுக்கி. ‘நீ துன்பங்களை அனுப்பி இரண வைத்தியம் செய்து என்னை இரட்சிக்கிருய்!’ என்கிருர்.

அந்த ஞானசூரியன் எவ்வளவு தூரஸ்தனுயிருந்த போதிலும் அவனைக் கண்டுதான் தமது இதயமாகிய தாமரை மலரும் என்கிருர். கருணையே உருவாகவுள்ள இறைவன் ஒரு கணம் நீலமேகமாகக் காட்சி தருகிருன்; ஒரு சமயம் எல்லையற்ற அழகுக் கடலாகப் பொங்கு கிருன்!

‘வானை மறந்த பயிருண்டோ? உன்னை மறந் திருக்கும் சித்தமும் இங்கே கிடையாது’ என்று இதயத் தைத் திறந்து காட்டும் குலசேகரர், ‘எங்கெங்கே ஓடிப் பார்த்தால் என்ன! எத்தனை மலைகளையும் காடுகளையும் நாடுகளையும் கடந்து போனுல் என்ன? இந்த நதி சங்கமமாக வேண்டிய சமுத்திரம் நீதானே’ என்று ஆறுதல் அடையப் பார்க்கிருர்.

இவ்விதமாகப் பிரார்த்தனை செய்துகொண்டே தியானத்தில் முழுகும் குலசேகரர் மனக்கண்முன், அலை யெறியும் ஆழமான சமுத்திரமும், அதிலே தனியாக எங்கேயோ யாத்திரை செய்துகொண்டிருந்த கப்ப லொன்றும் தோன்றுகின்றன. கப்பலுக்குள் இருக்கிற வர்களைக் குறித்து ஒன்றும் தெரியவில்லை.

ஆனுல் அந்தப் பாய்மரத்தில் ஏறி நிற்கிறதே அந்தப் பெரிய பட்சி எவ்வளவு தெளிவாகத் தெரி கிறது! அது நாலு திசைகளிலும் பறந்து பறந்து பார்க்கிறது. கரை காணவுமில்லை, அதற்கு வேறு போக்கிடமுமில்லை; கால் பாவ மறுபடியும் கப்பலுக்குத் தான் வரவேண்டி யிருக்கிறது.

அந்தப் பட்சியின் நிலை தம்முடைய நிலைதான் என்று தெரிந்துகொண்ட குலசேகரர்,

*எங்கும்போய்க் கரைகாணு(து)*
*எறிகடல்வாய் மீண்டேயும்*
*வங்கத்தின் கூம்பேறும்*
*மாப்பறவை போன்றேனே!*

[எறி—அலையெறிகின்ற. கடல்வாய்—கடலிலே. ஏயும்—பொருந்தும். வங்கம்—கப்பல். கூம்பு—பாய் மரம். மா—பெரிய.]

என்று சொல்லிக்கொண்டே மலைநாட்டைவிட்டுக் காவேரி நாட்டை நோக்குகிருர்.

ஸ்ரீரங்கநாதனைத் தரிசிக்க வேணுமென்ற நோக்கத்தோடு, அங்கேயுள்ள அடியார்களோடும் முக்கோல்-பகவர் என்ற பாகவத சந்நியாசிகளோடும் கூடி வாழ வேணுமென்ற நோக்கமும் இவருக்கு உண்டு. ஸ்ரீரங்கத்தில் கடவுளைக் கண்குளிரக் காண வேணும்; வாயார வாழ்த்த வேணும், பூக்களால் அலங்கரித்து வணங்க வேணும்—என்ற எண்ணங்களைக் காட்டிலும், அவனுடைய தருமத்தை வளர்ப்பதில் ஈடுபட்டிருந்த அடியார்களோடு கலந்து தொண்டு செய்ய வேணும் என்ற எண்ணம் அதிகமா யிருந்ததென்றே சொல்லலாம்.

*வன்பெருவா னகம்உய்ய, அமரர்உய்ய,*
*மண்உய்ய, மண்ணுலகில் மனிசர் உய்யத்,*
*துன்பமிகு துயர்அகல, அயர்வொன்(று) இல்லாச்*
*சுகம்வளர, அகமகிழும் தொண்டர் வாழ,*

*அன்பொடுதென் திசைநோக்கிப் பள்ளிகொள்ளும்*
*அணிஅரங்கன் திருமுற்றத்(து)அடியார் தங்கள்*
*இன்பமிகு பெருங்குழுவு கண்டு யானும்*
*இசைந்துடனே என்றுகொலோ இருக்கும் நாளே?*

[வன்பெரு வானகம்—வானத்திலுள்ள மேலுலகங்கள். அமரர்—தேவர்கள். அயர்வு—மறப்பு. குழுவு-கூட்டம்.]

என்று, குலசேகரர் மந்திரிகள் முதலானவர்களுக்கிடையே சிங்காசனத்திலிருக்கும்போதே, ஸ்ரீரங்கத்தைக் குறித்துக் கனவு கண்டுகொண் டிருந்தவரல்லவா?

ஸ்ரீரங்கநாதன் தென்திசை நோக்கிப் பள்ளிகொண்டிருப்பது தென்னுடான தமிழ்நாடு வாழ்வதற்காக மட்டுமன்று; நமது நாய்நாடும் உலகத்திலுள்ள மற்ற நாடுகளும் வாழ வேணும், மற்ற உலகங்களும் வாழ வேணும் என்பது அந்த யோக நித்திரையின் நோக்கமென்று குறிப்பிடுகிறுர். இப்படிப்பட்ட பெருமானேடு நித்தியவாசம் செய்து தேசமெங்கும் தரும விளக்காகத் திரிந்துகொண்டிருந்த பாகவதர்களோடு பாகவதராகக் கலந்து வாழ வேணுமென்ற ஆசை, கடைசியாக இவரை முடிதுறக்கச் செய்து ஸ்ரீரங்கத்திலே சேர்த்துவிட்டது.

அந்தத் தொண்டர்கள் ஹிம்ஸை நெறியை ஒழித்தவர்களென்றும், நல்லொழுக்கத்தில் நிலைபெற்றவர்களென்றும், இந்திரிய ஜயம் பண்ணினவர்களென்றும், பாரமான துன்பம் முதலியவற்றை நெஞ்சிலிருந்து தள்ளியவர்களென்றும், எல்லை யில்லாத

பழைய தரும நெறியில் வாழையடி வாழையாக வந்து உலகத்தை வழிப்படுத்தும் மகாபுருஷர்களென்றும், கடவுளையே கதியாக நம்பி மற்றவர்களை அஞ்சாத அதி வீரர்களென்றும் குலசேகரர் சொல்லுகிறார். அவர்கள் கூட்டங் கூட்டமாக ஸ்ரீரங்கத்திலே பகவானுடைய நாமத்தையும் குணங்களையும் சரித்திரத்தையும் புகழையும் பாடிக்கொண்டே மனம்உருகி உருகி ஆடுவார்கள் என்கிறார்.

அந்தக் கூட்டத்தில், அந்த நாளிலே, தொண்டரடிப்பொடியாழ்வாரும் முக்கியமானவராக இருந்தாரென்று ஊகிக்கலாம். அந்தச் 'சாது கோஷ்டி'யில் தொண்டரடிகளைப் போன்ற பிராமணர்களைப் போல், 'மிகத் தாழ்ந்த குலத்தோர்' என்று கருதப்பட்ட திருப்பாணாழ்வாரைப் போன்றவர்களுக்கும் இடமுண்டு. பரம ஏழைகளோடு பெருஞ் செல்வர்களுக்கும் திருமங்கை மன்னனைப் போன்ற சிற்றரசர்களுக்கும் இடமுண்டு.

சாதி பதவி முதலான வித்தியாசங்களை மறந்து தொண்டு செய்த இக்கூட்டத்தோடு பேரரசரான குலசேகரரும் ஐக்கியமாகி, 'ஸ்ரீரங்க ராஜதானி'யிலிருந்து பல தலங்களுக்கும் போய்க் கடவுளை வழிபட்டுத் தமது புது வாழ்விலும் உபதேசங்களிலும் தருமப் பிரசாரம் செய்து வந்தார்.

இவர் வடக்கே அயோத்தி வரை யாத்திரை செய்திருக்கிறாரென்று குருபரம்பரைக் கதைகள் தெரிவிக்கின்றன. எனினும், ஸ்ரீரங்கத்திற்கு அடுத்தபடியாக இவருள்ளத்தை வசீகரித்தது 'தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடம்' என்ற திருப்பதிதான்.

'அங்கேயுள்ள நீர்நிலைகளில் ஒரு மீனாகப் பிறந் திருக்கலாமே! அல்லது ஒரு பறவையாகப் பிறந்திருக்க லாமே!' என்ற பக்தியுணர்ச்சியோடு வந்தவர், அந்த மலையில் அழகான ஒரு செண்பக மரத்தைக் கண்டதும், 'இப்படி இங்கே பூத்திருக்கும் பாக்கியம் கிடைத்திருந் தாலும் போதுமே!' என்ற அதிசய உணர்ச்சியோடு,

*செண்பகமாய் நிற்கும்*
*திருவுடையேன் ஆவேனே!*

[திரு—சம்பத்து.]

என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

அந்த இயற்கை யழகுகளை யெல்லாம் தெய்விக அழகுகளாகக் கண்டவருக்குத் திடீரென்று, 'இந்த மலையில் நாம் ஓர் அழகிய சிகரமாக இருக்க வேணும்! அல்லது காட்டாறாகப் பாய்ந்து கொண்டிருக்க வேணும்!' என்ற விநோதமான ஆசைகள் தோன்றின அந்தக் கவியுள்ளத்திலே. 'அப்படியானால் அவ னுடைய திவ்யமான அழகின் காம்பீர்யத்தை ஒருவாறு பிரதிபலிக்க முயலலாமல்லவா?' என்பது குறிப்பு.

பிறகு, 'இந்த மலைமேலே நான் ஒரு நல்ல வழி யாகக் கிடந்தால் எத்தனை மக்களுக்கு உபகாரமா யிருக்கும்!' என்று ஆலோசிக்கத் தொடங்கினார். அப்பால் ஒப்பற்ற பெரும் பணிவோடு, 'இந்தக் கோவில் வாசலிலே படியாகக் கிடந்தால், அடியாரும் பிறரும் மிதித்தேறிப் போய்த் தரிசனம் செய்வார்கள்!' என்று கருதியவர் அப்படியே,

*படியாய்க் கிடந்(து)உன்*
*பவளவாய் காண்பேனே!*

என்று குதூகலப்படுகிறார்.

இப்படி யெல்லாம் ஆசைப்பட்டு,

செம்பவள வாயான்
திருவேங் கடம்என்னும்
எம்பெருமான் பொன்மலைமேல்
ஏதேனும் ஆவேனே!

என்ற பரம பக்தியோடு திருவேங்கடத்தானைப் பிரிய முடியாமல் பிரிந்தவர், இன்றும் ஸ்ரீவைஷ்ணவத்திற்கு ஒரு வழிகாட்டியாக விளங்குகிறாரல்லவா?

வடதேச யாத்திரையிலிருந்து திரும்பிய குலசேகரர் சிதம்பரத்திற்கு வந்து தில்லைத் திருச்சித்திர கூட மென்று வைஷ்ணவர்கள் போற்றும் அந்தத் தலத்தி லுள்ள பெருமானைத் தமது ராமபக்தி தோன்ற அயோத் தியைச் சேர்ந்த இராமனாகவே வழிபடுகிறார். சிவனடி யார்களால், ‘தில்லைவாழ் அந்தணர்’ என்று சிறப்பிக் கப்பெற்றிருக்கும் தில்லைமூவாயிரவர் நடராஜாவை வழி பட்டு வந்ததுபோல் அங்கே கோயில் கொண்டிருந்த பெருமாளையும் வணங்கி வந்தார்கள் என்ற திருமங்கை மன்னன் அபிப்பிராயத்தைக் குலசேகரரும் உறுதிப் படுத்துகிறார்,

அந்த நாளில் பல இடங்களிலும் இப்படிப்பட்ட சைவ வைஷ்ணவ சமரசம் காணப்பட்டதென்று ஊகஞ் செய்யலாம். யாத்திரை முடிந்து, மறுபடியும், ‘எம் பெருமான் திருவரங்கம் எங்கே? எங்கே?’ என்று திரும்பி வந்தவருக்கு ஸ்ரீரங்கம் எப்படியிருந்திருக்க வேண்டும்? பெருவிடாய் கொண்டவனுக்குத் தெளிந்த நீரும் குளிர்ந்த சோலையும் அகப்பட்டாற்போல் ஸ்ரீரங்கநாதன் மறுபடியும் தன்னை இவருக்கு அகப்படச் செய்திருக்கவேண்டும்!

ஸ்ரீரங்கத்திற்கு வடக்கே யுள்ள திருப்பதிகளெல்லாம்—திருவேங்கடமலை கூட—இவரைப் போன்றவர்களுக்கு ஸ்ரீரங்கநாதனுடைய 'வடக்கு வீடுகள்'. தெற்கேயுள்ள திருப்பதிகள் 'தெற்கு வீடுகள்'; 'சொந்த வீடு' ஸ்ரீரங்கம் தான்.

ஸ்ரீரங்கத்தின் மீது இவ்வளவு அபிமானம் கொண்டு ஒரு பெரிய இராஜ்யத்தை அநாயாசமாகத் துறந்து வந்த குலசேகரர், தம்முடைய குணநலங்களுக்கு ஒத்திருந்த இளை என்னும் தம்முடைய அருமைப் புதல்வியோடு நீண்டகாலம் ஸ்ரீரங்கவாசியாக வாழ்ந்திருக்கவேண்டும். இந்த வாசத்தை ஸ்ரீரங்கத்திலுள்ள 'குலசேகரர் விதி' இன்னும் நமக்கு ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கிறது.

ஸ்ரீரங்கநாதனுடைய 'தெற்கு வீடு'களைத் தரிசித்துக்கொண்டு அந்த ரங்கேசனின் கைங்கரியமாகிய ஸ்ரீவைஷ்ணவப் பிரசாரம் செய்துவரும்போது, திருநெல்வேலி ஜில்லாவில் அம்பா சமுத்திரத்துக்கு அருகேயுள்ள 'பிரமதேசம் மன்னார்கோயில்' என்ற ஊரில் குலசேகராழ்வார் காலஞ்சென்றார் என்று சில குருபரம்பரைக் கதைகள் சொல்லுகின்றன. இவ்வூரிலுள்ள இராஜகோபால சுவாமி கோவிலைச் சார்ந்து குலசேகராழ்வாருக்கும் தனிக்கோபுரம் முதலியவற்றோடு ஒரு கோவில் இருக்கிறது. திருக்குறுங்குடியில் காலஞ்சென்ற திருமங்கையாழ்வாரைப் போல், குலசேகரரும் தமது கடைசிநாளில் தென்பாண்டி நாட்டிலே ஸ்ரீவைஷ்ணவத்தைப் பரப்பிவந்தார் என்று கருதுவோருமுண்டு.

மலைவளமும் நிலவளமும் கடல்வளமுமுள்ள மலை நாட்டைத் துறந்த இரண்டு பெரிய சேர மன்னர்களில் ஒருவர், வைஷ்ணவம் என்ற பக்திமதத்தைப் பரப்பிய குலசேகரப் பெருமாள். மற்றவர் சைவம் என்ற பக்தி மதத்தைப் பரப்பிய சேரமான் பெருமாள். பிந்தியவர் முந்தியவருக்குப் புத்திர ஸ்தானத்திலிருந்து பட்டம் பெற்றவர் என்று கூடப் பிரசித்தி பெற்ற ஆராய்ச்சிக்காரரான பெருந் தமிழ்ப்புலவர் ஒருவர் ஊகிக்கிறார்.

## 27. இழந்த சம்பத்து

(கூடுவிட்டுக் கூடுபாயும் கவித்திறன்)

'ராமன் காட்டுக்குப் போய்விட்டான். பட்டா பிஷேகத்திற்காக அந்த நகரத்திலே—அந்த அரண் மனையிலே—பாவம், வயது முதிர்ந்த தந்தை என்ன பாடு பட்டிருப்பார்! 'பட்டாபிஷேகம்' என்ற பிரஸ் தாபம் ஏற்பட்டதும், தமது ஆருயிர்ப் புதல்வன் சிங்காசனத்தில் வீற்றிருப்பதாகவே கனவு காணத் தொடங்கியவர் இப்போது எப்படியெல்லாம் புலம்பி யிருப்பார்! அந்தச் சிங்காசனத்திலிருந்து இறங்கி அவன் காட்டு வழியே போகவேணுமென்றுளே, அந்தக் கைகேயி அது வரையில் ராமனைப் பெற்ற தாய் என்றே மதிக்கப் பட்டவளல்லவா?' என்று பிரசங்கம் செய்து கொஞ்சம் நிறுத்தினர் வாசாலகரான ராமாயண வித்தியா விநோதர்.

அவர் ஒரு பெரிய உணர்ச்சி-வெள்ளத்தின் கரைமேல் ஏறியிருப்பவரைப் போலிருந்தார் பீடத்தின் மீது! சோகத்தின் சிற்றலைகள் கதைகேட்கும் இதயங் களில் மோதிய வண்ணமாயிருந்தன. அரண்மனையில் நிசப்தம் குடிகொண்டிருந்தது. அந்த நிசப்தத்துக் கிடையே அசைவற்றிருக்கும் குலசேகரர் அந்தச் சிற் றலைகளின் மௌன ஒலியைக் கேட்டுக் கொண்டே தியானத்தில் முழுகிப்போனுர். ஏதோ ஒரு அகண்ட உணர்ச்சி தம்மை விழுங்குவது போலத் தோன்றியது, இவருடைய இதயமாகிய வீணை சொப்பனலோகத்தில் கானம் செய்யத் தொடங்கியது.

பௌராணிகர் கண்ணைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் ஏதேதோ சொல்லத் தொடங்கினர். ஆனல் அந்த வார்த்தைகள் குலசேகரர் காதில் விழவில்லை. இவர் அந்த அரண்மனைக்கே போய்விட்டார்! பளிச் சென்று வெட்டிய ஒரு மின்னலின் வெளிச்சத்திலே வந்துவிட்டார் தசரதர், புத்திர சோகமே உருவெடுத்து வந்ததுபோல்!

உடனே துயரத்தால் இழைக்கப் பட்ட குரலில்,

*......எம் இராமா. ஓ! உனைப்பயந்த*
*கைகேசி தன்சொல் கேட்டு*
*நன்ருக நானிலத்தை ஆள்வித்தேன்,*
*நன்மகனே, உன்னை நானே!*

[பயந்த—பெற்ற, நானிலத்தை — (இங்கே) இராஜ்யப் பரப்பையெல்லாம்.]

—அதாவது, 'ராமா!, ஓ ராமா! உன்னைப் பெற்ற தாய் கைகேயிதான்! சந்தேகமேயில்லையென்று இப் போது தெரிந்து விட்டதல்லவா? அப்படியே தகப் பளுகிய நானும் ஸத்புத்திரனுகிய உன்னை அவள் சொல்லைக் கேட்டு எவ்வளவு அழகாக இராஜ்யத்தை ஆளச்செய்தேன்!' என்று கதறத் தொடங்குகிருர்.

சபையிலுள்ளவர்கள் பிரமித்துப் போகிருர்கள். பௌராணிகரும் பிரசங்கத்தை நிறுத்திவிட்டு இந்த அதிசயத்தைக் கவனிக்கிருர்.

'காட்டுக்குப் போ!—என்று என் கொடுமையான வாயிலிருந்து புறப்பட்ட கொடுமையான சொல்லைக் கேட்டதும் அப்படியே விரைந்து போய்விட்டாயே,— யானை என்ன, தேரென்ன, குதிரையென்ன

இவற்றையெல்லாம் விட்டுவிட்டு!' என்று கதறு கிறவர்,

*நெய்வாய வேல் நெடுங்கண் நேரிழையும்*
*இளங்கோவும் பின்பு போக*
*எவ்வாறு நடந்தனை? எம் இராமா! ஓ*
*எம்பெருமான்! என்செய் கேனே!*

[நெய்வாய—(கூர்மை மழுங்காமலிருப்பதற்காக) நெய் பூசப்பட்டிருக்கும், நேரிழை—(இங்கே) சீதை. இளங்கோ—தம்பியாகிய லட்சுமணன். என் செய் கேன்—என்ன செய்யப் போகிறேன்.]

என்று கை பிசைகிறார்.

நடந்தறியாத சீதையையும் தம்பியோடு கூட்டிக் கொண்டு பொல்லாத காட்டிலே நடக்கத் துணிந்த ராமன் அங்கே படுக்கைக்கு என்ன செய்யப் போகிறான்?— இக்கவலையும் ஏற்படுகிறது தசர தருக்கு. உறக்கம் வந்து விட்டால் அருமைப் பிள்ளை அழகான, மிருதுவான, மெத்தைக்கு எங்கே போவான்?

*மெல்லணைமேல் முன்துயின்றாய், இன்றினிப்போய்*
*வியன்கான மரத்தின் நீழல்*
*கல்லணைமேல் கண்துயிலக் கற்றனையோ?*
*காகுத்தா! கரிய கோவே?*

[மெல்லணை—மிருதுவான மெத்தை. காகுத்தா— ககுஸ்த குலத்தைச் சேர்ந்த ராமா.]

என்று புலம்புகிறார்.

கற்பாறைகளை மெத்தைகளாகக் கொண்டு தூங்கு வதற்கும் கற்றுக்கொண்டானா? எப்படிக் கற்றான்?

எப்போது கற்ருன்? 'அப்பா ராமா! அது உன் குலப்பெருமைக்கும் சேராது; உன் வடிவழகுக்கும் சேராதே' என்று வருந்தும் தசரதர், 'மகாபாவியான என்னுடைய கடினமான மனத்தையும் இப்படி யெல்லாம் உருக்குகிருயே! இந்த மாயவித்தையையும் எப்படியோ, எங்கேயோ கற்றுக்கொண்டாயே!' என்று ஆச்சரியப்படுகிருர். இப்படிப்பட்ட தசரதர் நிலையைக் கண்டு அந்தச் சபையும் பௌராணிகரோடு ஆச்சரி யத்தில் முழுகிப் போகிறது.

பிரலாபம் அதிகப்படுகிறது. 'வா, காட்டுக்குப் போகவேண்டாம்!' என்ருராம் ஒரு தரம். உடனே சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு, 'அப்பா, போய்வா!' என்ருராம். 'வந்து இன்னம் ஒருதரம் என்னைக் கண்டு போ!' என்று கதறிஞராம்.

இப்படியெல்லாம் அவஸ்தைப்பட்ட சக்கரவர்த்தி இப்போது, 'துஷ்ட மிருகங்கள் சஞ்சரிக்கிற காட்டில் இன்று நீ போய் விட்டாயே! அப்படியிருந்தும் என்னு டைய நெஞ்சு பிளந்து போகவில்லையே!' என்று பிரலாபிக்கிருர். இப்படிப் பிரலாபித்துக் கொண்டிருக் கும் போதே அந்தக் காடு மனக்கண்ணுக்கு எதிரே வந்து விடுகிறது—சகிக்க முடியாத கஷ்டங்களை எப்படியோ சகித்து நடந்து கொண்டிருக்கும் ராமனேடு!

அந்த 'அநியாய'த்தைக் கண்டதும்,

*பொருந்தார்கை வேல்நுதிபோல் பரல்பாய*
*மெல்லடிகள் குருதி சோர,*
*விரும்பாத கான்விரும்பி வெயில்உறைப்ப,*
*வெம்பசி நோய் கூர, இன்று*

*பெரும்பாவி யேன்மகனே! போகின்ருய்:*
*கேகயர்கோன் மகளாய்ப் பெற்ற*
*அரும்பாவி சொற்கேட்ட அருவினையேன்*
*என்செய்தேன் அந்தோ! யானே?*

[பொருந்தார் — சத்துருக்கள். நுதி — நுனி. பரல்—பருக்கைக் கல். குருதி—இரத்தம். சோர—வடிய. கான்—காடு. வெம்பசி—கொடிய பசி. கூர—அதி கரிக்க.]

என்று இதயம் அரற்றுகிறது.

ராமன் கால்களில் இரத்தம் கண்டதும், தசரதர் நெஞ்சிலேயே அந்தக் கூரான கற்கள் பாய்வது போலிருக்கிறது, பகைவர்களின் வேல் போலே! காட்டின் அந்தப் பகுதியைப் பார்க்கும்போது, அது காட்டுமனிதர்களும் விரும்பாத பாலைவனமென்று தோன்றுகிறது. இன்றைக்கு வெய்யில் அப்படி உறைக்கிறதாம், நிழலும் நீருமில்லாத அந்த இடத்திலே. பசியோ வயிற்றைக் கொளுத்துகிறது!

'மகனே! இப்படியெல்லாம் உன்னை ஹிம்ஸிக்க, நான் எப்படிப்பட்ட பாவியாக இருக்கவேணும்! பாவி யிலும் பாவி பெரும் பாவியல்லவா? இல்லாவிட்டால், கேகயராஜன் கொடும்பாவத்தையே மகளாய்ப் பெற் ருன் என்று தெரிந்து கொள்ளாமல், அவள் வார்த்தை யிலே அகப்பட்டுக் கொண்டிருப்பேனு? அடடா, பிறரால் செய்யமுடியாத தீவினையைச் செய்து விட்டேனே! இதற்கு இனி நான் செய்யக்கூடிய பரி காரமுமில்லையே!' என்று கிழச் சக்கரவர்த்தி துடிக்கும் போது, அந்தத் துன்பக் கதை அப்போது தான் நடப்

பது போலிருக்கிறது அந்தச் சபைக்கும், ராமாயண சாஸ்திரிக்கும் கூட!

பிறகு பழைய நினைவுகள் அலையிடுகின்றன அந்த உள்ளத்திலே. ராமன் எவ்வளவு பிரியமாக அழைப்பான்! — அப்பாவை "அம்மா" என்றே அழைத்து விடுவானும். எவ்வளவு ஆசையோடு தழுவிக் கொள்வான்! 'அந்த நடை யழகையும் முகத்தின் அழகையும் இழந்தேன்: இழந்தும் நான் இருக்கிறேனே! இது தருமமோ? சுமந்திரரே! வசிஷ்டரே! நீங்களே சொல்லுங்கள்! அடி கைகேயீ! நீயும் இருக்கிறாயே சுகமாக,—என் மகனையும் அவன் தம்பியையும் என் மருமகளையும் வனத்திலே துரத்தி விட்டு!' என்று புலம்புகிறவர், மகன் தமக்காகச் செய்த தியாகத்தை நினைக்கும்போது அடையும் துயரத்திற்குக் கங்கு கரையுண்டோ?

அப்பேர்ப்பட்ட மகனைத் தூரதிருஷ்டியால் காட்டிலே எங்கேயோ பார்த்துவிட்டதுபோல்,

*உன்னையும் உன் அருமையையும் உன்மோயின்*
*வருத்தமும் ஒன்றாகக் கொள்ளா(து),*
*என்னையும்என் மெய்யுரையும் மெய்யாகக்*
*கொண்டு வனம் புக்க எந்தாய்!*

[மோய்—தாய்; கௌசலை. எந்தாய்—என் அப்பனே.]

என்று அழைக்கிறார்.

அந்த மகத்தான தியாகத்திற்குத் தாமும் ஓர் எதிர்த் தியாகம் செய்ய விரும்பி அதை அவனிடம் அறிவிப்பதுபோல்,

கானகமே மிகவிரும்பி நீதுறந்த
வளநகரைத் துறந்து நானும்
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்,
மனுகுலத்தார் தங்கள் கோவே!

[கானகம்....காடு. வானகம்—சொர்க்க லோகம்.] என்று நெஞ்சழிந்து இரத்தக் கண்ணீர் வடிக்கிருர்.

'உனக்கு இந்த ராஜ்யத்தைத் துறக்கத் தெரியுமென்ருல், எனக்கு இந்த உலகத்தையே துறந்துவிடத் தெரியும்!' என்பதாக மரணுவஸ்தையிலிருக்கும் தசரதரைக் கண்டு திடுக்கிட்டுப் போகிருர்கள் சபையிலுள்ளவர்கள்!

அது என்ன? அவர்கள் ஏன் அப்படி இன்னும் நடுங்குகிருர்கள்? குலசேகரர்தாம் பாவனு சக்தியால் தம்மை மறந்து தசரதராகித் தாம் இழந்த புத்திர சம்பத்தை எண்ணி எண்ணிக் கண்ணீர் வடித்துக் கரைகின்ருர்!

நாமும் நம்மை மறந்து விடுகிரேம், 'பெருமாள் திருமொழி'யில் 'தனயன் கான்புகத் தசரதன் புலம்புதல்' என்ற தலைப்பிலுள்ள பதிகத்தைப் பாடும்போது. பாடப் பாடக் கண் கலங்குகிறது; நீர் துளிக்கிறது; நெஞ்சு தூய்மைபெறுகிறது; அப்படித் துக்க மயமாகி விடுகிரேம். புத்திர சோகமே இப்படிச் சொல்லாக வழிந்து புறப்பட்டதென்று சொல்ல வேண்டும்.

இப்படி ராமாவதாரத்தில் ஈடுபட்டிருந்த குலசேகரர் கிருஷ்ணுவதாரத்திலும் தம்மை இழந்ததுண்டு. வசுதேவருக்கும் தேவகிக்கும் குழந்தையாகப் பிறந்தவன் நந்தகோபராலும் யசோதையாலும் வளர்க்கப்

பட்டானல்லவா? அப்போது தேவகி இழந்த பிள்ளைமைச் செல்வமும் (புத்திர சம்பத்தும்) குலசேகரர் கவிதைக்கு விஷயமாகிறது.

*......பிள்ளைமை யின்பத்தை இழந்த*
*பாவி யேன் என(து) ஆவியில் லாதே!*

[பிள்ளைமை—பிள்ளைத் தன்மை.]

*'ஏல வார்குழல் என்மகன் தாலோ!'*
*என்றென்(று) உன்னைஎன் வாயிடை நிறையத்*
*தால்ஒ லித்திடும் திருவினை இல்லாத்*
*தாய ரில்கடை யாயின தாயே!*

[ஏல வார்குழல்—பரிமளமுள்ள நீண்ட, சுருண்ட தலை ரோமம். தாலோ-தாலேலோ. தால்-தாலாட்டு. திருவினை இல்லா—சம்பத்து இல்லாத. தாயரில்—தாய்மார்களில். கடையாயின—கடையான.]

என்றும், கிருஷ்ணனுடைய பாலலீலைகளை அநுபவிக்கப்பெருமல் இழந்திருந்த தேவகி புலம்புவதைக் கேளுங்கள்.

'கிருஷ்ணனைப் பெற்றும் அவனை வாயாரத் தாலாட்டும் சம்பத்தைக் கூட இழந்த நான் தாய்மார்களில் கடையான தாயல்லவா?' என்று வருந்தும் தேவகி, 'அந்தக் குழந்தை தொட்டிலில் கிடக்கும் அழகைக் கண்டநுபவிக்கும் பாக்கியத்தைக் கூட இழந்து விட்டேனே!' என்கிருள். அப்போது அது கால்களை மடக்கிக்கொண்டும், சிறு விரல்களையெல்லாம் உள்ளங்கையிலே அடங்கும்படி மடித்துப் பிடித்துக் கொண்டும், மேற்கட்டியில் தொங்க விட்டிருக்கும் கிளியையோ, வேருென்றையோ பார்த்துக் கொண்டே

யிருக்குமாம். எவ்வளவு எதார்த்தமான குழந்தைச் சித்திரம், பாருங்கள்! ஆனால் இதற்கெல்லாம் மேலே போகிறது குலசேகரர் கவித்திறம்.

தாய்மார், பாட்டிமார் எல்லாரும் வருகிறார்கள். கிருஷ்ணனை மடியில் வைத்துக்கொண்டு, 'என் அப்பனே! எங்கள் குலப்பெருஞ்சுடரே!' என்று கொஞ்சித் தோத்திரம் பண்ணி, 'உன் அப்பா யார்?' என்று கேட்கிறார்களாம்.

*உந்தை யாவன்என்(று) உரைப்ப,நின் செங்கேழ்*
*விரலி னும்கடைக் கண்ணி னும் காட்ட,*
*நந்தன் பெற்றனன், நல்வினை யில்லா*
*நங்கள் கோன்வசு தேவன்பெற் றிலனே!*

[செங்கேழ் — சிவந்த நிறம். நந்தன் — நந்த கோபன்.]

என்று தன்னைப் போலவே பாக்கியம் பெறாத வசுதேவருக்காகவும் துயரப்படுகிறாள்.

குழந்தை தன் சிவந்த விரலாலும் கடைக்கண்ணாலும் தந்தையைக் காட்டிய தென்பதும் ஒரு எதார்த்தமான அழகிய குழந்தைச் சித்திரம். இதற்கும் மேலே, மேலே போகிறது ஆழ்வார் மனோபாவம்.

குழந்தையின் நெற்றியிலே கூடப் பிறந்ததோ என்று அதிசயிக்கும்படி அவ்வளவு பொருத்தமாகவும் அழகாகவும் ஒரு சுட்டி கட்டியிருப்பாளாம் யசோதை. அந்தச் சுட்டி அசையும்படி போய்க் குழந்தைக் கிருஷ்ணன் யசோதைக்கு முத்தம் கொடுப்பதையும், பிறகு நடைபெறும் காட்சிகளையும் ஒரு 'குட்டி நாடக'த்தில் பார்ப்பதுபோல் இதோ பார்த்துக் கொள்ளுங்கள்:

*மருவும் நின்திரு நெற்றியில் சுட்டி*
*அசைத ரமணி வாயிடை முத்தம்*
*தருத லும், உன்தன் தாதையைப் போலும்*
*வடிவு கண்டுகொண்(டு) உள்ளம்உள் குளிர,*
*விரலைச் செஞ்சிறு வாயிடைச் சேர்த்து*
*வெகுளி யாய்நின்(று) உரைக்கும்அவ் வுரையும்,*
*திருவி லேன்ஒன் றும் பெற்றிலேன்! எல்லாம்*
*தெய்வ நங்கை யசோதைபெற் றுளே!*

[மருவும் — பொருந்தியிருக்கிற, தாதை — தகப்பன். திரு—சம்பத்து.]

முத்தம் கொடுத்த அழகிலும் வடிவழகிலும் உள்ளம் குளிர்ந்து உயிரும் குளிர்ந்து போகிறதாம் யசோதைக்கு. இந்தக் காட்சியைத் தேவகியும் காண்கிருள், மனக்கண்ணுல்; இவளுக்குத் தன் புருஷனை வசுதேவன் சாயை தெரிகிறது, அந்த வடிவழகிலே! எனினும், 'இந்த இன்பங்களெல்லாம் நமக்கில்லை; யசோதைக்குத் தானே!' என்ற உணர்ச்சி இவள் உள்ளத்தை வெதுப்புகிறது.

இதற்குள் யசோதை முன் 'பாலகிருஷ்ண நாடக'த்திலே வேறொரு காட்சி வந்து விடுகிறதாம். பவளம் போன்ற அந்தச் சிறு வாயில் விரலைச் சேர்த்துக் கோபமாய் நின்று மழலைச் சொற்களால் ஏதேதோ சொல்லப் பார்க்கிருன் கிருஷ்ணன்! அதைக் கண்டதும் யசோதைக்குப் பெருநிதி கிடைத்தது போலிருக்கிறது,—தேவகி பறிகொடுத்த நிதிதான் அது!

கிருஷ்ணன் தவழ்ந்துவரும் போதே தளர்நடையிடுவதும், விளையாடிக்கொண்டே வந்து யசோதை

யைக் கட்டிக் கொள்வதும். கையால் அவள் சோற்றை அளைவதும், பால் உண்ணும்போதே மழலைச் சிரிப் பாகச் சிரித்துக் கொண்டு யசோதை முகம் பார்ப்பதும், 'இவற்றையெல்லாம்—ஐயோ—இழந்தேனே! இழந் தேனே!' என்று தேவகி கைபிசைவதும், குலசேகரரால் காட்டப்படும்வேறு சில காட்சிகள்.

இன்னும் மேலே பறக்கிறது, குலசேகரர் மனோ பாவம். இதோ வெறொரு பால லீலை—வேறொரு நாடகம்:

*முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்(டு) உண்ணும்*
*முகிழ்இ ளஞ்சிறுத் தாமரைக் கையும்,*
*எழில்கொள் தாம்புகொண்(டு) அடிப்பதற்கு என்கு*
*நிலையும், வெண் தயிர் தோய்ந்த செவ்வாயும்,*
*அழுகை யும், அஞ்சி நோக்கும்அந் நோக்கும்,*
*அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்,*
*தொழுகை யும், இவை கண்ட அசோதை*
*தொல்லை யின்பத்(து) இறுதிகண்டாளே!*

[முகிழ்—அரும்பு. எழில்—அழகு. தாம்பு—கயிறு. எள்கு நிலை—கூசும் நிலை. அணிகொள்—அழகிய.]

அளைந்து அளைந்து தொட்டுத் தொட்டு வெண் ணெய் சாப்பிடும் கண்ணனைக் கையும் களவுமாகக் கண்டு பிடிக்கிறாள் யசோதை. உடனே கையும் கயிறு மாக வந்து அடிப்பதற்குக் கூசிநிற்கும் போதே, கிருஷ்ணன் அவளை நிமிர்ந்து பார்க்கிறான். அப்போது வேறொரு களவுக்கும் அந்த வாய் ஒரு சாட்சி யாகிறது!

வெளுத்த தயிரும் சிவந்த வாயும், அழுது கொண்டே கண்ணில் பயம் தோன்ற ஏதோ சொல்ல

விரும்புவது போல் வாயை நெளித்து நெளித்து, வெண்ணெய் தோய்ந்த கையால் தொழுகிறுன் கள்ளக் கிருஷ்ணன்!

இந்தக் காட்சியைக் காணும் யசோதை பரமபத இன்பத்தைப் பூலோகத்தில் அநுபவிக்கிருளே!—என்பது தேவகி புலம்பல். இது உன்னதமான கவிதை,—குலசேகரரின் இதய கானம்.

தாய் தந்தையர்களுக்குப் புத்திர வாத்ஸல்யத்தால் ஏற்படும் சுகதுக்கங்களை எவ்வளவு அன்போடும் ஆதரவோடும் கவனித்திருக்கிருர் குலசேகராழ்வார்! இவரே இப்படிப்பட்ட சுக துக்கங்களை அநுபவித் திருக்கவும் கூடும்.

எப்படியாஞலும் தேவகி தசரதர்களின் உணர்ச் சியோடு இரண்டறக் கலந்து நின்று நாமும் அந்த உணர்ச்சிகளை அநுபவிக்கும்படி செய்துவிடுகிருர். பக்தியிலும் விசுவாசத்திலும் தோய்ந்து கிடந்த மாசற்ற குழந்தையுள்ளத்திலிருந்து பிறந்த இப் பாடல்கள் எவ்வளவு தெளிவாகவும் ரஸமாகவும் இருக்கின்றன!

குழந்தைப் பாடல்கள் தமிழில் அதிகமாயில்லை; எனவே, இந்தத் துறையிலுள்ள குலசேகரர் பாடல் கள் தமிழர்களுக்கு என்றும் ஒரு புது விருந்து.

தசரதர் புலம்பலோ, கவிச்சக்கரவர்த்தியான கம்ப ருக்கே ஒரு வழி காட்டியாக உதவியதென்று சொல்லலாம்.

———

# 28. இரண்டு ராஜரிஷிகள்

திருமங்கையாழ்வார் இயற்றிய பிரபந்தங்களில் பெரிய திருமடல், சிறிய திருமடல் என்ற இரண்டும் திருநறையூர் என்ற திருப்பதியில் கோயில் கொண்டிருக்கும் பெருமாள் விஷயமாகப் பாடப் பெற்றன. இந்த இரண்டு பிரபந்தங்களையும் சேர்த்து மடல் என்ற பொதுவான பெயரால் குறிப்பிடுவதுண்டு.

இந்தப் பிரபந்தங்களைத் திருமங்கையாழ்வார், ஸ்ரீரங்கநாதனுக்கு மதில் முதலான பணிகள் செய்து முடித்த பின் ஒரு நாள், இன்னிசையோடு சன்னிதியில் பாடிக்கொண்டிருந்தார். அப்போது ரங்கநாதனுக்கே கொஞ்சம் பொறுமை உண்டாகி விட்டதாம்,—திருநறையூருக்குக் கிடைத்த அதிர்ஷ்டத்தைக் குறித்து. அவன் தன் மோனவாய் திறந்து, ''மதிலை அங்கே கட்டி மடலை இங்கே கட்ட லாகாதா?'' என்று கேட்டானும். இதனுல் பாடல்-தொண்டு மற்றத் தொண்டுகளைக் காட்டிலும் மேலானதென்று தெரிகிற தல்லவா?

பகவத் கைங்கரியத்தைக் காட்டிலும் பாகவத கைங்கரியம் சிறந்ததென்பது வைஷ்ணவர் கொள்கை. பாகவத கைங்கரியத்திலும், பாகவதர் உள்ளத்திற்கு அமுதமாயிருப்பதும், பக்தரல்லாதவர்களையும் பக்தியில் ஈடுபடச் செய்து பாகவத தருமத்தைப் பிரகாசிக்கச் செய்வதுமான பாடல்களை விசேஷமான கைங்கரியம் என்பர். இக்கருத்து அந்தக் காலத்து வைஷ்ணவர்களின் ரஸிகத் தன்மையையும் ஒருவாறு வெளியிடுகிறது.

திருமங்கையாழ்வார் திரு நெடுந்தாண்டகம் என்னும் தமது பிரபந்தத்தையும் ரங்கநாதனுடைய சன்னிதியில் மனம் உருகி உருகித் தேவகானமாகப் பாடுவதுண்டென்று 'குருபரம்பரை'கள் தெரிவிக்கின்றன. தமது பாடல்கள் 'பண் நிறைந்த இன்பப் பாடல்கள்' என்றும், 'நல்ல இன்னிசையால் சொன்ன' இவற்றைத் தொண்டர்களும் இன்னிசையால் பாடிக்கொண்டே ஆடிப் பாவச் சுமைகளையும் துயரச் சுமைகளையும் தள்ளிவிட்டு இன்பமடைவார் களென்றும் திருமங்கையாழ்வாரே சொல்லுகிறார்.

குலசேகராழ்வாரும் தமது பாடல்கள் இன்னிசையோடு பிறந்ததாகக் குறிப்பிடுகிறார். இவற்றையும் பக்தர்கள் கானம் செய்துகொண்டே அபிநயித்து ஆடுவார்கள். இப்படிப் பாடி ஆடுவது ஈச்வரனுக்கு உகப்பானதென்பது அவர்கள் கருத்து.

பாட்டை ஈச்வரன் ரஸிக்கிறான் என்பது மட்டுமன்று; ஈச்வரனே பாட்டாக வருகிறான் என்ற அபிப்பிராயமும் பக்தர்களுக்கு உண்டு. திருமங்கையாழ்வார், 'தமிழோசை வட சொல்லாகி' என்றும், 'இன்பப் பாவினை' என்றும் வருணித்த கடவுளைக் குலசேகரரும், 'அத்தமிழின் இன்பப் பாவினை, அவ் வடமொழியை' என்று வருணிக்கிறார்.

'பாட்டைப் போல் சுலபமாகவும் அழகாகவும் இன்பமாகவு மிருக்கிறான் பகவான்' என்ற கொள்கை எவ்வளவு வசீகரமாயிருக்கிறது! இந்தக் கொள்கையில், கவிதைக்கு எவ்வளவு உன்னத ஸ்தானம் கொடுக்கப்பட்டிருகிறது!

திருமங்கை மன்னனைப்போல் குலசேகரரும் தமிழிலும் வடமொழியிலும் ஒருங்கே பற்றுள்ளவர்; புலமை யுள்ளவர். சாரமான கொள்கைகளிலும் இரு வருக்கும் ஒப்புண்டு. தமது வடமொழிப் பிரபந்த மாகிய 'முகுந்தமாலை'யில் குலசேகரர், கொடிய விரதங் களால் உடம்பை ஒடுக்குவதில் பயனில்லையென்றும், பகவானே துன்பத்தையும் பாவத்தையும் போக்கி அன்பு முதலியவற்றை வழங்கிப் பாதுகாக்கிறான் என்றும் கூறுகிறார். (முகுந்தமாலை ஆழ்வாரின் வாக்கு அன்று என்பது ஆராய்ச்சியாளர் கருத்து.) இப்படிப் பட்ட கருத்துக்களிலும் கொள்கைகளிலும், திருமங்கை யாழ்வாரின் இதய ஒலிகளே எதிரொலி செய்வது போலத் தோன்றுகின்றன.

திருமங்கை மன்னன் வெளியிடும் பொருளை யன்றி, அவர் சொல்லையும் பொன் போலப் போற்றுகிறார் குலசேகரர். உதாரணமாக,

*கண்டவர்தம் மனம் வழங்கும்*
*கணபுரத்(து)என் கருமணியே!*

[கணபுரம்—திருக்கண்ணபுரம்.]

என்ற இவர் வாக்கு, 'கண்டவர் தம் மனம் வழங்கும் கணபுரத்(து) அம்மானை' என்ற திருமங்கையாழ்வார் வாக்கை ஞாபகப் படுத்துகிறதல்லவா?

திருமங்கையாழ்வாருக்கும் ராமபக்தி யுண்டு. குலசேகரரோ அதில் தம்மை இழத்து விட்டாரென்று சொல்லவேண்டும். வால்மீகியைப் போலவே குல சேகரரும் அந்தப் புருஷோத்தமனிடம் ஈடுபட்டார் என்பது வைஷ்ணவ ஆசிரியர்களின் கருத்து.

வேடனையும் பிறரையும் சகோதரராக்கிக் கொண்ட ராமனுடைய தியாக வாழ்க்கை திருமங்கை மன்னனை வசீகரித்தது. குலசேகரரையோ குழந்தை-ராமனும் வசீகரித்தான்; வீரராமனும் வசீகரித்தான்; தியாக மூர்த்தியான ராமனும் வசீகரித்தான்: அந்தச் சரித்திரம் முழுவதும் அந்த உள்ளத்தை வசீகரித்த தென்று சொல்ல வேண்டும்.

தெய்வம் அல்லவா ராமன் என்ற பயம் திருமங்கை யாழ்வாருக்குக் கிடையாது; குலசேகரருக்கோ, 'எங்கள் குலத்து இன்னமுது'. ராமனுடைய இன்பமும் துன் பமும் தமக்கே இன்பதுன்பங்கள்!

தில்லைத் திருச்சித்திர கூடத்திலேயே ராமனைத் தரிசிக்கிறார் குலசேகரர்,

*அங்கண்நெடு மதிள்புடைசூழ் அயோத்தி என்னும்*
*அணிநகரத்(து), உலகனைத்தும் விளக்கும் சோதி,*
*வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி*
*விண்முழுதும் உயக்கொண்ட வீரன் தன்னைச்,*
*செங்கண்நெடுங் கருமுகிலை, இராமன் தன்னைத்,*
*தில்லைநகர்த் திருச்சித்ர கூடம் தன்னுள்*
*எங்கள்தனி முதல்வனை, எம் பெருமான் தன்னை*
*என்றுகொலோ, கண்குளிரக் காணும் நாளே?*

[அங்கண்—அழகிய இடம், புடை—பக்கம்; (இங்கே) நாலு பக்கமும்; அணி—அலங்காரங்கள். சோதி—ஜோதி. வெங்கதிரோன் குலம்—சூரிய குலம். விண்—தேவலோகம். உய—உய்ய. முகில்—மேகம். தில்லைநகர்—சிதம்பரம். தனி—ஒப்பற்ற.]

என்று ஸ்ரீநடராஜாவின் சிதம்பரத்திலும் ராமனைத் தரிசிக்க விரும்புகிறவர், போன தலங்களி

லெல்லாம் ராமனையே கண்குளிரக் கண்டாரென்று கருதலாம்.

மேலும், ராமகதையைக் கேட்கும்போதும் சிந்திக்கும் போதும், ராமநாமத்தை உச்சரிக்கும் போதும் அந்த வீரன், அந்த அழகன், இவருக்குப் பிரத்தியட்சம்தான்

திருமங்கை யாழ்வாரைப் போல் குலசேகரருக்கும் கிருஷ்ணபக்தி உண்டு. இவருக்குக் கிருஷ்ணனும் ராமன்தான்! காதல்-துறையில் பக்தியை வெளியிடுவதற்குச் சௌகரியமாகக் கிருஷ்ணனைப் பாடியிருக்கிறார்.

''காதலர் கலகம்' என்ற துறையிலும் திருமங்கை யாழ்வாரைப் போல் கோபிகாஸ்திரீகள் பேச்சாகப் பாடியிருக்கிறார் குலசேகரர். இதோ பாருங்கள், கிருஷ்ணனைக் கண்டதும் கோபித்துப் பேசும் ஒரு கோபிகையை!

'எனக்குத்தான் கிருஷ்ணா, உன்மேல் ஆசையில்லையே! நீதானே முதல் முதல் வந்து,' ''உன்னைத் தவிர வேறொருவரை நான் அறிவேனோ?'' என்று தாழ்ந்து சொல்லி, ''யமுனை யாற்றங் கரையில் அந்தப் பெரிய மணற்குன்றிலே போய் நில்லு; நான் வருகிறேன்'' என்றாய்! சொன்னபடி வந்தாயா?' என்று கேட்பவள்,

*கூர்மழை போல்பனிக் கூதல் எய்திக்*
*கூசி நடுங்கி, யமுனை யாற்றில்*
*வார்மணற் குன்றில்; புலர நின்றேன்*
*வாசுதே வா! உன் வரவு பார்த்தே!*

[கூர்—மிக்க. பனிக் கூதல்—பனியால் வந்த குளிர். வார்—நீண்ட. புலர—விடியுமளவும்.]

என்று அவனுக்காகத் தான் பட்ட கஷ்டத்தைக் கோபத்தோடு வெளியிடுகிருள்.

மழை பெய்வது போலப் பனி கொட்டிக்கொண் டிருந்ததாம். அந்தக் குளிரால் நடுங்கியதோடு, 'யார் பார்த்து விடுகிருர்களோ?' என்றும் கூசிக் கூசி நின்று கொண்டே யிருந்ததாகவும், விடியுமளவும் கிருஷ்ண னுடைய வரவு பார்த்திருந்ததாகவும் சொல்லுகிருள்.

அதோ, வேருெரு கோப ஸ்திரீ தோழியும் தானுமா யிருக்கிருள்.

*செய்ய உடையும் திருமுகமும்*
*செங்கனி வாயும் குழலும் கண்டு,*

[செய்ய—செம்மையான. குழல்-(இங்கே) சுருண்ட தலை ரோமம்.]

—அமிர்தம் போலப் பொங்கிய உணர்ச்சிகளை எப் படியோ அடக்கிக்கொண்டு, 'நீ முன்னே ஏமாற்றிய பழைய ஆசாமிகள் தாமே என்று இப்போது எங்களை நினைத்துவிட வேண்டாம்; நீ உகக்கும் புதிய அழகி களுமில்லை இங்கே!' என்று பிணங்கி முகத்தை மாற வைத்துப் பேசுகிருள்.

பிறகு, 'இனி நீ இந்த வாசற்படியை மிதிக்க வேண்டாம்!' என்று காதலனைக் கண்டிப்பாக எச்சரித்து விடுகிருள்.

இன்னும் ஒரு காட்சி. கிருஷ்ணன் புல்லாங்குழல் ஊதிக்கொண்டு வருகிருன். சில கோபிகைகள் இசை யின்பத்தைப் பருகிக்கொண்டே அவனேடு வருகிருர் கள். அந்த ரஸிகமணிகளைக் கண்டதும், இந்த இசை யோடு இசையாகக் கலந்து விட்டன ஓர் அபூர்வமான

குழைவு,—எல்லையற்ற இரக்கம்,—அந்த முகங்களுக்காகவே பூத்து வாடிக்கொண்டிருப்பது போன்ற ஒரு தெய்விக அன்பு!

'ஆ! அவர்களுக்காக அல்லவா இவ்வளவு மோகனமாக ஊதி வருகிறுன் இந்த மோகன கோபாலன்!' என்று கருதும் வேறு சில ரஸிகமணிகள் என்ன பாடு படுகிறுர்கள், பாருங்கள்! அந்த வேணு கோபாலனைப் பார்த்து என்ன சொல்லுகிறுர்கள், கேளுங்கள்!

*மங்கல நல்வன மாலை மார்வில்*
*இலங்க, மயில்தழைப் பீலி சூடிப்,*
*பொங்கிள ஆடை அரையில் சாத்திப்*
*பூங்கொத்துக் காதில் புணரப் பெய்து,*
*கொங்கு நறுங்குழ லார்க ளோடு,*
*குழைந்து குழல் இனி(து) ஊதி வந்தாய்!*
*எங்களுக் கேஒரு நாள்வந் தூத,*
*உன்குழல் இன்னிசை போத ராதே!*

[வனமாலை—பல வகை நிறமுள்ள பூவும் தழையும் கொண்டு தொடுக்கப்பட்ட மாலை; துளசி மாலை. மார்வில்—மார்பில். தழைப் பீலி—தழைத்த மயிலிறகு. பொங்கு இள ஆடை—மிகவும் மெல்லிய ஆடை. புணரப் பெய்து—மிகவும் பொருந்தவிட்டு. கொங்கு—பூக்களின் மகரந்தப் பொடி. நறுங்குழலார்—வாசனையோடு கூடிய கூந்தலையுடைய பெண்கள். குழைந்து—மனம் இளகி; வாட்டம் அடைந்து; இரங்கி. இனிது—இனிதாக. போதராதே—புறப்பட மாட்டாதோ.]

என்று பேசும் இதயங்களின் ஆழத்திலே காதல் கடல் போலக் கொந்தளித்துக்கொண்டிருக்க வேணுமல்லவா?

சரி: மார்பிலே மங்களமான அந்த மாலையும், முடியிலே மயிலிறகும், அரையிலே அந்த மெல்லிய பீதாம்பரமும், காதிலே பூங்கொத்தும், வாயிலே புல்லாங்குழலும், சுற்றிலும் அந்தக் கட்டழகிகளின் சோபையும், கிருஷ்ணனை அலங்கரிக்கின்றனவா? அல்லது அந்த அலங்காரங்களுக்கும் அலங்காரமா யிருக்கிறானா? 'அவனே அந்தச் சேர்த்தியின் உயிர்!' என்று தீர்மானிக்கும் பெண்மணிகளைத்தான் அந்த அழகு எப்படியெல்லாம் ஹிம்ஸிக்கிறது!

அந்த ஹிம்ஸையில் அந்தப் புல்லாங்குழலின் கீதத்தைக்கூட அநுபவிக்க முடியவில்லை. 'எங்களுக்காக மாத்திரம் ஒரு நாள் ஊத வரலாகாதா?' என் மன நிலையைப் பாருங்கள்.

'நீ வந்து ஊதினாலும், இந்தக் குழலிலிருந்து இசை புறப்பட மாட்டாதோ? கிருஷ்ணா, இதன் சுபாவமும் அப்படித்தானோ?' என்று சொல்லும் மனநிலை, காதலருலகத்தை எவ்வளவு நன்றாகக் காட்டுகிறது!

கிருஷ்ணனைக் காதலனாகப் பாடுவது போல், குழந்தையாகவும் பாடுகிறார் குலசேகரர், திருமங்கையாழ்வாரைப் பின்பற்றி.

*ஆழ்கடல்சூழ் வையகத்தார்*
*ஏசப்போய் ஆய்ப்பாடித்*
*தாழ்குழலார் வைத்த*
*தயிருண்டான், காணேடீ!*

[வையகம்—உலகம். தாழ் குழலார்—தாழ்ந்து தொங்கும் கூந்தலையுடைய கோபஸ்திரீகள்.]

என்று ஒருத்தி தாழ்வு சொல்லி விளையாட, மற்றொருத்தி விடையாக அவனுடைய மேன்மையைச் சொல்ல விரும்பி,

*தாழ்குழலார் வைத்த*
*தயிருண்ட பொன்வயி(று), இவ்*
*ஏழுலகும் உண்டும்*
*இடம்உடைத்தால்! சாழலே*

என்று விளையாடும் துறையில் திருமங்கையார் கிருஷ்ணன் என்ற குழந்தைக் கடவுளை அழகாக வருணித்திருக்கிறார்.

எனினும், தேவகியின் மனோலோகத்தில் பிரவேசித்து அந்தத் தாயின் மனோபாவத்தோடு அவள் இழந்திருந்த குழந்தைச் செல்வத்தை வருணிக்கும் குலசேகரர் பாடல்கள் திருமங்கை மன்னன் பாடல்களைக் காட்டிலும் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவை. இவற்றில் நடையும் பாவமும் உருகிக் கலந்து இசைமயமான கவிச் சித்திரங்களாகின்றன.

'உருகி வழிந்து புறப்பட்ட சொல்' என்று பக்தர்களின் தோத்திரங்களைப் பெரியவாச்சான் பிள்ளை குறிப்பிடுகிறார். இது குலசேகரரின் பல பாடல்களுக்கும் பொருந்துவதாகும். வித்துவக்கோட்டிலும் திருப்பதியிலும் இவருள்ளம் அப்படியே உருகிப் பாட்டாகப் புறப்படுகிறது.

வித்துவக் கோட்டிலே இந்த உள்ளம் விவகார உலகத்திலிருந்து ஒரு புதிய அகண்டமான உலகத்திற்குப் பாய்ந்து போகப் பார்க்கிறது: துயரத்தில் ஆழ்ந்

திருந்த போதிலும், தெய்வம் என்ற அகண்ட வஸ்து வையே அடிநாதமாகக் கொண்டிருக்கிறது. (இந்தத் துயரம் சிதம்பரத்தில் விடைகொண்டது; அப்பால் ஸ்ரீரங்கம் அழைத்துக் கொண்டது.)

மலையாள ராஜ்யத்தை விட்டுத் திருப்பதி மலையை அடைந்ததும், உணர்வு இன்ப-துன்பங்களைக் கடந்து காட்டாறாகப் பெருகியது. இந்த நிலையை,

*வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ், மன்னவர்தம்*
*கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்;*
*தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடமலைமேல்,*
*கானாறாய்ப் பாயும் கருத்துடையேன் ஆவேனே!*

[மாமதி—பூர்ண சந்திரன். செல்வு—செல்வம். அறியேன்—(ஒரு பொருளாக) அறிய மாட்டேன். ஆர்—நிறைந்த. கான்—காடு.]

என்று வெளியிடும் பாட்டின் மனோபாவம் ரஸிகருள்ளத் திற்கும், கவிதாநாதம் ரஸிகர் செவிக்கும் அமுத மாகின்றன.

நட்சத்திர ராஜாக்களெல்லாம் சேவித்திருக்க, வானப் பரப்பை யெல்லாம் ஆட்சி செய்யும் பூர்ண சந்திரன் எப்படி விளங்குகிறானோ, அப்படி விளங்கு கிறானும், ஒரு குடைக்கீழ் உலகமெல்லாம் ஒதுங்கும்படி ராஜ ராஜனாக வீற்றிருப்பவன். அப்பேர்ப்பட்ட செல்வத்தையும் துறக்குமாறு தூண்டுகிறது இவர் பக்தியுள்ளம். கவியுள்ளமோ, இந்த மலைமேல் பூஞ் சோலைகளுக்கிடையே ஒரு காட்டாறாகப் பாய்வது செல்வங்களுக்கெல்லாம் மேலான செல்வமென்று சொல்லுகிறது.

ஸ்ரீரங்கத்தைக் குறித்து இந்த இரண்டு ராஜ ரிஷிகள் பாடியிருக்கும் பாடல்களையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். திருமங்கை யாழ்வார் ஸ்ரீரங்கத்தை நேரில் கண்டு பாடினார் பாகவதர்களின் பூலோக வைகுண்டமென்று. குலசேகரரோ ஸ்ரீரங்கத்தை நினைத்து நினைத்து மனக் கண்ணால் கண்டு பாடினார்.

இந்த ஸ்ரீரங்கம் குலசேகரர் கவியுள்ளத்தின் சௌந்தரியத்திலே—இவரது ஞான பக்தியாகிய காவேரிக்கிடையே—நிர்மாணமாகிறது.

*திருவரங்கப் பெருநகருள், தெண்ணீர்ப் பொன்னி*
*திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்*
*கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்(டு)என்*
*கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே?*

[தெண்ணீர்-தெளிந்த நீர். பொன்னி-காவேரி. திரை—அலை. கருமணி—நீலரத்தினம். கோமளம்—இளமை; அழகு.]

என்ற வாக்கைக் குலசேகரருள்ளத்திலிருந்து நாதத்தோடு பாயும் ஞான கங்கையென்று சொல்லலாம்.

தமிழிலக்கணத் துறைகளுக்கு இலக்கிய மென்று திருமங்கையாழ்வார் பிரபந்தங்களைக் கூறுவதுண்டு. திருமங்கையாழ்வாரைப்போல் அதிகமாகப் பாடவில்லை குலசேகராழ்வார். எனினும், 'பெருமாள் திரு மொழி' என்று சொல்லப்படும் இவர் பாடல்கள் மேதையின் விசாலத்தாலும் பாவனு சக்தியின் விரிவாலும் ஒரு கடல் போலக் காண்கின்றன. கவிதை யலைகள் பொங்கியெழும் பக்திப் பாற்கடல் என்று இவற்றைச் சொல்லலாம்.

திருமங்கை யாழ்வாரைக் 'கலைப் பெருமாள்' என்றும் 'கவிப் பெருமாள் என்றும் சொல்லுகிறார்கள். இந்தப் பட்டங்கள் குலசேகரப் பெருமாளுக்கும் விசேஷமாகப் பொருந்தும் என்று சொல்லக் கூடுமல்லவா?

---

## 29. பல்லாண்டு பாடிய பட்டர்பிரான்

'பல்லவனை ஜயித்தேன்; தென்னாட்டிலும் வட நாட்டிலுமுள்ள வேறு பல அரசர்களையும் ஜயித்துப் பாண்டிய ராஜ்யத்தை மகாராஜ்யமாக்கி மகாவீரன் என்ற பேரும் புகழும் பெற்றேன். பரத கண்டத்தின் "அழகு ராணி"யென்று புகழப் பெற்றவளும், கங்கராஜன் மகளுமான பூசுந்தரியை மணந்து பட்டமகிஷியாக்கிக் கொண்டேன். எனினும் உள்ளத்திற்கு அமைதி ஏற்படவில்லை. வீரத்தாலும் காதலாலும் அடைய முடியாத மனச் சமாதானத்தை இனி எங்கே எப்படித் தான் அடையப் போகிறேனே?' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு நட்ட நடுநிசியில் தன்னந் தனியனாக வருகிறானே, அவன் யார்?

அந்த வார்த்தைக்கும் வேஷத்திற்கும் கொஞ்சமும் பொருத்தமில்லையே! ஏன் இப்படித் தெருத் தெருவாக,—சில தெருக்களிலே வீடு வீடாக,—கவனித்துக் கொண்டே போகிறான்? அதோ, ஒரு தெருத் திண்ணையின்மேல் உறங்கிக் கொண்டிருக்கும் ஒருவனைச் சந்தேகித்து எழுப்பி, 'நீ யார்? ஏன் இங்கே இப்படிக் கிடக்கிறாய்?' என்று கேட்கிறான்.

அவன் 'கங்காஸ்நானம் பண்ணி வருகிறேன்' என்று பதில் சொன்னதும், அந்த முகத்தை அப்போது பிரகாசிக்கத் தொடங்கிய சந்திரிகையில் உற்று நோக்கி, 'தேச சஞ்சாரத்தோடு சாஸ்திர சஞ்சா

ரமும் செய்திருப்பவன்' என்று தீர்மானித்து, உடை வாளை உறையில் தள்ளிக்கொண்டே, 'தாங்கள் ஜீவ யாத்திரைக்கும் ஒரு நல்ல வழி கண்டுபிடித்திருந்தால், காட்ட வேணும்' என்று வேண்டிக் கொள்கிருன் மாறுவேடம் பூண்டிருந்த அரசன்.

யாத்திரிகன் சொல்லுகிருன்: 'இரவில் வேண்டிய உணவு முதலியவற்றைப் பகலில் தேடிக் கொள்ளு கிருர்கள். மழைக் காலங்களில் வேண்டிய உபகரணங் களை மற்றை எட்டு மாசங்களில் தேடி வைத்துக்கொள் கிருர்கள். முதுமையில் வேண்டியவற்றை இளமை யிலே சம்பாதித்துக்கொள்ள முயல்கிருர்கள். ஆனல், இப்படிப்பட்ட விவேகிகள் மறுமைக்கு வேண்டிய செல்வத்தை இம்மையிலேயே சம்பாதித்து வைக்க முயல வேண்டாமா? நானும் இப்போது அந்த வழி யைத்தான் தேடிப் போகிறேன்!'

புத்திசாலியான அரசனுள்ளத்தில் இந்த வார்த் தைகள் ஆழ்ந்து பதிகின்றன. அவன் நகர சோதனையை முடித்துத் தேசாந்தரியை அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு போய் உபசரித்து, 'இதைத் தங்கள் இஷ்டம்போல் உபயோகித்துக் கொள்ளுங்கள்' என்று வேண்டிய பொருளுதவி செய்கிருன். அதிகாலை யில் அந்தப் பிரயாணி புறப்பட்டபோது, தான் சேது தரிசனம் செய்து ஸ்ரீவில்லிபுத்தூருக்கும் போவதாகத் தெரிவிக்கிருன்.

ஸ்ரீவல்லப தேவன் என்றும், ராஜ சிம்மன் என்றும், கோ நெடு மாறவர்மன் என்றும் பிரசித்தமான பாண்டிய ராஜ சக்கரவர்த்தி சிற்றரசர்களும் சேனைத் தலைவர்

களும் வணங்க, வைதிகர்களும் முத்தமிழ்ப் புலவர்களும் ஆசி சொல்ல, அழகிகளான பெண்கள் இருபுறமும் நின்று சாமரை வீச, முத்துப் பந்தரின் கீழ் அமைந்த இரத்தின கசிதமான தங்கச் சிங்காசனத்தில், மார்பிலே முத்தாரம் பிரகாசிக்க, நட்சத்திரங்கள் சூழ்ந்த பூர்ண சந்திரனைப்போல் கொலு வீற்றிருந்து ராஜ்ய காரியங்களை வழக்கம்போல் கவனித்து வந்தான். எனினும், இரவில் நடந்த சம்பவம் மீண்டும் மீண்டும் அந்த உள்ளத்தில் தோன்றி அவனைக் கவலைக்குட்படுத்தி விட்டது. 'நமது அரசர் பெருமானுக்கும் மனக் குறையிருக்க முடியுமோ?' என்று மந்திரிமார் ஆச்சரியப் பட்டார்கள்.

அப்போது வேதாகம சாஸ்திரங்களில் நிபுணரான செல்வநம்பி என்னும் புரோகிதர் அரசனோடு சம்பாஷித்து விஷயத்தை அறிந்துகொண்டு, 'தத்துவ ஞானியான பரம பாகவதர் ஒருவரை ஞான குருவாகக் கொண்டு ஒழுகுவதுதான் இம்மையிலேயே மறுமைக்கும் உரிய செல்வத்தைத் தேடிக் கொள்ளும் வழி' என்று சொன்னார். பிறகு அரசனும் புரோகிதரும் நன்றாக ஆலோசனை செய்து, சபாமண்டபத்தின் தோரண வாசலிலே பொன்னும் மணியுமாக வெகு திரவியத்தைக் கிழிச் சீரையில் முடிந்து கட்டி, அந்தக் கிழியானது ஸாரமான சமய உண்மை இன்னதென்று நிரூபிக்கும் பெரியோர்க்கு உரியதென்று தூது செலுத்தியும் பறை யறைவித்தும் தேசமெங்கும் அறிவித்தார்கள்.

இந்த அறிக்கையைக் கேள்விப்பட்டு வேத வேதாங்க வேதாந்தங்களில் வல்லவர்களான வித்து

வான்களும், புறச் சமயங்களைச் சார்ந்த பண்டிதமணி களும் தர்க்க சாஸ்திர நிபுணர்களும், பல வேறு கலைக ளில் பயிற்சி யுள்ளவர்களும், ஆஸ்திகர்களும், நாஸ்திகர் களும் திரள் திரளாக மதுரைக்கு வந்து குறிப்பிட்ட தினத்தை எதிர்பார்த்திருந்தார்கள். பணத்தில் ஆசை யில்லாதவர்களும் வாதப் பிரதி வாதங்களில் ஆசை கொண்டு வந்தார்கள்.

அரசனும் அமைச்சர்களும் மற்ற உத்தியோகஸ்தர் களும் விருந்தாளிகளை உபசரிப்பதில் கண்ணுங் கருத்துமா யிருந்தார்கள். மக்களோ வாதப்போர் களைப் பார்க்க ஆசைப்பட்டார்கள். செல்வநம்பி மாத்திரம், ‘அவர் வருவாரோ, வரமாட்டாரோ?’ என்ற சங்கையோடு ஸ்ரீவில்லிபுத்தூரைத் திசை நோக்கித் தொழுதவண்ணமா யிருந்தார்.

குறித்த நாள் வந்தது. உண்மை காணவேண்டும் என்ற ஆசையோடு அரசன் வீற்றிருக்கிறான். அவ னுக்கு அருகே ஒரு புறம் செல்வநம்பி முதலான வேத வித்துக்களும், ஒருபுறம் மந்திரிகளும் தத்தம் ஆசனங் களில் அமர்ந்திருக்கிறார்கள். மத வாதியர், ‘என் மதம் மேலானது; உன் மதம் தாழ்ந்தது!’ என்று வாதம் செய்து கொண்டிருக்கிறார்கள். பல நூல் கற்ற பண்டி தர்கள், ‘அந்த நூல் மேலானது; இந்த நூல் மேலா னது!’ என்று தொண்டை கிழிய விவகரிக்கிறார்கள்.

அறிவிற் சிறந்த புலவர்கள் தங்கள் அறிவுக் கூர்மையால் எதிர் வாதங்களைக் குத்திக் கிழித்தெறி கிறார்கள். சிலர் தர்க்கப் போர்களில் எதிரிகளை மடக்கித் தள்ளுகிறார்கள். சில வித்துவான்கள் யுக்தி வாதங்

களாலும் அநுபவத்தை ஒட்டிய வாதங்களாலும் வேத சாஸ்திரங்களையே அடித்துப் பேசுகிறார்கள். சில அறிஞர்கள் வாழ்வின் நிலையாமையை வற்புறுத்து கிறார்கள். வேறு சில அறிவாளிகள், 'கண்டதே காட்சி; கொண்டதே கோலம்: இம்மை யின்பந்தான் இன்பம்! மறுமை யென்பது வீண் கனவு—குருமாரின் சூழ்ச்சி!' என்கிறார்கள்.

அரசன் களைப்புற்றவனாய்ப் பெருமூச்சு விடுகிறான். 'ஐயோ! இன்னும் வரவில்லையே' என்று ஏங்குகிறார் செல்வ நம்பி.

இப்படி வாத யுத்தம் மும்முரமாக நடந்துகொண் டிருக்கும்போது, மதவெறியர்களின் உறுமல்களுக்கும் தார்க்கிகர்களின் கர்ஜனைகளுக்கும் சூனியவாதிகளின் கனைப்புகளுக்கு மிடையே, 'விஷ்ணுசித்தர் வருகிறார்; வில்லிபுத்தூரார் வருகிறார்' என்ற கோஷம் கிளம்பு கிறது. அவருடைய அதிசயமான ஒளியையும் பொலி வையும் பார்த்தவர்கள் எல்லாம் அந்தக் கணம் தங்களை அறியாமலே அஞ்சலி செய்து வழிவிடுகிறார்கள்.

செல்வ நம்பி குதூகலத்தோடு எழுந்துபோய் அவர் அடிகளில் வணங்குகிறார். அந்த அபூர்வமான—சாந்தி பரிமளிக்கும்—முகமண்டலத்தைக் கண்டதும், அரசனும் சிங்காசனத்திலிருந்து எழுந்து அடிகளில் முடிபட விழுந்து நமஸ்காரஞ் செய்கிறான்.

உள்ளத்தைத் துருவிப் பார்த்து நினைவுகளை யெல்லாம் உணர்ந்து கொண்டதுபோல், அன்பும் இரக்கமும் நிறைந்த அந்தக் கண்கள் அரசனைக் குளிரக் கடாட்சிக்கின்றன. அந்தப் பெரியவரைத் தன் சிங்கா

சனத்தில் அமரச்செய்து அருகே பக்தியோடு நின்று கொண்டிருக்கிறுன் அரசன்.

புலவர் குழுவில் பொறுமைக் காய்ச்சல் அதிக மாயிற்று. 'இவர் எங்களைப்போல் அளவிறந்த சாஸ் திரங்களைப் பயின்று தேர்ந்தவரா?' என்று முணு முணுத்தார்கள். வேதபாரகர் 'இவருக்கு வேதங்களில் விசேஷ அப்பியாசம் கிடையாது!' என்று சொன்ஞர் கள். 'வேதம் தெரிந்தாலும் ஆகமம் நன்ருய்த் தெரி யுமா?' என்ருர்கள் ஆகமவாதிகள். 'வேதாகமங்களில் விற்பன்னராயிருந்தாலும் தர்க்கமல்லவா சமய ஞானத் திற்கு உயிர்?' என்ருர்கள் தர்க்க சாஸ்திரிகள். 'இவர் பக்தர்தாமே!' என்ருர்கள் யோகிகள். 'சமய ஞானமே அஞ்ஞானம்தான்; பக்தி முழுவதும் மூடபக்திதான்!' என்று பரிகசித்தார்கள் நாஸ்திகர்கள்.

அந்தக் கூச்சல்களுக்கிடையே அரசன் செல்வ நம்பி முகம் நோக்கி, 'இனி என்ன செய்வது?' என்று மெள்ளக் கேட்டான். நம்பியும், 'கவலைப்பட வேண்டாம்; அவர்களை வென்று விடுவார்!' என்று குறிப்பாகப் பதில் சொன்ஞர்.

இதற்குள் விஷ்ணுசித்தரும் வித்வான்கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அமைதியாகப் பதில் சொல்லத் தொடங்கிஞர். அவர்களுடைய பொருமையைப் பொறுமையினுலும், பகைமை யுணர்ச்சியை அன்பிஞ லும், கெட்ட எண்ணங்களை நல்லெண்ணங்களாலும், அறியாமையை அறிவிஞலும், வீண் பெருமையைப் பணிவிஞலும், முரட்டுத்தனமான இதயங்களை இரக்கத் திஞலும், நம்பிக்கையிஞலும் ஜயித்தார்.

காரணமில்லாத காரியமே கிடையாதென்று தர்க்க ரீதியாகக் குறிப்பிட்டு இந்த உலகத்தின் காரண வித்தே கடவுள் என்றார். எந்த ஒரு பொருளால் எல்லாப் பொருள்களும் உண்டாகின்றனவோ, எந்தப் பொருளால் எல்லாப் பொருள்களும் நிலைபெறுகின்றனவோ, முடிவில் இவையெல்லாம் எந்தப் பொருளிடம் லயமாகின்றனவோ, அந்தப் பரம்பொருளான கடவுளே தியானத்திற்கு உரியதென்றார்.

அதைப் பரம ஸாத்விக மூர்த்தியான மகா விஷ்ணுவாகவும், அவனுடைய அவதார மூர்த்திகளாகவும், முக்கியமாக ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியாகவும் வழிபடுவது நலமென்று போதித்தார். பிறகு, பகவானைநோக்கிப் பிரார்த்தனை செய்வதும், அவனுடைய நாமத்தை விசுவாசத்தோடு உச்சரிப்பதும் பக்திப் பெருநெறியில் சுலபமாகக் கொண்டு சேர்க்குமென்றும், பக்தி மார்க்கமே ராஜபாதையான முத்திநெறி என்றும் நிரூபித்தார்.

அரசன் அவர் சொன்ன விஷயங்களை யெல்லாம் கவனமாகக் கேட்டான். அந்த முகத்தைப் பார்த்துக் கொண்டே அந்த வார்த்தைகளைக் கேட்பது அமிர்தமாயிருந்தது. அவர் அவனை நேராகப் பாராத போதெல்லாம், அந்தக் கண்களால் வசீகரிக்கப்பெற்று அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

இரண்டொரு சமயங்களில் அவர் அவனுடைய முகத்தை நேராகப் பார்த்துப் பேசினார். அப்போது அந்த ஆச்சரியமான கண்களின் சக்தியைத் தாங்க முடியவில்லை; தலை குனிந்து அவர் அடிகளை நோக்கிய வண்ணம் கேட்டுக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று.

கடைசியாக அவன் நிமிர்ந்து பார்த்தபோது, அவர் தோரண வாசலை நோக்கிக் கையை நீட்டிக் கொண்டு, 'சமஸ்த வேதார்த்தங்களும் வேதாந்தத்தில் அடங்கி, வேதாந்தம் பரம பாகவதர்களது ஞான பக்தி யில் அடங்கி யிருக்கிறது: ஞானபக்தியே இம்மைக்கும் மறுமைக்கும் உரிய பெருஞ் செல்வம்' என்று சொல்லி முடித்ததையும், அந்த வாசலில் கிழியாகக் கட்டியிருந்த பொருள் அப்படியே அவரை நோக்கித் தாழ வளைந்த தையும் கண்டானும். உடனே எழுந்து பாண்டியன் அந்தக் கிழியை அறுத்து அவரடிகளில் வைத்து வணங்கினன். அப்பால் அங்கே யிருந்த வித்வான்கள் எல்லாரும் தங்கள் வித்யா கர்வத்தை மறந்து விஷ்ணு சித்தர் அடிகளில் விழுந்து வணங்கினர்கள்.

அரசன் மிகவும் பிரீதியுடனே விஷ்ணுசித்தரைத் தன் பட்டத்து யானையின்மேல் ஏற்றி மங்களவாத்தியம் முழங்க நகர் வலம் செய்வித்தான். 'வேதப்பயன் கொள்ளவல்ல விஷ்ணுசித்தர் வந்தார்!' 'வில்லிபுத்தூர் வேதக்கோன் வந்தார்!' என்ற விருதுகளோடு சின்ன மும் சங்கும் கம்பீரமாக ஊதப்பட்டன. அவருக்கு அரசன் 'பட்டர்பிரான்' என்று ஒரு பட்டம் சூட்டியதும் அதை யாவரும் உவந்து அங்கீகரித்துக் கரகோஷம் செய்தார்கள்.

மதுரை வாசிகளுக்கு அந்த நாள் ஒரு பெரு விழாவா யிருந்தது. வீடுகளிலும் வாசல்களிலும் வீதி களிலும் மொய்த்த ஜனங்கள், 'விஷ்ணு சித்தர் வாழ்க!' என்று பேரன்போடு வாழ்த்தினர்கள். ஆகாய வீதி யிலும் தேவர்கள் கூட்டங் கூட்டமாக வந்து வாழ்த்திக் கொண்டிருந்தார்களாம். அந்தக் கூட்டத்தினிடையே

திடீரென்று ஆயிரம் சூரியர்கள் ஏககாலத்தில் கூடியிருப்பதுபோல் ஒரு மஹாஜோதி சுடர்விட்டுத் தோன்றியதாம்.

அந்த ஜோதி பார்த்தவர் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கூசச் செய்தபோதிலும், விஷ்ணுசித்தரின் கண்களுக்குப் பனி தோயும் சிகரத்தையுடைய ஒரு ஜோதி-பர்வதமாக முதல் முதல் தோன்றுகிறதாம். பார்க்கப் பார்க்க இவருக்கு அது பொன்மலைமேல் எழுந்த ஒரு பிரமாண்டமான நீலமேகமாகக் காண்கிறது—சொல்ல முடியாத அழகோடும், நினைக்க முடியாத சக்தியோடும் அருளோடும். பிரமன் இந்திரன் முதலான தேவகணங்கள் சூழச் சங்கு சக்கரம் முதலான திவ்ய ஆயுதங்களோடு தேவியுடன் கருடன்மீது காட்சி தந்த அந்தத் திவ்ய மங்கள ஜோதியைத் தரிசித்ததும், பக்தி பரவசமான விஷ்ணு சித்தர்,

*பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாயிரத்தாண்டு,*
*பலகோடி நூறாயிரமும்—*

நித்தியமாக அப்படிப்பட்ட ஸௌந்தரியம் ஒரு தீங்குமில்லாமல் வாழ வேண்டுமென்று, யானைக் கழுத்தின் மேல் கிடக்கும் மணிகளையே தாளமாகக்கொண்டு பாடத் தொடங்குகிறாராம்.

'ஸர்வ சக்தியல்லவா?' என்று பகவானுடைய நிலையையும் எண்ணாமல் தமது நிலையையும் மறந்து விஷ்ணுசித்தர் பாடிய இந்த வாழ்த்துப் பாடல்களைத் 'திருப்பல்லாண்டு' என்று சொல்லுகிறார்கள்.

மகாவீரனான பாண்டியன் இவரையே ஞானாசிரியராகக் கொண்டு அதிவீரனான ஞான பக்தனானான்.

அவனுக்கு இம்மையிலேயே மறுமைச் செல்வமும் கிடைத்தது. இப்படி அரசனுக்கும் பிறர்க்கும் வழி காட்டிப் பல்லாண்டு பாடிய இப்பெரியார், பின்னளில் பெரியாழ்வார் என்று பிரசித்தரானர்.

இவர் மூலமாக ஸ்ரீவில்லிபுத்தூர் மதுரைக்கு வழங்கிய செல்வம் ஸ்ரீவைஷ்ணவர்களின் பொது உடைமையாகிப் பக்தி மதத்திற்கே ஒரு புதிய அழகு தந்தது.

---

# 31 பெரியாழ்வார்—வாழ்க்கையும் வாழ்க்கைத் தத்துவமும்

'விஷ்ணு சித்தரே! எழுந்திரும். ராஜ சபைக்குப் போய் அங்கே கட்டியிருக்கிற பொற்கிழியை அறுத்து வர வேண்டாமா?' என்று யாரோ தட்டியெழுப்பியது போலிருந்தது. 'அந்தப் பரிசு வேத சாஸ்திரங்களைக் கரைகண்டு உண்மை காட்டும் நிபுணருக்கல்லவா? நான் போய்க் கையிலிருக்கும் மண்வெட்டியைக் காட்டிக் கிழியறுக்க முடியுமோ?' என்று சொல்லிக் கொண்டே எழுந்து உட்கார்ந்தார் பெரியவர்.

அப்போது, 'அந்த உண்மை நான்தானே! என்னை நானே காட்டுவேன். என்னைக் காட்டுவது உன் பொறுப்பல்ல' என்று சொல்லிக் கொண்டே மறைந்தது பக்கத்திலிருந்த உருவம், ஆழ்வார் நித்திரை முற்றும் கலைந்து, 'இப்படியும் ஒரு சொப் பனமா?' என்று ஆச்சரியப்பட்டார்.

பிறகு, 'அந்த வடிவம், நித்திரை காட்டிய நிழ லன்று; உபயோகமில்லாத மனக் கற்பனையுமன்று' என்று ஆலோசிக்கத் தொடங்கினர். 'ஆ, ஆ, என் உள்ளத்தை உருக்கி உடம்பையும் கூட உருக்கிவிடும் போலிருந்ததே அந்த அழகு! அதை எப்படி வருணிப்பேன்?' என்று எண்ணமிட்டார்.

நீரை முகந்து வந்த நீலமேகம் அப்பால் போகாமல் மலையுச்சியிலே சாய்ந்தது போலிருந்தது

ஒருகணம்! அடுத்த கணமே மலையும் மேகமும் மறைந்து, ஜில்லென்று பூத்த நீலமலர்கள் கண்ணோடு கருத்தையும் குளிர்வித்தன. அந்த மலர்க்காடு மறைந்து திடீரென்று அழகு பொங்கிப் பொங்கி அலைமேல் அலையாகிக் கரைகாணாத கடலாய் வளர்ந்து விட்டது! கடலும் போய்ப் பளிச்சென்று மயில்கள் கூட்டங் கூட்டமாக நின்று ஆடுவது போலிருந்தது! அந்தக் காட்சியை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டே யிருக்கலாமென்று ஆசைப்பட்டார். ஆனால் விரைவில் விழித்துக் கொண்டார். அப்போது அவ்வளவு அழகும் கண்ணுக்குள்ளே ஊடுருவிக் கருத்துக்குள்ளே பாய்ந்தது போலத் தோன்றியது.

*குன்றாடு கொழுமுகில் போல்*
*குவளைகள்போல், குரைகடல்போல்*
*நின்றாடு கணமயில்போல்*
*நிறமுடைய நெடுமால்*

[கொழுமுகில்—நீரை முகந்த மேகம். குவளை—நீலமலர். குரைகடல்—கோஷிக்கும் கடல். கணம்—கூட்டம். நெடுமால்—மகாவிஷ்ணு.]

என்று பாடி, 'அப்பா, நான் உன் அடிமை: உன் அழகால் என்னை அணைத்துக் கொள். எனக்குள் மறைந்திருந்து நீயே உன் அழகான உண்மையைப் பாண்டியன் சபையில் வெளியிட்டு வெற்றி பெறுவாய்' என்று தனக்குள் தானே சொல்லிக்கொண்டார்.

பெரியாழ்வார் உடனே போய் நீராடி நித்திய அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு நந்தவனத்திற்குப்போனார். தொண்டரடிப் பொடி யாழ்வாரைப் போல்

இவரும் மண் வெட்டியும் கையுமாய்க் கைங்கரியம் செய்து பகவானுக்குப் பாமாலையோடு பூமாலையும் கட்டி வந்தார். இளமையில் வேதசாஸ்திரங்களையும் ஆகமங்கள் இதிகாசங்கள் புராணங்கள் முதலான நூல் கலையும் படித்தவர்தாம். எனினும், அஞ்ஞானமாகிய கொடிய சர்ப்பத்தால் கடியுண்டு விஷமேறிய உள்ளத்தைத் தெளிவுபெறச் செய்வதற்குத் திவ்யமான ஔஷதம் கைங்கரியத்தோடு கூடிய ஞானபக்தி தான் எனத் துணிந்தார்.

உடனே பிதுரார்ஜிதங்களையெல்லாம் ஒரு நீர்ப்பாங்கான நிலத்திலிட்டு வேலி வளைத்து, அதனிடையே குளங்கள் கிணறுகள் உண்டாக்கி, வெண்டாமரை செந்தாமரை செங்கழுநீர் நீலோற்பலம் மல்லிகை முல்லை மாதவி முதலான நீர்ப்பூ, நிலப்பூ, கொடிப்பூ கோட்டுப்பூக்களும் துளசி முதலான செடிகளும் மலிந்து பொலியும் ஆனந்தமான நந்தவனம் திருத்தினர்.

கனவுகண்டு விழித்துக்கொண்ட அதிகாலையிலும் வழக்கம்போல்அங்கேபோய்ப் பக்குவமாகப் பூக்கொய்து கூடையில் சேர்த்துப் பலவித மாலைகளாகக் கட்டிக் கொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் கோயில்கொண்டிருக்கும் பெருமாளுக்குச் சமர்ப்பித்து 'எப்போதும் நீ உகந்த கைங்கரியத்தில் ஈடுபடுவதுதான் எனக்குப் புருஷார்த்தம்' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டார்.

பிறகு, அந்த ஊர்வாசிகளும் கோவிலைச் சேர்ந்தவர்களும் ஒருமுகமாய் வேண்டிக்கொண்டதற் கிணங்கிப் பல்லக்கில் ஏறினர். வெண்சாமரை, வெண்கொற்றக்

குடை, சின்னம் முதலான விருதுகளோடு தொடர்ந்தன பக்தர்குழாங்கள்.

மதுரைமாநகரை அடைந்ததும், 'மதமாற்சரியங்களும் கோபமும் பகைமையும் நிறைந்திருந்த இந்த வித்வத் ஸங்கத்திலே, மத உண்மையையும் காணப் போகிறேனே?' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்த அரசனுக்கு உண்மை காட்டி ஆறுதலளித்துப் பெரியாழ்வார் பொற்கிழியும் பட்டர் பிரான் என்ற பட்டமும் பெற்று மீண்ட கதை,

*பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தான்*
*ஈண்டிய சங்கம் (எடுத்து) ஊத—வேண்டிய [என்(று)*
*வேதங்கள் ஓதி விரைந்து கிழியறுத்தான்*
*பாதங்கள் யாமுடைய பற்று*

[ஈண்டிய—திரண்டிருக்கிற. சங்கம்—சங்குகள். யாமுடைய பற்று—எம்முடைய பூர்ணமான ரட்சை.]

என்று பிற்கால ஆசிரியர் வாக்கின் மூலமாக வைஷ்ணவர்களின் ஞாபகத்திலே நிலைத்திருக்கிறது.

கிழிச்சீரையிலிருந்த பொருளைத் தமது நந்த வனத்தை அழகு செய்வதிலும், ஸ்ரீவில்லிபுத்தூரில் வேறு பகவத் பாகவத கைங்கரியங்கள் செய்வதிலும் உபயோகித்துக் கொண்டாரென்று கருதலாம்.

அரசனைத் திருத்தியபின் ஆண்டவனை வாழ்த்திப் பல்லாண்டு பாடினாரல்லவா? அந்தப் பாடல்கள் பன்னிரண்டையும் திருப் பல்லாண்டு என்று கூறுவதுண்டு. திருப்பல்லாண்டில் பெரியாழ்வாரின் வாழ்க்கைத் தத்துவத்தை ஒருவாறு காணலாம். ஸர்வரட்சகனுக்கு ஸர்வ சக்தி மட்டும் போதாது; பக்திக்

காதலைத் தூண்டுவதற்குரிய அழகும் வேண்டும் என்பது இவர் கொள்கை.

*மல்லாண்ட திண்டோள் மணி வண்ணா!*

[மல்—பருமை. திண்டோள்—வலிமை வாய்ந்த தோள். மணிவண்ணா—நீலரத்தினம் போன்ற நிறத்தையுடையவனே.]

என்று கடவுளை அழைக்கிறார்.

மனோஹரமான அழகு மனத்தை வசீகரிக்க, உலகத்தையெல்லாம் இரட்சிக்கும் மகாசக்தி நம்மையும் இரட்சிக்கும் என்பது குறிப்பு.

இரட்சகனும் அடியார்களும் பிரிவில்லாமல் நித்தியமாக வாழவேணுமென்று வாழ்த்திவிட்டு, மணியில் ஒளியும் பூவில் மணமும் போல் இறைவனோடு அருள் வடிவாய்ச் சேர்ந்திருக்கும் தாயாகிய மகாலட்சுமியையும் வாழ்த்துகிறார். இறைவன் அம்மையப்பனாய் இருந்து இரட்சிக்கிறானென்பது குறிப்பு.

பிறகு 'அடியார்கள் யார்?' என்று குறிப்பிடுகிறார். பக்தி கைங்கரியமாகக் கனியவேண்டும்; வாழ்க்கையைக் கைங்கரியத்திற்கு ஒரு சந்தர்ப்பமாகவே கருத வேண்டும். 'கைங்கரியமே வாழ்க்கையின் லட்சியம், புருஷார்த்தம்' என்று கருதி ஒழுகுகிறவர்கள்தாம் அடியார்கள்; 'வயிற்றுப் பெருமானே பெருமான்; சாப்பாடே புருஷார்த்தம்; வாழ்வின் லட்சியம்!' என்று கருதுகிறவர்கள் அடியார்கள் அல்லர், வைஷ்ணவர்கள் அல்லர்—என்கிறார் பெரியாழ்வார்.

*கூழாட் பட்டுநின் றீர்களை எங்கள்*
*குழுவினில் புகுதல் ஓட்டோம்*

[கூழாட்பட்டு - கூழுக்கு அடிமையாகி. குழு - கூட்டம்.]

என்று கூறுவதைக் கேளுங்கள்.

'இறைவனுக்கும் உயர்ந்த லட்சியங்களுக்கும் உரிய ஆத்மாவைக் கூழுக்காக எழுதிக் கொடுக்கிறவர்களை எங்கள் குழுவில் சேர்த்துக்கொள்ள மாட்டோம்' என்ற வாக்கைக் கவனியுங்கள், சிந்தியுங்கள்.

மனிதர்களையே இப் பெரியார் இரண்டு சாதியாகப் பிரித்திருக்கிறார்,—'சாதி இரண்டொழிய வேறில்லை' என்று கூறிய ஔவை போல. கொடுத்தவர்கள் பெரியவர்களென்பதும் கொடாதவர்கள் தாழ்ந்தவர்களென்பதும் ஔவையார் கருத்து. ஆழ்வாரோ, 'வாழ்க்கை கைங்கரிய ரூபமானதென்று கருதி நடக்கிறவர்கள் உயர்ந்த சாதி' என்றும், 'சோற்றுச் சாமியே சாமி; பொருளே பரம்பொருள்' என்று வாழ்க்கை நடத்தும் சோற்றுத் தொண்டர்கள் தாழ்ந்த சாதி' என்றும் கருதுகிறார்.

மற்றப்படி, 'நான் பிராமணன் அல்லது க்ஷத்திரியன்; ஆகையால் உயர்ந்தவன்' என்றெல்லாம் பெருமை பாராட்டிக் கொள்வதில் பயனில்லை. 'அவன் நீசன்!' என்று தாழ்வு சொல்லுவதிலும் பொருளில்லை. உண்மையில், அடியார்களெல்லாம் ஒரே குலம்தான்: அந்தக் குலத்திற்குப் பெயர், 'அடியார் குலம்'—'தொண்டக் குலம்'. இதுவே ஈச்வர குடும்பம்.

*தொண்டக் குலத்திலுள் ளீர்வந்(து)*
*அடிதொழு(து) ஆயிர நாமம்சொல்லி,*
*பண்டைக் குலத்தைத் தவிர்ந்துபல்-*
*லாண்டு,பல் ஆயிரத்தாண்(டு) என்மினே.*

[பண்டைக்குலம் - பழைய சாதிகள்.]
என்பது பெரியாழ்வார் வாக்கு.

பகவானை வணங்குகிறவர்கள், அவன் உகந்த கைங்கரியங்களில் ஈடுபடுகிறவர்கள், பழைய ஜாதிகளை விட்டுவிட வேண்டும் என்பது குறிப்பு. அப்போது தான் பக்தி உண்மையான பக்தியாகும்; கைங்கரியம் சிறந்த உபயோகமுள்ள கைங்கரியமாகும்.

இந்தத் 'தொண்டக்குலம்' அல்லது அடியார் கூட்டத்தில் சேர்ந்து கைங்கரியம் செய்ய விரும்புகிற வர்கள் எந்தக் குலம் அல்லது சாதி அல்லது வகுப்பி லிருந்தும் வரலாம்; எந்த நாட்டிலிருந்தும் வரலாம். அவர்கள் எந்த நிறத்தினராகவும் இருக்கலாம். ஆண்களாயிருக்கலாம், பெண்களாயிருக்கலாம்; கிழவ ராய் இருக்கலாம்; குமரராய் இருக்கலாம். 'கூடிப் பணி செய்வோம்' என்ற மனம்தான் வேண்டும்.

நமது பெரியார்,

*கூடும் மனம்உடை யீர்கள்!*
*வரம்(பு)ஒழி வந்(து) ஒல்லைக் கூடுமினோ!*

[வரம்பு ஒழி - வரம்பு ஒழிய. ஒல்லை - விரைவாக. கூடுமின் - கூடுங்கள்.]

என்று கூவி முழக்குகிறார். 'கூடும் மனம் உள்ளவர் களே! எல்லையில்லாமல் வந்து கூடுங்கள்; தீப்பட்ட

வீட்டிலிருந்து தப்புகிறவர்களைப் போல் விரைந்து வாருங்கள் பழைய வாழ்விலிருந்து!' என்று கூறும் மனநிலை, 'நான் பெற்ற இன்பம் உலகமெல்லாம் பெற வேணும் என்ற உயர்ந்த—சிறந்த—விரிந்த—உத்தம மான மனநிலையல்லவா?

இப்படிப்பட்ட இதயம்,

*நாடும் நகரமும் நன்கறி-*
*யநமோ நாராய ணாயவென்று*
*பாடும் மனமுடைப் பத்தருள்-*
*ளீர்!வந்து பல்லாண்டு கூறுமினே!*

[மனமுடை – மனமுடைய. கூறுமின் – சொல்லுங் கள்; (இங்கே) பாடுங்கள்.]

என்று எல்லாரையும் தழுவி அருள் செய்ய ஆசைப் படுகிறது.

நாடும் நகரமும் எதிரொலி கொள்ளும்படி நாராயண நாமம் எங்கும் முழங்கவேண்டுமாம். இந்த நாமத்தை—இதன் மகாமந்திரமான 'ஓம் நமோ நாராயணாய' என்ற அஷ்டாட்சரத்தை—உச்சரிப்பது மட்டும் போதாது; அந்தப் பிரீதிக்குப் போக்குவிட்டுப் பாட விரும்புகிறதாம் நெஞ்சு.

அப்படிப்பட்ட மனமுள்ளவர்களெல்லாரும் வந்து பல்லாண்டு பாடிக் கடவுளை வாழ்த்தித் தாங்களும் திருந் திப் பிறரையும் திருத்தவேணும் என்கிறார். 'ஓம் நமோ நாராயணாய' என்ற 'யுத்த கோஷ'த்திற்குமுன் அசுர நினைவுகளும் ராட்சஸ விருப்பங்களும் பேய்ப் புத்தியும் தீச்செயல்களும் பறந்துவிடும் என்பது குறிப்பு.

இப்படிப்பட்ட 'யுத்த கோஷங்கள்' அந்நாளில் பல திருப்பதிகளிலும் முழங்கின என்றும், 'கடவுளின் போர் வீரர்கள்' அந்தத் தலங்களிலிருந்தும் போய் நாடு நகரங்களைத் திருத்தினார்கள் என்றும் ஊகிப்பதற்குக் குலசேகராழ்வார் வாக்கைப் போல் பெரியாழ்வார் வாக்கும் ஆதாரம் தருகிறது.

இத்தகைய திருப்பதிகளுக்கு 'ராஜதானி' ஸ்ரீரங்கம் தான்.

*பத்தர்களும், பகவர்களும், பழமொழிவாய்*
*முனிவர்களும் பரந்த நாடும்,*
*சித்தர்களும் தொழு(து) இறைஞ்சத் திசைவிளக்காய்*
*நிற்கின்ற திருவரங்கமே*

[பக்தர்கள் - (இங்கே) இல்லறத்திலுள்ள பக்தர்கள். பகவர் - முக்கோற்பகவர்; மூன்று கோல்களை அறிகுறியாகவுடைய பாகவத சன்னியாசிகள். பழமொழி - (இங்கே) பழைய சொல்லாகிய வேதம்.]

என்று பெரியாழ்வார் ஸ்ரீரங்கத்தைச் சுட்டிக் காட்டுகிறார்.

தென்னாடும் வடநாடுமான நமது இந்தியாவிற்குத் 'திசை விளக்காய்' இருந்த ஸ்ரீரங்கத்தில் பக்தர்களும் பாகவத சன்னியாசிகளும் முனிவர்களோடும் சித்தர்களோடும் கூடியிருந்து சமய உண்மைகளை நாடெங்கும் பிரகாசப்படுத்திக் கொண்டிருந்தார்கள் என்பது குறிப்பு.

*எல்லா இடத்திலும் எங்கும்*
*பரந்துபல் லாண்(டு) ஒலி*

*செல்லாநிற் கும்சீர்த் தென்திரு-*
*மாலிருஞ் சோலையே.*

[செல்லாநிற்கும்-செல்லும். திருமாலிருஞ்சோலை-அழகர் மலை.]

என்ற இவர் வாக்கிலிருந்து, அழகர் மலை போன்ற தலங்களும் பாகவத தர்மத்தைப் பரப்பிக்கொண்டிருந்தன என்று தெரிகிறது. இந்தத் தலம் தம்முடைய சீடனை கோநெடுமாறன் என்ற பாண்டிய ராஜ சக்கரவர்த்தியால் விசேஷமாய்க் கொண்டாடப்பட்டதென்று பெரியாழ்வார் குறிப்பிடுகிறார்.

பெரியாழ்வாருடைய வாழ்க்கையும் வாழ்க்கைத் தத்துவமும் குலசேகராழ்வார்—திருமங்கை யாழ்வார் உபதேசங்களாலும் சரித்திரங்களாலும் உருவாகியிருக்கக்கூடும். திருமங்கையாரும் குலசேகரரும் தென் பாண்டி நாட்டிலே தங்கள் இறுதிக் காலத்தைக் கழித்தார்களல்லவா?

முக்கியமாக, மலைநாட்டில் பெய்த பக்தி மழை சோழ நாட்டிலிருந்து பெருகிய ஞான பக்தி என்ற காவேரியோடு கலந்து, தமிழ்நாட்டைக் குளிர முழுக்காட்டியதென்று சொல்லலாம்.

———

# 31. பெரியாழ்வார் கண்ட குழந்தைப் பெருமாள்

'ஓடுகிறார்கள்; ஓடும்போதே விழுகிறார்கள்: என்ன அவசரம்! என்ன ஆனந்தம்! என்ன ஆரவாரம்! எவ்வளவோ குதுகுதுப்போடு ஓர் அபூர்வமான பொருளைத் தேடி வருகிறவர்களைப் போல் வருகிறார்கள் சிலர்.

'எங்கே நமது ராஜா, குட்டி மகாராஜா?' என்று கேட்டுக்கொண்டே வருகிறார்கள் சிலர். சிலருக்கு மகிழ்ச்சி வசனத்தில் அடங்காமல் பாட்டாகப் புறப்படுகிறது. சிலர் நானுவிதமான வாத்தியங்களைக் கொட்டி முழக்கிக் குதூகலப்படுகிறார்கள். அந்த முழக்கங்களால் ஆவேசம் கொண்டவர் போலச் சிலர் கூத்தாடுகிறார்கள்.

ஆனந்தம் அதிகரித்து அதிகரித்து அறிவைச் சூறையாடுகிறது. நெய்யையும் பாலையும் தயிரையும் உறிகளோடு அறுத்துக்கொண்டு வந்து, வருகிறவர்கள் போகிறவர்களுக்கெல்லாம் வாரி வாரி வழங்கி, அந்த அடுக்குச் சட்டிகளை உருட்டி நின்று நர்த்தனம் செய்கிறார்கள். கூந்தல் அவிழ்ந்தாட அசைந்தசைந்து ஆடிக்கொண்டே வரும் அந்த ஆய்ச்சிமார், 'இன்னது செய்கிறோம்' என்பதையே அறியாதவர்களாய்த் தங்களையும் உலகத்தையும் மறந்துவிடுகிறார்களல்லவா?

ஏன் இப்படி ஆய்ப்பாடி ஏதோ ஒரு விசேஷமான அன்புச் சுழலில் அகப்பட்டதுபோலக் கிறுகிறுத்துப் போயிருக்கிறது?

*ஓடு வார்,விழு வார்;உகந்(து) ஆலிப்பார்;*
*நாடு வார்,'நம்பி ரான்எங்குத் தான்?' என்பார்;*
*பாடு வார்களும், பல்பறை கொட்டநின்(று)*
*ஆடு வார்களும், ஆயிற்(று)ஆயப் பாடியே!*

[ஆலிப்பார்—ஆரவாரஞ் செய்வார். எங்குத்தான்-எங்கேதான்.]

*உறியை முற்றத்(து) உருட்டிநின்(று) ஆடுவார்,*
*நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்,*
*செறிமென் கூந்தல் அவிழத் திளைத்(து)எங்கும்*
*அறிவ ழிந்தனர், ஆய்ப்பாடி ஆயரே!*

[செறி—அடர்ந்த. மென்—மெத்தென்ற.]

'சோபனம் சொல்லவேணும்' என்ற ஆத்திரத்தால் புகுவாரும், சொல்லியும் சொல்லாமலும் போவாருமா யிருக்கும் அரண்மனை வாசலை அடைந்ததும், 'இவ்வளவு லட்சணமுள்ள ஆண் குழந்தையைப் பார்த்ததே கிடையாது: இது உலகத்தையாளும்!' என்ற வார்த்தை காதில் விழுகிறது.

அந்தப்புரத்தில் இப்படிப்பட்ட குழந்தையையே பார்த்து விடுகிறோம், தாயோடு. ஆச்சரியமான குழந்தை! ஆச்சரியமான தாய்!

*கையும் காலும் நிமிர்த்துக் கடாரநீர்*
*பைய ஆட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்,*
*ஐய! நாவழித் தாளுக்(கு)அங் காந்திட,*
*வையம் ஏழும்கண் டாள்பிள்ளை வாயுளே!*

கடாரம்—கொப்பரை. ஐய—அதிசயம். அங் காந்திட—வாயைத் திறக்க.]

கொப்பரையில் வாசனைத் திரவியங்களும் மருந்து களும் இட்டுக் காய்ந்து குளிர்ந்த தண்ணீர் வைக்கப் பட்டிருக்கிறது. கைகால்களை மெல்ல நீட்டி நிமிரச் செய்து, 'நீண்டு நிமிர்ந்தான்!' என்று குழந்தையைக் கொண்டாடிப் பசுமஞ்சள் உரைத்துப் பூசிப் பைய நீராட்டுகிருள் தாய். பிறகு 'நாக்கை நீட்டு!' என்று சொல்லிக் கொண்டே, நாக்கு வழிக்கத் தொடங்கு கிருள். பவளம் போன்ற வாயைத் திறக்கிறது குழந்தை.

'வாய்க்கும் நாவுக்கும் வித்தியாசம் தெரியாத பச்சைப் பிள்ளை' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு பார்க்கும்போதே,—அது என்ன, கனவா? நனவா?— சகல லோகங்களையும் காண்கிருளாம் பிள்ளை வாய்க் குள்ளே!

ஏதோ ஓர் அதிசயமான வெற்றியை அடைந்து விட்டதுபோல், எங்கே பார்த்தாலும் தூண்கள் நாட்டிக் கொடி கட்டித் தன்னை அலங்கரித்துக் கொண் டிருக்கிறது ஆய்ப்பாடி. இப்படிப்பட்ட 'புத்ரோத்ஸ வ'த்தை அரண்மனை எவ்வளவு சிறப்பாக நடத்திக் கொண்டிருக்கிறது!

ஆனல், உள்ளே அந்தப்புரத்திலே தாய் தோழி யிடம் ஏதோ குற்றப் பத்திரிகை படிக்கிருளே குழந்தை யைக் குறித்து,—அதையும் கேட்போம்.

*கிடக்கில். தொட்டில் கிழிய உதைத்திடும்;*
*எடுத்துக் கொள்ளில், மருங்கை இறுத்திடும்;*

*ஒடுக்கிப் புல்கில் உதரத்தே பாய்ந்திடும்;*
*மிடுக்கி லாமையால், நான்மெலிந் தேன்,நங்காய்!*

[தொட்டில்—(இங்கே) துணித் தொட்டில்; தூளி. மருங்கு—இடுப்பு. புல்கில்—அணைத்தால். உதரம்—வயிறு. மிடுக்கு—வலிமை.]

'தூளியில் கிடந்தால், அது கிழிந்து போகும்படி உதைக்கிறது குழந்தை!' என்கிருள். 'ஐயோ, கால் வலிக்குமே! எடுத்துக் கொள்வோம்' என்று ஒக்கலில் வைத்துக் கொண்டால், அப்போது இருந்த இடத்தில் இராமல் கிளம்பிக் குதித்து இடுப்பை முறித்து விடுகிறதாம். உடனே, 'துஷ்டப்பயல்' என்று ஆசை தீர மார்போடு அணைத்துக்கொள்கிருள். அப்படி அணைத்ததும் காலால் வயிற்றிலே பாய்ந்து உதைக்கிற தாம். 'அம்மா, சக்தியில்லை எனக்கு! நான் எப்படி மெலிந்து போனேன், பார்!' என்று புகார் செய்யும் தாயைப் பார்த்தீர்களா?

'இப்படியெல்லாம் சேட்டை செய்யப் பிள்ளைக்குந் தான் சக்தி போதுமா?' என்ற கவலையும் இவளை இளைக்கச் செய்ததென்பது குறிப்பு.

குழந்தை வேறு யாருமில்லை; மதுரைச் சிறைக் கூடத்திலே பிறந்து ஆய்ப்பாடியில் வந்து வளரும் கிருஷ்ணன்தான். அப்படியானால், தாய் யசோதை தானே? இத்தக் கேள்விக்கு 'யசோதையாக நடிக்கும் பெரியாழ்வார்' என்று பதில் சொல்ல வேண்டும்.

இவர் தமது தோழரான செல்வ நம்பியைப் பார்க்க வேண்டுமென்று திருக்கோட்டியூருக்கு வந்திருக்கிருர். இங்கே கோயில் கொண்டிருக்கும் ஸௌம்ய நாராயண

மூர்த்தியைத் தரிசித்துக் கொண்டிருக்கும்போது, அந்த விக்கிரகம் ஸ்ரீகிருஷ்ணுவதாரத்தை ஞாபகப்படுத்த, இவர் மனக்கண்ணுக்கு அந்தக் கோயில் நந்தகோபன் அரண்மனையாகவும் அந்த ஊர் ஆய்ப்பாடியாக்வும் மாறிவிட்டன! நின்றும் இருந்தும் நடந்தும் கிடந்தும் கூத்தாடியும் கோலம் காட்டும் ஸௌம்ய நாராயணன் ஆயர்களுக்கும் ஆய்ச்சிகளுக்குமிடையே குழந்தைக் கிருஷ்ணனைப் பிரத்தியட்சமாக, பெரியாழ்வார் ஸ்ரீகிருஷ்ண ஜனனக் காட்சிகளைக் கண்டு நமக்கும் காட்டுவதோடு, தாமே தாயாகவும் காட்சி வழங்குகிறார்.

திருக்கோட்டியூரில் முதல் முதல் ஏற்பட்ட இத்தகைய பக்தியநுபவம் செரந்த ஊரான ஸ்ரீவில்லி புத்தூரிலும் அடிக்கடி ஏற்பட்டதென்று ஊகிக்கலாம்.

ஸ்ரீகிருஷ்ணநுபவத்தில் ஈடுபடும் பெரியாழ்வார் அந்த மேனியழகை அடி முதல் முடி வரை அநுபவிக் கிறார், யசோதைப் பிராட்டியின் கண்களாலேயே! மற்றப் பெண்களுக்கும் அந்தக் குழந்தையைக் காட்ட விரும்பிய யசோதை போல், இவரும் தாம் கண்ட அழியா அழகென்னும் தத்துவத்தை அநுபவ யோக்கிய ரான பிறருக்கும் 'காணீர்! காணீர்!' என்று காட்ட விரும்புகிறார்.

அந்த அழகு வளரும் தொட்டிலை,

*மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி*
*ஆணிப்பொன் னல்செய்த வண்ணச் சிறுத்தொட்டில்*

[ஆணிப்பொன்—மாற்றுயர்ந்த பொன்.]

என்று காட்டி, அந்தத் தொட்டிலுக்கு அருகே யசோதையாகத் தாமே நின்று,

*சோதிச் சுடர்முடியாய்! தாலேலோ*
*சுந்தரத் தோளனே! தாலேலோ*

என்றும்,

*ஐயா, அழேல்! அழேல்! தாலேலோ*

என்றும் சீராட்டித் தாலாட்டுகிறார், ஆசை தீர.

'அழாதே! அழாதே!' என்று தாலாட்டியும் குழந்தை அழுது கொண்டேயிருக்கிறது. சந்திரோதயமாகிவிட்டதால், அழுகை ஆற்ற 'அம்புலியம்மானை'க் காட்டலாம் என்று புறப்படுகிறாள் நிலாமுற்றத்திற்கு, ஒக்கலில் குழந்தையை எடுத்துக் கொண்டு, பெரியாழ்வார் என்ற யசோதை!

சந்திரனைக் கண்டதும் கிருஷ்ணன் அழுகையை மறந்து, 'அதைப் பிடித்துத் தா!' என்னு தன் சிறு கைகளைக் காட்டிக் காட்டி அழைக்கிறான். 'அம்புலி மானே! வா, வா' என்று மழலை முற்றாத இளஞ் சொல்லால் அழைக்கும் போதே, சந்திரன் மேகத் திரைக்குள் மறையப் பார்க்கிறது.

இப்போது தாய்,

*மஞ்சில் மறையாதே, மாமதீ!*
*மகிழ்ந்(து) ஓடிவா!*

[மஞ்சு—மேகம். மாமதீ—பூர்ண சந்திரனே,]

என்று கூப்பிட்டு, 'கை வலிக்கும் குழந்தைக்கு. உன் முகத்தில் கண் உண்டென்றால், இவன் விளையாட்டைப் பார்த்துப் போ, அம்புலீ!' என்று பலவிதமாகப் பேசுகிறாள்.

பேச்சுக்கிடையே, அந்தச் சத்திர வட்டத்தையும் புத்திர ரத்தினத்தின் முக சந்திரனையும் ஒப்பிட்டுப் பார்த்து,

*சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து*
*சோதி பரந்தெங்கும்*
*எத்தனை செய்யினும், என்மகன்*
*முகம் நேர்ஒவ்வாய்!*

என்று தாயின் இதயம் முடிவு கட்டிச் சந்திரனுக்கே அந்த முடிவைத் தெரிவித்து விடுகிறது. அந்த ஒளி வட்டம் எப்படித் திருந்தித் திருந்தி எவ்வளவு ஜோதி யைப் பரப்பி எத்தனை செய்தபோதிலும் கிருஷ்ண னுடைய முகத்திற்கு ஒப்பாகாதாம்.

கைகளும் முழந்தாள்களும் ஊன்றிக் கண்ணன் தலை நிமிர்த்து,

*கோல நறும்பவளச் செந்துவர் வாயினிடைக்*
*கோமள வெள்ளிமுளை போல், சில பல்இலக,*

[செந்துவர்— அழகாய்ச் சிவந்திருக்கிற. கோமளம்—இளமை.]

முகத்தை அசைத்து அசைத்து ஆடுவதையும், கை கொட்டி விளையாடுவதையும், தளர்நடை நடப்பதையும் எவ்வளவு பிரத்தியட்சமாகப் பார்த்து விடுகிறார் மனோ பாவத்தால் யசோதையாக மாறிப் பிறக்கும் பெரியாழ் வார்!

ஒருசமயம் 'ஓடி ஓடிப் போய்விடாதே; பால் சாப்பிட வா' என்று அழைக்கிறார். மற்றொரு சமயம்,

*வாய்த்த புகழ்மணி வண்ணா!*
*மஞ்சனம் ஆடநீ வாராய்*

என்றும்,

*நன்றுநீ நீராட வேண்டும்,*
*நாரணா! ஓடாதே, வாராய்*

என்றும்,

*மாணிக்கமே! என் மணியே!*
*மஞ்சனம் ஆட நீவாராய்*

என்றும் கொஞ்சிக் கொஞ்சி நீராட அழைக்கிறார்.

இன்னும்,

*தேனில் இனிய பிரானே!*
*செண்பகப் பூச்சூட்ட வாராய்*

என்றும்,

*மருவி மணங்கமழ் கின்ற*
*மல்லிகைப் பூச்சூட்ட வாராய்*

என்றும்,

*பச்சைத் தமனகத் தோடு*
*பாதிரிப் பூச்சூட்ட வாராய்*

[தமனகம்—மருக்கொழுந்து.]

என்றும்,

*தெள்ளிய நீரில் எழுந்த*
*செங்கழு நீர்சூட்ட வாராய்*

என்றும் பலவிதமாகக் கொஞ்சிக் கொஞ்சிப் பூச்சூட்டு கிறார்.

இன்னொரு சமயம் கிருஷ்ணனுடைய குறும்புச் செயல்களைக் கேள்விப்பட்டுத் தாய்,

வருக, வருக, வருக, இங்கே
வாமன நம்பி! வருக இங்கே

என்று அழைத்து, 'அசல் அகத்தார் உன்னைக் குறித்து இப்படி யெல்லாம் சொல்வதை என்னால் பொறுக்க முடியவில்லை' என்கிறாள்.

கிருஷ்ணன் 'கன்றுகளை மேய்த்து வருவோம்!' என்று போகிறான். அவன் போன அளவிலே, 'ஐயோ, அவனைப் போகவிட்டேன் நானே!' என்று வருந்து கிறாள். கிலேசம் மறைந்து விடுகிறது, கன்றுகள் முன்னாக வந்து அவன் முகம் காட்டும்போது.

அவர்கள் எப்படி வருகிறார்கள், அந்த வருகை ஆய்ப்பாடியிலுள்ள பெண்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சி தருகிறது என்று இதோ பாருங்கள்:

*குழல்களும் கீதமும் ஆகிஎங்கும்*
*கோவிந்தன் வருகின்ற கூட்டம்கண்டு,*

*மழைகொலோ வருகின்ற தென்றுசொல்லி.*
*மங்கைமார் சாலக வாசல்பற்றி*

*நுழைவனர் நிற்பன ராகிஎங்கும்*
*உள்ளம்விட்(டு) ஊண்மறந் தொழிந்தனரே!*

[குழல்கள்—இலைக்குழல், வேய்ங்குழல் முதலானவை. சாலகம்—பலகணி.]

அவர்கள் உள்ளத்தை வெளியே விட்டு விட்டார் களாம், அவன் போன வழியெங்கும் பறந்து போகும் படி. பசியோடிருந்த போதிலும், உண்டு நிறைந்தவர் களைப் போலிருக்கிறார்களாம். கிருஷ்ணாமிர்தத்தை உண்டவர்களுக்குப் பசி ஏது: தாகமேது? இவர் களுக்கு இப்படியிருக்கும் காட்சி, யசோதைக்கு எப்படி யிருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

தாயின் அன்பு, அளந்து ஆழம் காண முடியாத பெருங்கடல். காதலர்களின் காதலைப்போல் அலைபட்ட கடலன்று; சாந்தமான—பரிசுத்தமான—ஒளி மயமான சமுத்திரம். இந்த விதமான அன்புக் கடலில் விளைந்தவை பெரியாழ்வாரின் பல பாடல்களும் பக்தியநுபவங்களும்.

ஸ்ரீகிருஷ்ணனை இந்தியாவின் ஆத்மா என்று கூறுவதுண்டு. இந்தியாவின் ஆத்மா, என்றும் இளமை வாய்ந்தது: எனவே, கிருஷ்ணனையும் குழந்தையாக வழிபடுகிறோம். குழந்தைக் கிருஷ்ணன் நமது நாட்டில் தோன்றிய பக்தர்களான பல கவிஞர்களின் இன்னிசையிலே—ஆனந்தக் கனவுகளிலே—சிருஷ்டி உத்ஸாகத்திலே தவழ்ந்து வருகிறான்! இத்தகைய பக்த கவிகளின் கூட்டத்தில் பெரியாழ்வாருக்கு ஒரு பெரிய ஸ்தானமுண்டு.

———

## 32. ஜகன்மோகன வேணுகோபாலன்

சூரியாஸ்தமன சமயம். 'வந்துவிடுவான்; நீங்கள் எதிரே நிற்கவேண்டாம்!' என்று விலக்குகிறார்கள் ஏற்கெனவே அந்த வரவு கண்டு நெஞ்சிழந்தவர்கள். 'உண்மைதான்' என்று தொடங்கி அந்தக் கூட்டத்தில் வயது முதிர்ந்தவளான ஒருத்தி பெருமூச்சு விட்டுப் பேசுகிறாள்:

'என் மகள்—பார்த்திருப்பீர்களே?—எப்படி இருந்தாள்! நோயா வந்தது? காட்டு மல்லிகை முதலான பூக்களைச் சூட்டிக்கொண்டு அவன்தானே வந்தான், வாயில் புல்லாங்குழலை வைத்து ஊதி ஊதி, அன்று மாலை வேளையில்? பாவம், கண்ணை மாற வைத்துக் கொண்டு போகத் தெரியவில்லை; அப்படியே நின்று விட்டாள் எதிரே! என்ன விநோதமான எண்ணம்! ''அந்தப் புல்லாங்குழலாக இருந்தோ மில்லையே!'' என்ற ஒரே நினைப்பில் இருந்துவிட்டாளாம். அதற்கு இப்படியா மெலிந்து போகவேண்டும்?'

வேறொரு தாய் சொல்லுகிறாள்: 'ஒரு கையைத் தோழனொருவன் தோள்மேல் ஊன்றிப் பசுக் கூட்டத் திற்குப் பின்னே வந்தான் வாடிய முகத்தோடு. என் மகள்—வழிக்கருகே நின்றவள் — பார்த்துவிட்டாள் அந்த வாட்டத்தை! அவ்வளவுதான். அது கண்டு இந்த ஊர் என்னென்னவோ கற்பனை பண்ணு கிறதாம்.'

உடனே இன்னொரு தாய், 'என்னடீ! ஊர் வாயை மூடலாமா? அன்று குழலூதி இசை பாடிக் கூத்தாடி வந்தானல்லவா? அப்போது பார்க்க வேண்டும் அந்தக் கண்களிலே மலர்ந்த அழகுகளையும் ஆனந்தங் களையும். என் மகளும்—ஐயோ அறிவை இழந்து விட்டாள்! அதற்கு ஊர் என்ன செய்யும்? நாம் என்ன செய்வோம்?' என்கிறாள்.

கூட்டத்தின் வேறொரு பக்கத்திலே ஒரு சதி யாலோசனை! 'அந்த வாயில் இளஞ் சிரிப்பை மறுபடி யும் எப்படிக் காணலாம்?' என்பதுதான் விஷயம். இந்த ஸ்திரீகள் வயசில் முதிர்ந்திராவிட்டாலும் தைரி யத்திலே முதிர்ந்தவர்களென்று தங்களைத் தாங்களே மதித்துக் கொண்டவர்கள்.

இவர்களில் ஒருத்தி தோழியைப் பார்த்து,

*அந்தம் ஒன்றில்லாத ஆயப்பிள்ளை*
*அறிந்தறிந்(து) இவ்வீதி போதுமாகில்,*
*பந்துகொண் டானென்று வளைத்துவைத்துப்*
*பவளவாய் முறுவலும் காண்போம்,தோழீ!*

என்று சொல்லுகிறாள். அந்த ஆயப் பிள்ளையின் அழகுக்கும் விளையாட்டுத் தனத்திற்கும் முடிவே கிடை யாதாம்.

'நமது இதயத்தை அந்த முகம் ஆகர்ஷிக்கிறது என்பதை அவன் அப்படியா பரீட்சித்துப் பரீட்சித்து அறிந்துகொள்ள வேண்டும்? நல்லது; இன்னும் ஒரு சமயம் இந்த வீதியில் வருவானாகில், நாம் அவனை எப்படியாவது வளைத்துக் கொள்ள வேண்டும்' என்கிறாள். 'கூட்டத்திலே அது எப்படி முடியும்?'

என்று தோழி ஒரு கேள்வி போடலாமல்லவா? அதை யும் மானஸீகமாக எதிர்பார்த்துப் பேசுகிருள் தலைவி.

'நாங்கள் விளையாடுகிறபோது, எங்கள் பந்தைப் பறித்துக் கொண்டு போனுய்!' என்ற வியாஜம் போது மல்லவா? 'நாமே கையிலுள்ள பந்தை அவன் மடியில் எறிந்து விட்டுக் குற்றம் சாட்டுவோம்!' என்பது குறிப்பு.

அப்படி வளைத்து வைத்துக்கொண்டு, 'எங்களை யாராக நினைத்தீர்? எங்கள் வீதி காணும் இது!' என்று சொல்ல, அந்தக் குறும்பனுக்குப் புன்சிரிப்பு வந்துவிடுமாம். அப்போது பவளம் போலிருக்கிற அதரத்திலே முத்துச் சுடர் போலத் தவழும் அந்த இளநகையைக் கண்டு அநுபவிக்கலாமல்லவா?

பேச்சு இப்படி நடந்து கொண்டிருக்கையிலேயே தெருவின் ஒரு கோடியில் குடிசையில் குழலிசை கேட்கிறது. அப்போது வீணகானம் போன்ற குரலில்,

*என்றும் இவனைஒப் பாரை, நங்காய்!*
*கண்டறி யேன்ஏடி! வந்துகாணுய்*

என்று தலைவி ஒருத்தி வீட்டுக்குள்ளே இருக்கும் தோழியைக் கூவியழைப்பதும் காதில் விழுகிறது.

ஒவ்வொரு நாளும் பார்த்துக் கொண்டே இருக் கிறவள்தான். எனினும், இப்போது காணும் இந்த அழகனைப்போல் ஒரு நாளும் கண்டதில்லை என்கிருள். நேற்று இவள் பார்த்த கிருஷ்ணனே இன்று பார்க்கும் கிருஷ்ணனுக்கு ஒப்பாகமாட்டான் என்பது குறிப்பு. நாளுக்கு நாள், அப்படிப் புதுமை புதுமையாக வளர் வது போலத் தோன்றுகிறது அழகு.

'அடி, தோழீ! நீயே வந்து பார்த்துக்கொள், நான் சொல்வது சரிதான் என்பதை' என்று உருகிக் கொண்டிருக்கும் கட்டழகியைப் பாருங்கள்.

இனி இந்த நாடகத்தில் வேறு காட்சிகள். களம், பிருந்தாவனம். ஆழ்வார் தாமும் ஒரு கோபியாகித் தம்மைப் போன்றவர்கள் கண்டதையும் கேட்டதையும் அநுபவித்ததையும்,

*நாவலம் பெரிய தீவினில் வாழும்*
*நங்கைமீர் கள்!*

என்று பேசத் தொடங்குவது போலப் பிரத்தியட்ச மாக்கிவிடுகிறார்.

அதோ வருகிறார்கள் உறங்கிக்கொண்டிருந்த பெண்கள், 'வாருங்கள்!' என்று குழலோசை வழி காட்டி யழைக்க! கட்டுப்பாடுகளை யெல்லாம் மீறி வரும் இவர்கள் அந்த இசையின் வடிவம் போலிருக்கும் கோபாலனை நெருங்கியதும், ஒழுங்குபடக் கோத்த மாலைகள் போலச் சூழ்ந்துகொண்டு எதிர்நோக்க முடியாமல் தலை கவிழ்ந்திருக்கிறார்கள்.

இன்னும் நன்றாகப் பாருங்கள், இவர்கள் நிலையை யும் கிருஷ்ணன் நிலையையும்:

*இடஅ ணரை இடத் தோளொடு சாய்த்(து)*
*இருகைகூ டப்புரு வம்நெரிந் தேறக்*
*குடவ யிறுபட வாய்க்கடை கூடக்*
*கோவிந்தன் குழல்கொ(டு) ஊதின போது,*
*மடமயில் களொடு மான்பிணை போலே*
*மங்கைமார் கள்மலர்க் கூந்தல் அவிழ*
*உடைநெ கிழஓர் கையால் துகில்பற்றி*
*ஒல்கிஓ டரிக்கண் ஓடநின் றனரே!*

[அணர் — மேல்வாய்ப்புறம். ஒல்கி — ஒடுங்கி. ஓடு — ஓடுகிற. அரி — ரேகைகள்.]

காட்டிலே பல இடங்களிலும் மேய்ந்துகொண்டிருந்த பசுக்கள் வெகு தூரம் விலகிப் போய்விடாமல் திரும்பி வந்து சேர்வதற்காக வேணுகானம் செய்கிறான். ஆனால், பசுக்களுக்கு முன் வந்து சேர்கிறார்கள் கோபிகா ரமணிகள்.

அன்புக் கடல்—அழகின் பரிபூர்ண சக்தி—கீதமாகப் போய் அந்த உள்ளங்களைத் திருடிக்கொண்டது. 'என்னை நோக்கி ஊதினான்! என்னை நோக்கி ஊதினான்!' என்று செவி நிறையத் தேக்கிக்கொண்டு நிற்கிற யுவதிகளில் சிலர் மயில்களைப் போலக் கண்ணைப் பறிக்கும் ரூபமுள்ளவர்கள்; சிலர் மான்களைப் போல் மருண்டு மருண்டு பார்க்கும் பார்வையிலே ஆழம் காணமுடியாத அழகை மறைத்து வெளியிடுகிறவர்கள்.

இப்போது இவர்கள் எல்லாரும் தங்களையும் தங்கள் அழகுகளையும் மறந்து கீதத்தோடு ஒடுங்கி லயித்துப் போயிருக்கிறார்கள். கொஞ்ச நேரத்திற்கு முன்தான், வீடுகளில் பூக்களால் தங்களைச் சிங்காரித்துக்கொண்டிருந்தார்கள்: அந்தக் கூந்தல்கள் அவிழ்ந்து தொங்குகின்றன. ஓடிவந்த அவசரத்திலே குலைந்த கூந்தலைக் கட்டிக்கொள்ளவும் தோன்றவில்லை: குலைந்த ஆடையை ஒரு கையால் பற்றிக்கொண்டு ஒதுங்கி நிற்கிறார்கள். கண்களோ நாணத்தையும் கடந்து அந்த மோகன சொரூபத்தின் மேல் ஓடுகின்றன.

என்ன கீதம்! என்ன உண்மை! கோபாலன் பசுக் களைத் தேடுகிறான்: பரமாத்மா ஜீவாத்மாவைத் தேடு கிறது!—என்பது பெரியாழ்வார் குறிப்பு.

தெய்வப் பெண்களும் குழலோசை வழியே வந்து சூழ்ந்து நெருங்குகிறார்கள்! மேனகை திலோத்தமை ரம்பை ஊர்வசி முதலான அப்ஸர ஸ்திரீகள்—ஆகாச வீதியிலே ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் வந் தார்கள். ஆடுவதிலும் பாடுவதிலும் தங்களுக்கு மேற் பட்டவரில்லையென்று பிரஸித்தைகளா யிருப்பவர்கள் வேணுகோபாலனைக் கண்டதும் வெட்கம் அடைந்து மயங்கித் தங்கள் ஆடல்பாடல்களை மறந்துவிடுகிறார்கள்!

இதோ, குழலிசை செவியைப் பிடித்து இழுப்பது போல் ஆகர்ஷித்து வருகிறது, 'கான வித்தைக்குத் தும்புரு நாரதர்' என்று ஸர்வலோகப் பிரஸித்தரா யிருப்பவர்களையும்! செவி படைத்தவர்கள் எல்லாரை யும் வசீகரிக்கக்கூடிய தங்கள் வீணைகளையே அவர்கள் மறந்து விடுகிறார்களாம்.

அதோ, பாருங்கள் ஆகாச சஞ்சாரிகளும் கீத வாத்திய வித்தைதர்களுமான கந்தர்வர்கள் என்ன பாடு படுகிறார்கள் என்று:

*அம்பரம் திரியும் காந்தப்ப ரெல்லாம்*
*அமுத கீதவலை யால்சுருக் குண்டு,*
*நம்பரம் அன்றென்று நாணி மயங்கி*
*நைந்து சோர்ந்துகை மறித்துநின் றனரே*

[அம்பரம்—ஆகாசம். காந்தப்பர்—கந்தர்வர். கை மறித்து—கையைத் திருப்பிக் கொண்டு.]

வேணுகானம் என்னும் அமுத வலையில் கட்டுண்டு வித்யா கர்வங்களை யெல்லாம் மறந்து, 'நாமும் பாடிக் கொண்டிருந்தோமே, வெட்கமில்லாமல்!' என்று மனம் நைந்து சோர்ந்து கையைத் திருப்பிக் கொள் கிறார்கள்—'இனி வாத்தியங்களைத் தொடுவதுமில்லை!' என்று சங்கற்பஞ் செய்து கொண்டவர்களைப் போலே!

தேவரும் தேவியரும் ஆய்ப்பாடி நிறையப் புகுந்து திரண்டு,

*செவியுள் நாவின்சுவை கொண்டு மகிழ்ந்து*
*கோவிந்தனைத்தொடர்(ந்து) என்றும் விடாரே!*

என்று காட்டும் பெரியாழ்வார்,

*புவியுள்நான் கண்டதோர் அற்புதம் கேளீர்!*

என்று சொல்லி, ஒரே வலையில் விண்ணும் மண்ணும் கட்டுண்டிருக்கும் அற்புதத்தை ஒருவாறு விளங்க வைக்க முயல்கிறார்.

சிறு விரல்கள் குழலின் துளைகளைப் புதைத்துப் புதைத்துத் திறக்கின்றன. கண்கள் துளைகள் தோறும் ஓடுவதுபோல் நோக்குகின்றன. காட்டிலே உலாவி உலாவி ஊதிய பின் ஒரு மரத்தடியிலே, முகத்தில் முத்து அரும்பினாற்போலே வேர்வைத் துளிகள் தோன்ற நின்று குழலூதுகிறான் கோபாலன்.

இப்போது இவன் கவர்ந்திழுக்கும் ரஸிகர்களைப் பாருங்கள்:

*பறவையின் கணங்கள் கூடு துறந்து*
*வந்துசூழ்ந் து,படு காடு கிடப்பக்*
*கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக்*
*கவிழ்ந்(து)இரங் கிச்செவி ஆட்டகில் லாவே!*

[படுகாடு கிடப்ப—ஒருசேர விழுந்த மரங்கள் போலச் செயலற்றுக் கிடக்க. கறவை—கறக்கும் பசுக்கள்.]

பசுக்களை அழைக்கும் குழலோசை, கூடுகளுக்குப் போன பட்சி ஜாலங்களின் காதிலும் விழுகிறது. எத்தனை தினுசுகளான பறவைகள் அப்படியே பறந்து வந்து வேறு வேறு நிறமுள்ள சிறகுகளை விரித்துக் கொண்டு, வெட்டி விழுந்த காடுபோலே கண்ணனைச் சூழ்ந்து கிடக்கின்றன!

வயிறு நிறைய மேய்ந்து வந்த பசுத் திரள்களோ, கால்களைப் பரப்பிக்கொண்டு தலைகளைத் தொங்கவிட்டு நிற்கின்றன. அவற்றால் செவியையும் அசைக்க முடிய வில்லை: அசைத்தால்கூட அந்த இசையை அநுபவிப் பதற்குத் தடையாகும் என்ற எண்ணமோ?

காளமேகம் போல நின்று இசைமழை பொழி கிறான். சிவந்து மலர்ந்த தாமரைப்பூவை வண்டுகள் சூழ்ந்து கொண்டதுபோல், தலைமயிர் இருண்டு சுருண்டு விளங்குகிறது.

அந்த முகமலரிலிருந்து குழலின் வழியாகப் பெருகும் கீதம் இன்னும் எப்படிப்பட்ட விநோத ரஸிகர்களை அழைத்து வருகிறது, பாருங்கள்:

*திரண்டெழுதழை மழைமுகில் வண்ணன்,*
*செங்கமல மலர்சூழ் வண்டினம் போலே*
*சுருண்டிருண் டகுழல் தாழ்ந்த முகத்தான்*
*ஊதுகின்ற குழலோசை வழியே,*
*மருண்டுமான் கணங்கள் மேய்கை மறந்து,*
*மேய்ந்தபுல் லும்கடை வாய்வழி சோர,*

*இரண்டுபா டும்துலுங் காப்புடை பெயரா,*
*எழுதுசித் திரங்கள் போலநின் றனவே!*

[இரண்டு பாடும்—முன்னும் பின்னும். துலுங்கா-அசையாமல்.]

மானைப் போலத் துள்ளி ஓடும் மனித உள்ளத்தைச் சாந்த மயமாக்கிய கண்ணன் குழல், மனம் போலத் துள்ளிக் கொண்டிருந்த மான்களையும் வசீகரித்து விட்டது!

இன்னும் ஒரு காட்சி: மயிலின் தோகையால் முடியை அலங்கரித்துக் கொண்டிருக்கிறான். ஆனால், முடிதான் அந்த மயில்-தோகைக்கே அலங்காரமோ?
அரையிலே பொன்னிறமான ஆடை ஒளிர்கின்றது. யசோதையின் செல்லப் பிள்ளையல்லவா? விலை யுயர்ந்த நகைகளும் அணிந்திருக்கிறான். ஆனால், புல்லாங்குழலும் வாயுமாகத் தோன்றும் நீலமேனிதான் அந்த ஆபரணங்களுக்கும் அலங்காரங்களுக்குமே ஒரு புதிய சோபை தருகிறது.

அந்த மோகன வித்தையில் இயற்கையாகிய மோகினியே இப்போது மோகித்துப் போயிருக்கிறாள்:

*கருங்கண் தோகை மயிற்பீலி அணிந்து,*
*கட்டிநன்(கு) உடுத்த பீதக ஆடை*
*அருங்கல உருவில் ஆயர் பெருமான்*
*அவனொரு வன்குழல் ஊதின போது,*
*மரங்கள்நின் றுமது தாரைகள் பாயும்;*
*மலர்கள்வீ ழும்;வளர் கொம்புகள் தாழும்;*
*இரங்கும்;கூம் பும்;திரு மால்நின்ற நின்ற*
*பக்கம்நோக் கிஅவை செய்யும் குணமே!*

[பீதக ஆடை—பீதாம்பரம். அருங்கலம்—ஆபர ணம். கூம்பும்—குவியும்.]

கோபிகைகளின் தோழன் இயற்கையின் காதல ஞகி விட்டான்! 'என்ன என்ன இச்சைகளையெல்லாம், உணர்ச்சிகளை யெல்லாம் தாவரங்களுக்கும் உண் டாக்கி விடுகிறது இந்த வேணுகானம்!' என்று ஆச்சரி யப்படுகிறது அந்த அமுதவலையில் சுருக்குண்டு, இயற் கையும் தானும் கீதமுமாயிருக்கும் கோபாலனை அடைந்த பெரியாழ்வாருள்ளம்.

பிருந்தாவனம் எங்கும் செவிகளாய் மோகன கீதத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறது; எங்கும் கண்க ளாய் அந்த மோகன சௌந்தரியத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறது! அந்த ரூப சௌந்தரியமும் குண சௌந்தரியமும் கீதமாக ஓடி எல்லாவற்றையும் தன்மய மாக்கி விடுகின்றன!

நாக்கின் சுவையைச் செவியிலேயே பிறப்பித்துப் பகுத்தறிவில்லாத பிராணிகளையும் வசீகரித்து, உயிர்க் குலத்தைச் சகோதர தர்மம் என்னும் தெய்விக பாசத்தால் கட்டியிருக்கும் அன்புக் கண்ணனது அருட்கீதம், சரா சரங்களை யெல்லாம் ஒருங்கே தழுவி யருள் செய்கிறது! சொர்க்க லோகத்தையும் இந்த லோகத்திலே கொண்டு வந்து விடுகிறது; மறுமையிலுள்ள பேரின்பத்தையும் இம்மை யின்பமாகக் காட்டுகிறது! இந்த அற்புதத்திலே வேற்றுமைகளெல்லாம் மறைந்தொழிகின்றன! இப் படிக் குறிப்பாக உபதேசிக்கிருர் பெரியாழ்வார்.

ஸ்ரீகிருஷ்ணன் தரிசனமளிக்கும் கோலங்களில் மூன்று, பக்தருள்ளங்களை விசேஷமாக வசீகரிக்கின்றன

என்று சொல்ல வேண்டும். கோகுல பாலனாக வருவ தொன்று; பசுக்களுக்கும் கோபிகைகளுக்கும் தோழனாகத் தோன்றுவதொன்று; வேணுகோபாலனாகத் தோற்றமளிப்பதொன்று. இந்த மூன்று கோலங்களும் பெரியாழ்வாருக்குப் பிரத்தியட்சம்தான்!

சங்கீதத்தின் அதிசயமான தத்துவங்களோடு வேதாந்தத்தின் பெரிய பெரிய தத்துவங்களும், சாஸ்திர முடிவுகளான சித்தாந்தங்களோடு பலவேறு கலைகளின் பொருளும், கவிஞர்கள் ரஸிகர்களின் புதுப் புதுக் கனவுகளும், ஜகன் மோகன வேணுகோபால னுடைய கானத்திலே, விதையில் அடங்கிய ஆலமரம் போல், அடங்கி யிருக்கின்றன என்பது கிருஷ்ண பக்தர்களின் கொள்கை.

# 33. நோய்க்கு மருந்து

'தீக்குணங்களின் சொரூபங்களோ?' என்று நடுங்கும்படி யிருந்த அரக்கியருக்கு நடுவே ஒடுங்கி நோய்பிடித்தவளைப் போலிருக்கிருள் சீதாதேவி, மலங்க மலங்க விழித்துக் கொண்டு. அந்த நிலையில் அவளைக் கண்ட தூதனுள்ளம் என்னபாடு பட்டிருக்க வேண்டும்! எனினும், தன் கிலேசத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு, அவள் கிலேசங்களுக்கு மருந்தாகச் சில அடையாளங்கள் சொல்லுகிருன்.

முதல் முதல் அவள் எண்ணங்களை ஜனகராஜ சபையில் வில் முறித்து மணம் முடிந்த பழைய ஆனந்த மான காலத்தை நோக்கித் திருப்ப முயல்கிருன். பிறகு, பரசுராம கர்வபங்கம் முதலான சில அடையாளங்கள் சொல்லி மோதிரத்தையும் காட்டுகிருன்.

இடையே ஒரு அடையாளம் சொல்லும்போது 'சொல்லலாமா?', என்ற ஐயம்கூட உண்டாகிறது. எனினும், 'அதைச் சொல்லத் தான் வேணும்; அப்போதுதான் இவள் ஐயம் தீரும்!' என்று துணிந்த வனைப் போல்,

*அல்லியம்பூ மலர்க்கோதாய்!*
*அடிபணிந்தேன் விண்ணப்பம்*
*சொல்லுகேன், கேட்டருளாய்,*
*துணைமலர்க்கண் மடமானே!*

[அல்லி—அக இதழ்; பூந்தாது. கோதாய்—(இங்கே) மாலை போல் இருக்கிறவளே. துணை—ஒன்றுக்கொன்று ஒப்பான.]

என்ற பீடிகையோடு, லட்சுமணனுக்கும் தெரியாத பரம இரகசியம் ஒன்றை வெளியிடுகிறான்.

கண்ணனைத் தாய் மணிக்கயிறு கொண்டு கட்டி வைத்திருந்தாளல்லவா, வெண்ணெய் திருடினானென்று? தன் உள்ளம் திருடிய கள்வனைச் சீதையும் கட்டிவைத்தாளாம் ஒரு சமயம்,—அயோத்தியில் காதலர்கள் ஆனந்தமாக வாழ்ந்துகொண்டிருந்த காலத்திலே. ஏன்? எப்படி?

*மல்லிகைமா மாலைகொண்(டு) அங்(கு)*
*ஆர்த்ததும்ஓர் அடையாளம்*

[ஆர்த்ததும்—கட்டியதும்.]

என்று அந்த விளையாட்டை மெள்ள ஜாக்கிரதையாக ஞாபகப்படுத்துகிறான் அனுமன்.

இப்படியெல்லாம் சீதையின் பிரிவு என்ற நோய்க்கு மருத்துவம் செய்துகொண்டிருக்கும் அனுமனைக் குறித்துப் பாடும் பெரியாழ்வாருக்குப் 'பிறவி என்னும் நோய்க்கு மருந்து அறிவார் இல்லையே!' என்று கவலை எற்பட்டது. 'கடவுளே மருந்தும் மருத்துவனும்' என்ற ஞானம் உதயமானதும்,

*மருத்துவ னாய்நின்ற*
*மாமணி வண்ணா!*

[மருத்துவன்—வைத்தியன்.]

என்று வாய்குளிர மனம் குளிர அழைத்தார்.

அழகனை ராமனே குலசேக ராழ்வாருக்கு வைத்தியனாக அமைந்தான் என்று சொல்லலாம்: பெரியாழ்வாருக்கு வைத்தியனோ அழகனை கிருஷ்ணன் என்று சொல்ல வேண்டும். குலசேகரருக்குக் கிருஷ்ணனும் ராமன்தான்: பெரியாழ்வாருக்கோ ராமனும் கிருஷ்ணனாகவே காட்சி தந்தான்!

*கூரணிந்த வேல்வலவன்*
*குகனோடும் கங்கைதன்னில்*
*சீரணிந்த தோழமை*
*கொண்டதும் ஓர் அடையாளம்*

[கூர் அணிந்த—மிகுந்த கூர்மையுடைய. வலவன்—சமர்த்தன்; வெற்றியாளன்.]

என்று ராமன் ஏழை வேடனை குகனோடு கொண்ட தோழமையைப் பெரியாழ்வாரும் பாராட்டி அந்த நிகழ்ச்சியைக் கிருஷ்ண லீலைபோல் விசேஷ ஆர்வத்துடன் குறிப்பிடுகிறார்.

திருமங்கையாழ்வாரைப் போல், தான் தோழனைதோடு தன் மனைவியையும் அவனுக்குத் தோழியாக்கிய அந்தத் தோழமையைச் 'சீர் அணிந்த தோழமை' என்று போற்றிய போதிலும், கிருஷ்ணன் பசுக்களோடும் கோபிகைகளோடும் கொண்ட தோழமை தான் பெரியாழ்வாரின் பக்திக் காதலுக்கும் உயர்தர வாழ்க்கைக்கும் ஒரு விசேஷமான தூண்டுகோலாயிருந்தது. இந்தத் தோழமையின் அரும்புதான் அந்தத் தோழமை என்பது இவர் குறிப்பு.

திருமங்கையாழ்வார் கருத்தைப் போற்றுவது போல், சொற்களையும் போற்றுகிறார் பெரியாழ்வார்.

சீதாராமனுடைய தியாக வாழ்க்கையில் ஈடுபட்டது திருமங்கையாழ்வார் இதயம்: அவர், வினவும் விடையுமாக இரண்டு பெண்கள் பாடி விளையாடுவதுபோல், 'காட்டிலே திரிந்த பொன்னடிகள் தேவர்களுக்கும் முடிமலராக விளங்குகின்றன!' என்ற அழகான கருத்தை உள்ளிட்டு,

*மான்அமரும் மென்னோக்கி*
*வைதேவி இன்துணையாக்*
*கான்அமரும் கல்அதர்போய்க்*
*காடுறைந்தான், காணேடீ!*
*கான்அமரும் கல்அதர்போய்க்*
*காடுறைந்த பொன்னடிகள்*
*வானவர்தம் சென்னி*
*மலர்கண்டாய்! சாழலே*

[மான் அமரும் மென்னோக்கி—மானைப்போல மென்மையான கண்ணழகையுடையவள். வைதேவி—வைதேகி; சீதை. இன் துணையா — இனிய துணையாக. கான்—காடு. உறைந்தான்—வசித்தான். அதர்—வழி. வானவர்—தேவர். சென்னி—தலை.]

என்று உருக்கமாகப் பாடினார். இது பெரியாழ்வாருக்கு இளமையிலே மனப் பாடமா யிருந்திருக்கலாம்.

இந்தப் பாட்டோடு,

*மான்அமரும் மென்னோக்கி!*
*வைதேகீ! விண்ணப்பம்:*
*கான்அமரும் கல்அதர்போய்க்*
*காடுறைந்த காலத்து*

என்று அனுமன் சீதையை நோக்கிக் கூறுவதாக இவர் பாடுவதை ஒப்பிட்டுப் பாருங்கள்.

எனினும், இப்படிப்பட்ட வீர சரித்திரத்தைக் காட்டிலும் கண்ணனுடைய அன்பு மயமான இன்பக் கதைகளே பெரியாழ்வார் இதயத்தை வசமாக்கி மலரச் செய்தன.

*ஆயர்க ளோடுபோய்*
*ஆநிரை காத்(து), அணி*
*வேயின் குழல்ஊதி*
*வித்தக னாய்நின்ற*

[ஆயர் — இடையர். ஆநிரை — பசுக்கூட்டம். அணி — அழகான. வித்தகன் — அதிசயத் தன்மை யுடையவன்.]

கிருஷ்ண சரித்திரத்தின் அதிசய எளிமையையும் வசீகர அழகையும் பெரியாழ்வாரது ஆரோக்கியமான பக்தி மதத்தின் உயிர்நிலை என்று சொல்லவேண்டும்.

தமது கண்ணனைப் பெரியாழ்வார் எல்லாத் திருப் பதிகளிலும் தரிசித்தார்,— குலசேகரர் திருப்பதிகளி லெல்லாம் ஸ்ரீராம தரிசனம் செய்தது போல். பல சமயங்களிலும், 'செந்தமிழ்த் தென்புதுவை' என்று பிரசித்தமாய் இருந்த சொந்த ஊரான ஸ்ரீவில்லி புத்தூரே கோகுலமாகவும், பிருந்தாவனமாகவும் தோன்றியது. நண்பரான செல்வநம்பியின் திருக் கோட்டியூர் ஒரு சமயம் ஆய்ப்பாடியாகத் தோன்றியது.

தமது சீடனும் பேரரசனுமான பாண்டியனுடைய அபிமான ஸ்தலமான திருமாலிருஞ் சோலையிலும் பெரியாழ்வாருக்குக் கிருஷ்ண தரிசனம்தான்.

*புன்னை செருந்தி யொடு,*
*புன வேங்கையும் கோங்கும் நின்று*
*பொன்அரி மாலைகள் சூழ்*
*பொழில் மாலிருஞ் சோலையதே*

[புன்னை, செருந்தி, வேங்கை, கோங்கு-மரவகை. புனம் - மலைச் சார்பான கொல்லை. பொன் அரிமாலை-பொன்னால் செய்த ஒருவகையான கழுத்தணி. பொழில் - சோலை.]

என்று வருணிக்கப்படும் திருமாலிஞ் சோலையில், புன்னையும் செருந்தியும் வேங்கையும் கோங்கும் பந்தி பந்தியாகப் பூத்துச் சொரியும் காட்சி அந்த மலையில் உள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய கழுத்திலே இயற்கை அன்னை 'பொன்னரி மாலைகள்' அணியப் போவது போலத் தோன்றியதாம்.

குறத்திகளும் அந்த மலையில் கிருஷ்ணனைப் பாடிக் கொண்டே நடனம் செய்தார்களாம். அங்கேயுள்ள வண்டுகளும் 'ஆயிர நாமம் சொல்லி'க் கண்ணனைப் பாடிக் கொண்டிருந்தனவாம். 'எல்லாம் கிருஷ்ண மயம்' என்றிருந்தவருக்கு இப்படியெல்லாம் தோன்றியது ஆச்சரியமா?

'தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்க'த்திலும் 'என்னுடைய - திருவரங்கன்' என்று பெரியாழ்வார் அபிமானிக்கும் கடவுள் ஸ்ரீ கிருஷ்ணன் தான்.

*குரவரும்பக் கோங்கலரக்*
*குயில்கூவும் குளிர்பொழில்சூழ்*
*திருவரங்கம் என்பதுவே*
*என் திருமால் சேர்விடமே*

[குரவு, கொங்கு - மர வகை. அலர - மலர. பொழில் - சோலை.]

என்றபடி நித்திய வசந்தமான ஸ்ரீரங்கம் நித்திய யௌவன சௌந்தரிய மூர்த்தி கோயில் கொள்வதற்கு வசதியான தலமல்லவா?

எங்கே பார்த்தாலும் பக்தி பரிமளித்துக் கொண்டிருந்தது இவருணர்ச்சியில்.

*உரம்பெற்ற மலர்க்கமலம் உலகளந்த*
*சேவடிபோல் உயர்ந்து காட்ட,*

*வரம்புற்ற கதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத்*
*தலைவணங்கும் தண்அ ரங்கமே*

[உரம் — நிலத்தின் உரம். மலர்க் கமலம் — தாமரைப்பூ. வரம்பு—வரப்பு. தண் — குளிர்ந்த.]

என்று பாடினார் பெரியாழ்வார்.

நில உரத்தாலே வயல்களில் வளர்ந்து பிரகாசித்த தாமரைப் பூக்களைப் பார்த்தார்; அவை பகவான் உலகமளந்த காலத்தில் மேலே எடுத்த திருவடிகளை ஞாபகப்படுத்தின. வரப்பிலே கனத்தால் சாய்ந்து விளைந்து கிடந்த செந்நெற் கதிரையும் பார்த்தார்; திருவடிகளை நோக்கித் தலை வணங்கும் பணிவும் அடக்கமுமுள்ள பக்திப் பெருஞ் செல்வர்களைக் குறித்த நினைவு மேலிட்டது.

இப்படிப்பட்ட *தலத்திலுள்ள வண்டுகளோ பாகவத சமூகத்திற்கு உபலட்சணமாய்ச் சோலைமலை வண்டுகளையும் வென்றுவிட்டன, பக்திரஸத்தை அநுபவிப்பதிலே! பாடினார் குதூகலமாக:

*எல்லியம்போ(து) இருஞ்சிறை வண்(டு)*
*எம்பெருமான் குணம்பாடி*
*மல்லிகைவெண் சங்கூதும்*
*மதிளரங்கம் என்பதுவே.*

[எல்லி - (இங்கே) அந்தி மயங்கும் இரவு. இருஞ்சிறை - பெரிய சிறகு.]

அந்தி மயங்கும் வேளையில் வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டே மல்லிகைப் பூக்களின் மேலேயிருந்து தேனைப் பருகத் தொடங்கின. அவை கர்வத்தோடு மேலே பறப்பதையும், பூக்களின் மேலே வருவதையும் கவனித்தார். சாயங்கால மலரான மல்லிகை மலர்வதற்கு முன்பு தலை குவிந்து மேல் பருத்து வெளுத்த நிறமுள்ள சங்குபோலத் தோன்றுவதையும் கவனித்தார். 'சரி; எம்பெருமானுடைய திவ்ய குணங்களைத்தான் பாடுகின்றன வண்டுகள்; அந்தப் பிரீதியையும் மகிழ்ச்சியையும் சங்குகளிலும் வைத்து ஊதவேணுமென்று இந்த மல்லிகைப் பூக்களையே வெண் சங்குகளாக உபயோகிக்கின்றன!' என்று எண்ணமிட்டார்.

கொடி படர்ந்த அந்தச் சோலைகளில் சஞ்சரிக்கும் குயில் முதலான பட்சி சமூகங்களும் அர்த்தமில்லாமல் கூவவில்லையாம். 'அவை பகவானுடைய வாகனமும் தங்கள் அரசுமான கருடன் புகழைத்தான் தங்கள் பாஷைகளில் பாடிக்கொண்டிருக்கின்றன—கோவர்த்தன கிரியில் குரங்குகள் தங்கள் ராஜாவான அனுமன் புகழ் பாடிக் குட்டிகளை உறங்கப் பண்ணுவதுபோல!' என்றெல்லாம் கனவு காணத் தொடங்கியது பெரியாழ்வார் பக்தியுள்ளம்.

கோவர்த்தனம் முதலான வடநாட்டுத் திருப்பதிகளையும் பாடினார் பெரியாழ்வார். நந்தப்ரயாகையைத் திருமங்கை மன்னர் பாடி வைத்தாரென்றால் தேவப்ரயாகையைப் பெரியாழ்வார் பாடி வைத்தார்.

கங்கையைக் குறித்துத் திருமங்கையாழ்வார் கம்பீரமாகப் பாடியிருப்பதுபோல் பெரியாழ்வாரும்,

*தடவரை அதிரத் தரணிவிண்(டு) இடியத்*
*தலைப்பற்றிக் கரைமரம் சாடிக்*
*கடலினைக் கலங்கக் கடுத்திழிகங்கை*

[தடவரை - பெரிய மலை. தரணி - பூமி. தலைப் பற்றி - தலையிலே ஏறக் கிளம்பி. கடுத்து - வேகத்தோடு வந்து. இழி - குதிக்கிற.]

என்று பாடியிருக்கிறார்.

பெரிய மலையும் அதிரும்படி குதிக்கிறதாம் கங்கை; பூமி பிளந்து இடிந்து போகும்படி கரையில் நிற்கும் மரங்களையும் மோதி முறித்துக்கொண்டு போய்க் கலங்காத கடலும் கலங்கும்படி படு வேகமாகப் பாய்ந்து சங்கம மாகிறதாம்.

இந்த வருணனையின் தோரணையும் சொற்கலையின் போக்கும் கூட நமக்குத் திருமங்கை யாழ்வாரை நினைவூட்டுகின்றன. எனினும், அவரைப்போல் இவரும் கங்காதீரத்திலும் தணியாத ஆத்ம தாகத்தைக் காவேரி தீரத்தில் தணித்துக்கொள்ள விரும்பி,

*காவிரிவந்(து) அடிதொழும்சீர் அரங்கமே*

என்று ஸ்ரீரங்கம் நோக்கினார்.

அப்படியே, கோவர்த்தன மலையைக் காட்டிலும் இவருள்ளத்தையும் உயிரையும் குளிர்வித்தது, பாண்டி நாட்டிலுள்ளதும்,

...........அழ கன் அலங் காரன்மலை,
குலமலை, கோல மலை,குளிர் மாமலை, கொற்றமலை,
நிலமலை, நீண்ட மலை, திரு மாலிருஞ் சோலையதே.

[குலமலை—சிரேஷ்டமான மாலை. கோலம்-அழகு. கொற்றம்—வெற்றி.]

என்று இவர் பாடுவதுமான திருமாலிருஞ் சோலை என்ற அழகர் மலை தான்!

இந்தத் தலங்களிலெல்லாம், பல வகையான இயற்கை யழகுகளுக்கிடையே, இயற்கை யழகனை கண்ணன் பெரியாழ்வாருக்கு என்றும் இனியனாய்,

ஆயிரம் தோள்பரப் பி,முடி
ஆயிரம் மின்இலக,

[மின் இலக—மின்னலைப்போல் ஒளிவீச.]

ஸர்வ சக்தியோடு கூடிய ஸர்வ ரட்சகனைக் காட்சி தந்தான்.

'திசை விளக்காய்' நின்ற பல திவ்ய ஸ்தலங்களிலும் அந் நாளில் தமது பரிசுத்த வாழ்க்கையால் 'எண்டிசைக்கும் (எட்டுத் திசைகளுக்கும்) விளக்காகி' நின்ற பக்த மணிகள் வாழ்ந்து வந்தார்கள். அன்புருவாகிய அழகன்—கருணைக் கடலான கிருஷ்ணன்—இவர்கள் உள்ளத்தையே திருப்பதிகளிலெல்லாம் மேலான திருப்பதியாகக் கொண்டு, இவர்கள் வாயிலாக மக்களுக்குச் சிறப்பாகக் காட்சி வழங்கினான். இந்தச் சாதுக்கள் 'குழலை வென்ற குளிர் வாயினராகி'

உபதேசங்கள் செய்து சாதுக்களின் கூட்டங்களைப் பல இடங்களிலும் பெருக்கி வந்தார்கள்.

இந்த அன்பர்களுக்கு யாரிடத்திலும் பகையில்லை; வெறுப்பில்லை; சினமும் கிடையாது, செருக்கும் கிடையாது. கடவுளைக் குறித்தும் அன்புநெறியின் அருமை பெருமைகளைக் குறித்தும் பண்ணின்பம் வரப் பாடுவார்கள், ஆடுவார்கள்; இந்த உலகத்திலேயே—இந்த உடம்போடுதானே—வைகுந்தம் அடைந்து விட்டது போலப் பரமானந்தம் அடைவார்கள்.

இப்படிப்பட்ட பக்தர்கள் மூலமாகப் பொது ஜனங்களும்—சாதி முதலான வித்தியாசங்கள் இல்லாமல்—ஒருவாறு ஞானம் பெற்றுத் திருந்திச் சன்மார்க்க வாழ்வின் இரகசியத்தை அறிந்து இன்புற்றார்கள்.

இவர்களைச் சமுதாயத்தின் உள்ளத்திலுள்ள தீராப் பிணிகள் தீர்க்கும் கடவுளின் பிரதிநிதிகளான உயர்தர வைத்தியர்கள் என்று சொல்லலாம். இந்த ஆத்ம வைத்தியர்கள்

*இருந்த ஊரில் இருக்கும் மானிடர்*
*எத்த வங்கள்செய் தார்கொலோ?*

என்று ஆச்சரியமாகக் கேட்கிறார் பெரியாழ்வார்.

இத்தகைய பெரியவர்கள்,

*திரிதலால் தவம் உடைத்துத்*
*தரணீ தானே!*

[உடைத்து—உடையது. தரணி—பூமி.]

என்று குலசேகராழ்வார் கூறியிருப்பதை ஒட்டிப் பெரியாழ்வாரும், இவர்களுடைய

*பாததூளி படுத லால்இவ்*
*வுலகம் பாக்கியம் செய்ததே!*

என்று பாடுகிறார்.

இந்த மகா வைத்தியர்களின் கோஷ்டியில், பெரியாழ்வார் ஒரு ராஜ வைத்தியராக விளங்கினர். இவரது சீடனும் சக்கரவர்த்தியுமான பாண்டியனை 'எங்கள் மதுரை மன்னன்' என்று புகழ்ந்த தமிழர்கள் இவரைப் 'புதுவை மன்னன்' (ஸ்ரீவில்லிபுத்தூர் மன்னன்) என்று அழைக்கத் தொடங்கினர்கள். 'பொய்ம்மொழி ஒன்றில்லாத மெய்ம்மையாளன்' என்று திருமங்கையாழ்வாரைப் போற்றியதுபோல், இவரையும் 'மெய்ந்நாவன்' என்றும், 'மெய்யடியான்' என்றும், 'கோதில் பட்டர்பிரான்' (குற்றம் ஒன்றில்லாத பெரியார்) என்றும் போற்றினர்.

இவரோ, 'எனக்கு உண்ணாத நாள் பட்டினி நாளல்ல; பகவானே! உன்னை எண்ணாத நாளே பட்டினி நாள்!' என்று விண்ணப்பம் செய்து கொண்டார். 'காதம் பலவும் திரிந்துழன்றேன்: நிழலுமில்லை, நீருமில்லை!' என்று தமது அஞ்ஞான தசையை நினைந்து வருந்துகிறவர், அந்தப் 'பாத நிழலை'க் கண்டு கொண்டதும், 'வளைத்து வைத்தேன்: இனிப் போகலொட்டேன்!' என்று உறுதி கொண்டார்.

அவனுக்குப் பணி செய்திருப்பதையே தவமாகக் கொண்டார். இவருடைய பக்தி முதிர முதிர, ஸ்ரீகிருஷ்ணனை 'விட்டு சித்தன் (விஷ்ணு சித்தன்) மனத்தே கோயில் கொண்ட கோவலன்' (கோபாலன்) என்றுகூட அழைக்க வேண்டியதாயிற்று!

'வேதப் பயன்' கொண்ட பெரியாழ்வார், 'வேதக் கடலமுதை, ......வேதாந்த விழுப் பொருளின் மேலிருந்த விளக்கை'ப் பக்திக் கண்ணால் கண்டார். 'விழிக்கும் கண்ணிலேன், நின்கண் மற்றல்லால்!' என்று கிருஷ்ணனுபவம் செய்தவரல்லவா?

'வேதக் கடலமுதை'ப் பார்த்தது மட்டுமா? அந்த அமுதத்தைக் கொண்டு கலசத்தை நிறைத்தாற்போல் தம்மை நிறைத்துக் கொண்டாராம். அவனும் பாற் கடலைவிட்டு இவர் மனக்கடலுக்கு ஓடிவந்து விட்டா னும், லட்சுமியும் தானுமாக: அனந்தசயனத்தோடும் அலைகள் மோதும் அந்த அழகிய பாற்கடலோடும் எப்படியோ வந்து புகுந்துவிட்டானும்.

வேதாந்த விளக்கு, ஒரு தனிச்சுடராக, சுடரொளி யாய், ஒரு தனியுலகாய் நெஞ்சுக்குள்ளே வந்து விட்டது! பாவக் காட்டில் தீ விழுந்ததென்றும், ஞான னந்த வெள்ளம் தலைக்குமேல் போய்விட்டதென்றும் பெரியாழ்வார் பாடுகிறுர்.

இந்த நிலையில், அஞ்ஞானத்தையும் தீவினைகளை யும் வியாதிகளையும் யம படர்களையும் பார்த்து, 'நோய் களே! 'பழைய உடம்பும் உள்ளமும் என்றிருக்க வேண்டாம்; போய் விடுங்கள்; இனி அவனுடைய ராஜதானி இவை! இங்கே வரவேண்டாம்' என்று எச்சரிக்கை செய்கிறுர்.

எப்பேர்ப்பட்ட அநுபவசாலி, பார்த்தீர்களா? 'உம்முடைய நோய்க்கு மருந்து செய்துகொண்டீரா, எங்கள் நோய்க்கு மருந்து சொல்வதற்குமுன்?' என்று இவரைக் கேட்க வேண்டியதில்லை.

*உன்னைக் கொண்(டு)என் னுள்வைத் தேன்;என்*
*னையும் உன்னில் இட்டேன்!*

என்று கிருஷ்ணனை நோக்கிக் கூறுகிறவர், நமக்கும் அநுபவ வைத்தியம் செய்யக்கூடியவரல்லவா?

---

# 34. ஆழ்வார் திருமகள்

யுவதியானுலும் தாய்க்குக் குழந்தைதானே: ஆடையை நன்ருக உடுக்கவும் தெரியாதவளென்றே நினைத்துக் கொண்டிருக்கிருள்! 'தோழிமாரோடு விளையாடப் போனவளுக்கு அவ்வளவு பிரமை ஏற்பட்டுவிட்டதே!' என்று அதிசயிக்கிருள். உள்ளுக்குள்ளே திருப்திதான்: ஆனுல் ஊர் என்ன நினைக்கும்?

'அவள் இஷ்டப்படியே நடந்து கொள்ளவில்லையா? நிலத்திலே நடக்கவிடாமல் ஒக்கலிலே கொண்டு திரிந்தேனே! அப்படி யெல்லாம் சீராட்டி வளர்க்கப் பெற்றவள் எனக்கும் தெரியாமல் ஒளித்து வைத்தாளே தன் நெஞ்சை! இதை யாரிடம் சொல்லுவேன்? ஐயோ! நீங்களெல்லாம் உங்கள் தாய்மாருக்கு அடங்குவதில்லையா?' என்று வருந்துகிருள், மற்ற இளம்பெண்களோடு.

தாய் இப்படிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்க, அதோ பாருங்கள் மகள் கவலையை:

*காறை பூணும்,கண் ணுடி காணும்,தன்*
*கையில் வளைகுலுக்கும்*

*கூறை உடுக்கும், அயர்க்கும், தன்கொவ்*
*வைச்செவ் வாய்திருத்தும்!*

நகையும் கழுத்துமான சேர்த்தி யழகைக் கண்ணுடியில் பார்த்துக் கொள்கிருள், 'அவன் உகக்கும்படி வாய்த்திருக்கிறதோ? இல்லையோ?' என்று.

உடம்பு பூரிக்கிறது, ஏதோ காணாதது கண்டது போல!

தன் கையில் வளைகளைக் குலுக்கிப் பார்க்கிறாள்: இனி அவை தொங்கிப் போகாமல் கைக்குப் பொருத்தமாயிருக்கு மென்று எண்ணம். உடை விஷயத்தில் அஜாக்கிரதையா யிருந்தவள் இப்போது அழகான புடைவையை அழகாகக் கட்டிக் கொள்கிறாள்: அது மணமகன் வீட்டிலிருந்து வந்தாகவே எண்ணம். எவ்வளவு நேரமாக ஈடுபட்டிருக்கிறாள் ஆடையா பரணங்களைத் திரும்பத் திரும்ப ஒழுங்கு செய்து கொள்வதில்!

இந்த நிலையில் மறதியும் உண்டாகிறது. 'அந்த நகையை அணிந்து கொண்டோமோ? இந்த நகையை அணிந்து கொள்ளவில்லையோ?' என்று அடிக்கடி தொட்டுப் பார்க்கிறாள். கண்ணாடியிலும் பார்க்கிறாள்; கண்ணாடியென்று அறியாமல் அதிலே தோன்றும் காறையையும் தொட்டுப் பார்க்க முயல்கிறாள்.

இப்படி அறிவிழந்தவள் திடீரென்று எதையோ ஞாபகப்படுத்திக் கொண்டவள்போல் கோவைப்பழம் போல் சிவந்திருக்கிற தன்னுடைய வாயையும் கண்ணாடியில் பார்த்துக் கொள்கிறாள்.

இப்போது நம்பிக்கை அலங்காரங்களில் இல்லை; இயற்கையழகில் தான். ஆனால், பல தடவை பார்த்துக் கொள்கிறாளே: அந்தச் சிவப்பை இன்னும் எப்படி அதிகப்படுத்தலாம் என்ற எண்ணமா? அல்லது இள நகையினாலேயே அந்த வாயை இன்னும் அழகு செய்து கொள்ள விருப்பமா?

இப்படி யெல்லாம் கலங்கித் தெளிந்து கொண்டிருக்கும் காதலியை விட்டு மறுபடியும் வெளியே வேறு பெண்களோடு பேசிக்கொண்டிருக்கும் தாயை நோக்கு வோம். 'இனி மடியிலும் பக்கத்திலும் வைத்துக் கொஞ்சிக் கொண்டிருக்கவேண்டிய குழந்தை யில்லை இவள்!' என்று தெரிந்துவிட்டது.

செல்வச் செருக்காலே, திருமணத்தை ஆடம்பர மாகச் செய்து 'நம்முடைய வீட்டிலேயே வைத்துக் கொள்ள வேண்டும்' என்று எண்ணியிருந்தாளாம். மகளோ—சொல்ல வேண்டியதில்லை! — இல்லத்தைச் சிறையாகவே நினைத்திருக்கிருளாம். எனவே, 'எப் படியும் க்ஷேமமாயிருந்தாலே சரி; காதலனிடம் சேர்க்கப் பாருங்கள்!' என்று வாய்திறந்து சொல்லு கிருள் தாய்.

இனி வேருெரு காட்சி. அழகான நீர்நிலை; செந்தாமரைகள் பூத்துக் கிடக்கின்றன. ஒரு நாள் அந்தப் பூக்களின்மேலே பனி சொரிய, இதழும் மகரந் தமும் உதிர்ந்து விடுகின்றன. 'ஆ, என்ன குளிர்ச்சி, என்ன மலர்ச்சி! என்ன சிவப்பு! என்ன பரிமளம்!' என்று அதிசயிக்கும் படி யிருந்த அந்த ஒப்பற்ற நீர் நிலை எப்படியாகிவிட்டது! அப்படி அழகழிந்து வெறித்துப் போயிருக்கிறது காதலியின் வீடு.

ஏன்? அவளைத்தான் அங்கே காணவில்லை; தாயைக் காண்கிறேம்:

> நல்லதோர் தாமரைப் பொய்கை
> நாள்மலர் மேற்பனி சோர,

*அல்லியும் தாதும் உதிர்ந்திட்(டு)*
*அழகழிந் தாலொத்த தாலோ!*
*இல்லம் வெறியோடிற் றாலோ!*
*என்மக ளைஎங்கும் காணேன்*

என்று பிரலாபித்துக் கொண்டிருக்கிறாள்.

வீடு முழுக்க மகள் ஒருத்தியே குடியிருந்தது போலிருக்கிறதாம். 'கடைசியாகத் தீர்மானித்திருந்த படி காதலனோடு சேர்த்து வைக்காமல் தாமதஞ் செய் தோமே!' என்று பரிதவிக்கிறது தாயின் இதயம்.

'எவ்வளவு அருமையாக வளர்த்தேன்! அவளு டைய சௌந்தரிய-குண-பூர்த்திகளைக் கண்டு,—அவற்றைப் பிறர் புகழ்வதையும் கேட்டு,—'இவளுக்குத் தாயார் என்பது தானே எனக்குப் பெருமதிப்பு!' என்றிருந்தேன். ஐயோ! ஒரே மகள் அல்லவா? என்று எண்ணுவதெல்லாம் எண்ணி,

*ஒருமகள் தன்னை உடையேன்;*
*உலகம் நிறைந்த புகழால்*
*திருமகள் போல வளர்த்தேன்;*
*செங்கண்மால் தான்கொண்டு போனான்!*

என்று பல படியாகப் புலம்பி உருகிப் பெருமூச்சு விட்டுக் கொண்டே, விழித்துக் கொள்கிறார் பெரியாழ் வார், தியானம் கலைந்து.

உண்மை : தாயார் வேறு யாருமில்லை; பெரியாழ் வார் தாம்! ஆனால், அந்த 'ஒரேமகள்' யார்? பக்திப் பெருங்காதலில் ஆழ்ந்து போன அவர் உள்ளந்தானா? அல்லது அவர் தம் மகளைக் குறித்தே அப்படி ஒரு முற்குறியான கனவு கண்டாரா?

வழக்கம்போல் பகவானுக்கு மாலை கட்டுவதற்காகப் பெரியாழ்வார் பூக்கொய்து கொண்டிருக்கிறார். 'இன்னும் பொழுது விடியவில்லையே, இவ்வளவு வெளிச்சத்திற்குக் காரணம் என்ன?' என்று ஆச்சரியப்படுகிறார். 'அங்கு மிங்கும் கவனமாகப் பார்க்கிறார். சோலையின் ஒரு பக்கம் ஜோதிமேல் ஜோதியாகித் துலங்குவதைக் காண்கிறார்.

அந்த இடத்தில் ஒளி மேலும் மேலும் வளர்ந்து கொண்டிருப்பதுபோலத் தோன்றுகிறது. துளசி பச்சைப் பசேலென்று செழித்துக் காடாகக்கிடக்கிறது: இலைகள் தளதளவென்று பொங்கித் தெய்வ பரிமளமாயிருக்கின்றன.

ஜோதியின் மூலத்தை நாடிச் சென்ற பெரியாழ்வாரை அந்தத் தெய்விக ஒளியே இப்போது இழுத்துச் செல்வதுபோ லிருக்கிறது. பச்சைக் கம்பளம் விரித்தாற்போ லிருந்த புல்லுத் தரையைத் தாண்டி, அவர் நெருங்கி வளர்ந்திருக்கும் துளசிச் செடிகளினூடே பளிச்சென்று நோக்குகிறார்.

ஆச்சரியத்தின் மேல் ஆச்சரியம்! இதுவும் கனவோ, நினைவோ?

> புதுமதுப் பொங்கும் பச்சைப்
> பசுந்துழாய்ப் பூட்டி னூடே,
>
> கதுமென விழியால் நோக்கிக்
> கருணையின் கொழுந்தைக் கண்டார்!

துளசிச் செடியே தாயாகக் கொண்டு வாழும் குழந்தையின்மேல் அருகே நின்ற பூமரங்கள் பூக்களைத் தூவிக் கௌரவிக்கின்றன. குயில்கள் தாலாட்டு

கின்றன; பஞ்சவர்ணக் கிளிகள் மழலே கற்பிக்கின்றன; அன்னங்கள் சிறகால் குழந்தையை அணைத்துக் காக்கின்றன! குழந்தைக் கெதிரே முத்துக்களால் ஏதேதோ அலங்காரம் செய்து வைத்திருப்பது போலிருக்கின்றன புல் நுனியில் பனித் துளிகள்.

*வாவியின் அலர்ந்த செந்தா*
*மரைதிரு விளக்க மாகக்*
*காவிகண் விழித்து நோக்கக்*
*களிவண்டு கானம் பாட,*
*மேவிய மயில்கள் ஆட,*
*விண்முகில் முழவின் ஆர்ப்பத்*
*தேவியும் தன்னை ஈன்ற*
*திருத்துழாய் மடியில் வாழ்ந்தாள்.*

[காவி—நீலமலர். முகில்—மேகம். முழவு— மிருதங்கம். ஆர்ப்ப—ஒலி செய்ய.]

சூரியோதயமாகிவிட்டது, எனினும், தந்தவனத்தின் இந்தப் பகுதிக்கு அந்த வெளிச்சம் இன்னும் வரவில்லே. இப்போது செந்தாமரைகளே பொன் விளக்கு ஏந்துவது போலிருக்கின்றன. இந்த 'வெளிச்சத்திலே' நீல மலர்கள் கண்விழித்துக் குழந்தையை நோக்குகின்றனவாம். வண்டுகள் கானம் பாட, அந்தப் பண்ணுக்கிசைய நடனமாடுவது போல் மயில்கள் ஆடுகின்றனவாம். அந்த ஆட்டத்திற்கு மிருதங்கம் அடிப்பதுபோல் முழங்குகின்றனவாம் மேகங்கள்.

'இயற்கை யழகுகளுக்கிடையே இயற்கைத் தாய் தான் இப்படி வடிவம் கொண்டிருக்கிருளோ? மகா

லட்சுமியே இப்படி வந்துவிட்டாளோ? ஞானக் கொழுந்தான சரஸ்வதிதானோ இவள்?' என்றெல்லாம் சிந்தித்த பெரியாழ்வார் கடைசியாகப் பாகவதர்களின் புண்ணியமும் தாம் செய்த பாக்கியமும்தான் அந்த உருவாக வந்திருக்க வேண்டுமென்று தீர்மானித்தார்.

உடனே போய்க் குழந்தையை எடுத்து மார்போடு அணைத்து உச்சிமோந்தார், முத்தமிட்டார். 'இது எம்பெருமானுக்கு இன்று கிடைத்த தெய்வமலர்!' என்று தமக்குள் தாமே சொல்லிக்கொண்டு புறப்பட்டார்.

செண்பகம் வகுளம் பிச்சி மல்லிகை முல்லை இருவாட்சி சம்பங்கி செவ்வந்தி முதலான நானாவித மலர் வகைகளின் மணங்களோடு கலந்து வந்த காற்று ஜில்லென்று வீசியது. தேனை உண்ண வரும் வண்டுகள் அந்தப் பூக்களில் படிவதும் எழுவதும் பாடுவதுமாய் இருந்தன. மரக்கிளைகளில் நானாவிதப் பறவைகளும் அமர்ந்து தங்கள் பாஷைகளில் சந்தோஷம் தெரிவிப்பது போல் கூவிக்கொண்டிருந்தன.

பெரியாழ்வார் மகிழ்ச்சிக்கோ கங்குகரையில்லை. அவர் கொடிகள் படர்ந்த விதானங்களையும், கனிகள் நிறைந்த விருட்ச வரிசைகளையும் கடந்து கோயிலை நோக்கினார்.

கொடிமரம், விமானம், கோபுரத்துக் கலசங்கள் எல்லாம் தக தகவென்று ஜொலித்தன பால சூரியனது பொன்னிறக் கதிர்களில் முழுகி. பகவானும்

அன்று விசேஷ முகமலர்ச்சியோடு காட்சி வழங்குவது போலத் தோன்றினன்.

அங்கே கூடியிருந்த பக்தர்களும் விசேஷ உத்ஸாகத்தோடு திவ்ய தேஜோ மயமாக விளங்கிய அந்தப் பெண் குழந்தையை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பிறகு, அவர்கள் ஆழ்வார் முகம் நோக்கி, 'பெரியவரே! இவள் உமக்குப் பகவான் கொடுத்த புத்திரி!' என்று சொன்னர்கள். அவரும் 'எல்லாம் அவன் செயல்!' என்று பிரார்த்தனை செய்துகொண்டு வீட்டுக்குப் போனர்.

'அழகின் கொழுந்தோ? அன்பின் ஜோதியோ? சித்திரப் பாவையோ? கவியின்பம் தானே?' என்று மக்கள் பலவாறு பேசிக் கொண்டார்கள். பெரியாழ்வார் மாளிகைக்கு வேறு விளக்கு வேண்டாம், இவளே போதும்' என்று சிலர் அதிசயித்தார்கள்.

கோதை தந்தையை அதிகமாக நேசித்து வந்தாள்; அவரையே தாயாகவும் மதித்தாள். அவரோடு நந்தவனம் போய்ப் பூ எடுப்பாள். சின்னஞ்சிறு குடமொன்று ஒக்கலில் வைத்துத் தண்ணீர் எடுத்து வந்து துளசிச் செடிகளுக்கும் பூச் செடிகளுக்கும் ஊற்றுவாள். தந்தையிடத்திலேயே கல்வியும் கற்று வந்தாள்.

ஆண்டிலும் அறிவிலும் அழகிலும் ஒருங்கே வளர்ந்து வந்த கோதை அக்காலத்திலுள்ள கலைகள் எல்லாம் நிரம்பப் பெற்ற ஞான சுந்தரியாக விளங்கினள். தனது தந்தையும் பல வேறு பாகவதர்களும் பஜனை செய்வதையும் உருக்கமான பக்திப் பாடல்கள்

பாடி ஆடுவதையும் குழந்தைப் பருவம் முதல் பார்த்துக்கொண்டே இருந்ததால் இவளுடைய விளையாட்டு, விருப்பங்கள், லட்சியங்கள் எல்லாம் பக்தி மயமாகவே இருந்தன. இவளும் அவர்களோடு பஜனை முதலியவற்றில் கலந்து கொள்வதுண்டு; அவர்களைப் போல் பக்தியிலே தன்னை மறந்திருப்பதுமுண்டு.

பெரியாழ்வாரைப் போல் இவளுக்கும் கவித்வ சக்தி இருந்தது; கற்பனைக் கண் இருந்தது. இளமையிலேயே தம் மகள் அடைந்த நிலையைக் கண்டதும் ஆழ்வார் பூரித்துப் போனார்.

இயற்கை யழகுகளிலெல்லாம், கோதையும் பெரியாழ்வாரைப் போல் அழகனை கண்ணனையே கண்டாள். ஒரு நாள் நந்தவனத்திலே தருவைச் சுற்றிப் படர்ந்திருந்த பூங்கொடி ஒன்றைக் கண்டதும், தனக்குத் தக்க வயது வந்துவிட்டதென்பதை உணர்ந்து கொண்டாள். அந்தக் கொடியைக் கண்டு தன் உள்ளத்தில் பொருமை கூட ஏற்பட்டதோ என்று தற்சோதனை செய்து பார்த்தாள். ஆனால், இவளுடைய காதலனை எங்கே, எப்போது, எப்படிக் காண்பது?

நிமிஷத்திற்கு நிமிஷம் கோதையின் காதல் அதிகரித்து வந்தது; நாளடைவில் இவளை முற்றும் விழுங்கிவிட்டது. தான் படர்வதற்கு வேண்டிய தருவைத் தேடிக் குழைந்து வளையும் பூங்கொடிபோல் இவள் உள்ளமும் புருஷோத்தமனை ஜகன்மோகன கோபாலனைத் தேடிக் குழைந்து சென்றது. கவலை கொண்டு உடல் மெலிந்து வருந்தினாள் கோதை.

தன் நெஞ்சைத் தந்தைக்கும் தெரியாமல் ஒளித்து வைக்க முயன்ருள். 'குழந்தை தானே' என்று எண்ணிக்கொண்டிருந்தவருக்கு அந்த நிலை எவ்வளவு ஆச்சரியத்தை உண்டாக்கியிருக்க வேண்டும்! இவளைப் பற்றிய கவலை அவருக்கு நாளுக்கு நாள் அதிகப்பட்டிருக்க வேண்டும்.

தமக்குத் தீர்க்க தரிசனமாக ஏற்பட்ட கனவில் ஒரு பாதி நிறைவேறி விட்டதென்றே எண்ணினர். மற்ருெரு பாதியை நினைக்க நினைக்க அந்தப் பெரியாரது வைராக்கியம் நிறைந்த உள்ளம்கூட என்ன பாடுபட்டிருக்குமோ?

---

## 35. காதல் வெள்ளம்

பெரியாழ்வார் இல்லாத சமயம் பார்த்துக் கோதை சிறந்த ஆபரணங்கள் அணிந்து, உயர்ந்த பட்டாடை உடுத்துப் பூக்களாலும் தன்னை அலங்கரித்துக் கொண்டு, ‘அவன் அழகுக்கு ஒத்திருப்போமோ? இல்லையோ?’ என்று கண்ணாடியில் பார்த்துத் திருப்தி யடைவாள். தான் கண்ணனுக்குத் தகுந்த தேவி என்ற அபிப்பிராயம் நாளுக்கு நாள் உறுதிப்பட்டு வந்தது.

ஒரு சமயம் பூங்கூடையிலிருந்த மாலைகளை எடுத் தெடுத்துப் பார்த்தாள். அவை தன் அருமைத் தந்தையால் பக்தி விநயத்துடன் எவ்வளவு அழகாகத் தொடுக்கப்பெற் றிருந்தன! ‘முடிமாலை, கிளிமாலை, தொங்கல் மாலை, வெற்றி மாலை முதலிய நானாவித மாலைகளும் அவர் கைவிசேஷத்தால் தெய்விக அழகு பெற்றிருக்கின்றன! இவற்றில் தெய்விக மணமும் சேர்ந்திருந்தால், அவனுக்கு எவ்வளவு உவப்பா யிருக்கும்!’ என்று நினைத்தாள். உடனே மோந்து பார்த்தாள். அந்த மாலைகளுக்கு இன்னும் அதிக வாசனை ஊட்ட விரும்பினாள். அதற்காக என்ன செய்தாள், தெரியுமா? நீண்ட கூந்தலில் ஒரு மாலை யைச் சூட்டிக் கொண்டாள். அந்த அழகிய கூந்தலின் மணமும் பூக்களுக்கு இயற்கையாகவுள்ள மணத்தோடு கலந்து பரிமளிக்கும் என்று எண்ணம்! சில மாலைகளைக் கழுத்திலும் அணிந்து கொண்டாள்.

நிலைக்கண்ணாடிக்கு முன் நின்று கர்வத்துடன் தன்னைப் பார்த்து மகிழ்ந்தாள். ஆயினும் 'எங்கே, தகப்பனார் வந்துவிடுவாரோ?' என்னும் பயத்தால் அவற்றை விரைவில் களைந்து கசங்காமல் எடுத்து முன்போலவே கூடைக்குள் வைத்துவிட்டாள். இப்படிப் பல தினங்களாக நடந்து வந்தது.

இதை அறியாத ஆழ்வார் மாலைகளை வழக்கம் போல் அந்த ஊர்ப் பெருமாளுக்கு அணிந்து வந்தார். அவை என்றுமில்லாத மணமும் ஒளியும் வீசுவதைக் கண்ட அர்ச்சகர்கள், 'ஆழ்வாருடைய பக்தி முதிர்ச்சியே அந்தச் சிறப்புக்குக் காரணம்!' என்று எண்ணி, அவரிடத்தில் முன்னிலும் பதின்மடங்கு பக்தி விசுவாசம் கொண்டார்கள். உண்மையில், கோதையின் அன்பு-மணம்தான் தெய்வ மணமாகக் கமழ்ந்ததென்று அவர்களுக்காவது ஆழ்வாருக்காவது தெரியாது.

ஒரு நாள் கோதை விலையுயர்ந்த ஆடையாபரணங்களால் வேறு வேறு விதமாகத் தன்னை அலங்காரஞ் செய்து பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியாக ஒரு நீலப்பட்டு உடுத்துக் கொண்டாள். அந்த ஆடையைத்தான் எத்தனை தரம் உற்று நோக்குவாள்! அந்த நிறத்திலே அவ்வளவு மோகமா? ஆம், அந்த நீல மேனியை ஞாபகப்படுத்திக்கொண்டேயிருக்குமல்லவா? இதயம் குளிர்ந்து, கைவளையும் காற்சிலம்பும் குலுங்க அசைந்தசைந்து போய் அந்தப் பெரிய நிலைக்கண்ணாடிக்கு எதிரே வந்து நின்றாள்.

முகம் திருத்தி மையெழுதிக் கொண்டாள். என்னென்னவோ எண்ணிவிட்டு, வழக்கம்போலக் குடலை

யில் தந்தை கட்டி வைத்திருந்த மாலைகளை அழகு பெறச் சூடிக்கொண்டாள். கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாய் ஆனந்தமான இளநகையரும்ப, 'அவனுக்கு நீ ஏற்றவள்தான்; கோதையே, நீ அவனுக்கே உரியவள்!' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

இப்படி யெல்லாம் பகற்கனவுகள் காணும்போது, வெளியே போயிருந்த பெரியாழ்வார் தற்செயலாகத் திரும்பிவந்து கோதையின் பின்னால் திடீரென்று தோன்றினார். அவளோ தன்னை மறந்திருந்ததால் சில நிமிஷங்கள் அவரைக் கவனிக்கவில்லை. அவரும் ஒன்றும் தோன்றாதவராய்ச் சிறிது நேரம் சும்மா இருந்தார். அவள் அப்படிச் செய்வாளென்று கனவிலும் எண்ணவில்லை. 'நாம் பார்ப்பது உண்மைதானா?' என்றுகூடச் சந்தேகித்தார்.

பிறகு பதறிக் கொண்டே, 'அம்மா, இந்தச் செய்கை செய்ய உனக்கு மனம் எப்படித் துணிந்ததோ? ஆத்ம பந்துக்களான பாகவதர்களோடு இளமையிலிருந்தே பழகி வருகிறாயே!' என்று சொன்னார்.

இன்னது சொன்னாரென்பதே அவளுக்கு விளங்கவில்லை. ஏதோ வருத்தப் படுகிறாரென்று தெரிந்து, கோதை விம்மி விம்மி அழத் தொடங்கினாள். அந்தக் கண்ணீர் அவர் வருத்தத்தையும் உள்ளத்தில் எழுந்த கோபத்தையும் ஒரு கணத்தில் மாற்றி விட்டது.

தம்மைக் கண்டு பதறி அழும் அருமைத் திருமகளை அணைத்துக் கொண்டு கண்ணைத் துடைத்து, 'குழந்தாய்! நீ செய்த காரியத்தை ஒருவரும் செய்யத் துணி

யார். தேவதேவனுடைய ஏற்றத்தையும் மனிதர்களா கிய நம்முடைய நிலேயையும் நினைத்துப் பார். அம்மா, இனி இப்படிச் செய்யவேண்டாம். பயப்படாதே, என் செல்வமே!' என்று தேற்றினர்.

கோதையோ தான் செய்தது பாவமென்ருவது தகாத செயலென்ருவது நினைக்கவில்லை. இவள் தலை குனிந்து, 'நான் அவனுடைய காதலி அல்லவா?' என்று மெள்ளத் தழுதழுத்த குரலில் சொன்னுள். காதலனுக்கு உரிய மாலைகள் காதலிக்கும் உரியன என்பது நினைப்பு.

இந்த மனநிலை பெரியாழ்வாருக்கே ஆச்சரியமா யிருந்தது. அவர் திகைத்துப் போனர், திகிலடைந் தார். அவரும் பகவான்மீது காதல் கொண்டவர்தாம். அது அலையில்லாமல் ஓய்ந்திருக்கும் கடலைப்போ லிருந்தது. கோதை காதலோ புயற்காற்றிலே கொந் தளிக்கும் கடல்! இது அவருக்குச் சொந்தமான பக்தி யநுபவங்களையும் கடந்து பொங்கிக் கொண்டிருந்தது.

ஆழ்வார் அந்த மாலைகளை இறைவனுக்குச் சாத்த விரும்பாமல், மறுபடியும் பூக்கொய்து புதிய மாலைகள் கட்ட வேண்டுமென்று நந்தவனத்திற்குப் போனர். அவருடைய உள்ளத்திலே ஈச்வரன் விஷயமாக ஏற்பட்ட அபசாரமும், கோதையின் நகைமுகத்தில் திடீரென்று வந்த கண்ணீரும் மாறி மாறித் தோன்றிக் கொண்டிருந்தன.

அவள் தலை குனிந்து சொன்ன வார்த்தை அந்த இதயத்தின் ஆழத்திலே ஏதோ ஒரு தேவ கானம்போல் ஒலி செய்து கொண்டே யிருந்தது. கண்ணுடியின்

முன் நின்ற கோதையின் நிலையும், அந்தப் பிரதிபிம்பத்தின் தெய்விக செளந்தரியமும் பழைய ஞாபகங்களைக் கிளறி விட்டன. அன்று ஏற்பட்ட துயரத்தோடு எப்படியோ கலந்து கொண்டது, என்றுமில்லாத ஒரு வித ஆனந்தமும். அவர் வீட்டுக்கு வந்து மகளை உத்ஸாகப்படுத்திக் கொண்டே மாலைகள் தொடுத்தார்.

பெரியாழ்வார் சன்னிதிக்குப் போனதும், அர்ச்சகர் பணிவோடு மாலைகளை வாங்கிப் பெருமாளுக்குச் சாத்தினார். ஆனால், பெருமாள் வழக்கம்போலக் காட்சி தரவில்லை! நேற்றிருந்த பொலிவு இன்று இல்லை என்பதும், அந்த மாலைகளுக்குப் பழைய மணம்கூட இல்லையென்பதும், சன்னிதியே ஒளியிழந்து போயிற்று என்பதும் தெரிந்து விட்டன. அர்ச்சகர்களும் அங்கே கூடியிருந்த பக்தர்களும் ஒருவரை யொருவர் பல முறை நோக்கிக் கொண்டார்கள்.

ஆழ்வார் கவலையோடு வீட்டுக்குத் திரும்பினார். தம்முடைய செல்வச் சிறுமியின் அடாத செய்கைதான் பகவானுக்கு அவ்வளவு அதிருப்தி உண்டாக்கி யிருக்க வேண்டுமென்று அவர் நெஞ்சம் கலங்கியது.

அன்றிரவு ஆழ்வாருக்குச் சரியாக உறக்கம் பிடிக்கவில்லை. பெருமூச்சு விட்டுக்கொண்டே படுக்கையில் புரண்டுகொண்டிருந்தார். அந்த அபசாரம் மன அமைதியைக் குலைத்து விட்டது. தியானத்தில் கண்ட மானஸ புத்திரியைக் குறித்தும் கோதையைக் குறித்தும் பலவிதமாக எண்ணினார். நெடுநேரம் கழிந்ததும். அது என்ன, அப்படிக் கண்ணை மறைக்கிறது? இருட்டல்ல, ஒளிதான்!

என்ன அற்புதமான தேஜஸ்! கண்ணும் கூசிக் கருத்தும் கூசிப் போகிறது. அந்த ஒளிக்கிடையே அற்புதமான அழகு — ஒரு திவ்ய சொரூபம்! 'ஆழ்வாரே! இன்று நமக்கு மணமில்லாத மாலைகளைச் சாத்தினீரே!' என்று புகார் செய்கிறது வேணுகானம் போன்ற குரல். ஆழ்வார் சிறுமியின் அபசாரத்திற்காகவும், தாம் கால தாமசம் செய்து கிடைத்த பூக்களைக் கொண்டு மாலை தொடுத்ததற்காகவும் பகவான் கருணை கூர்ந்து மன்னிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்கிறார்.

'உம்முடைய மகளை நீர் அறிந்து கொள்ளவில்லை. அவள் நமக்குப் பூமாலை சூடிக் கொடுக்கவும் பாமாலை பாடிக் கொடுக்கவும் தானே பிறந்திருக்கிறாள்! அவள் கூந்தலில் சூடிக் கொடுக்கும் மாலையே நாம் விரும்பும் மணம் பெற்ற மாலை!' என்று சொல்லிக்கொண்டே மறைந்து விடுகிறது மங்கள சொரூபம்.

நித்திரை கலைந்து எழுந்ததும் பெரியாழ்வார் சொப்பனத்தை நினைத்து நினைத்து ஆச்சரியமடைந்தார். பொழுது புலர்ந்ததும் இறைவனுக்காகத் தாம் கட்டிய மாலைகளைக் கோதை முன்வைத்துச் சூடிக் கொடுக்கும்படி வேண்டிக் கொண்டார். கோதை ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்து அவற்றைச் சூட்டிக் கொண்டதும், அந்த அழகைப் பார்த்த பெரியாழ்வார், 'இவள் இயற்கை யன்னையாகிய புவனசுந்தரியோ? மகாலட்சுமிதானோ?' என்று தமக்குள் தாமே சொல்லிக் கொண்டார். அந்த மாலைகளுக்குப் பழைய மணமும் அழகும் வந்து விட்டன என்று கண்டு அவற்றைச் சன்னிதியில் சேர்ப்பித்தார்

அன்று பகவானுடைய தரிசனம் அற்புதமாக இருந்தது.. தாம் சொப்பனத்தில் கண்ட தேஜஸ் அந்த முகத்திலும் கண்களிலும் இளநகையிலும் ஜொலித்துக் கொண்டிருந்தது. உடனே 'பெரியாழ் வார் அருகேயிருந்த மகளை நோக்கி ஆனந்த பாஷ்பம் பொழிந்து, 'என்னை ஆண்டாள் இவளே!' என்று குதூகலமாகச் சொன்னார். அதுமுதல் சூடிக்கொடுத்தாள் என்ற பெயரும் இவளுக்கு வழங்குவதாயிற்று.

தமக்கு இன்னும் அவ்வளவு பரிபக்குவம் ஏற்பட வில்லையென்று பெரியாழ்வார் எண்ணினார். ஆனால் அந்த எண்ணத்தை ஊடுருவிக்கொண்டு புறப்பட்டது, 'பகவான் வாயால் "உம்முடைய மகள்" என்று சொன்னாரே, அந்தப் பாக்கியம் போதுமல்லவா?' என்ற பரம திருப்தி அவர் மற்ற அடியார்களை நோக்கி, 'என்னுடைய பக்தி பாடுபட்டுத் தேடிய தனம்; இவளுடைய பக்தியோ புதையலெடுத்த தனம்!' என்று சொன்னார்.

ஆண்டாள் எப்போதும் புருஷோத்தமனை கிருஷ்ணனையே சிந்தித்துக் கொண்டிருந்தாள். அந்த அவதார காலத்தில் தான் பிறக்கவில்லையே என்று வருந்தினாள், மாடு மேய்த்து வந்த அந்தக் காற் சுவடுகளும்,கல்மழைக்குஅன்றெடுத்த குன்றும், அவன் விளையாடிக் கொண்டிருந்த யமுனை ஆற்றங்கரையும் உண்டென்றால், அவற்றையாவது கண்டு ஆறு தலடையலாம் என்று எண்ணினாள். அந்தப் பிரதே சத்துக்குப் போகவும் வசதி ஏற்படவில்லை.

எனவே, தான் பிறந்த வில்லிபுத்தூரைக் கோகுலமாகவும், தன்னைக் கோபிகா ஸ்திரீகளில் ஒருத்

தியாகவும் பாவனை செய்து கொண்டாள். அப்போது கோடையால் வறண்டயர்ந்த நிலத்திலே குளிர்ந்த மழை பெய்வதுபோல் கிருஷ்ணன் இவள் இதயத்தை வந்து அடைகிறான். அந்த அக உலகில் இவள் அவனை முகமுகமாகச் சந்திக்கிறாள். அவனோடு கைகோத்து உலாவுகிறாள்; கொஞ்சிக் கொஞ்சிக் குலாவுகிறாள்.

ஆ, ஆ. என்ன அதிசயம்! அவன் என்ன பேசினாலும் ஆனந்தமா யிருக்கிறது. என்ன செய்தாலும், அதுவும் ஆனந்தமாகவே யிருக்கிறது. ஒருதரம் அந்த முகத்தைப் பார்த்துவிட்டால், இவ்வளவு மயக்கம், இவ்வளவு வெறி!

*பெய்யு மாமுகில் போல்வண் ணா! உன்தன்*
*பேச்சும் செய்கையும் எங்களை*
*மையல் ஏற்றி மயக்க உன்முகம்*
*மாய மந்திரம் தான்கொலோ?*

என்று காதலனை நோக்கிக் கொஞ்சிக் கொஞ்சிப் பேசும் காதலியைப் பாருங்கள்.

'இவன் கண்வட்டத்திலே நின்றால் இப்படித் தொந்தரவு செய்கிறானே!' என்று வீட்டுக்குள் போய் விட்டாலும் விடுகிறபாடில்லை.

*முற்றத் தூடு புகுந்து நின்முகம்*
*காட்டிப் புன்முறு வல்செய்து,*

எங்கள் உறுதியையும் சிந்தையையும் சிதைக்கும் காதலனைத் தப்பிப் போவதுதான் எப்படியோ?—என்கிறாள்.

சில சமயங்களில் இவளுடைய அழகுத் தெய்வம் முறுவல் செய்வதுமில்லை: முகம் காட்டுவதுமில்லை.

மறந்து பிழைக்கவும் வழியில்லாமல், உள்ளத்திலே—நினைப்பிலேயே—வந்து புகுந்து கொண்டு ஹிம்ஸை செய்கிறனும். இந்த ஹிம்ஸையிலிருந்து தப்பி முடிந்து போவோமென்றால், அதற்கும் இடமில்லாமல் அந்த உயிருக்குள்ளேயே யிருந்து அதை ஒவ்வொரு நாளும் ஊதி ஊதிக் கனியச் செய்துகொண்டிருக்கிறனும்.

'இப்படித் துடிக்க விடுவதும் அவனுக்கு ஒரு போதுபோக்கா?' எனறு கேட்கும் காதலி நந்த வனத்திலே விருட்ச ஜாலங்களுக் கிடையே குயில் பாடிக் கொண்டிருப்பதைக் கவனிக்கிறள்.

*கள்அவிழ் செண்பகப் பூமலர் கோதிக்*
*களித்(து)இசை பாடும்குயிலே!*
*காதலி யோடுடன் வாழ்குயி லே!*

என்றெல்லாம் முகஸ்துதி செய்து,

*அன்புடை யாரைப் பிரிவுறு நோயது*
*நீயும் அறிதி குயிலே!*

என்கிறள். ஆகையால் அவனை எப்படியாவது கூவி யழைக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறள்.

அப்படிச் செய்வதற்குப் பரிசாக, 'நான் பாலூட்டிச் சீராட்டி வளர்த்துவரும் என்னுடைய அழகிய கிளியை உன்னேடு தோழமை கொள்ளச் செய்வேன்' என்கிறள். கடைசியாக 'உனக்குப் புண்ணிய முண்டு; உன் காலில் விழுவேன்!' என்று கூடச் சொல்லு கிறள்.

கரை புரண்டோடும் காதல் வெள்ளம் இப்போது துன்பக் கடலாகி விட்டது. அதிலே தோணி பெருது தத்தளிக்கிறள் காதலி.

---

# 36. ஆண்டாள் நோன்பு

'**வா**ருங்கள் வாருங்கள்!' என்று பரபரப்பாக அழைத்து இந்தக் கிருஷ்ணபட்சத்துக் காலைச் சந்திரிகையில் ஒருவரை யொருவர் முகம் கண்டு ஆற்றை நோக்கிப் புறப்படுகிறார்களே, இந்தக் கன்னிப் பெண்கள் யார்? ஏன் இவ்வளவு சீக்கிரமாக விழித்துக் கொண்டார்கள்? நாம ஸங்கீர்த்தனம் செய்துகொண் கொண்டும், பகவானுடைய அருளைப் பாடிக்கொண்டும் போகிறார்கள். போகும் வழியில் தோழிமாரையும் எழுப்பித் தங்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொள் கிறார்கள்.

ஒரு வீட்டு வாசலில் வந்து நின்று கொண்டு உள்ளே இருப்பவளைக் கூவி அழைக்கிறார்கள். 'நேர மாகி விட்டதா?' என்று அவள் கேட்க, இவர்கள் 'அதனால் தானே நாங்கள் எழுந்து வருகிறோம்?' என்று பதில் சொல்லுகிறார்கள். 'காதலரையே நினைத் துக் கொண்டிருக்கும் உங்களுக்கு உறக்க முண்டோ?' என்று அவள் பரிகசிக்க, இவர்கள் வேறு அடையாளம் சொல்லத் தொடங்குகிறார்கள்.

'பறவைகளும் எழுந்து கூவிக்கொண்டு பறந்து போகின்றன' என்று சொல்லி, 'கோவிலில் ஊதும் சங்கநாதமும் காதில் விழவில்லையோ?' என்று கேட் கிறார்கள். அவர்களோ, முனிவர்களும் யோகிகளும் மெல்ல எழுந்து சொல்லும் ஹரிநாமம் கேட்டே உள்ளம் குளிர்ந்து விழித்துக் கொண்டார்களாம்.

கூட்டம் வேறொரு வீட்டு வாசலில் போய் நின்றதும், ஒருத்தி உள்ளே உறங்கிக் கொண்டிருக்கும் தன் தோழியை, 'அடி பேய்ப் பெண்ணே!' என்று அருமையாக அழைத்து,

*வாச நறுங்குழல் ஆய்ச்சியர், மத்தினால்*
*ஓசை படுத்தும் தயிர்அரவம் கேட்டிலையோ?*

என்று கேட்கிறாள். உடனே மற்றவர்கள், 'நாங்கள் பகவானைப் பாடுவது உனக்குத் தாலாட்டுவது போலிருக்கிறதா?' என்று பரிகசிக்கிறார்கள்.

அடுத்த வீட்டுப் பெண்ணும் உறங்கிக் கொண்டிருக்கிறாள். உள்ளே விளக்கு எரிவதையும், அகில் முதலியவற்றின் புகை பரிமளிப்பதையும் சாளர வழியாகப் பார்த்து விடுகிறார்கள், 'அம்மான் மகளே! கதவைத் திற' என்று ஒருத்தி உறவு கொண்டாட, உள்ளிருக்கும் தாய் கேட்டு, 'அவர்கள் கூப்பிடுகிறார்களே, ஏன் பேசாமல் கிடக்கிறாய்?' என்கிறாள்.

அந்தக் குரல் கேட்டதும் வெளியிலிருந்து,

*... ... ... உம்மகள்தான்*
*ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?*
*ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?*

[அனந்தல்—மயக்கம். ஏமம்—காவல். மந்திரப் பட்டாளோ—மந்திரத்திற்கு உட்பட்டாளோ.]
என்று பரிகாசமான கேள்விகள் சிறகு கட்டிய அம்பு போலப் பறக்கின்றன.

'நீ இப்படி நெடுநேரம் உறங்கும்படி யாராவது மந்திரம் போட்டு விட்டார்களா?' என்று கேட்டுக்

கொண்டே, இவர்களும் எதிர் மந்திரம் போடுவது போல் 'நாமோச்சாரணம்' செய்கிறார்கள்.

பக்கத்து வீடொன்றில் கதவு திறப்பாருமில்லை; ஏனென்று சத்தம் கொடுப்பாருமில்லை. எனவே, உள்ளிருக்கும் கன்னியா ரத்தினத்தைக் கூப்பிட்டு,

*... ... ... பண்டொருநாள்*
*கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கருணனும்*
*தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?*

என்று சிரிக்கிறார்கள்.

கும்பகர்ணன் 'உயில்' எழுதி வைத்துப் போனானும். 'தன்னுடைய ராட்சஸ பலம் வீரம் கொடுமை சகோதர வாஞ்சை முதலியவற்றை யார் யாருக்குக் கொடுத்தானோ, தெரியாது; அந்தப் பெருந் தூக்கத்தை மட்டும் உனக்குத்தான் எழுதி வைத்தானோ?—என்று சந்தேகப் படுகிறோம்' என்று எவ்வளவு ரஸமாகப் பேசுகிறார்கள்!

வேறொருத்தியைக் கூப்பிடும்போது, அந்த வீட்டுச் செல்வத்தைக் குறிப்பிட்டு,

*கனைத்(து)இளங் கற்றெருமை கன்றுக்(கு) இரங்கி*
*நினைத்(து)முலைவழியே நின்றுபால் சோர,*
*நனைத்(து) இல்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!*

என்று அழைக்கிறார்கள்.

அப்படிப்பட்ட எருமைகள் செல்வமா யிருக்கின்றனவாம் அவள் அண்ணனுக்கு. 'இந்த வாசலில், பனி தலையில் விழுவதையும் பொறுத்துக்கொண்டு எவ்வளவு நேரம் காத்திருப்பது?' என்று கேட்டுவிட்டு,

*மனத்துக்(கு) இனியானைப் பாடவும்நீ வாய்திறவாய்!*

என்கிறார்கள்.

'அவனையும் மறக்கும்படி அவ்வளவு இனிமையாகி விட்டதா உறக்கம் உனக்கு?' என்பது குறிப்பு.

கீழ்த்திசை அடிவானத்தில் சுக்கிரோதயம் ஆகி விட்டது; மேற்கே அடிவானத்தில் வியாழன் அஸ்த மிக்கலாயிற்று. இதைக் கவனித்த கன்னியொருத்தி, இன்று விசேஷமாக,

*வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று!*

என்று சொல்லி,

'இந்த மங்களமான வேளையில் நீராடாமல் படுக்கையில் கிடக்கிறாயே!' என்று ஒரு தோழியைக் கூப்பிடுகிறாள்.

இப்படி 'வான சாஸ்திரம்' பேசும் இவள் யார்? இங்கே எப்படி வந்தாள்? ஆண்டாள் முகம்போ லிருக்கிறதே!

அதே சமயத்தில் சிலர், தானே வந்து தங்களை எழுப்புவதாகச் சொல்லியிருந்த ஒருத்தியைப் பார்க்கப் போகிறார்கள். அந்த வீட்டின் பின்வாசற் புறத்தில் ஒரு தோட்டம்; அதிலே ஒரு தடாகம்; அந்தத் தடாகத்திலே செங்கழுநீர்ப் பூ வாய் நெகிழ்ந்து, அல்லிமலர் வாய் குவிந்திருப்பதைக் கண்டு,

*எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்*
*நங்காய்! எழுந்திராய், நாணாதாய்! நாவுடையாய்!*

என்று கூவி, 'வெட்கமில்லை உனக்கு: நாக்கு மட்டும் இருக்கிறது. பொழுது விடிவதை உணர்ந்துகொண்ட

இந்தப் பூக்களைப் பார்த்தாவது வெட்கப்படு!' என்று சொல்லுகிறார்கள்.

அதோ வீதியின் ஒரு புறம் ரஸமான சம்பாஷணை நடைபெறுகிறது உள்ளும் புறமுமாக.

*எல்லே இளங்கிளியே!*
*இன்னம் உறங்குதியோ?*

[எல்லே—என்னே.]

என்று கொஞ்சும் கேள்விக்கு, 'சத்தம் போடாமலிருங் கள்; வந்துவிடுகிறேன்' என்று அலட்சியமாகப் பதில் வருகிறது.

'அந்த வாய்வல்லமையை முன்னமே அறிவோம்!' என்று தோழிகள் சொல்ல, 'வல்லவர்கள் நீங்களா, நானா?' என்று உள்ளே யிருப்பவள் கேட்கிறாள், 'என்னடீ! பேச்சை வளர்க்கிறாய், சடக்கென்று எழுந்து வாராமல்!' என்று அவர்கள் கண்டிப்பாகச் சொல்ல, 'எல்லாரும் வந்து விட்டார்களா?' என்ற கேள்வி புறப்படுகிறது.

கடைசியாக, 'அதற்குள்ளே கொஞ்சம் உறக்கம் போடலாம் என்று பார்க்கிறாயா?' என்று நகை யாடுகிற வர்கள், 'நீயே வந்து எண்ணிக் கொள்!' என்று சொல்லி மறுபடியும் கிருஷ்ண பஜனையில் ஈடுபடு கிறார்கள்.

*ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை,*
*தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது,*
... ... ... ...
*வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க,*
*போயபிழையும் புகுதருவான் நின்றனவும்*
*தீயினில் தூசாகும்*

[புகுதருவான் நின்றனவும்—பின்பு (நம்மை அறியாமல்) வருகிற பாவங்களும், தூசு—பஞ்சு.]
என்று பாடிக் கொண்டே போகிறார்கள்.

பிறகு நீராடி நிர்மலராய்,

*மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்*
*சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து,*
*வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்(து)உதறி,*
*மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்*
*போதருமா போலேநீ*

வரவேண்டும் என்று ஆசைப்படும் உள்ளங்களில் கண்ணன் கருணை ம்மழை பொழிவதற்கு என்ன தடை?

இவர்கள் ஆய்ப்பாடியிலுள்ள கன்னியர்களென்றும், நல்ல புருஷரை அடையவும் நாடு செழிக்கவும் ஒரு நோன்பு நடத்துகிறார் களென்றும் தெரிந்து கொள்கிறோம். இது மார்கழி மாசத்தில் நோற்கப்படுவதால் மார்கழி நோன்பு என்று சொல்லப்படுகிறது. கன்னிப் பெண்களால் நோற்கப்படுவதால் பாவை நோன்பு என்றும் சொல்லப்படுகிறது. கிழக்கு வெளுப்பதற்கும் கோழி கூவுவதற்கும் முன்பே நீராட்டமும் நோன்புச் சடங்குகளும் முடிவு பெறுகின்றன.

இந்த நோன்பினால் நாடு செழிக்கு மென்ற நம்பிக்கையை,

*ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி*
*நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்,*
*தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்(து)*
*ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயல்உகள,*

*பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப,*
*தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி*
*வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளற் பெரும்பசுக்கள்*
*நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்*

என்று பாட்டில் கோபிகைகள் வெளியிடுகிறார்கள்.

நாட்டிலே நோய் பஞ்சம் முதலியவை ஒழிந்து ஒன்பது நாள் வெயிலும் ஒரு நாள் மழையுமாய் இருக்குமாம். ஓங்கி வளர்ந்திருக்கும் செந்நெற் பயிர் களினூடே கயல் மீன்கள் துள்ளிக் கொண்டிருக்குமாம். இதனால் செந்நெலும் பக்கத்திலுள்ள நீல மலரும் ஒக்க அசைய, அந்த மலர்களில் மது உண்ட வண்டு கள் தூங்கு மஞ்சத்திலே கண் வளரும் ராஜ குமாரர் களைப் போல உறங்கிக் கொண்டிருக்குமாம். பசுக் களோ சளைக்காது கொடுக்கும் வள்ளல்களைப் போல் வாங்க வாங்கக் குடங் குடமாக நிறைத்துக்கொண்டே இருக்குமாம்.

இப்படிப்பட்ட பசுக்களே கோபாலர்களின் முக்கிய மான செல்வம். இந்தச் செல்வத்தை,

*ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப,*
*மாற்றாதே பால்சொரியும் வள்ளற் பெரும்பசுக்கள்*

என்றெல்லாம் போற்றுவதில் இவர்களுக்குச் சளைப்பே கிடையாது.

இவ்விதமான செழிப்புக்கெல்லாம் ஆதாரமான மழையைக் குறித்து, 'மழையே! மழையே! வா, வா' என்று பாடும் குழந்தைகளைப் போல், பாவை நோன்பை அநுஷ்டித்துப் பஜனை செய்து வந்த பெண்களும் குழந்தை யுள்ளத்தோடு குதூகலமாய்

மழைக் கடவுளை நோக்கி, 'நீயும் ஒரு வள்ளலாக வழங்கவேண்டும்: கையிருப்பாக ஒன்றும் வைத்துக் கொள்ளாதே!' என்று பாடிப் பிரார்த்திக்கிறார்கள்:

*ஆழி மழைக்கண்ணா! ஒன்றும்நீ கைகரவேல்!*
*ஆழியுள் புக்கு முகந்துகொ(டு) ஆர்த்தேறி*
*ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து,*
*பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்*
*ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து,*
*தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்*
*வாழ உலகினில், பெய்திடாய்! நாங்களும்*
*மார்கழிநீ ராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்.*

மேகங்களின் கருமை மழை வளத்திற்கு அறிகுறியாய் இருப்பதால், அந்த நிறத்திற்குக் கண்ணனுடைய அருள் வடிவத்தை ஒப்பிடுகிறார்கள். அந்தக் கருமேகங்களுக் கிடையே மின்னல் வெட்டு மல்லவா பளிச்சுப் பளிச்சென்று? அந்த மின்னல் அவனுடைய சக்கரத்தை ஞாபகப்படுத்துமாம். மின்னலுக்குப் பின் சில சமயங்களில் இடியிடிக்குமல்லவா? அதைக் கேட்டால் அவனுடைய சங்கநாதம் நினைவிற்கு வருமாம். சோவென்று பெய்யும் மழையோ துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனத்திற்காக அவனுடைய வில் உதைத்துத் தள்ளும் அம்பு மழையை நினைவிற்குக் கொண்டுவருமாம். ஒரு சமயம் மேகத்திற்கிடையே வான வில் கிடக்கிறதல்லவா?' சரி: அது அவனுடைய சார்ங்கம் என்ற வில்லின் குறிதானும்.

இப்படியெல்லாம் மழைக் கடவுளைத் தோத்திரம் செய்யும் போதும் அவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனுடைய நினைவுதான். அவனுடைய அருள் போல மழை

பெய்ய வேண்டும் என்பது குறிப்பு. அவன் அருளும் மழை போல் இறங்கி வரவேண்டும் என்ற குறிப்பும் இந்தப் பிரார்த்தனையிலே அடங்கியிருக்கிறது.

ஸ்ரீ கிருஷ்ண விரகத்தால் தவிக்கும் இதயங்களும் மழையில்லாமல் தவிக்கும் நிலம்புலங்களைப் போன்றவைதானே? மழை பெய்து ஊரும் நாடும் வாழ வேண்டுமென்று வெளிப்படையாக விரதம் பூண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய காதலைப் பெற்றுத் தாங்களும் வாழ வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள்.

ஆனால், 'சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமியர்' என்று சொல்லப்படும் இந்தக் கூட்டத்தில், ஆண்டாள் எப்படி வந்து கலந்து கொண்டாள்? 'இடைப் பேச்சும் இடை நடையும்' உடையவளாய்த் தானும் அவர்களைப் போல் நோன்பு நோற்கிறாளே! எவ்வளவோ காலத்திற்குப் பிற்பட்டவளல்லவா?—என்று அதிசயிக்கிறீர்கள். சரி: இந்த மந்திர வாதம் பாவனா சக்தியின் முதிர்ச்சியால்தான் செய்யமுடிந்தது. பாவனை முதிர முதிர இவள் உள்ளம் கால வெள்ளத்தை எதிர்த்து நீந்தி ஆய்ப்பாடியில் குடியேறி விட்டது! இந்த நிலையிலேதான் பாவை நோன்பைக் குறித்த திருப்பாவை என்னும் இசைத் தமிழ் பிறந்தது.

ஸ்ரீ கிருஷ்ணன் மீதுள்ள பிரேமையால் உடல்-உணர்ச்சியையும் உலக உறவுகளையும் மறந்து வாழ்ந்த கோபிகா ரமணிகளின் அநுபவத்தை ஒட்டித் தன்னுடைய காதலநுபவங்களையும் ஆண்டாள் வெளியிட முயல்கிறாள் இந்த முப்பது பாசுரங்கள் வாயிலாக.

ஆண்டாள் பாடிக்கொடுத்த பாமாலையில் திருப் பாவையை ஓர் அழகிய பூங்கொத்து என்று சொல்ல லாம். இவள் 'சூடிக் கொடுத்த' இந்தப் பூங்கொத்தை யும் இவளுடைய காதல்-தெய்வமான ஸ்ரீ கிருஷ்ண பகவான் விசேஷ உகப்போடு அங்கீகரித்திருக்க வேண்டும்.

---

# 37. கனவும் கல்யாணமும்

'கண்ணா, என் கண்மணியே! உன்னை என்றுதான் காண்பேனோ?' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே ஆண்டாள் நந்தவனத்திற்குள் பிரவேசிக்கிறாள். 'உடல் உள்ளம் உயிர் மூன்றையும் உனக்குத்தானே அர்ப்பணம் செய்தேன்? அறியாப் பிள்ளைபோல் காட்டிப் பேதைப் பெண்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு போகும் பொல்லாத் திருடன் நீ என்பதை அறிந்தேனில்லையே!' என்று நெருப்பிலிட்ட வெண்ணெய் போல் உருகுகிறாள். விதம் விதமாகப் பூத்துச் சொரிந்திருக்கும் பூங்கொடிகளுக்கும் செடிகளுக்கு மிடையே உலாவி வரும்போது அம்பு பட்ட மான் போலத் துடிதுடித்து, 'உங்களை இப்படிப் போர்க் கோலம் செய்து விட்டவன் எங்கே இருக்கிறான்?' என்று கேட்கிறாள்.

முல்லைப் பூக்கள் மலர்ந்திருப்பதைப் பார்த்ததும் அவனுடைய புன்னகை ஞாபகத்திற்கு வருகிறது. உடனே இந்தக் கொடியை நெருங்கி,

*முல்லைப் பிராட்டி! நீஉன் முறுவல்கள்*
*கொண்(டு), எம்மை*
*அல்லல் விளைவியேல்; ஆழிநங்*
*காய்! உன் அடைக்கலம்*

என்று முறையிட்டுக் கொள்கிறாள்.

அந்த முல்லைச் சிரிப்போடு, இவளைக் கைவிடுவ தில்லை யென்று வாக்களித் திருந்தானும். 'அந்தச்

சொல்லும் பொய்யானால், நான் பிறந்ததும் பொய் தான்!' என்கிறாள். அந்த வடிவத்தைத் தன் மனப் பெட்டிக்குள் வைத்துப் பூட்ட முயன்றாள்: அது எப்படியோ நழுவிப்போய்.விட்டது!

அதோ தோகை விரித்தாடும் மயில்களை அலங்கரிக் கிறதே, அந்த நிறம்தான்! 'அப்படிக் கூத்தாடி என்னை ஹிம்ஸிக்க வேண்டாம்; உங்கள் காலில் விழுந்து வேண்டிக் கொள்கிறேன்' என்கிறாள் காதலி அந்த மயில்களின் கூட்டத்தைப் பார்த்து.

சோலைமலைக்குப் போயிருந்த காலத்திலும், ஸ்ரீகிருஷ்ணனுடைய திவ்ய ஸௌந்தரியத்தை ஞாபகப் படுத்திக் கொண்டிருந்தன அங்குள்ள பூக்களும் கனி களும் பட்சி ஜாலங்களும். ஊருக்குத் திரும்பிய பின், 'இந்தப் பறவைகள் ''அவன் வருவான், வருவான்!'' என்று பாடுகின்றனவே! உண்மைதானா?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள்.

ஒரு நாள் மேகங்கள் தோன்றியதும், அவனும் கூட வந்து விட்டானோ என்று பிரமித்தாள். வர வில்லையென்று தெரிந்ததும் நோவுபட்டு, 'மேகங்களே! என் காதலன் வடக்கே வேங்கட மலைக்கு வந்திருக் கிறான். நீங்கள் தூது போய் இந்த நோயை அங்கே தெரியப்படுத்த வேண்டும்' என்று சொன்னாள். அப்படிச் சொல்லும்போதே கண்ணாடி போன்ற கன்னங்கள் கண்ணீரால் நனைந்து விட்டன, 'வாரா திருந்தாலும் ஏதாவது வார்த்தை சொல்லி அனுப்ப லாகாதா?' என்றாள் ஒருகணம். அடுத்த நிமிஷத் திலே, 'அந்த வார்த்தை கூட இப்படிப் பொய்த்துப் போகு மென்று எதிர்பார்க்க வில்லையே!' என்று ஏங்கினாள்.

'மங்கைப் பருவத்தை அடைந்து விட்டாளே! இவளுடைய புத்திக்கும் பக்திக்கும் குணத்திற்கும் அழகிற்கும் ஏற்ற புருஷனை எப்படி, எங்கே கண்டுபிடிப்பது? பெற்றோர் கடமையைச் சரிவரச் செய்ய வேண்டாமா?' என்ற எண்ணங்கள் பெரியாழ்வாருள்ளத்தைத் துருவிக் கொண்டிருந்தன. இவள் இஷ்டத்தை அறிந்து கொள்வோம் என்று தீர்மானித்து மகளை அருகில் அமர்த்தி, 'நீ யாரை மணந்துகொள்ள விரும்புகிறாய்?' என்று மெள்ளக் கேட்டார். ஆண்டாள் கொஞ்ச நேரம் மௌனமா யிருந்தாள். பிறகு கலங்கிய உள்ளத்தோடும் கண்களோடும் தந்தையைப் பார்த்து விட்டு எழுந்து போய் விட்டாள்.

பதில் சொல்லியிருந்தால்கூட விஷயம் அவ்வளவு தெளிவாகப் புலப்பட்டிராது அவருக்கு. சில நிமிஷங்களில் உள்ளேயிருந்து வேணுகானம் போன்ற குரலில்,

*வானிடை வாழும்அவ் வானவர்க்கு*
*மறையவர் வேள்வியில் வகுத்தஅவி,*
*கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து*
*கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப,*

... ... ... ...
... ... ...

*மானிட வர்க்கென்று பேச்சுப்படில்*
*வாழகில் லேன் கண்டாய் மன்மதனே!*

[அவி-வேள்வித் தீயில் தேவர்களுக்குக் கொடுக்கும் உணவு.]

என்று மன்மதனை நோக்கிப் பாடிய பாட்டு அவர் காதில் விழுந்தது.

அந்த உறுதியும் கொள்கையும் அவர் பக்தி யுள்ளத்திற்கு அதிசயத்தையும் மகிழ்ச்சியையும் கவலை யையும் ஒருங்கே விளைவித்தன. 'இவள் பகவானைக் காதலிப்பது சரிதான்; புருஷோத்தமனே நம்து திரு மகளுக்கு இசைந்த புருஷன்!' என்று எண்ணினர். ஆனால், அவனுக்கு இவளை எப்படிக் கல்யாணம் செய்து வைப்பது என்று தெரியவில்லை.

அந்தப் புருஷோத்தமனே வந்து விட்டான், இவள் மனக்கண் முன்னே, புல்லாங்குழலும் வாயுமாக. கண்களில் கருணை ததும்பியது; அன்பு அலைமேல் அலை யெறிந்தது. அவனே மறுபடியும் தன் மேனியில் திவ்ய ஆபரணங்கள் கர்வத்துடன் மின்ன, அழகிய வெண்சங்கு ஒன்றைத் தன் பவளச் செவ்வாயில் வைத்து ஏதோ வெற்றி அடைந்து விட்டதுபோல் 'பம் பம்' என்று முழக்கம் செய்து வந்தான். பொல் லாப் பொருமை வந்து விட்டது காதலிக்கு, 'அந்தச் சங்குதான் என்ன பாக்கியம் செய்ததோ?' என்று.

அந்தக் குறுகுறுத்த கண்களில் ஒரு நிமிஷம் குறும்புச் சிரிப்பின் சாயல்: அடுத்த நிமிஷத்தில் அங்கேயிருந்து பாணங்கள் புறப்பட்டுத் தன்னை வதைப்பதை உணர்ந்தாள். இந்த அழகுத் தெய்வம் அகக் கண்ணுக்கு இலக்காகித் தரிசனம் அளிக்காமலே யிருந்து விடுவதுமுண்டு.

சாதாரணமான காதல் நெறியே துன்பமும் இடை யூறும் பொருந்தியதென்றால், ஆண்டாள் காதல் எவ் வளவு பெருந் துன்பத்தைக் கொடுத்திருக்கும் என்று சொல்லவும் வேண்டுமோ? 'ஆயர்பாடிக்கு அணி

விளக்'காக விளங்கிய பெருமான் இவளுக்கு 'அல்லல் விளைத்த பெருமா'ணுகவும் காட்சி தந்தான்.

*உள்ளே உருகி நைவேனை,*
*'உளளோ? இலளோ?' என்னுதை*
*கொள்ளை கொள்ளிக் குறும்பனைக்*
*கோவர்த் தனனைக் கண்டக்கால்—*

என்றெல்லாம் பாடுகிறவள் நெஞ்சிலே, காதல் எரி மலைக்குள்ளே குமுறும் நெருப்பைப்போல் குமுறிக் கொண்டிருக்குமல்லவா?

ஒரு நாள் இரவில் தன்னுடைய நிலையை நினைத்துப் பார்த்ததும் அழுகை வந்துவிட்டது. இதற்குமுன் எத்தனையோ தரம் கண்ணும் கண்ணீருமா யிருந்திருக்கிருள். இப்போதோ துன்பக் கடலில் ஆழத்திலே முழுகிப் போனுள் என்று சொல்ல வேண்டும். காதலனே அழுதாலும் வருவதில்லை, தொழுதாலும் வருவதில்லை; 'பயப்படாதே' என்று அபயதானம் செய்வதுமில்லை!

அப்படிப்பட்டவனை மறந்திருக்கலா மென்ருல், அதற்கும் வழியில்லாமல் உள்ளே புகுந்து எப்படியோ தழுவிக் கொள்கிருன், முத்தமிடுகிருன்,—என்ன ஹிம்ஸை!—தன்னைச் சுற்றிச் சுழன்று திரிந்து கொண்டே யிருக்கிருன் அப்பால் போகாமல்—என்று புலம்புகிருள்:

*அழிலும் தொழிலும் உருக்காட்டான்.*
*அஞ்சேல் என்னுன்; அவனொருவன்*
*தழுவி முழுசிப் புகுந்தென்னைச்*
*சுற்றிச் சுழன்று போகானுல்!*

[முழுசி—முத்தமிட்டு.]

இந்தக் கண்கள் உறக்கம் கண்டு எத்தனை நாளாகி விட்டன!

*என்புருகி,இன வேல்நெடுங் கண்கள்*
*இமை பொருந் தாபல நாளும்!*

[என்பு—எலும்பு.]

எனினும், பல நாளாக உறங்காது வருந்தியவள் இன்றிரவு—பிற்பகுதியில்—அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருக்கிருள்.......

நாட்டின் பல பக்கங்களிலு மிருந்து கடல்போலத் திரண்டு வந்தது ஜனக்கூட்டம். நகர வாசிகள் தெருக் களில் பூம்பந்தல் மகர தோரணம் சித்திரக்கொடி முதலிய அலங்காரங்கள் செய்தார்கள். வாழைகளும் கமுகுகளும் அணியணியாக நாட்டப்பட்டன. மாளிகை முகப்புக்கள் பல நிறமுள்ள பூ மாலைகளாலும் மணி விளக்குகள் மணிக் கண்ணுடிகள் முதலிய மங்கலப் பொருள்களாலும் அலங்கரிக்கப் பட்டன.

பூம் பட்டாடைகள் சுற்றிய பொற் கும்பங்கள்மீது தேங்காய்களும் மாந்தளிரும் திகழ்ந்தன. சிலர் சந்தனக் குழம்போடு வேறு வாசனைப் பொருள்களையும் சேர்த் துத் திண்ணை மெழுகினுர்கள்; தெருக்களில் தெளித் தார்கள். வில்லிபுத்தூர் அழகு மயமாகவும் ஆனந்த மயமாகவும் விளங்கியது.

ஜனங்கள் நகரத்தை அலங்கரித்ததோடு தங்களை யும் அலங்கரித்துக் கொண்டார்கள். பெண்கள் மஞ்சனம் ஆடுவாரும், விழிகளில் மை எழுதுவாரும், மேகலை முதலிய அணிகளை அணிவாரும், கூந்த லில் பூக்களை வைத்துப் பின்னிக் கொள்வாருமாகக்

காணப்பட்டார்கள். சில பெண்கள் பிறைச் சந்திரனைப் பழிக்கும் நெற்றியில் வட்டமாகத் திலகமிட்டுக் கொண்டுவந்தார்கள்.

சிலர் குறுநகை புரிந்து மயிலைப்போல வந்தார்கள். சிலர் அம்மானை ஆடினார்கள், பந்து விளையாடினார்கள்; சிலர் உல்லாசமாக ஊஞ்சலாடிக் கொண்டிருந்தார்கள். சிலர் ஆண்டாளைப் போல் சித்திரம் எழுதிப் பார்த்தார்கள். இவள் புருஷனை எப்படிச் சித்தரிப்பதென்று திகைத்தார்கள் சில பெண்மணிகள்.

சிலர் இசை பாடினார்கள். சிலர்,

*தேமருவு மலர்க்கோதை*
*வந்தாள், வந்தாள்!*
*திருப்பாவை பாடினாள்*
*வந்தாள், வந்தாள்!*

*அன்னநடை மின்னிடையார்*
*வந்தார், வந்தார்!*
*ஆழ்வார்தம் திருமகளார்*
*வந்தார், வந்தார்!*

*அனைத்துயிர்க்கும் அன்பருளி*
*ஆண்டாள் வந்தாள்!*

என்றும், வேறு சிலர்,

வேதநா யகிவந்தாள்,
வேள்விநா யகிவந்தாள்!
கோதைநா யகிவந்தாள்!
கோலநா யகிவந்தாள்,

*போதநா யகிவந்தாள்;*
*பூமிநா யகிவந்தாள்!*
*நாதநா யகிவந்தாள்;*
*ஞானநா யகிவந்தாள்!*

என்றும் வாழ்த்துப் பாடினர்கள். 'கோதையை மணந்துகொள்ளும் நாயகன் பாக்கியசாலி!' என்றூர் பலர்.

பெரியாழ்வார் மாளிகைமுன் மாணிக்கக் கால் நாட்டிப் பந்தல் அமைக்கப்பெற்றிருந்தது. மணம் செய்வதற்கு வேண்டிய உபகரணங்களெல்லாம் சேகரிக்கப்பட்டிருந்தன. மங்கள வாத்தியங்கள் ஒலி செய்தன. நடன மாதர்கள் நடனம் செய்தார்கள். தோழிகள் வாஸ-மஞ்சனம் ஆட்டி இவளுக்கிசைந்த ஆபரணங்களாலும் பூ மாலைகளாலும் பூவைப்போல் மென்மை வாய்ந்த பட்டாடையாலும் அலங்காரம் செய்தார்கள்.

'முகூர்த்தம் சமீபித்துவிட்டதே! மணவாளன் எப்போது வருவான்?' என்று மக்கள் தங்களுக்குள்ளே பேசிக் கொண்டார்கள். 'அவன் இங்கே வருவதும் உண்டோ?' என்று சிலர் சந்தேகித்தார்கள். வேறு சிலர் ஆழ்வாரை நோக்கி, 'வருவது உண்மைதான?' என்று கேட்டார்கள்.

அப்போது அவர், 'எம்பெருமான் மாயத்தை ஏழையேன் அறிவேனே?' என்று சொல்லிப் பெருங் கவலையோடு ஆண்டாள் முகத்தை நோக்கினர். அவளோ,

*'வந்தானே? திருவரங்கன் வாரானே?'*
*என்றென்றே வளையும் சோரும்*

என்ற நிலையில் ஒவ்வொரு கணமும் காதலனைப் பேராவலோடு எதிர்பார்த்த வண்ணமா யிருந்தாள்.

'இன்னும் தாமதம் செய்தால் நான் எப்படி உயிர் தரிப்பேன்? மணம் இல்லையென்றால் மரணம்தான் கதி எனக்கு!' என்று தனக்குள் தானே சொல்லிக் கொண்டாள்.

உடனே ஆகாயமளாவிய மணப் பந்தலுக்குள் நீல ஜோதி ஒன்று உதயம் செய்ததுபோல், பகவான் மணவாளக் கோலத்தோடு தோன்றுகிறான். விண்ணும் மண்ணும் ஒருங்கே தொழுது புகழ்கின்றன அந்த அழகிய மணவாளனை.

ஆழ்வார் ஆனந்த பரவசராய், 'என் அருமைத் திருமகளாகிய ஆண்டாளை உனக்குக் கன்னிகாதானம் செய்கிறேன்' என்று தாரை வார்த்துக் கொடுக்கிறார். மணப்பெண் நீல நிறமுள்ள சித்திரப் பொற் பட்டாடையும் செங்கழுநீர் மாலையும், நெற்றியில் கஸ்தூரி திலகமும், தெய்விக அழகு பெற்று மிளிரும் கண்களுமாய், வளையும் சிலம்பும் ஒலி செய்ய நடந்துவந்து காதலனுக்கு அருகே வீற்றிருக்கிறாள்.

மணச் சடங்குகள் இனிது நடைபெறுகின்றன. மணவாளன் ஆண்டாளின் மலர்க்கை பிடித்ததன்றி அவள் அடிகளையும் பிடித்து அம்மி மிதிக்கச் செய்கிறான். ஆண்டாள் மணவாளனோடு யானைமேல் ஊர்வலம் வந்த காட்சியைக் கண்குளிரப் பருகிய ஜனங்கள் 'ஜய! ஜய!' என்று கோஷிக்கிறார்கள். பெரியாழ்வார் பல்லாண்டு பாடுகிறார். சுமங்கலிகள் மங்களம் பாடுகிறார்கள்........

ஆண்டாள் பேராச்சரியத்தோடு கண்ணை விழித்தாள். பக்கத்தில் தோழி ஒருத்தி இருந்தாள். அவளை நோக்கித் தான் கண்ட அற்புதமான கனவையும் அதிலே அநுபவித்த ஆனந்தமான திருமண வைபவத்தையும் சொல்லத் தொடங்கினாள்.

காதலர் மனங்கள் ஏற்கெனவே கலந்துவிட்டன. காவேரி சமுத்திரத்தோடு கலப்பது போல், இவளும் அழகிய மணவாளனை ஸ்ரீரங்கநாதனைக் கைப்பிடித்து அவனோடு கலந்துவிட்டாள் என்று குரு பரம்பரைக் கதைகள் தெரிவிக்கின்றன. ஆழ்வாரோ,

*ஒருமகள் தன்னை உடையேன்;*
*உலகம் நிறைந்த புகழால்,*

*திருமகள் போல வளர்த்தேன்;*
*செங்கண்மால் தான்கொண்டு போனான்*

என்று சொல்லிக்கொண்டே வழக்கம்போல் தமது பணிகளில் ஈடுபட்டிருந்தார்.

ஆண்டாளே தன்னுடைய கல்யாண வைபவத்தைக் கூறியபின், காதலித்த புருஷோத்தமனை அவள் மணஞ் செய்து கொள்ளவில்லை என்று யாரே சொல்லக்கூடும்?

———

# 38. கவிதைக் கண்ணுடியில் ஆண்டாள் தரிசனம்

கிருஷ்ண பகவான் மீது காதல் கொண்ட கோபிகா ரமணிகளில் சிறந்தவள் ராதை என்பது வடநாட்டார் அபிப்பிராயம். பண்டைத் தமிழர்களோ ராதையின் ஸ்தானத்தை நப்பின்னை என்பவளுக்கு அளித்துக் கிருஷ்ண சரித்திரத்தைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டார்கள்.

இந்த நப்பின்னையையும் எழுப்பிக்கொண்டு போய் நீராடி மார்கழி நோன்பு நோற்கவேணுமென்று அந்த வீட்டுக்கு முன்வருகிறது கோபிகைகளின் கூட்டம். அத்தக் கூட்டத்திலே தானும் ஒருத்தியாகக் கலந்துகொண்ட ஆண்டாள்,

*நந்தகோ பாலன் மருமகளே! நப்பின்னாய்!*
*கந்தம் கமழும் குழலீ! கடைதிறவாய்*

[நந்த கோபாலன் — கிருஷ்ணனை வளர்த்த தந்தையான நந்தகோபன். கந்தம்—வாசனை. குழலீ— கூந்தலையுடையவளே. கடை — வாசல்.]
என்று வேண்டிக்கொள்கிருள்.

பிறகு, பொழுது விடிகிறதென்று அடையாளம் சொல்லிக் கதவைத் திறக்க வேணுமென்று மறுபடியும் பாடுகிருள் உருக்கமாக:

*வந்தெங்கும் கோழி அழைத்தனகாண்; மாதவிப்*
*பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்;*

*பந்தார்விரலி! உன் மைத்துனன் பேர்பாட,*
*செந்தா மரைக்கையால் சீரார் வளை ஒலிப்ப*
*வந்து, திறவாய் மகிழ்ந்தேலோர் எம்பாவாய்.*

[மாதவி - ஒரு வகைக் கொடி. பல்கால் - பல தடவை. பந்தார் விரலி - பந்தைப் பிடிக்கும் விரல்களை யுடையவளே. மைத்துனன் - (இங்கே) பரிகாசம் செய்து விளையாடும் முறையுடையவன். சீர்ஆர் — அழகு நிறைந்த.]

கோழிகளும் வந்து அழைக்கின்றனவாம் 'விழித் துக்கொள்' என்று. முன் வாசற் சோலையிலுள்ள மாதவிப் பந்தலில் இடைவிடாமல் பாடிக்கொண்டிருக் கும் குயில்களும் தங்களோடு சேர்ந்து நப்பின்னையை வேண்டிக் கொள்கின்றனவாம். அவள் கிருஷ்ணனைப் பரிகசித்துக்கொண்டே அவனோடு பந்தடித்து விளை யாடும் அந்தச் செந்தாமரைக் கையால் வளை குலுங்க வந்து கதவு திறக்க வேணுமாம். அப்போது அந்தக் கையழகையும், ஜன்னல் வழியாக அந்த நடையழ கையும், இவர்கள் பார்த்து மகிழ விரும்புகிறார்கள்.

திருப்பாவையிலுள்ள இந்தப் பாட்டு இராமானு ஜருக்குப் பிரியமான பாடல்களில் ஒன்று. திருக் கோட்டியூரிலுள்ள நம்பிகள் என்ற பெரியவரிடம் மத விஷயமான சில இரகசியங்களைக் கேட்டறிய வேணு மென்று இராமானுஜர் ஒருசமயம் போய்க் கொஞ்சகாலம் தங்கினார். அங்கே துறவிகளுக்குரிய நியமப்படி பல வீடுகளிலும் சென்று பிக்ஷான்னம் வாங்கிப் பசி தீர்த் துக்கொள்வதுண்டு, அப்போது திருப்பாவைப் பாசு ரங்களை மனமுருகிப் பாடிக் கொண்டு போவார்.

ஒருநாள் மேலே காட்டிய பாசுரத்தைத் தம்மை மறந்து பாடிக் கொண்டே குருவின் மாளிகை வாசலில் நின்றார். உள்ளே நம்பிகள் பகவானைத் தியானம் செய்துகொண்டிருந்தார். தேவகி என்ற அவர் பெண் இடைகழியில் (ரேழியில்) பந்து விளையாடிக் கொண்டிருந்தாள்.

'கந்தம் கமழும் குழலீ! கடைதிறவாய்' என்ற ஒலி காதில் விழுந்ததும், அவள் பந்தும் கையுமாக வந்து கதவைத் திறந்தாள்.

அந்த யௌவன சுந்தரியை அந்த நிலையில் கண்டதும் இராமாநுஜர்,

*பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர்பாட,*
*செந்தா மரைக்கையால் சீரார் வளைஒலிப்ப*
*வந்து திறவாய் மகிழ்ந்(து)*

என்று பாடிக்கொண்டே காலில் விழுந்தார். அவள் அழுதுகொண்டே நடுக்கத்துடன் தந்தையிடம் ஓடிப் போய், 'ராவண சந்நியாசி போலிருக்கிறாரே அப்பா, உம்முடைய சீடர்!' என்று கத்தினாள்.

நம்பிகள் சடக்கென்று எழுந்து தமது புதல்வியோடு தலைவாசலுக்கு வந்து சிரித்துக் கொண்டே, 'திருப்பாவை *ஜீயரே! நப்பின்னைப் பிராட்டியைத் துயிலெழுப்ப வந்தீரோ!' என்று கேட்டார். தேவகியும் அந்த மகாநுபாவர் திருப்பாவையில் ஈடுபட்டிருந்ததால் தன்னை நப்பின்னையாகப் பாவித்து வணக்கம் செலுத்தினாரென்று தெரிந்து அத்தகைய பக்தி பரவச மனநிலை குறித்து ஆச்சரிய மடைந்தாள்.

---

*ஜீயர்—வைஷ்ணவப் பெரியாரான சந்நியாசி.

இத்தகைய பாவனுசக்தியை ஆண்டாளுடைய விசேஷ உடைமை என்று சொல்லாம். அவள் பாசு ரங்களைப் பாடிப்பாடி இராமநுஜரும் அந்த நிலையை அடைய முயன்ருர் என்பது,

*...........அரங்கர் மௌலி*
*சூழ்கின்ற மாலையைச் சூடிக்*
*கொடுத்தவள் தொல்அருளால்*
*வாழ்கின்ற வள்ளல் இராமா*
*னுசன்என்னும் மாமுனியே*

[மௌலி—தலை; மணிமுடி.]
என்ற 'இராமானுச நூற்றந்தாதி'யின் குறிப்பு.

ஸர்வேச்வரனை ஸ்ரீரங்க ராஜாவின் மணிக்கிரீடத்தைச் சுற்றி அலங்கரிக்கும் மாலை ஆண்டாள் சூடிக் கொடுத்ததுதானும். அப்படியே *யதிராஜரும் ஞான தாதாவுமான இராமாநுஜர் வாழ்க்கையைச் சுற்றி ஒளி வீசிய பக்தி வடிவமான பாவனு சக்தியும் 'திருப்பாவை பாடிய செல்வி' என்று போற்றப்பெறும் ஆண்டாள் அநுபவித்துக் கொடுத்தருளியதுதானும்.

ஆண்டாளைக் குறித்து வழங்கும் கதைகளும் அவள் பாடிய பாடல்களும் அவளுடைய பக்தி மதத்தின் உயிர்நிலையான பாவனுசக்திக்கு உயிர் தருகின்றன. உண்மையில், இவள் பாடல்களிலிருந்தும், இவள் தந்தையான பெரியாழ்வார் பாடல்களிலிருந்தும் கிடைத்த குறிப்புக்களை வைத்துக் கொண்டே நம் முன்னேர்கள் ஆண்டாளைக் குறித்து அழகான கதைகளை ஜோடித்தார்கள் என்று ஊகிக்கலாம்.

---

*யதிராஜர்—சந்நியாசிகளின் தலைவர்.

பாவனு சக்திதான் ஆண்டாள் பக்தியை அதி தீவிரமான காதலாக்கி வளர்த்து வந்தது. இவளுடைய ஆசைகளையெல்லாம் புருஷோத்தமனை நோக்கிச் செலுத்தியது. உயிருக்குயிராகிய அந்தக் காதலனுக்காக எப்போதும் உள்ளத்தையும் உடம்பையும் ஒருங்கே பரிசுத்தமாக வைத்துக் கொண்டாள். அந்த லட்சிய புருஷனுக்காக எவ்விதமான தியாகங்களையும் செய்யச் சித்தமாயிருந்தாள்.

அவன் துன்பக்கடலிலே தள்ளி விட்டாலும் அவனிடத்திலேயே உள்ளம் ஓடிக்கொண்டிருந்தது. அந்த உள்ளம் அந்தக் கடலுக்கும் அவனையே தோணியாகப் பெற முயன்றது. அவன் தனக்கு ஏதோ வாக்களித்திருந்ததாக நம்புகிருள். அந்த இரகசியம்—அந்த மெய்ம்மைப் பெருவார்த்தை—அவனுக்கும் தனக்கும் தெரிந்ததோடு தந்தையான பெரியாழ்வாருக்கும் தெரிந்ததாக நம்புகிருள் என்ருல், இவளுடைய பாவனு சக்தி எவ்வளவு உச்ச நிலையை அடைந்திருக்கவேண்டும்!

காதலனைப் பிரிந்திருப்பதற்கே இவளுக்கு இஷ்டமில்லை. அவன் பிரிந்து விட்டதாகத் தோன்றிஞல் தோழிகள் உடனே தூதுக்குப் புறப்பட வேண்டியதுதான். அவர்கள் யாரென்பது உங்களுக்குத் தெரியுமே! இவளைப் போன்ற பெண்கள் மட்டுமா?

குயில்கள், மயில்கள், கிளிகள், செந்தாமரைமுதலிய பூக்கள், வண்டுகள், மேகங்கள், இவை யெல்லாம் ஆண்டாளுடைய சிநேக பாத்திரங்கள். ஒரு சமயம் 'குயிலே! நீ என் புண்ணியன்—என் மாணிக்கம்-

வருமாறு கூவவேணும்' என்று கூறுவாள். 'இந்தச் சோலையில் வாழ விருப்பம் உண்டா? அப்படியானல் நான் சொன்னபடி செய்யவேணும்' என்று கண்டிப்பாகக் கட்டளையிடுவாள்.

ஒருசமயம் பூக்களை, வண்டுகளை, சுனைகளைப் பார்த்து, 'எனக்கும் வழிகாட்டுங்கள்' என்று கேட்பாள். இப்படியே ஆடும் மயில்களுக்கும் ஏதாவது உத்தரவு போடுவாள். கடலுக்கும் மழைக்கும் கூடக் கட்டளை யிடுவதுண்டு. காதலுக்குத்தான் என்ன உரிமை, என்ன அதிகாரம்!

'மேகவிடுதூதும்' ஆண்டாளுடைய பாவஞ சக்திக்குச் சான்று தருகிறது.

*'விண்ணீல மேலாப்பு*
*விரித்தாற்போல் மேகங்காள்!*

[விண்—ஆகாசத்தில். மேலாப்பு—மேற்கட்டி.]

—அதாவது, 'ஆகாசமெங்கும் நீல நிறமான ஒரு மேற்கட்டி கட்டியிருப்பது போலத் தோன்றும் மேகங்களே!' என்று அழைப்பதிலே ஒரு ரஸமிருக்கிறது.

அவை காதலனுடைய நிறத்தையும் குணத்தையும் ஒருங்கே நினைப்பூட்டுகின்றன அல்லவா? 'அப்படிப் பட்டவனுக்கு அபலையாகிய என்னை இப்படி அழ அழப் பண்ணி ஈடழிப்பதும் ஒரு பெருமையா?' என்று கேட்கிருள்,-அவனேடு உறவுள்ளது போலத் தோன்றும் அந்த மேகங்களை நோக்கி.

'மழையாகவா பொழிகின்றன அவை? முத்தும் பொன்னுமாகச் சொரிகின்றன!' என்ற கருத்தை உள்ளிட்டு,

*மாமுத்தம் நிதிசொரியும்*
*மாமுகில்காள்!*

[மா—(இங்கே) பெருவிலையுள்ள. முத்தம் - முத்துக்கள். நிதி—பொன். முகில்—மேகம்.]
என்று எவ்வளவு அருமையாக அழைக்கிருள் அந்தச் செல்வத் தோழிகளை!

அவை வேங்கட மலையில் பொழியும் காட்சியை மனக்கண்முன் கண்டு,

*தேன்கொண்ட மலர்சிதறத்*
*திரண்டேறிப் பொழிவீர்காள்!*

என்று கூப்பிடுகிருள். அவற்றின் செழிப்பு அந்தத் தோற்றத்திலேயே தெரிகின்றனவாம்.

*மதயானை போல் எழுந்த*
*மாமுகில்காள்!*

என்று அழைப்பதைப் பாருங்கள்.

இப்படிப்பட்ட மேகங்களுக்கு இதயச் செழிப்பான தயவும் இருக்கவேண்டும். எனவே, தன்னுடைய பரிதாப நிலையைத் தெரிவித்து, அவை தூது சொல்லும்வரை தன் உயிரைத் தான் எந்த உபாயத்தால் காத்துக் கொள்ளக்கூடும் என்பதையும் விட்டுச் சொல்லுகிருள்:

*ஒளி,வண்ணம், வளை,சிந்தை,*
*உறக்கத்தோ(டு) இவையெல்லாம்*
*எளிமையால் இட்டென்னை*
*ஈடழியப் போயினவால்;*

குளிர்அருவி வேங்கடத்(து)என்
கோவிந்தன் குணம்பாடி
அளியத்த மேகங்காள்!
ஆவிகாத் திருப்பேனே.

[வண்ணம் - நிறம். ஈடு - நிலைமை. அளியத்த - தயையுடைய.]

உடம்பு நிறமிழந்து ஒளியிழந்து போயிற்று; அது சிந்தையையும் இழந்துவிட்டதென்கிருள். கைகள் வளை இழந்தனவாம்; கண்கள் உறக்கத்தை இழந்து விட்டனவாம்.

'இந்த நிலையிலும் கோவிந்தனுடைய குணங் களைப் பாடுவதையே போது போக்காகக் கொண்டு....' என்று கூறுகிறவள் கடைசியாக அந்த நம்பிக்கை யைக் கூட இழந்துவிட்டவளைப் போல்,

கதிஎன்றும் தானுவான்,
கருதா(து)ஓர் பெண்கொடியை
வதை செய்தான் என்னும்சொல்
வையகத்தார் மதியாரே!

[வையகத்தார் - லோகத்தார்.]
என்பதைத் தூதுக்குரிய விஷயமாக்கி விடுகிருள்.

வேலியே பயிரை அழிப்பது போல் இரட்சகனை காதலனே தன்னை நம்பிய ஒரு பெண்கொடியை வதை செய்தான் என்ற பழிச் சொல் எங்கும் முழங்கு மாம். 'பிறகு அவனை மதிக்குமா உலகம் இரட்சகன் என்று?' என்கிருள். அப்படி வதைக்கும் போதும் அவனைப் பற்றிய கவலைதான் காதலிக்கு !

மேகத்தைத் தூதுவிட்டும், 'என் இதயத்திலே பல நாளாக அருள் மழை கொஞ்சமும் விழவில்லை யென்றால், அவன் உள்ள இடத்திலாவது தன்னைக் கொண்டு விடும்படி உற்றாரை வேண்டிக்கொள்கிறாள். 'இனி வெட்கப்பட்டுக் காரியமில்லை' என்று துணிந்து தன்னை ஆய்ப்பாடியில் கொண்டுபோய்ப் போடவேணு மென்கிறாள்.

விரகத் தீக்கு விறகிடுவது போல், வளர்த்த கிளி யும் கூண்டிலிருந்து, 'கோவிந்தா!' என்று கூப்பிடு கிறது. அப்படிக் காதலன் பெயரைச் சொல்லும்படி இவள்தான் கற்பித்திருந்தாள். இப்போது அந்த நாமமும் விஷமாகத் தோன்றவே, அதற்கு வேளையில் உணவு கொடுக்கவும் தோன்றவில்லை. கிளியோ தன்னுடைய தேவையையும் அந்தப் பாஷையிலேயே தெரிவிக்க விரும்பி, 'கோவிந்தா! கோவிந்தா!' என்று உரக்கக் கூவுகிறது. பிராண நாயகிக்குப் பிராண அவஸ்தைதான்!

கோவிந்தன் என்ற அந்த மேகத்தை எங்கே காண்பது?

*கணங்க ளோடு மின்மேகம்*
*கலந்தாற் போல, வனமாலை*

*மினுங்க நின்று விளையாட*
*விருந்தா வனத்தே கண்டோமே!*

[கணங்கள் - (தோழன்மார்) கூட்டம். மின் - மின்னல். வனமாலை - பல நிறமுள்ள பூவும் தழையும் துளசியும் கொண்டு தொடுக்கப்பட்ட மாலை. மினுங்க - பிரகாசிக்க. விருந்தாவனம் - பிருந்தாவனம்.]

என்றுதான் ரிஷிகள் சொல்லி வைத்தார்கள். பிருந்தா வனத்திற்குத் தெற்கே கண்டதாகவும் சொல்லவில்லை. அந்தப் பிரதேசத்திலும் 'காண்கிறேம்' என்று.சொல்லு கிறவர்களுமில்லை; 'கண்டோமே!' ஒரு காலத்தில்- என்றுதான் சொன்னார்களாம்.

காதலின் உலகம் இருண்டு போய்விட்டது: மழைக் கால் இருட்டன்று; அவனுடைய 'அநாதரவு' என்ற மரண இருள்தான். அடடா, என்ன கொடூர மான வெப்பம்! பாலைவனம் போல் இருக்கிறது; பசும்புல் - தரை என்ற ஜீவ பூமியே கிடையாது! ஆனால் அந்த இருட்டை மழை இருட்டாக்குகிறது ஆண்டாள் கனவு; காதற் புயலை அருட் காற்றாக மாற்றிக் கொள்கிறது நம்பிக்கை.

*வாரணம் ஆயிரம் சூழ வலஞ்செய்து*
*நாரண நம்பி நடக்கின்றான் என்(று)எதிர்*
*பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்*
*தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீ!நான்.*

[வாரணம் - யானை.]

என்று தோழிக்குச் சொல்லும் கனவிலே காதலியுள்ளம் எவ்வளவு ஆறுதல் அடைந்திருக்க வேண்டும்! தோழி கண்ணீர் வடித்துக் கொண்டே கேட்டிருக்கவேண்டும் அந்தக் கனவை!

*நாளை வதுவை மணமென்று நாளிட்டுப்*
*பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்,*
*கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர்*
*காளை புகுதக் கனாக்கண்டேன் தோழீ! நான்*

[வதுவை மணம் - விவாக மங்களம். பரிசு - பெருமை. கோளரி - சிங்கம். காளை - (இங்கே) கட்டிளமைப் பருவமுள்ள வீரன்.]

என்று ஆண்டாள் சொன்னதும், 'அப்படித்தானு?' என்று கண்ணைத் துடைத்துக்கொண்டு தோழி இவள் முகத்தைப் பார்த்திருப்பாள்.

ஆண்டாளோ கிளி கூவியது வீண் போகவில்லை யென்று விக்கி விக்கி மேலே வார்த்தை சொல்லத் தொடங்கி, தேவர்கள் தரையிலே கால் பாவி வந்து பெண் பேசியதையும், தான் கோடி உடுத்து அவனேடு காப்புக் கட்டிக் கொண்டதையும், மற்ற விவரங்களையும் எடுத்துரைத்து,

*மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத*
*முத்துடைத் தாம நிரைதாழ்ந்த பந்தற்கீழ்,*
*மைத்துனன் நம்பி மதுசூதன் வந்(து) என்னைக்*
*கைத்தலம் பற்றக் கனுக்கண்டேன் தோழீ! நான்*

[வரி - ரேகைகள். முத்துடைத் தாமம் - முத்து மாலைகள். நிரை - வரிசைகள். மைத்துனன்-(இங்கே) பரிகசித்து விளையாடும் தோழன். மதுசூதன் - கிருஷ்ணன்.]

என்று அந்தப் பாணிக்கிரண வைபவத்தையும் வருணித்துக்கொண்டே போகிருள்.

அந்த வருணனைக் கிடையே, எவ்வளவு பெருமை யாக,

*செம்மை யுடைய திருக்கையால் தாள்பற்றி*
*அம்மி மிதிக்கக் கனுக்கண்டேன் தோழீ! நான்*

என்று ஒரு சமயம் தன்னைத் துன்புறுத்திக்கொண்டிருந்த காதலன் தன்னுடைய அருமைக் கைகளாலே தன் காலைப் பிடித்து அம்மி மிதித்தான் என்கிருள்.

ஆழ்வார் மகள் அல்லவா? மாப்பிள்ளை எவ்வளவு பெரியவனுயிருந்தாலும் — ஓங்கி உலகளந்த உத்தமனுகவே இருந்தாலும் — அடங்கி ஒடுங்கி வணங்கியிருந்து பாணிக்கிரகணம் செய்துகொண்டானும்.

இந்த நிகழ்ச்சியைக் குறித்து அறிவு என்ன சொன்ன போதிலும், அந்தக் கல்யாணம் சர்வலோக சாட்சியாக நடந்துவிட்டதென்றே பக்தி நம்புகிறது. இரண்டுக்கும் மத்தியஸ்தமாக 'அந்தக் கல்யாணமா? ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஏற்பட்ட ஐக்கியம் தானே அது?' என்று முடிவுகட்டுகிறது வேதாந்தம். எப்படிப் பார்த்தாலும் இந்தக் கல்யாணம் ஆண்டாளுடைய பாவனு சக்தியின் எல்லையைக் காட்டுகிறது.

பாவனு சக்தி சௌந்தரிய உணர்ச்சியோடு ஐக்கியமாகி ஒரு சப்த சித்திரமாகப் பரிணமிக்கும் போது, அங்கே உண்மையான, உத்தமமான கவிதையைப் பார்க்கிறோம். காதலன் ஊதிவந்த வெற்றிச் சங்கைப் பார்த்து, 'அந்த வாய்ச் சுவையும் வாசமும் எப்படி இருக்கின்றன? ஆசையாகக் கேட்கிறேன், சொல்லு சங்கே!' என்ற பீடிகையோடு,

*கருப்பூரம் நாறுமோ?*
*கமலப்பூ நாறுமோ?*
*திருப்பவளச் செவ்வாய்தான்*
*தித்தித் திருக்குமோ?*

[கமலம் - தாமரை.]

என்று ரஸமான கேள்வி போடுவதாக அமைந்திருக்கும் கவிதை உயர்ந்த ரகத்தைச் சேர்ந்ததல்லவா?

*எழிலுடைய அம்மனைமீர்!*
*என் அரங்கத்(து) இன்னமுதர்*

*குழல்அழகர், வாயழகர்,*
*கண்ணழகர், கொப்பூழில்*

*எழுகமலப் பூஅழகர்,*
*எம்மானுர், என்னுடைய*

*கழல்வளையைத் தாமும்*
*கழல்வளையே ஆக்கினரே!*

[எழில் - அழகு. அம்மனைமீர் - தாய்மார்களே. கொப்பூழ் - நாபி.]

என்ற பாசுரம் பாடப் பாட, கேட்கக் கேட்க எவ்வளவு இனிமையாக இருக்கிறது!

இப்படிப்பட்ட கவிதையைக் 'கோதை தமிழ்' என்று சொல்லுகிருர்கள். இதன் ஒரு பகுதியான திருப்பாவையின் அருமை பெருமைகளைக் குறித்து வைஷ்ணவர்கள்,

*............................கோதை தமிழ்*
*ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை*
*வையம் சுமப்பதும் வம்பு*

[ஐயைந்தும் ஐந்தும் - முப்பது. வையம் - பூமி.] என்று சொல்வதுண்டு.

உண்மையில், 'கோதை தமிழ்' வைஷ்ணவர்களுக்கு மட்டும் சொந்தமன்று. நமது தாய்மொழியை வளமும் வனப்புமுறச் செய்து வளர்த்து வந்த

கவிதையில், கோதை தமிழுக்கும் ஒரு ஸ்தானமுண்டு என்று உறுதியாகச் சொல்லாம்.

இந்தக கவிதைக் கண்ணுடியில் நமக்குத் தரிசன மளிக்கும் ஆண்டாள் பகவானுடைய வாழ்க்கைத் துணேவியாகத் துணிந்தாள் என்று கதை சொல்லு கிறது. அவன் இவளுக்கு அணிந்த மணமாலே துன்பமயமானது; சோகமயமானது; எனினும் ஆனந்த மயமானது! எவ்வளவுக்கெவ்வளவு லட்சியம் உயர்ந்துவிடுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு கஷ்ட மும் அதிகம்தான். எனினும் அந்த லட்சியமே துன்பத்தையும் இன்பமாக்கி விடுகிறதல்லவா?

வளர்பிறை போல் வளர்ந்து வந்த வைஷ்ண வத்திற்கு ஆண்டாள் ஒரு விசேஷ ஒளியும் நிறமும் அழகும் தருகிருள்; தந்து இந்து சமயத்தின் மறு பிறப்பிற்கே ஒரு காரணமாக விளங்குகிருள்.



# 39. குருவும் சீடரும்

சிறு வயதிலேயே வடமொழியிலும் தமிழ் மொழியிலுமுள்ள சிறந்த நூல்களை யெல்லாம் ஆராய்ந்து அறிந்தவர்தாம்: எனினும் அந்த அறிவினுல் சாந்தி கிடைக்கவில்லை! தென் இந்தியாவிலும் வட இந்தியாவிலுமுள்ள பல தலங்களுக்கும் போய்த் தரிசனம் செய்து அங்கங்கே யுள்ள அறிஞர்களோடும் பக்தர்களோடும் பழகினுர்; எனினும் உள்ளத்திற்கு ஒளி கிடைக்கவில்லை.

வடமதுரை, துவாரகை முதலான இடங்களில் ஸ்ரீ கீதாசாரியனுடைய பால சரித்திர நிகழ்ச்சிகளை நினைத்து நினைத்து நெஞ்சுருகினுர். ஸ்ரீ ராமபிரானுடைய அவதாரஸ்தலமாகிய அயோத்திக்குப் போய் ராம பக்தியில் ஈடுபட்டார். அங்கே அந்த வீரமூர்த்தியைத் தியானித்துக் கொண்டு மகா விரக்தராய் யோகப்பியாசம் செய்யத் தொடங்கினுர்.

எனினும், இதயம் ஆறுதல் பெறவில்லை. அது உயர்தர ஞானவாழ்க்கைக்கு நேர் வழி காட்டக்கூடிய ஒரு சற்குருவைத் தேடித் தவித்தது.

ஒரு நாள் யோகம் செய்துவிட்டு, 'எவ்வளவு காலமாக அலைந்துகொண்டிருக்கிறேன், லட்சியத்தை நாடி! நான் பிறந்த திருக்கோளூரிலிருந்து எவ்வளவு தூரம் தீர்த்த யாத்திரை செய்து கொண்டே வந்துவிட்டேன்! இனி எங்கே போவது? ஒன்றும் தெரியவில்லையே!'

என்று தம் ஊர் இருக்கும் திசையை நோக்கினார். என்ன ஆச்சரியம்! அந்தத் திசையில் சூரியோதய மாகிவிட்டது போலத் தோன்றியது.

ஒரு சூரியனா? பதினாயிரம் சூரியர்கள் ஏககாலத் தில் உதயம் செய்ததுபோல் இருந்தது! முதல் முதல் 'கிராமங்களும் நகரங்களும் வெந்துகொண்டிருக் கின்றனவோ? அல்லது காட்டுத்தீயோ?' என்று திகைத்தார். பார்க்கப் பார்க்க, அந்தப் பேரொளி வானுற வளர்ந்து மேலும் மேலும் தெளிந்து அமுத ஒளியாகத் திகழ்ந்தது.

மதுரகவி அது தோன்றிய இடத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று துணிந்தார். அதையே குறியாகக் கொண்டு பிரயாணப்பட்டார். அதைத் தொடர்ந்து போகப் போக எத்தனையோ நதிகளையும் ஊர்களையும் காடுகளையும் கடக்க வேண்டியதாயிற்று. பகலில் தூங்கி இரவெல்லாம் ஜோதியே வழிகாட்டப் போனார்.

அந்த ஒளியின் மூலத்தை எத்தனையோ பரிசுத்த ஸ்தலங்களில் கண்டு கொள்ள முயன்றார். அது தெற்கே, தெற்கே, தெற்கே இவரை இழுத்துச் சென்றது. ஸ்ரீரங்கம் வந்ததும் 'இந்த இரகசியத்தை ஒரு வேளை இங்கே கண்டு பிடிக்கலாம்! ஸ்ரீரங்க ராஜா வின் மகிமை கொஞ்சமோ?' என்று எண்ணினார். ஜோதியோ காவேரி தீரத்திற்கும் தெற்கே தெரிந்தது.

மறுபடியும் பிரயாணமாகித் தாமிரபருணி தீரத் துக்கு வந்தார். தமது ஊருக்கு அருகேயுள்ள குருகூர் என்ற திருநகரியைத் தாண்டியதும் ஜோதி வடக்கே தெரிந்தது. 'அப்படியா? தெரிந்துகொண்டேன்!'

என்று அதிவிரைவாகக் குருகூரின் மாட மாளிகைகளைத் தாண்டிக் கோவிலுக்கு அருகே சென்று, 'ஏதாவது விசேஷ முண்டோ?' என்று விசாரித்தார்.

ஜனங்கள் ஆச்சரியத்தோடு ஒரு புளிய மரத்தைக் காட்டியதும், அங்கே ஓர் இளைஞரைக் கண்டார். அவர் பத்மாஸனத்தில் அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந் தார். கண்கள் மூடியிருந்தன; உடம்பு ஒளி மயமாயிருந் தது. வயது பதினாறு இருக்கலாம். பதினாறு கலைக களோடு கூடிய ஞான சந்திரனைப்போலச் சாந்தமாகப் பிரகாசித்தது முகமண்டலம்.

பார்க்கப் பார்க்க, அந்த ஞான ஒளி வளர்ந்து வளர்ந்து நாலு திசைகளிலும் நெடுந்தூரம் சென்று எல்லையற்ற வெளியிலே கலப்பதுபோலத் தோன்றி யது. அது கண்ணுக்கு எட்டிய தூரம் பரவி, அதற்கும் அப்பால் இவர் மனக் கண்ணுக்கு எட்டிய பிரதேசங் களிலும் சூட்சுமமாக வியாபித்துக் கொண்டிருந்தது.

'இந்த ஜோதி இயற்கைக்கு அதீதமானது: அத்தனை நெடுந்தூரம் தெரிந்ததில் ஆச்சரியமில்லை' என்று எண்ணிக்கொண்டிருந்த மதுரகவிக்குத் திடீ ரென்று 'இது மனித ரூபந்தானா?' என்ற ஐயங் கூட உண்டாயிற்று. 'இதற்கு நம்மைப்போல் உணர்ச்சியுண்டா? கண் உண்டா? வாயுண்டா?' என்ற சிந்தனையில் ஆழ்ந்திருந்தவர், 'அப்படிச் செய்யலாமா?' என்று கூட எண்ணாமல் பளிச்சென்று ஒரு சோதனை செய்து பார்த்தார்.

ஒரு கல்லை எடுத்து அந்த இளைஞர் முன் கீழே விழுமாறு போட்டதும், 'ஏன் இப்படிச் செய்தோம்?

எவ்வளவு பக்திக் குறைவான காரியம்!' என்று தோன்றியது மதுரகவிக்கு. ஆனால், சோதனை வெற்றி பெற்றுவிட்டது.

கல் விழும் ஓசை கேட்டதும், இளைஞர் கண்களை மலர விழித்தார் அந்தப் பார்வையே மதுரகவியை ஒரு புதிய வழியில் செலுத்துவது போலிருந்தது. எவ்வளவோ தூரத்தில் திரிந்துகொண்டிருந்த உத்தம சீடரை இழுத்துக் கொண்டவருக்கு உபதேச காலம் நெருங்கி விட்டதென்று தெரிந்திருக்குமல்லவா?

மதுரகவிமுன்னிலும்தைரியமடைந்து, 'இவருக்குப் பேசத் தெரியுமோ? அதையும் சோதிப்போம்' என்று 'செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' என்று ஒரு புதிர் போட்டார். உடனே பதில் கிடைத்தது, 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்!' என்று.

கேள்வி எவ்வளவு மறைபொருளோ அவ்வளவு மறைபொருளா யிருக்கிறதல்லவா விடையும்? 'செத்தது' என்பது சடப்பொருளான சரீரத்தையும், 'சிறியது' ஆத்மாவையும் குறிக்கும். 'சடமாகிய சரீரத்திலே ஜீவாத்மா சம்பந்தப்படும்போது, அது எதை அநுபவித்து எங்கே யிருக்கும்?' என்பதுதான் மதுர கவியின் கேள்வி. தெய்விக இளைஞரோ, 'சரீரத்தைச் சார்ந்த சுகதுக்கங்களை அநுபவித்துக்கொண்டு அந்தச் சரீரத்தையே சார்ந்திருக்கும்' என்ற வேதாந்தக் கருத்தை ஒரு சூத்திரமாக வெளியிட்டார்.

அந்தக் குரலும் அந்த அருளுமே சீடரின் பல வேறு ஐயங்களையும் தீர்த்து விட்டன! வயது

முதிர்ந்த யோகி இளைஞர் அடிகளில் விழுந்து இவரையே தமக்கு ஆசாரியராகக் கொண்டார்.

மதுரகவியைச் சீடராக அங்கீகரித்துக்கொண்ட இளைஞர் சிற்றரசரா யிருந்த வேளாளர் வகுப்பிலே பிறந்தவர். பிறந்த பொழுதே தொடங்கி அழவுமில்லை, பால் உண்ணவுமில்லையாம். எனினும், உடம்பு வாடவு மில்லை! அந்த அதிசயத்தைக் கண்ட தாய் தந்தையர் குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாளில், அதை அவ் வூர்க் கோவிலுக்கு எடுத்துக் கொண்டு போய்ச் சன்னி திக்கு அருகிலிருந்த புளிய மரத்தில் தொட்டில் கட்டிக் குழந்தையை வளர்த்தித் தாலாட்டினார்கள்.

பிறகு தொட்டிலிலிருந்து குழந்தையை எடுத்துக் கவலையோடு பெருமாள் முன் தண்டனிடும்படி வைத்த தும், அதுவரையில் கைகால் அசையாமல், இருத்தி னால் இருத்தியபடி, கிடத்தினால் கிடத்தியபடி யிருந்த குழந்தை, தவழ்ந்துபோய்ப் புளிய மரத்தின் அடியில் யோகாசனமிட்டு வீற்றிருந்ததாம். தவழ்ந்துபோன குழந்தையைக் கண்குளிரக் கண்ட தாய் தந்தையர், ‘எல் லாம் பகவானுடைய அருள்’ என்று மகிழ்ந்தார்கள். ஆனால், குழந்தை யிருந்த நிலையைக் கண்டதும் ஆச்சரியமடைந்தார்கள்,

கடைசியாகத் தாய் குழந்தையை எடுத்துக் கொள்ள முயன்றாள். ஆச்சரியத்திலும் ஆச்சரியம்! அது அசைவதாகவே தெரியவில்லை. தந்தையும் எடுத்துப் பார்த்தார்; ‘மலை யசைந்தாலும் மைந்தன் அசையான்!’ என்று வருந்தினார். அங்கே யிருந்தவர் வர்களெல்லாம்—வந்தவர்களெல்லாம் — குழந்தையை

எடுக்க முடியாமல், 'இப்படியும் உண்டோ ஒரு அதிசயம்?' என்று பிரமித்துப் போனுர்கள்.

மந்திரவாதிகளும் வைத்தியர்களும் வந்து பார்த்து ஒன்றும் தோன்ருமல் திரும்பினுர்கள். லோக வியாபாரம் ஒன்றுமில்லாமலிருந்தும் குழந்தையின் வளர்ச்சிக்கு மட்டும் யாதொரு குறைவுமில்லை!

இப்படிப் பதினறு பிராயம் வரை கண்விழியாமல் மௌனத்தோடிருந்த குழந்தையைக் குறித்துப் பெருங் கவலை யடைந்த பெற்ருேர் 'பகவான் விஷயத்தில் நாம் என்ன அபசாரம் செய்தோமோ?' என்று கலங்கி யிருந்தார்கள்.

'மதுரகவியைப் போன்ற ஒரு சீடரைக் காண வில்லையே என்றுதான் யாரோடும் பேசாமலிருக்கிருர்!' என்பதை அவர்கள் எப்படி அறிவார்கள்?

மதுரகவி கேள்வி கேட்டதையும், அதற்குத் தங்கள் புதல்வர் பதில் சொன்னதையும் கேள்விப்பட்ட பெற்ருேராகிய காரியாரும் உடையநங்கையும் 'புதல்வரைப் பேசுவித்த புண்ணியரே!' என்று மதுரகவியை வணங்கிப் பொன்னும் மணியும் வெகுமதியாக அளிக்க வந்தார்கள். ஆனுல் அவர் அந்தப் பொருளை மதிக்க வில்லை. அவர்கள் 'தபோதனரே! தங்களைப் போன்ற துறவிகளுக்குப் பொருள் பெரிதல்ல என்ருலும், எங்கள் பாலகனை எங்களோடு நன்ருகப் பேசவைத்து இந்த லோகத்தைப் பார்க்குமாறு கண்திறந்து வைக்க வேண்டும்; எங்களுக்கு வாழ்வை அருளவேண்டும்!; என்று பிரார்த்தித்தார்கள்.

அதற்கு மதுரகவி, 'உங்களுக்கு வாழ்வை அருள வேண்டு மென்றும், உலகத்திற்கே வாழ்வை அருள

வேண்டுமென்றும் பகவானே அவதாரம் செய்திருக்கிறுன்! இப்படிப்பட்ட தெய்வப் புதல்வருக்கும் சாமானியர்களைப்போல் உலக வாழ்க்கை யுண்டோ?' என்று பதில் சொன்ஞர். அவர்களும் கடைசியாக ஒருவாறு தேறி, 'ஐயா! இந்தப் பதினாறு வருஷங்களாக ஈ எறும்பு கடியாமல் இந்தக் கண்மணியைக் காத்திருந்தோம். இவன் உமக்கே அடைக்கலம்!' என்று சொல்லிப் போனார்கள்.

மதுரகவியோ ஆடிப்பாடி இளைஞரைப் பார்த்து, 'அடியேன் உமக்கே அடைக்கலம்!' என்று சரணகதி பண்ணினார். தம்முடைய பாக்கியந்தான் அந்த உருவாக வந்திருக்கிறதென்று அங்கம் புளகித்து ஆனந்த மடைந்தார். 'அண்டங்களை யெல்லாம் உண்டருளிய செவ்வாய் திறந்து வேதாந்த ரகசியங்களை யெல்லாம் அடியேனுக்கு உபதேசித் தருள வேண்டும்' என்று கைகட்டி வாய்புதைத்துப் பிரார்த்தனை செய்து கொண்டார். காரியாரும் உடையநங்கையும்—அடிக்கடி பாலகரைப் பார்க்க வந்தவர்கள்—மதுரகவியைப் பணிந்து, 'நீர் செய்த பாக்கியம் இந்த உலகத்தில் வேறு யாரே செய்திருக்கிறார்?' என்று மனமார வாயாரப் புகழ்ந்தார்கள்.

இந்த இளைஞர் உலக நடைக்கு மாறாக இருந்ததால் மாறன் என்று பெயர் பெற்றதாகவும், பகவானால் 'நம் ஆழ்வார்' என்று விசேஷமாக அபிமானிக்கப்பெற்றதால் நம்மாழ்வார் என்று பெயர் பெற்றதாகவும் ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்லுகிறார்கள். இவர் வேதஸாரமான நாலுபிரபந்தங்களில் தம்முடைய கொள்கைகளை வெளியிட்டுமதுரகவிக்கு உபதேசித்தார்: மதுரகவியும் அந்தப்

பிரபந்தங்களை இசையோடும் தாளத்தோடும் பாராயணம் செய்துகொண்டே ஆழ்வார் கொள்கைகளை நாடெங்கும் பரப்பி வந்தார்.

இப்படி நடந்து வருகையில் ஒருநாள் நம்மாழ்வார் 'வந்த காரியம் ஆகிவிட்டது!' என்றார். 'அப்படியானால் அடியேனையும் அழைத்துக்கொண்டு போக வேண்டும்!' என்று பிராத்தித்தார் மதுரகவி. அப்போது நம்மாழ்வார்,

*மெய்யன் பணைநோக்கி, மேதினியில் உள்ளோர்க்குச்*
*செய்ய மறைத்தமிழைச் செப்புவதார் நீயல்லால்?*

என்று சொல்லி, லோகோபகாரமான கடமை இன்னும் அவரை எதிர்நோக்கி யிருக்கிறதென்று தேற்றினார்.

நம்மாழ்வார் காலஞ் சென்றதும், மதுரகவி இவர் விக்கிரகத்தை அந்தத் திருநகரியில் பிரதிஷ்டை செய்து விழாக்களும் நடத்திவந்தார். அந்த விழாக்களில் 'வேதம் தமிழ் செய்த விமலர் வந்தார்! திருமாலுக்கு உரிய தெய்வப் புலவர் வந்தார்! அளவிலா ஞானத்து ஆரியர் வந்தார்! ஸ்ரீவைஷ்ணவ பரமாசாரியர் வந்தார்! திருக்குருகூர் நம்பி வந்தார்!' என்று பல விருதுகளைக் கூறிச் சின்னம் முழக்கினார்கள்.

இந்த ஆழ்வார் பிறந்த திருநகரை ஆழ்வார் திருநகரி யென்று இன்றும் அழைக்கிறார்கள். இவரைக் குருவாக அடைந்த பாக்கியசாலியான மதுரகவியும் மதுரகவி யாழ்வார் என்று போற்றப் பெறுகின்றார்.

———

# 40. ஆழ்வார் கண்ட தமிழ்நாடு

திருநெல்வேலியிருந்து திருச்செந்தூருக்குப் போகும் வழியில், தாமிரபருணி யாற்றின் தென்கரையிலே பாறைகளும் பருக்கைக் கற்களும் உடைமரங்களும் நிறைந்த மேட்டுநிலம் ஒன்றிருக்கிறது. அதைத் தோண்டிப் பார்த்தார்கள் பழம்பொருள் ஆராய்ச்சிக்காரர்கள். பழைய காலத்து வேலைப்பாடு அமைந்த பல பொருள்கள் அகப்பட்டன. மண்ணால் செய்த பாண்டங்களோடு இரும்பால் செய்த ஆயுதங்களும், வெண்கலப் பொம்மை முதலியவைகளும், தங்கப் பட்டம் வைரக்கல் முதலான விலையுயர்ந்த பொருள்களோடு சில ஆபரண வகைளும் கிடைத்தன. இப்போது முள்ளும் கல்லும் நிறைந்திருக்கும் அந்த இடத்திலே கண்டெடுக்கப்பட்ட பொருள்கள் தமிழர்களின்பண்டைப் பழங்கால நாகரிகச் சிறப்பிற்குச் சாட்சி சொல்லுகின்றன. இவ்விடத்தை ஆதித்தநல்லூர்ப் பறம்பு என்று சொல்லுகிறார்கள். இங்கேயிருந்து சுமார் ஐந்து மைல் தூரத்திலுள்ள குருகூர் என்ற ஆழ்வார் திருநகரியும் பழைய நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணைகளில் ஒன்றாக இருந்திருக்க வேண்டும்.

ஆதித்தநல்லூர் சுமார் 2,000 ஆண்டுகளுக்கு முன் இருந்த ஒரு நாகரிகத்தை நினைப்பூட்டுகிறதென்றால், ஆழ்வார்திருநகரி கி. பி. 7-8-ம் நூற்றாண்டிலே உச்சநிலை யடைந்துவந்த கோவில் - நாகரித்தை ஞாபகப்படுத்துகிற தென்று சொல்லலாம்.

ஒரு காலத்தில் பல சமயவாதிகளும் ஆழ்வார் திருநகரியை அபிமானித்தார்களென்று தெரிகிறது. சைவர்களில் சிலர் இவ்வூரை நவலிங்கபுரமென்று குறிப்பிடுவதுண்டு. இங்கே ஒன்பது லிங்கங்கள் கோயில் கொண்டிருந்ததாக அவர்கள் சொல்லுகிறார்கள்.

*இலிங்கத் திட்ட புராணத் தீரும்*
*சமணரும் சாக்கியரும்,*
*வலிந்து வாதுசெய் வீர்களும், மற்றும்*
*தெய்வமும் ஆகினின்றான்*

என்று திருநகரியில் கோயில் கொண்டிருக்கும் பெருமாளைக் குறிப்பிடுகிறார் நம்மாழ்வார். இதனால், சிவலிங்கங்களோடு சமண பௌத்தப் பள்ளிகளும் இங்கே ஒரு காலத்தில் இருந்தனவென்று ஊகஞ் செய்யலாம்.

பெருமாளை நம்மாழ்வார் ஆதிப்பிரான் என்று குறிப்பிடுவதும் கவனிக்கத் தகுந்தது. 'ஆதிப்பிரான் இன்றும் 'ஆதிநாதர்' என்று அழைக்கப்படுகிறார். சமண தர்மத்தை ஆதியில் உபதேசித்த தீர்த்தங்கரர் அல்லது ஞானபூர்ணரைச் சமணர்கள் ஆதிநாதர் அல்லது ரிஷபநாதர் என்று சொல்லுகிறார்கள். ஆழ்வார் திருநகரிக்கு அருகேயுள்ள—மதுரகவி யாழ்வாரின் ஊரான—திருக்கோளூருக்குப் பக்கத்தில் 'சமணன் திடர்' ஒன்று இருந்ததாகவும் அறிகிறோம்.

ஆழ்வார் திருநகரியில் விளைந்த சமரஸத்திற்கு ஆழ்வார் பாடல்கள் பொதுவாகச் சான்று தருகின்றன என்று சொல்லலாம்.

இப்படிப்பட்ட திருநகரியைத் தலைநகராகக் கொண்டிருந்த வழுதி வளநாட்டில், இந்தத் திருநகரி உள்ளிட்ட

ஒன்பது திருப்பதிகளைப் பாடி யிருக்கிறார் நம்மாழ்வார். இவற்றை நவதிருப்பதிகள் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் கொண்டாடுகிறார்கள். இவை தாமிரபருணி யாற்றின் இருகரையிலும் சுமார் எட்டு மைல் தூரத்திற்குள் காணப் படுகின்றன. இவற்றுள் பல, ஆழ்வாரின் முன்னோர் ஏற்படுத்தியவை; சில மிகப் பழமை யானவை.

குரு தோன்றிய குருகூரும், சீடர் தோன்றிய திருக் கோளூரும் மிகமிகப் பழமையானவை யென்று ஊகிக் கலாம். திருக்கோளூரும் அந்நாளில் ஒரு முக்கியமான ஊராக இருந்திருக்க வேண்டும். இவ்வூரைத் 'தென் திசைத் திலதம்' என்பர் நம்மாழ்வார்.

நவதிருப்பதிகளைத் தவிர இவர் திருநெல்வேலி ஜில்லாவில் பாடியிருக்கும் திருப்பதிகள் இப்போது தோதாத்திரி என்று பிரசித்தமாயிருக்கும் நாங்குநேரி என்ற வானமாமலையும் திருக்குறுங்குடியுந்தான். இந்த இரண்டு தலங்களில், பழைய காலத்தில் வானமாமலை தோன்றுவதற்கு முன்பே பிரசித்தமா யிருந்தது திருக்குறுங்குடி. நம்மாழ்வாருடைய தாயார் பிறந்த ஊர் மலையாளத்திற்கு அருகிலுள்ளது. எனவே, அதுவரை போய் வழியிலுள்ள இந்த இரண்டு க்ஷேத்திரங்களையும் பாடி யிருக்கவேண்டும்.

நம்மாழ்வாருக்குமுன், பெரியாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும், அவர்களுக்கு முன் திருமழிசையாழ்வாரும் திருக்குறுங்குடியைப் பாடி யிருக்கிறார்கள். திருமழிசை யாழ்வார் தமது வாழ்க்கையின் பிற்பகுதியை முக்கிய மாகக் கும்பகோணத்தில் கழித்தபோதிலும், தெற்கே

திருக்குறுங்குடிவரை வந்து பிரசாரம் செய்து கொண்டிருந்ததாகக் குருபரம்பரைக் கதைகள் தெரிவிக்கின்றன. திருமங்கை யாழ்வாரோ வாழ்க்கையின் கடைசிப் பகுதியைத் திருக்குறுங்குடியிலேயே கழித்தார். இந்தக் காரணங்களால் வைஷ்ணவம் தென்பாண்டி நாட்டில் உரம் பெற்றிருக்க வேண்டும்.

இப்படி நம்மாழ்வாருக்கு முன் வைஷ்ணவத்திற்கு ஜீவசக்தி அளித்த திருக்குறுங்குடி நம்மாழ்வார் தாய் தந்தையரை விசேஷமாக வசீகரித்ததென்றும், இங்கே கோயில் கொண்டிருக்கும் பகவானே நம்மாழ்வாராகப் பிறந்தானென்றும் கதை சொல்லுகிறது.

இவர் தாயார் ஊரான திருவண்பரிசாரம் இப்போது திருப்பதிசாரம் என்ற கிராமமா யிருக்கிறது. இது தெற்குக் கோடியிலுள்ள நாகர்கோவிலுக்குப் பக்கத்திலிருக்கிறது. இங்கே போனவர் மலைநாட்டைச் சேர்ந்த திருவாட்டாறு, திருவனந்தபுரம் முதலான க்ஷேத்திரங்களையும் தரிசித்திருக்க வேண்டும்.

இந்தத் திருப்பதிகளில் நான்கைத் திருமங்கை யாழ்வார் ஏற்கெனவே பாடியிருக்கிறார். மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றில் ஒன்றுதான் மலைநாட்டு மன்னரான குலசேகரர் பாடியது. இதனால் தமது ராஜ்யத்தைத் துறந்த பின்பே அவர் விசேஷமான பக்திப்பாடல்கள் பாடியிருக்க வேண்டுமென்று தெரிகிறது. திருமங்கையாழ்வார் பாடிய திருப்பதிகளைத் தாமும் பாடி யிருப்பதோடு நம்மாழ்வார் மொத்தம் பன்னிரண்டு மலைநாட்டுத் திருப்பதிகளைப் பாடி யிருக்கிறார்.

இந்தப் பாடல்களையும் வருணனைகளையும் நோக்கும்போது, இவர் கமுகும் தென்னையும் வாழையும் நிறைந்த மலையாளப் பிரதேசத்தில் வசதியாக யாத்திரை செய்திருக்கிறாரென்று ஊகிக்கலாம்.

இவர் குடும்பத்தோடு தொடர்பு பெற்றிருந்த பாண்டிய மன்னர்கள் விஷ்ணு பக்தர்களா யிருந்தார்கள். எனவே, அவர்களுடைய ராஜ சபைகளை நம்மாழ்வார் மதுரையில் பார்த்து மகிழ்ந்திருக்கலாம் இந்தக் குறிப்பு,

*'திருவுடை மன்னரைக் காணில்,*
*திருமாலைக் கண்டேனே!' என்னும்*

என்ற நம்மாழ்வார் வாக்கின் புதைபொருளா யிருக்கக் கூடும்.

மதுரையிலுள்ள கூடலழகரைத் திருமங்கையாழ்வார் பாடியிருந்தும், எந்தக் காரணத்தினாலோ நம்மாழ்வார் பாடவில்லை. ஆனால், இவர் திருமங்கையாரைப் போல் மதுரைக்குப் பக்கத்திலுள்ள இரண்டு தலங்களைப் பாடி யிருக்கிறார்.

இவற்றுள் ஒன்று ஸ்ரீரங்கத்திற்கும் திருப்பதிக்கும் அடுத்தபடியாகப் புகழ்பெற்று விளங்கும் திருமாலிருஞ்சோலை என்ற சோலைமலை

*தேசமெல் லாம்வணங் கும்திரு*
*மாலிருஞ் சோலை*

என்று திருமங்கையாழ்வார் பாடிய சோலைமலையைப் பெரியாழ்வாரும் ஆண்டாளும் பாடி யிருக்கிறார்கள். இது முதலாழ்வார் காலத்திலும் பிரசித்தமா யிருந்தது.

எனவே, பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் பாடி யிருக்கிறார்கள்.

இந்த மலையை நம்மாழ்வார் யானைகளும் மான்களும் மயில்களும் சுனைகளும் சோலைகளுமுள்ள மலையென்று வருணித்திருக்கிறார். இந்தச் சோலைகளை நேரில் பார்த்திருக்க வேண்டுமென்று வருணனைகளின் போக்கிலிருந்து ஊகிக்கலாம்.

*வருமழை தவழும் மாலிருஞ் சோலை*

என்று வருணிக்கப்படும் மலை, 'புயல்மழை வண்ண'ரான பெருமாளுக்கு ஏற்ற உறைவிடம் என்கிறார்.

*வளர் இளம் பொழில்சூழ் மாலிருஞ் சோலை,*

'வளரொளி மாயோ'னுக்கு வாய்த்த தலம் என்கிறார்.

'இந்த மலைக் கோவிலை இளமை கெடுவதன் முன்னமே தரிசித்துத் தளர்ச்சியை ஒழித்து விடுங்கள்' என்று பிறருக்கும் உபதேசிக்கிறார்.

திருமாலிருஞ்சோலையைத் தரிசித்தபின் இவர் சோழதேசம் போய் ஸ்ரீவைஷ்ணவர்களின் பூலோக வைகுண்டமான ஸ்ரீரங்கத்தைத் தரிசித்திருக்க வேண்டும். மதுரகவியாழ்வார் ஒருவரைத் தவிர மற்ற ஆழ்வார்களெல்லாம் ஸ்ரீரங்கத்தைப் பாடி யிருக்கிறார்கள். அவரோ பகவானையே பாடவில்லை; நம்மாழ்வாரைத்தான் பாடினார்!

ஸ்ரீரங்கத்திலிருந்து போய்க் கும்பகோணம் முதலான திருப்பதிகளை நம்மாழ்வார் தரிசித்தாரென்று கருதலாம். நம்மாழ்வாருக்கு முன், கும்பகோணத்தை

யும் பெரியாழ்வார் முதலானவர்கள் பாடி யிருக்கிருர்கள். இந்த ஸ்தலமும் முதலாழ்வார்கள் காலத்திலேயே பிரசித்தமா யிருந்தது. 'ஆரா அமுதே!' என்று தொடங்கி நம்மாழ்வார் இங்கே பாடிய பதிகந்தான் ஆசாரியத் தலைவரான நாதமுனிகளை முதல் முதல் வசீகரித்துத் திவ்யப் பிரபந்தங்களைத் தேடித் தொகுக்கச் செய்தது.

கும்பகோணம் வழியாக இவர் தமிழ்நாட்டின் வட எல்லையான திருவேங்கடம்வரை யாத்திரை செய்தா ரென்று ஊகிக்கலாம். ஸ்ரீரங்கத்திற்கு அடுத்தபடி யாகப் பெரும் புகழ் பெற்றிருப்பது இத்திருப்பதிதான். இந்த ஸ்தலத்தை மதுரகவி, தொண்டரடிப் பொடிகள் தவிர மற்ற ஆழ்வார்களெல்லாம் பாடி யிருக்கிருர்கள். நம்மாழ்வாரோ 'திலதம் உலகுக்காய் நின்ற திருவேங்க டம்' என்று போற்றுகிருர்.

திருமங்கை யாழ்வாருக்கு அடுத்தபடியாக அதிக மான திருப்பதிகளைப் பாடி யிருப்பவர் நம்மாழ்வார் தாம். இவர்கள் இருவரும் சிற்றரசர்களா யிருந்ததால், பிரயாணம் மிகவும் கஷ்டமாயிருந்த அந்தக் காலத்திலே யாத்திரை செய்ய வசதி பெற்றிருந்தார்களென்று கருதலாம். ஆனல், நம்மாழ்வாருக்குப் பல தலங் களிலுமுள்ள மூர்த்திகளும் இருக்குமிடந்தேடி வந்து தரிசனம் கொடுத்தார்களென்றும், இவர் புளிய மரத்தடியி லிருந்துகொண்டே பலவேறு தலங்களை யும் பாடினரென்றும், மற்ற ஆழ்வார்களோ பல தலங்களுக்குப் போனர்களென்றும் குருபரம்பரைக் கதைகள் சொல்லுகின்றன.

நம்மாழ்வார் தாம் போய்ப் பார்த்த ஊர்களை அங்கங்கே போனபோது பாடவில்லை யென்பது உண்மை. இவர் பிரபந்தங்கள் அந்தாதி ரூபமாயிருப் பதால், இவை ஒரே இடத்தில் ஒரே காலத்தில் இயற் றப்பட்டிருக்கலாம். அப்படிப் பாடும்போது அந்தப் பாடல்களின் போக்கிற்கு இசைந்தவாறு தலங்களை மறுபடியும் மனக்கண்ணால் கண்டு ஒரு முறையில்லாமல் குறிப்பிட்டிருக்கவேண்டும். இவர் பாடியிருக்கும் தலங்களைத் தொகுத்துப் பார்த்தால், இவர் தம் முடைய நாட்டிலும் தாயார் பிறந்த நாட்டிலுமுள்ள தலங்களைப் பாடினாரென்பதும், மதுரை, திருமாலிருஞ் சோலை, ஸ்ரீரங்கம், கும்பகோணம் வழியாகத் திருப்ப திக்குப் போனாரென்பதும், வழியிலுள்ள சில தலங் களையும் பாடினாரென்பதும் ஒருவாறு விளங்கும்.

'உலகெங்கும் பகவத் ஸந்நிதிதான்' என்றும், தம்முடைய நெஞ்சமே மேலான திருப்பதி யென்றும் முடிவு செய்துகொண்டவர் திருப்பதிகளையெல்லாம், மூர்த்திகளை யெல்லாம், ஒரே இடத்தில் கண்டவர்தாம் என்று கதை தோன்றியதில் ஆச்சரியமில்லை.

உண்மையில், ஆழ்வார் பாடிய திருப்பதிகளில் இவர் கண்ட தமிழ்நாடே பிரதிபலிக்கிறதென்று சொல்லவேண்டும். ஸ்தூலமாகப் பார்த்தால், பழந் தமிழ் நாட்டின் இயற்கைச் செல்வமும் செழிப்பும் புல னாகின்றன. கூர்ந்து பார்த்தால், தொழிற் சிறப்பும் கல்விச் சிறப்பும் வழக்க ஒழுக்கங்களும் தெரியவரும்.

தோண்டித் தோண்டி ஆராய்ந்து பார்க்கப் பார்க்க, நாட்டை அழியாமல் காப்பாற்றிய ஞான பக்தி

யென்ற ஐசுவரியம் வெளிப்படும். இதன் விளைவாக ஆழ்வாருக்குக் கிடைத்த பேரின்பமயமான பகவதநுபவமும் ஒருவாறு உணரப்படும்; அக்கால நாகரிகத்தின் உயிர் நிலை இன்னதென்பதும் தெளிவாகும். ஆரிய-திராவிட நாகரிகக் கலப்பின் பயனாக எழுந்த இந்தக் கோவில்—நாகரிகத்தை வளர்த்த பெரியோர்களில் ஆழ்வாருக்கும், தலங்களில் ஆழ்வார் திருநகரிக்கும் ஒரு முக்கியமான ஸ்தானம் உண்டென்பது திண்ணம்.

———

# 41. வகுண பூஷண நாயகி

கண்ணன் எங்கே? பசு மேய்க்கப் போய் விட்டான். பகல் ஆயிரம் யுகமாகக் கழிந்து கொண்டிருக்கிறது கோபிகைக்கு. முன் வாசற் சோலையில் குயில்கள் கூவுகின்றன, வழக்கம் போல இனிமையாக; மயில்கள் ஆடுகின்றன வழக்கம் போல அழகாக. ஆனால் அந்த ஆடலும் பாடலும் இப்போது எவ்வளவு அசந்தர்ப்பமாயிருக்கின்றன! 'என்னுடைய மெலிவையும் தனிமையையும் கொஞ்சமும் நீங்கள் கவனிக்கவில்லையே!' என்று பெருமூச்சு விடுகிறாள்.

திடீரென்று குயில்களையும் மயில்களையும் மறந்து, 'அந்தக் கண்கள் ரம்பம்போல் அறுக்கின்றனவே! நியாயமில்லை; உனக்கு இது நியாயமே இல்லை. கண்ணா! பெண்ணாய்ப் பிறந்தவர்களைத் துன்பம் செய்யத்தான் நீ பிறந்திருக்கிறாயா? பசுக்கள் மேலுள்ள கருணையும் இல்லையே அடியாள்மீது' என்றெல்லாம் கண்ணீர் வடிக்கிறாள்.

மல்லிகையின் வாடையைத் தூவிக் கொண்டு வருகிறது மாலைப்போது. 'ஐயோ! ஒரு மதயானை போல் வருகிறதே!' என்று அஞ்சும் கோபிகை, 'இதன் கையில் அகப்படாமல் தப்புவது எப்படி?' என்று ஆலோசிக்கிறாள். மனம் ஒரு நிலையில் நில்லாமல் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்கிறது. உயிர் கிலேசத்திலே ஆழ்ந்து கிடக்கிறது—'அன்பனுக்குக் காட்டில் என்ன

ஆபத்து வந்து விடுமோ?' என்று அவன் இன்னும் வாராதது தாபத்தையும் அதிகப்படுத்துகிறது. மிருது வான பூக்களைப் பரப்பித் தோழிகள் படுக்கை தயாரித் திருக்கிறார்கள் அதிலே போய்ப் படுத்தால், 'தீக் கங்கு களைத்தான் பரப்பி வைத்தார்களோ?' என்று தோன்று கிறது. 'பசுக்களும் திரும்பி விட்டனவே; அந்த மனம் தான் கல்லா?' என்று ஏங்குகிறாள் ஒரு நிமிஷம்.

அடுத்த நிமிஷத்திலே புல்லாங்குழலும் வாயுமாகக் கண்ணன் பாடும் பாட்டும் ஞாபகத்திற்கு வருகிறது. வந்ததும்,

*'தூதுசெய் கண்கள்கொண்(டு) ஒன்று பேசித்*
*தூமொழி இசைகள்கொண்(டு) ஒன்று நோக்கிப்*
*பேதுறு முகஞ் செய்து நொந்து நொந்து,*
*பேதைநெஞ்(சு) அறஅறப் பாடும் பாட்டை*
*யாதும்ஒன்(று) அறிகிலம் அம்ம! அம்ம!*
*மாலையும் வந்தது; மாயன் வாரான்!*

[தூமொழி—பரிசுத்தமான சொற்கள். பேதுறு—காதற் பித்துப் பிடித்தவளைப்போல் மயங்கும். பேதை—(இங்கே) பெண். அற—அறும்படி. அறிகிலம்—நாம் அறிந்து கொள்ள முடியவில்லை.]

என்று அந்தப் பேதை நெஞ்சு வேதனைப் படுகிறது.

அவன் குழலூதும்போதே, கண்கள் ஏதேதோ தூது பேசிக் கொண்டிருந்தனவாம். உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஊறிப் பொங்கிய இசைகளும் அந்த உள்ளத்தை அப்படியே ஏதோ ஒரு பரிசுத்தமான பாஷையில் வெளியிட்டுக் கொண்டிருந்தனவாம். இசைகளோடு இசைந்து லயித்துப் போன அந்த முகம்தான் எவ்வளவு காதலை, எவ்வளவு நோவை,

எவ்வளவு மயக்கத்தை, எவ்வளவு பைத்தியத்தை வெளிப்படுத்திக் கொண்டு வந்தது! அவன் பாடிய பாட்டு இன்னும் கேட்டுக் கொண்டே யிருக்கிறதாம் இவள் உட்செவியில், உள் மனத்தில். என்ன பாடு படுத்திவிட்டது இந்த நெஞ்சை அந்தப் பாட்டு! நெஞ்சு அற்றுப் போகுமாறு செய்து விட்டனவாம் இரக்கமும் பச்சாத்தாபமும்.

அப்படியெல்லாம் கெஞ்சியும் கொஞ்சியும் பாடிப் பரிதவித்துப் போனவன் இன்னும் வரவில்லை! எனவே, 'அந்தப் பாட்டை நாம் உண்மையில் அறிந்து கொண்டோமில்லை; கொஞ்சம் கூட அறிந்து கொள்ள வில்லை!' என்று புலம்புகிருள்.

உண்மையில், இவள் கோபிகையுமில்லை; இடமும் கோகுல மன்று, செந்தமிழ் நாட்டிலுள்ள குருகூர் என்ற திருநகரிதான். ஆனல் அந்த இரவு—என்ன மாயமோ?—அந்த நாளில் கிருஷ்ண விரகத்தால் வருந்திய கோபிகையைச் சூழ்ந்து கொண்டிருந்த இரவைப் போல் நீண்டு கொண்டே போகிறது!

*ஊரெல்லாம் துஞ்சி,*
*உலகெல்லாம் நள்ளிருளாய்,*
*நீரெல்லாம் தேறி, ஓர்*
*நீளிரவாய் நீண்டதால்!*

[துஞ்சி—உறங்கி. நள்ளிருள்.—மிகுந்த இருள். தேறி—தெளிந்து.]

இரவு பகல் என்ற வித்தியாசமில்லாமல் ஒரே இராத்திரியாய் எல்லை காண முடியாதபடி இப்படி

வளர்ந்துகொண்டே யிருக்கையில் அந்த இருட்டைப் பிளந்து நிசப்தத்தைக் கடைந்துகொண்டு வருகிறது.

*காவிசேர் வண்ணன், என்*
*கண்ணனும் வாராஞல்*

[காவி—நீலமலர்.]

*செஞ்சுடர்த் தாமரைக்கண்*
*செல்வனும் வாராஞல்*

என்று அத்யந்த அன்பால் இழைந்ததோர் அருமையான குரல். 'சூரியனும் வாராமல் எங்கே போய் ஒளித்துக் கொண்டான்?' என்று தெளிந்து,

*'பெண்பிறந்தார் எய்தும்*
*பெருந்துயர் காண்கிலன்!' என்று,*
*ஒண்சுடரோன் வாரா(து)*
*ஒளித்தான்*

[எய்தும்—அடைகிற. காண்கிலன்—காணமாட்டேன். ஒண் சுடரோன்—நல்ல ஒளியோடு கூடிய சூரியன்.]

என்று காரணம் கண்டு பிடிக்கிருள்.

இவள் துன்பத்தைச் சூரியன்கூட எப்படியோ அறிந்து கொண்டு 'நான் பார்க்கமாட்டேன் பெண்களின் பெருந்துன்பத்தை!' என்று தேரோடு போய் எங்கேயோ ஒளிந்துக் கொள்ள, இவளோடு நெருங்கிய உறவு கொண்டிருக்கும் தாய்மாரும் தோழிமாரும் ஒரு கவலையுமில்லாமல் உறங்கிக் கொண்டிருக்கிருர்களாம், எப்படியோ அந்த நீண்ட இராத்திரி முழுதும் இந்த நிலையில் 'என் உயிரைக் காப்பாற்றுகிறவர் யார்? எனக்காக அநுதாபப் படுகிறவர்தாம் யார்?' என்று

கேட்கிறவள், பனியில் நடுங்கிக் கொண்டே நின்று அந்த இருண்ட வானத்திலும் தன் உள்ளத்தில் உள்ளது போன்ற ஏதோ ஒரு துக்கம் இருப்பதைக் கண்டுபிடித்து,

*நின்றுருகு கின்றேனே!*
*போல, நெடுவானம்*
*சென்றுருகி நுண்துளியாய்ச்*
*செல்கின்ற கங்குல்*

[நுண்—நுட்பமான. துளி—(இங்கே) பனித்துளி. கங்குல்—இரவு.]

என்று குறிப்பிடுகிருள்.

அந்த இரவும் வானமும் இவளைப் போலவே ஸமதுக்கிகளாய் உருகிக் கொண்டிருக்கின்றனவாம். காதலனை நினைத்துத்தான் இப்படி உருகிக் கொண்டிருக்கவேண்டுமென்று ஊகித்து, 'அந்தக் கண்ணீர்த் துளிகளே பனித்துளிகள்!' என்று முடிவு கட்டு கிருள். இல்லாவிட்டால் அவை ஏன் அவ்வளவு உஷ்ணமாயிருக்கவேண்டும்?

வேறு ஸமதுக்கிகளையும் இவள் கண்டுபிடிக்கிருள். ஆகாசத்தையும் மலையையும் கடலையும் அளைந்து வரும் பனிக்காற்றும் அந்தக் கடலும் இவளைப்போல் இராப் பகல் தூக்கமில்லாமல் இருக்கின்றவாம், நெஞ்சுருகி ஏங்கியேங்கி. 'அவனைக் காணவேணுமேயென்ற காதல் நோய்தான் காரணமோ' என்று கேட்கிருள். சந்திர னுடைய சிந்தைநோயும் சாமானியமன்று! 'இந்த மையிருட்டை நீக்கவில்லையே! அவன் வார்த்தையைக் கேட்டுத்தான் ஒளியிழந்து தேய்ந்து போனுேயோ?'

என்கிருள். மேகம் மூடி இருட்டு அதிகப் படுகிறது. மழை பெய்யத் தொடங்கியதும், 'ஐயோ, நீயும் அழு கிருயே; இந்தத் துன்பம் தீர்ந்து வாழ் வாயாக!' என்று அநுதாபத்தோடு ஆசி சொல்லுகிருள்.

இப்படிக் சொல்லி விட்டு உள்ளே வந்தவள் எரிந்து கொண்டிருக்கும் விளக்கைப் பார்த்து,

*செந்தா மரைத்தடங்கண் செங்கனிவாய் எம்பெருமான்*
*அந்தாமத் தண்துழாய் ஆசையால் வேவாயே?*

[தடங்கண்—பெரிய கண். அந்தாமம்—அழகிய மாலே. தண்துழாய்—குளிந்த துளசி. வேவாயே—வேகிருயோ.]

—அதாவது, அந்தக் கண்ணழகையும் பேச்சினிமையையும் நம்பி அந்த மாலேமீது ஆசைகொண்டு தான், தீபமே! நீயும் வெந்து கொண்டிருக்கிருயோ?—என்று கேட்கிருள்.

சமாசாரம் தோழிகளுக்கும் தெரிந்திருக்க, தாயார் வளர்ப்புத் தாயார் முதலானவர்களுக்குத் தான் தெரியாது. இவர்களுக்கென்ன? 'நோயா? பேயா?' என்று குறி கேட்கிருர்கள்; ஆட்டைப் பலி கொடுத்துக் கள்ளேயும் நிவேதித்து வெறி கொண்டு கொட்டி முழக்கி ஆடிப்பாடித் தேவதைகளின் ஆவேசம் வந்து விட்டதாக நினேத்துக் கொள்கிருர்கள். தோழிமாரோ அந்த மூட நம்பிக்கைகளேக் கண்டித்து,

*இதுகாண்மீன்; அன்னேமீர்! இக்கட்டு*
*விச்சிசொல் கொண்டு நீர்*
*எதுவானும் செய்(து)அங்கோர் கள்ளும்*
*இறைச்சியும் தூவல்மின்*

[அன்னைமீர்—தாய்மாரே. கட்டுவிச்சி—குறிகாரி. எதுவானும்—எதையாயினும். இறைச்சி—மாமிசம். தூவல்மின்-தூவாமலிருங்கள்.]

என்று புத்திசொல்லி, 'அன்பினலே கலங்கி நீங்களும் இவளோடு அறிவிழந்து போனீர்களா? ஆனல் இவளுடைய பைத்தியம் மேலான தெய்வப் பைத்தியம்! நோய் நல்ல நோய்!' என்கிருர்கள்.

அந்தத் தாய்மாரோடும் தோழிமாரோடும் காதலியும் மெள்ள மெள்ளத் தன் நோயைக் குறித்துப் பிரஸ்தாபித்து, 'பெண்களின் ஆவியை உண்ணும் அவை யமனே? கண்கள் தாமோ? தெரியவில்லை' என்றும், நோக்கும் திசைகளிலெல்லாம் அந்தவாய் தோன்றுகிறதென்றும், மின்னல் போன்ற அந்தப் புன்சிரிப்பும் ஜோதிவட்டமான அந்த முகமும் தன் உயிரை ஹிம்ஸிக்கின்றன வென்றும், விவரமாகச் சொல்லுகிருள். 'இனி வெட்கப்பட்டுத்தான் என்ன பயன்?' என்று தீர்மானிக்கிருள். சில சமயங்களில் 'அவன் உருவும் சுவடும் காட்டவில்லையே! என்ன செய்வேன்?' என்று கதறுகிருள். 'இனி உங்களோடு எனக்கென்ன சம்பந்தம்?' என்று கேட்கிருள் ஒரு சமயம். 'ஊர் நிந்தையும் உலக நிந்தையும் தான் என்ன செய்யும், அந்த வலைக்குள் தப்பமுடியாமல் அகப்பட்டுக்கொண்ட என்னை?' என்று கேட்கிருள் ஒருசமயம். 'தாமரைக் கண்களோடும் செங்கனிவாய் ஒன்றினேடும் செல்கின்றது என் நெஞ்சமே' என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்ட பின், 'இவள் நெஞ்சம் இவள் வசமன்று' என்பதைத் தோழிகளைப் போல் தாய்மாரும் தெளிவாக அறிந்து கொள்ளக் கூடு மல்லவா?

தாய் நாளடைவில் மற்ற ஸ்திரீகளிடம் பிரஸ்தாபிக்கத் தொடங்குகிறாள், தன் மகள் ஒளியிழந்து உடம்பு மெலிந்தாளென்பதையும், அவளுடைய சுபாவம்கூட மாறிவிட்டதென்பதையும்:

*மண்ணை யிருந்து துழாவி,*
*வாமனன் மண் இது என்னும்;*

*விண்ணைத் தொழு(து), அவன் மேவு*
*வைகுந்தம் என்று கை காட்டும்;*

*கண்ணை உள் நீர்மல்க நின்று*
*கடல்வண்ணன் என்னும்; அன்னே! என்*

*பெண்ணைப் பெருமயல் செய்தார்க்(கு)*
*என்செய்கேன்? பெய்வளை யீரே?*

[துழாவி — தடவி. வாமனன் — வாமனாவதாரம் செய்த விஷ்ணுவின். விண்—ஆகாசம். மேவு—பொருந்திய. மல்க—(இங்கே) கடந்து வெளிப்பட. கடல் வண்ணன்—கடல் போன்ற நிறத்தையும் அழகையும் உடையவன். அன்னே—அம்மே. பெய்வளையீரே. அணிந்து கொண்ட வளையை உடையவர்களே.]

'என் மகளுக்கு மண்ணும் காதலனை ஞாபகப் படுத்துகிறது; விண்ணும் அவனைத்தான் ஞாபகப் படுத்துகிறது. கடலோ அவனுடைய நிறத்தையும் அழகையும் ஞாபகப் படுத்துகிறது. உடனே கண்ணீர் நிறைந்து பெருகுகிறது. இப்படிப் பெரும் பைத்தியம் உண்டாக்கினவருக்கு நான் என்ன செய்வேன்?' என்று அந்த ஸ்திரீகளோடு ஆலோசனை செய்கிறாள். 'பசு மந்தைகளைக் கண்டாலும் கன்றுகளைக் கண்டாலும், அவனும் கூடவருவான்!' என்று எண்ணுகிறாளாம்.

வெண்ணெயைக் கண்டால் அவனுண்ட வெண்ணெய் என்கிருளாம். குளிர்ந்த தென்றல் காற்றும் அவன் தான்; சுடுகிறதீயும் அவன் தானும். அழகான ரூபங்களே, நிறங்களைக் கண்டுவிட்டால் 'அவன் தான்!' என்று துள்ளுகிருளாம். மேகங்களைக் கண்டு விட்டாலோ குதூகலத்திற்குக் கங்கு கரையில்லை.

*கரும்பெரு மேகங்கள் காணில்,*
*கண்ணன் என்(று) ஏறப்பறக்கும்.*

அதவாவது, அதோ கிருஷ்ணன்தான்!' என்ற நினைப் பில் கால் பூமியில் பாவுகிறதில்லையாம். ஒரே பறப்பாகப் பறந்து விடுகிருளாம் அந்த மேக மண்டலத்திற்கே!

மழை வந்துவிட்டாலோ கேட்க வேண்டியதில்லை. அவன் வந்துவிட்டானென்றே மகிழ்ந்து போகி ருளாம்.

*நின்றுபெய் யும்மழை காணில்,*
*நாரணன் வந்தானென்(று) ஆலும்.*

[நன்று - நன்ருக. ஆலும் - ஆடுவாள்.]
இப்படி மழையைக் கண்டு மயிலைப்போல் ஆடுகிறவள் மழை நின்று சூரியன் முகம் காட்டியதும் அந்த மண்ட லத்திலிருந்து அவனே முகம் காட்டுகிருன் என்கிருளாம்.

பூர்ண சந்திரனையும் அந்த நிலாவை அப்படியே அபிஷேகம் செய்து கொண்டு நிற்கும் மலையையும் பார்த்துவிட்டால்,

*'ஒன்றிய திங்களைக் காட்டி*
*ஒளிமணி வண்ணனே என்னும்;*
*நின்றகுன் றத்தினை நோக்கி*
*நெடுமாலே! வாவென்று கூவும்'*

[ஒன்றிய – (கலைகளெல்லாம்) ஒன்ருகக் கலந்த. திங்கள் – சந்திரன். மணி – (இங்கே) அழகு.

இப்படிப்பட்ட பொருள்கள் இவளைத் துன்பப் படுத்துவ்து சர்வ சாதாரணம். ஒரு சமயம் இவற்றைப் பார்க்க முடியாமலே மோகித்துப் போவாள். கொஞ்சம் தெளிந்ததும் ‘இந்த அவஸ்தையிலும் அவன் வராமல் இருப்பானே?’ என்று சற்று முற்றும் பார்ப்பாள். ஒருவேளை தூரத்தில் நிற்கிருனே என்று கண்ணை ஓட்டி நெடுந்தூரம் நெடும்போது பார்ப்பாள். அங்கும் காணவில்லையே என்று வேர்த்துக் கண்ணும் கண்ணீருமாய் உஷ்ணமாக நெடுமூச்சு விடுவாள். அந்த நிலையிலும் ஆசை பேசாமலிருக்க இடம் கொடுக்கவில்லையாம்.

*பெயர்த்தும் கண்ணு! என்று பேசும்;*
*பெருமானே வாவென்று கூவும்*
*மயர்க்பெருங் காதல்என் பேதைக்(கு)*
*என்செய்கேன்? வல்வினையேனே!*

[பெயர்த்தும் – பின்னும். மயல் – மயக்கம்; பயித்தியம். வல்வினையேன் – மிகுந்த பாவத்தையுடைய நான்.]

என்று தாய் தன்னையும் மகளையும் நொந்து பேசுகிருள். அவ்வளவு வருத்தத்திற்கிடையே ஒளிரும் தெய்விக அன்பையும் இதோ பாருங்கள்,

*மையுங்கண் ணீர்மல்க நின்று*
*நாரணன் என்னும் அன்னே! என்*
*தெய்வ உருவிற் சிறுமான்*
*செய்கின்ற(து) ஒன்றறி யேனே!*

[நையும்—நைந்து நிற்பாள். மல்க—பெருக. உருவிற் சிறுமான் — உருவத்தையுடைய சிறுமான் போன்றவள்.]

என்ற தாயின் வார்த்தையிலே, 'தெய்வ உருவிற் சிறுமான் என்று தானே ஒவ்வொரு தாயின் இதயமும் தன் அருமை மகளைப் பாராட்டுகிறது! இப்படிப்பட்ட தாய் இப்படிப்பட்ட மகளுக்காக காதலனிடம் போய்,

*செழுந்தடம் புனல்சூழ் திருவரங் கத்தாய்!*
*என்செய்கேன் என் திரு மகட்கே*

[தடம்புனல் — பெரியநீர். அதாவது நீர்பெருக்கு. மகட்கு — மகளுக்கு.]

என்று கேட்பதில்கூட ஆச்சரியமில்லை; இந்தக் காதலி வேறு யாரும் இல்லை, வகுள பூஷண நாயகிதான்!

வகுளபூஷண நாயகி என்றால் யார்?—என்று கேட்கலாம். நம்மாழ்வாரை வகுள பூஷண பாஸ்கரன் (அதாவது மகிழம்பூ மாலை அணிந்த ஞானசூரியன்) என்று சொல்வது. அவர்தாம் பாவனா சக்தியால் இப்படி ஒரு ஞான நாயகியாக மாறிப் பிறந்து ஞானானந்த வெள்ளமான பகவான் மீது அளவுகடந்த பக்திக் காதலைச் செலுத்துகிறார். காதலியாக இருப்ப தோடு, அவரே தோழியாகவும் நடிக்கிறார்; தாயாகவும் நடிக்கிறார். தத்துவ சிகரத்தை ஞானத்தால் அடைவது அரிது; இந்த விதமான ஞான பக்தியால் அடைவது எளிது!—என்பது பக்தர் கொள்கை.

---

## 42. இவர் காட்டும் தத்துவ சிகரம்

நமது பாரத பூமிக்கு ரட்சையாக வடக்கே கடத்தற் கரிய மதிலாய் அமைந்திருப்பது, உலகத்திலேயே உயர்ந்த மலை யென்பதைச் சிறுவர்களும் அறிவார்கள். சில இடங்களில் உட்சுவர், நடுச்சுவர், வெளிச்சுவ ரென்று ஒன்றன் பின் ஒன்ருய்த் தொடர்ந்திருக்கின்றன அந்த மலைத்தொடர்கள். அடிவாரத்திலே காடுகள்; மேலே மேகப்படலங்கள்; இன்னும் மேலே, உறைந்த பனி மண்டலங்கள், பனி படர்ந்த சிகரங்கள். இப்படிப் பட்ட இயற்கைக் கோட்டைக்கு ஹிமாலயம் (பனிக் என்று பேரிட்டார்கள் நம் முன்ேனார்கள். பனிச் கோயில்) சுவர்களாலான அந்தக் கோயிலுக்குக் கோபு ரங்கள் வானத்தை எட்டப் பார்க்கும் எவரெஸ்ட் போன்ற சிகரங்கள்! உலகத்திலுள்ள மலைச் சிகரங்களிலெல்லாம் உயர்ந்த எவரெஸ்டும் சில இடங்களிலிருந்து பார்த் தால்தான் தெரியும். அந்தச் சிகரத்தில் ஏறிஉயரப் போகப் போக, நாம் சுவாசிப்பதே கஷ்டமாகும்.

இமய மலையும் அதன் சிகரங்களும், அவற்றில் ஏறிச்செல்லும் பகீரதப் பிரயத்தனங்களும், நமது நாட்டிலுள்ள 'கடவுள்-ஞானம்' என்ற தத்துவ ஞானத் தையும், அந்த ஞானசிகரங்களைக் கண்டறிந்த பெரியோர்களின் ஆத்ம வீரப் பிரதாபங்களையும் ஒரு வாறு ஞாபகப்படுத்துகின்றன.

ஞான மூர்த்தியான கடவுளை நம்மாழ்வார்; 'மின்னும் சுடர்மலை' யென்றும், 'விட்டிலங்கு கருஞ்

சுடர்மலை' யென்றும், 'பவளக் குன்று' என்றும், 'நீல நன்னெடுங் குன்றம்' என்றும் வருணிக்கிறார்.

*என் மரதக மலையே!*

*எப்பொருளும் தானாய் மரதகக் குன்றம் ஒக்கும்!*

என்று சொல்வதில் விசேஷ திருப்தி.

*மாசறு சோதிஎன் செய்ய வாய்மணிக் குன்றத்தை*

என்று வாயாரச் சொல்லும்போது, அந்த ஜோதிமலை செந்தாரைக் கண் திறந்து அருள் செய்யக் கூடுமென்றும், பவளவாய் திறந்து யோகக்ஷேமம் விசாரிக்கக் கூடுமென்றும் எண்ணம்.

மரகத மலையிலே செந்தாமரைக் காடு மலர்ந்தாற் போல் இருக்கின்றன கண்களென்றும், கற்பகச்சோலை போல விண்ணும் மண்ணும் நிறையத் தழைக்கின்றன தோள்களென்றும் சொல்லுகிறார். அந்த விசுவரூபத்தை,

*தோள்களா யிரத்தாய்! முடிகளா யிரத்தாய்!*
*துணைமலர்க் கண்களா யிரத்தாய்!*
*தாள்களா யிரத்தாய்? பேர்களா யிரத்தாய்!*

என்று அழைக்கிறார்.

அந்த முடிகளாயிரத்திலும், ஒரு கிரீடமே மூன்று லோகங்களிலும் ஆட்சி செலுத்து கிறதாம்.

*... ... ... சுடர்ச்சோதி மணிநிறமாய்,*
*முற்றஇம் மூவுல கும்விரி கின்ற சுடர்முடி,*

ஸ்தூல—சூட்சும—அதிசூட்சும லோகங்களிலும் ஒளியும் ஒழுங்கும் காட்டிப் பரிபாலனம் செய்ய, அந்தக் கடவுள்-வேந்தனுடைய பேராயிரமே உலகத்திற்கு இரட்சை என்கிறார்.

அந்தப் பேர்களோடும் கிரீடங்களோடும், அழகுகளையெல்லாம் — குணங்களையெல்லாம் — ஆபரணங்களாக அணிந்து கொண்டிருக்கிறுனும். அந்த அகில லோக அரசனுக்கு அப்படிப்பட்ட ஜோதி-வடிவங்களும் பலபலவே—என்று சொல்லும்போது, கற்பனைக் கண்ணும் கூசிப்போகிறது!

ஆனுல் பாலசூரியனுடைய கிரணங்கள் படும் போது, பனி மூடிய எவரெஸ்ட் சிகரமும் பத்தரை மாற்றுத் தங்கமலைபோல் ஒளிவிடுகிறதாம். அப்படியே,

*பலபலவே ஆபரணம்; பேரும் பலபலவே;*
*பலபலவே சோதி வடிவு!*

என்று பிரமிக்கச் செய்யும் ஜோதிமலையிலும் பக்தர்களின் மனேபாவம் படும்போது, கண்ணும் குளிர்ந்து நெஞ்சும் குளிரும் திவ்யமான காட்சி ஏற்படுகிறது.

இந்தக் காட்சியை நம்மாழ்வார்,
*செக்கர்மா முகில்உடுத்து, மிக்கசெஞ்சுடர்ப்*
*பரிதிசூடி: அஞ்சுடர் மதியம்பூண்டு,*
*பலசுடர் புனைந்து, பவளச்செவ்வாய்*
*திகழ்பசுஞ் சோதி மரதகக்குன்றம்*

[செக்கர் — செவ்வானம். மாமுகில் — பெரிய மேகம். பரிதி—சூரியன். மதியம்—சந்திரன்.]

என்று எவ்வளவு வசீகரமாகக் காட்டுகிருர், தியானம் செய்வதற்கும் பக்தி பண்ணுவதற்கும்! நம்மாழ்வாருடைய ஞானக்கோட்டையின் வெளிச்சுவர் இது.

உலகத்தில் இல்லாத ஒரு மரகத மலையைக் கற்பனை செய்து கடவுளுக்கு அறிகுறியாகக் காட்டுகிறவர், உண்மையில்,

*கூவுமா(று) அறிய மாட்டேன்;*
*குன்றங்கள் அனைத்தும் என்கோ?*

*மேவுசீர் மாரி என்கோ?*
*விளங்குதா ரகைகள் என்கோ?*

[தாரகை—நட்சத்திரம்,]

என்றெல்லாம் சொல்லி, நுட்பமாய் மறைந்திருக்கும் சிறிய இடங்களிலும், அங்கேயுள்ள பொருள்தோறும், அந்தப் பொருள்களும் தன்னை அறியாதபடி, மறைந் திருக்கிறன் இறைவன் என்கிறர்.

'பசுமை'யால் கடவுளைக் குறிப்பவர், 'கருமையும் செம்மையும் வெண்மையும் அவன்தான்!' என்கிறர். எல்லா மலைகளிலும் இருக்கிறன் என்று சொல்லு கிறவர், அணுவுக்கும் அணுவாய் இருக்கிறன் என்கிற வர், நுட்பமான ஒவ்வொரு நீரணுவுக்குள்ளும் இருக்கிறன் என்கிறர். எப்படி?

தன்னையும் தன் சக்தியையும் ஒடுக்கிக்கொண்டுதான் இருக்கிறனே? விரிவான அண்டத்தில் எப்படிப் பரந் திருக்கிறனே, அப்படி வசதியாக, அவ்வளவு சௌகரியமாக, ஒரு குறைவுமில்லாமல் பரவியிருக்கிற னும் அந்த அணுவுக்குள்ளும். 'எங்கும் அவன்; எக்காலமும் அவன்!' என்று சொல்லுகிறவர், 'உயிரும் அவன்; உடம்பும் அவன்; இறப்பும் அவன்; பிறப்பும் அவன்; – ஏன்?—உள்ளதும், இல்லாததும்கூட அவன் தான்!' என்கிறர்.

'இப்படிப்பட்ட கடவுள் தான் உண்டா? இல்லையா! என்று கேட்டால், '"உண்டு" என்றல் உண்டு; "இல்லை" என்றல் இல்லை. உண்மையில்,

அவன் ''உண்டு, இல்லை'' என்னும் இரண்டு இயற்கைகளோடும் இருக்கிறான்!' என்று பதில் சொல்லுகிறார்.

எல்லா அறிவுக்கும் தூரஸ்தனைக் குறித்து வேறு என்னதான் சொல்லமுடியும்? இதை இவரது ஞானக் கோட்டையின் நடுச்சுவர் என்று சொல்லாம்.

அவனுடைய 'கள்ள மாயங்'களை அறிவாரில்லை என்று சொன்னபோதிலும், 'அவன் தூரத்திலும் இருக்கிறான்; சமீபத்திலுமிருக்கிறான்; நடுவிலுமிருக் கிறான்' என்று சித்தாந்தம் செய்கிறார். 'ஆதியஞ் சோதி' என்றும், 'ஞானவெள்ளச் சுடர்மூர்த்தி' என்றும் சொல்லப்படுகிறவன் இருளாகவும் இருக் கிறான்; உண்மையோடு இன்மையாகவும் இருக்கிறான்; ஞானமாகவும் மூடமாகவுமிருக்கிறான்; தெளிவாகவும் கலக்கமாகவும், நினைப்பாகவும் மறப்பாகவு மிருக்கிறான்; நிழலாகவும் வெயிலாகவும் அமுதமாகவும் விஷமாகவு மிருக்கிறான்; புகழும் பழியும் விருப்பும் வெறுப்பும் சொர்க்கமும் நரகமுமாயிருக்கிறான்!

இப்படிச் சொல்லி, 'இவை என்ன விசித்திரங் கள்?' என்று தம்மைத் தாமே கேட்டுக்கொள்கிறார். இன்பம் துன்பம், நன்மை தீமை, பாவம் புண்ணி யம் முதலான இரட்டைகளெல்லாம், குளிர்ச்சியும் வெப்பமும் போல, உலக அமைப்பு என்ற ஈச்வர லீலை யில் இன்றியமையாதன என்பது குறிப்பு. இதை இவரது ஞானத்தின் உட்சுவர் என்று கருதலாம்.

'அது இல்லாதவன், இது உடையவன்!' என்று அவனை நினைக்கமுடியாது. எல்லாப் பொருள்களையும்

நிலைகளையும் விடாது வியாபித்திருக்கிறான், கலந்தும் கலவாமலும். 'வறுமையும் அவன்; செல்வமும் அவன்!' என்று சொன்னபோதிலும், உண்மையான ஸ்ரீமான், செல்வன் பகவான்தான். மனத்திலே, மேலே சொன்ன 'இரட்டைகள்' என்ற 'துவந்துவங்க'ளின் உணர்ச்சி அற்றுப்போக, 'யோக உணர்ச்சி' மலர்ச்சி பெறுமென்பர்: அந்த உணர்ச்சியாலும் ஸ்ரீமானான பகவானை அளவிட முடியாதென்கிறார் ஆழ்வார்.

இப்படிப்பட்ட பகவான் அல்லது பரம்பொருளைக் குறிக்கும் கதைகளும் கற்பனைகளும், அடையும் மார்க்கங்களென்று பல வேறு மதவாதியர்கள் தர்க்கத்தால்—யுக்தி வாதங்களால்—குருட்டு நம்பிக்கைகளால்—பயத்தால்—பிடிவாதத்தால் வகுத்திருப்பனவும், உண்மையின் அடிவாரத்திலே காடுகளாக மண்டிக் கிடக்கின்றன. நம்மாழ்வாரோ, காட்டு வழிகளில் நம்மை அலைந்து திரிய விடாமல் மேலே, மேலே மலை யுச்சியை நோக்கி அழைத்துச் செல்லுகிறார்.

'போகம் தீது; சக்கரவர்த்திகளின் ஸ்தானமும் ஸ்திரமன்று; பகவத் பாகவத கைங்கரியமே இனிது,—புருஷார்த்தமாக மதிக்கத் தகுந்தது' என்று கூறும் ஆழ்வார்,

*ஆணல்லன், பெண்ணல்லன்,*
*அல்லா அலியும் அல்லன்;*

*காணலும் ஆகான்; உளன்*
*அல்லன், இல்லையல்லன்;*

*பேணுங்கால் பேணும்*
*உருவாகும், அல்லனுமாம்;*

*கோணைபெரி(து) உடைத்(து)எம்*
*பெம்மானைக் கூறுதலே!*

[கோணை — உபத்திரவம்.]

என்று பகவானுடைய நிலையைப் பற்றிச் சொல்லும் போது எங்கேயோ மேகப் படலங்களுக்கிடையே பிரவேசித்து அங்கு மிங்கும் தட்டித் தடுமாறுவது போலத் தோன்றுகிறதல்லவா?

*அவனே அவனும், அவனும், அவனும்;*
*அவனே மற்றெல்லா மும்:அறிந் தனமே!*
*வந்தாய் போலே வாராதாய்!*
*வாரா தாய்போல் வருவானே!*

என்று பகவானை நோக்கிக் கூறும்போது, நம்மை எங்கேயோ மூச்சுத் திணற விட்டுவிட்டுத் தாம் ஏதோ ஒரு பனி மூடிய சிகரத்திற்கே போய்விட்டாரென்று மருளுகிறோம்.

'சிறந்த வான்சுடரே! உன்னை எந்நாள் வந்து கூடுவேன்? எங்கு வந்தடைவேன்?' என்று கேட்கும் போது, ஆழ்வார் இன்னும் மேலே வானளாவிய சிகரமொன்றில் ஏறிக்கொண் டிருக்கிறாரென்று தோன்றுகிறது.

*... ... ... ... அருநர*
*கவையும்நீ யானால்,*
*வானுயர் இன்பம் எய்தில்என்?*
*மற்றை நரகமே எய்தில்என்?*

என்ற வார்த்தை காதில் விழும்போது, நமக்குத் தலை சுழலுகிறது: 'விழுந்துவிடுவோமோ?' என்ற பயமும் ஏற்படுகிறது.

*பாவியேன் பலகாலம் வழிதிகைத்(து)*
*அலமர்கின்றேன்!*

[அலமர்கின்றேன்—சுழலுகிறேன்.]
என்று கதறும்போது, 'ஐயோ! இவருக்கும் திகைப்பா? வழி தெரியவில்லையா? தலை சுழலுகிறதா? வழிகாட்ட வந்தவர் கதியும் இதுதானா?' என்று கவலைப் படுகிறோம்.

ஆனால் உடனே காதில் விழுகிறது,

*வேர் முதலாய் வித்தாய்ப்*
*பரந்து தனிநின்ற*
*கார்முகில்போல் வண்ணன்,என்*
*கண்ணனைநான் கண்டேனே!*

என்ற வெற்றிச் செய்தி.

இந்த நிலையில்தான் நம்மாழ்வார்,

*கோலங்கொள் சுவர்க்கமும் யானே!*

[கோலம்—அழகு.]

*கோலமில் நரகமும் யானே!*

என்றும்,

*காண்கின்ற நிலமெல்லாம் யானே!*
*காண்கின்ற விசும்பெல்லாம் யானே!*

[விசும்பு — ஆகாசம்.]

என்றும்,

*உற்றார்கள் எனக்கில்லை யாரும்!*
*உற்றார்கள் எனக்(கு) இங்(கு)எல் லாரும்!*

என்றும் ஜயபேரிகை முழக்குகிறார்.

இப்போது ஞான மலையின் சிகரத்தையே அடைந்து விட்டாரென்று தெரிந்து, 'அந்தப்

பரமானந்தத்தில் நமக்கும் பங்குண்டா?' என்று அறிய விரும்புகிறோம்.

'கண்ணனைக் கண்டு கொண்டேனே!' என்று குதூகலப்படுகிறவர், அவன் அருளால் தாம் கண்ட வழியையும் லட்சியத்தையும் மற்றவர்களுக்கும் காட்டு கிறார். 'இவர் எப்படி அடைந்து விட்டார் அந்த உச்சியை?' என்று அதிசயிக்கிறவர்களுக்கு அந்த இரகசியத்தையும் சொல்லிவிடுகிறார். 'மலை நாம் இருக் கும் இடத்திற்கு வாராவிட்டால், மலையிருக்கும் இடத் திற்கு நாம் போக வேண்டியதுதான்!' என்று சொல்வ துண்டல்லவா? அதற்கு மாறாக நம்மாழ்வாரோ, 'கடவுள் என்ற ஞான மலையின் உச்சிக்கு நாம் போக முடியாது; அதுதான் நாம் இருக்கும் இடத்திற்கு வர வேண்டும்!' என்கிறார். ஞானமும் விசுவாசமும் கொண்டு,

*வான மாமலை யே! அடி யேன்தொழ வந்தருளே!*

[வானமாமலை—வானளாவிய பெரியமலை.]

என்று தூய மனத்தோடு பிரார்த்தித்துக் காதலால் சரணாகதி செய்ததும், அது கண்ணிலும் கருத்திலும் வந்துவிட்டதென்று சொல்லுகிறார்.

மற்றப்படி நாம் நம்முடைய முயற்சியால் காணப் போவது இயலாத காரியம். அவனே எங்கும் வியா பித்து நம்மையும் தீண்டிக் கைக்கொள்வதற்குச் சித்தமா யிருக்கிறான். எல்லாப் பொருள்களையும் விட்டு— அதாவது, பரம பரித்தியாகம் செய்து—ஆத்மாவை அவனுக்கே ஸமர்ப்பிக்கிறவர்கள் தத்துவ சிகரத்தின் உச்சியை விரைவில் அடைவார்கள்.

அந்தச் சிகரத்திற்கு எத்தனையோ மார்க்கங்கள் காட்டப்படுகின்றன. சில, அபாயகரமான காடுகளின் வழியாகச் செல்லுகின்றன; சில, பயங்கரமான பள்ளத் தாக்குகள் வழியாகவும் செங்குத்தான பாறைகள் வழி யாகவும் செல்லுகின்றன. சில சுற்றிச் சுற்றிப் போகின்றன; பல வழிகள் இடையிடையே சந்தித்துப் பிரிவதுமுண்டு; முடிவிலே சந்திக்கும் வழிகளுமுண்டு.

ஆழ்வார் காட்டும் தத்துவ சிகரத்தைச் சமய ஞானத்தின் 'எவரெஸ்ட்' என்று சொல்லலாம். இவர் காட்டும் வழியிலோ உண்மையில், பயமுமில்லை; அபாய மும் கிடையாது.

---

# 43. பக்தரோ, பகவானோ !

ஒரு நாள் மதுரகவி யாழ்வார் தமது ஞானாசாரிய ரான நம்மாழ்வாரின் விக்கிரகத்தை ஊர்வலம் செய் வித்து விழா நடத்தும்போது தாமே உத்சாகமாக விருது கூறத் தொடங்கி, 'ஓதாது உணர்ந்த உத்தமர் வந்தார்! ஞானக் கடலான நல்லாசிரியர் வந்தார்! வேதம் தமிழ் செய்த கருணைக் கடல் வந்தார்! தெய்வப் புலமை வாய்ந்த தேசிகர் வந்தார்! திருவாய் மொழிப் பெரியார் வந்தார்!' என்றெல்லாம் சின்னங்களை முழங்கச் செய்தார்.

இதைக் கேட்டதும், மதுரைச் சங்கப் புலவர் களின் மாணாக்கர்கள்—அந்த ஊருக்கு யாத்திரையாக வந்திருந்தார்கள்—குறுக்கிட்டு மதுரகவிகளை நிறுத்தி, 'உங்கள் ஆழ்வார் பக்தர்தாமே! கல்விக் கடலான சங்கப் புலவர்களுக்கு எம்மாத்திரம்? இவர் பாடிய திருவாய்மொழி சங்கம் ஏறிய செய்யுளா? இதை வேதத் தமிழ் என்று எப்படிச் சொல்லலாம்? இவரைத் தெய்வப் புலவர் என்று சிலாகிப்பதுதான் தகுதியா? அணிற்பிள்ளைத் தலைமேல் அம்மிக் கல்லை வைப்பது போலிருக்கிறதே!' என்று வாய் மதம் கொண்டு குதர்க்கம் பண்ணி விருதுகளைத் தடுத்துவிட்டார்களாம்.

மதுரகவிகளும் மற்ற அடியார்களும் விக்கிரகத் துடன் திரும்பி வந்ததும், புலவர்கள் கேட்ட கேள்வி களை நினைத்து நினைத்து, 'என்ன வித்யா கர்வம் அந்தப் பண்டிதர்களுக்கு' என்று மனம் பதைத்து,

ஆழ்வார் சன்னிதியில் அன்னபானுதிகள் இல்லாமலே மூன்று நாள் வைராக்கியத்தோடு இருந்தார்கள். 'ஆர்காணும் இந்த வாசலில் இப்படிக் கிடக்கிறவர் கள்? இதென்ன பைத்தியம்?' என்று கேட்டுக் கொண்டே ஒரு கிழவனுர் அங்கு வந்ததும், 'அந்தப் பேர்வழிகளை லோகோபகாரமாகக் கர்வபங்கம் செய்யா விட்டால், நாங்கள் இந்த உபவாசத்திலேயே பிராணனை விட்டுவிடுவோம்!' என்று ஏகோபித்துச் சொன்னுர்கள். அந்த மனே நிச்சயத்தை அறிந்த கிழவர் குறுநகை செய்து திருவாய் மொழியில் ஒரு சிறு பாசுரத்தைக் குறிப்பிட்டு, 'அதன் முதலடியை ஒரு சிற்றேட்டில் எழுதி அந்தச் சங்கப் பலகையில் வைத்து விடுங்கள்!' என்று சொல்லி அந்தர்த்தான மாய் விட்டார்.

*சடகோபரே அந்தவிதமாக அருள்செய்தாரென்று நம்பி அந்தச் சடகோப பக்தர்கள் மதுரைக்குப் போய்ச் சமயம் பார்த்து நறுக்குச் சீட்டைப் பொற்ருமரைத் தடாகத்தில் மிதந்துகொண்டிருந்த சங்கப் பலகையில் வைத்தார்கள்.

பலகை முழுகிவிட்டது தண்ணீருக்குள்ளே! பண்டிதர்கள் திடீரென்று தத்தித் தடுமாறி விழுந்து அமிழ்ந்து மேலே கிளம்பி மெள்ள நீந்திக் கரை சேர்ந் தார்கள். அமிழ்ந்த பலகை உடனே குபீரென்று கிளம்பி அந்தச் சிறு முறியை மாத்திரம் ஏந்திக் கொண்டு வர, 'இது என்ன மந்திரமோ, மாயமோ? என்று அவர்கள் அதை எடுத்துப் பார்த்ததும் 'கண்ணன் கழலிணை' என்று அதில் எழுதியிருந்தது:

---

* சடகோபர் - நம்மாழ்வார்.

'உலகெலாம் உள்ளடக்கிய கண்ணன் திருவடிகளைத் தாங்கிய தெய்வப் பலகை நமக்கும் சமானமாக இடம் கொடுக்குமா?' என்று பிரமித்துப் போனார்கள். அது,

*'கண்ணன் கழலிணை*
*நண்ணும் மனமுடையீர்!*
*எண்ணும் திருநாமம்*
*திண்ணம் நாரணமே'*

என்று திருவாய்மொழிப் பாசுரத்தின் முதலடிதான் என்று பக்தர்கள் தெரிவித்ததும் புலவர்கள் செருக்கு ஒழிந்து நாணித் தலைகுனிந்தார்கள். அப்போதுதான் அவர்களுக்குத் திருவாய்மொழியின் பெருமையும் அந்தத் தெய்வத் தன்மை வாய்ந்த பக்தியின் பெருமையும் ஒருவாறு விளங்கினவாம்.

சங்கப் புலவர்கள் திருவாய்மொழியை ஆழ்ந்து வாசித்ததும் தங்களை நோக்கித் தாங்களே சிரித்துக் கொண்டார்கள். பிறகு, 'கடவுளைக் கண்ட தெய்வப் புலவருக்கு முன் நாம் எம்மாத்திரம் என்று எண்ணி எண்ணி மனம் நைந்து,

*'ஈயா டுவதோ கருடற்(கு) எதிரே?*
*இரவிக்(கு) எதிர்மின் மினிஆ டுவதோ?*
*நாயா டுவதோ உறுவெம் புலிமுன்?*
*நரிகே சரிமுன் நடையா டுவதோ?*
*பேயா டுவதோ அழகூர் வசிமுன்?*
*பெருமான் வகுளா பரணன் அருள்கூர்ந்(து)*
*ஓவா(து) உரைஆ யிரமா மறையின்*
*ஒருசொல் பொறுமோ, உலகிற் கவியே?'*

[இரவி — சூரியன். உறுவெம்புலி — மிகுந்த கொடுமையுள்ள புலி. கேசரி — சிங்கம். அழகூர்வசி — அழகுள்ள ஊர்வசி. வகுளாபரணன் — மகிழம்பூ மாலை யணிந்த நம்மாழ்வார். ஓவாது — நீங்காது. மறை — வேதம்.]

என்று ஆழ்வாரைப் பாடிப் புகழ்ந்தார்களாம்.

பட்சி ராஜாவான கருடனுக்கு ஈயின் ஓட்டம் எம்மாத்திரம்? உலகை விளக்கும் சூரியனுக்கு முன் மின்மினிப் பூச்சி பிரகாசிக்க முடியுமா? புலிக்கு முன் நாயும், சிங்கத்திற்கு முன் நரியும், நடன மோகினியான ஊர்வசிக்கு முன் பேயும் ஆட்டம் போடுவதென்றால், எப்படி இருக்கும். அப்படித்தான் இருக்கிறதாம், நம்மாழ்வாரின் வேதத் தமிழுக்கு முன் மற்றவர்கள் வருந்திக் கற்ற இலக்கணத் தமிழும்.

முன்பு அபசாரப் பட்டதற்கு மேலும் மேலும் பச்சாத்தாபம் அடைந்து 'இப்படிப்பட்ட பக்தரும் பகவானும் ஒன்றுதானே!' என்று உணர்ந்து குற்றங் களுக்கெல்லாம் ஒரே பிராயச்சித்தமாக ஆழ்வாரை ஒருமுகமாய் தோத்திரம் செய்தார்களாம். அந்தத் தோத்திரம்தான்,

*சேமம் குருகையோ, செய்யதிருப் பாற்கடலோ;*
*நாமம் பராங்குசனோ, நாரணனோ;—தாமம்*
*துளவோ, வகுளமோ; தோள்இரண்டோ, நான்கும்*
*உளவோ பெருமான் உனக்கு?'*

[சேமம் — அரணான இடம். குருகை — ஆழ்வார் திருநகரி. செய்ய — செம்மையான. பராங்குசன் — நம்மாழ்வார் பெயர்களில் ஒன்று. தாமம் — மாலை. துளவு — துளசி. வகுளம் — மகிழம்பூ.]

என்ற பாடல் வடிவமாக ஏக காலத்தில் அத்தனை புலவர்கள் வாயிலிருந்தும் புறப்பட்டதாம்.

. ஆ, என்ன அற்புதம்! 'ஆழ்வார் இருப்பிடம் ஆழ்வார் திருநகரிதானு?' என்ற சந்தேகம் கூட ஏற்பட்டுவிட்டது! 'ஞானத் தெளிவு' என்ற பாற்கட லாகவே இருக்கலாமா? இவர் பெயரும் பரம்பொரு ளான 'நாராயணன்' தானே? அணிந்திருக்கும் மாலை மகிழம்பூ . மாலையா? அல்லது துளசிதானு? இவருக்கும் நம்மைப்போல் இரண்டு கைகள்தான் என்று எப்படி நம்பமுடியும் நாலு திசைகளையும் தழுவி அருள்செய்யும் நாலு தோள்கள் இந்தப் பெருமானுக் கும் இருக்க வேண்டுமல்லவா? இப்படியெல்லாம் பக்தி பண்ணிய புலவர்கள் அன்றுமுதல் ஆழ்வார் கொள்கை யையும் பெருமையையும் பரப்புவதில் தாங்களும் மற்றவர்களோடு ஒத்துழைக்கத் தொடங்கினுர்கள்.

இது ஒரு கற்பனைக் கதை என்று சொல்லவேண் டியதில்லை; தமிழாராய்ச்சியில் சொற்ப ஞானமுள்ளவர் களும் எளிதில் அறிந்துகொள்வார்கள், சங்க காலத் திற்கும் ஆழ்வார் காலத்திற்கும் சம்பந்தமே கிடை யாது என்பதை. இப்படிப்பட்ட கதைகள் திருவள்ளுவ ரைக் குறித்தும் வழங்குகின்றன.

இலக்கியத் துறையிலும் சமயத் துறையிலும் புதி தாக ஏற்படும் சீர்திருத்தங்களையெல்லாம் கூடுமான வரையில் 'பழமை விரும்பி'களான பண்டிதர்கள் எதிர்த் துப் பார்ப்பார்கள் என்பதும், உண்மையான இயக்கங் களின் ஜீவ சக்தியே அவர்களைப் பணியச் செய்து விடும் என்பதும் இத்தகைய கதைகளால் நாம் அறிந்துகொள்ள வேண்டிய விஷயம்!

மேலும் மதுரகவி யாழ்வார் தமது பிற்கால வாழ்க்கையில் நம்மாழ்வாரின் புனித ஞாபகத்தையே கொண்டு காலம் போக்கி வந்தார் என்பதையும், சீடர் குருவின் புகழையும் கொள்கைகளையும் பரப்புவதில் கண்ணும் கருத்துமாயிருந்தார் என்பதையும் இந்தக் கதை வற்புறுத்துகிறது.

குரு பக்தியே மதுரகவிகளாக உருவெடுத்து வந்தது என்று சொல்லலாம். பதினொரு பாடல்கள் அடங்கிய ஒரு பதிகம்தான் இவர் பாடியது. இந்தப் பாடல்கள் பகவானைக் குறிக்குந் தோத்திரங்கள் அல்ல. குரு பக்தியைத்தான் வெளியிடுகின்றன; ஆனால் குருவையே பகவானாகத் தோத்திரம் செய்கின்றன. இவற்றையும் வைஷ்ணவர்கள் ஒரு பிரபந்தமாகத் திவ்யப் பிரபந்தத்தோடு சேர்த்திருக்கிறார்கள்.

*தேவு மற்றறியேன்; குரு கூர் நம்பி*
*பாவின் இன்னிசை பாடித் திரிவனே!*

[தேவு — தெய்வம். குருகூர்நம்பி — பெரியாழ்வார். பா — பாட்டு.]

என்பது மதுரகவிகள் தீர்மானம். எனவே குருவைக் கண்கண்ட தெய்வமாகக் கொண்டார்.

இவர் இனிமையாகப் பாடக்கூடியவர் என்பதை ‘மதுரகவி’ என்ற காரணப் பெயரிலிருந்தே ஊகம் செய்து கொள்ளலாம். (பெற்றோர் இட்ட பெயர் இன்னதென்று தெரியாது.) இவர் நம்மாழ்வார் பாடல்களை இனிய இசையில் அமைத்துப் பாடி நாடெங்கும் திரிந்துகொண்டிருந்தார் என்ற சரிதக் குறிப்பை மேலே காட்டிய இரண்டு அடிகளும் வெளியிடுகின்றன.

மதுரகவி யாழ்வாருடைய சுயசரிதக் குறிப்புக் களில் வேறென்று:

*நன்மை யால்மிக்க நான்மறையாளர்கள்*
*புன்மை யாகக் கருதுவர்; ஆதலின்*
*அன்னை யாய்அத்த னுய்என்னை ஆண்டிடும்*
*தன்மை யான்சட கோபன்என் நம்பியே!*

[நான்மறையாளர் - நாலு வேதங்களையும் அறிந்த பிராமணர்கள். புன்மை - இழிவு, சிறுமை அத்தன் - தகப்பன். சடகோபன் - நம்மாழ்வார். நம்பி - பூரணன்; புருஷோத்தமன்.]
என்ற பாட்டிலே கிடைக்கிறது.

நாலு வேதங்களையும் ஓதி உணர்ந்த பிராமணர் கள்—தம்முடைய சாதியைச் சேர்ந்தவர்கள்,—தம்மைக் கைவிட்டார்களாம். 'இவன் இழிவானவன், சிறியவன்!' என்றுதான் கைவிட்டார்கள் என்கிறுர் தம்முடைய தயாள குணத்தினலே. அந்த நிலையிலே—அவர்கள் கைவிட்ட காரணத்தைக்கொண்டே ஆதரித் தாராம் சடகோபர், நோயாளிக்குத் தானே சிகிச்சை செய்யவேணும் என்ற கொள்கையை அநுசரித்து. அவர் தாயாகவும் தந்தையாகவும் தம்மை ஆட்கொண் டாராம். அவரே தமக்கு புருஷோத்தமர்—ஞான பூரணர் என்று சொல்லுகிறுர் மதுரகவிகள். இப்படிப் பட்ட அருளை எட்டுத் திசைகளும் அறிந்துகொள்ள வேணும் என்பது அவர் ஆசை: எனவே பல இடங் களிலும் போய்ப் பிரசாரம் செய்திருக்கவேண்டும்.

இவரைப் போல் மற்ற அடியார்களும் வேத சாரத்தை ஆழ்வார்—தமிழிலே கண்டு பேரின்பமடைந் தார்களாம். ஈஸ்வரனுடைய அருளைக்காட்டிலும்

நம்மாழ்வார் அருளை அதிகமாக வியந்தார்களாம். இப்படி ஆழ்வார் கொள்கை பரவத் தொடங்கியதற்குப் பலரையும் அவரவர் நின்ற நிலையிலே திருத்திப் பணிகொண்ட குருவின் அருளைப் போல் பிரதான சீடரான மதுரகவி யாழ்வாரின் பிரசார வன்மையும் தகுந்த காரணமாயிருந்திருக்க வேண்டும்.

*'எண் திசையும் அறிய இயம்புகேன்,*
*ஒண்டமிழ்ச்சடகோபன் அருளையே'*

[இயம்புகேன் — சொல்லுவேன். ஒண்டமிழ் — ஒண்மை + தமிழ் ஒண்மை — (இங்கே) மேதாவிலாசம்.] என்ற திடசங்கற்பம், எத்தனை இடையூறுகளை ஜயித்து நம்மாழ்வார் கண்ட உண்மைகளை—அவர் சொன்ன நற்செய்தியை—தாம் ஓலை பிடித்தெழுதிய அந்தப் பாடல்களை எவ்வளவு குதூகலமாக எங்கும் பரப்பியிருக்கவேண்டும்?

இப்படிப்பட்ட உத்தம சீடரையும் குருதேவரோடு சேர்த்து ஆழ்வாராக்கி வைஷ்ணவ சமூகம் நன்றியறிவோடு,

*பாராங்குசன் பரமென்று*
*பற்றினன் வாழியே*

[பாராங்குசன் — நம்மாழ்வார். பரம் — கடவுள்.] என்று வாழ்த்தி வருகிறது.

வடநாடெங்கும் அலைந்து திரிந்து உண்மை காணமல் திரும்பிவந்து தென் திசையிலே சூரியோதயம் கண்டதுபோல நம்மாழ்வாரைக் கண்டு அந்தத் தெய்வ ஒளியை நிலைபெறச் செய்யும் பரம கைங்கரியத்தில் தம்மை முழுக்க இழந்த மதுரகவிகள் குருவுக்கு

முன்னமே தோன்றியவராதலால், இந்தச் சீடர் தோற் றத்தைச் சூரியோதயத்திற்கு முன் காணப்படும் அருணோதயத்தோடு ஒப்பிடுவதுண்டு.

மற்ற ஆழ்வார்களும் தெய்வத்தன்மை வாய்ந்தவர் கள்தாம். ஆனால் பரமபதத்தில் உள்ள தெய்வச் சுடரே பூமியில் இறங்கி வந்து நம்மாழ்வார் என்ற ஞானச் சுடராக ஜொலித்தது என்பது வைஷ்ணவர் கொள்கை. திருக்குறுங்குடியில் கோயில் கொண்டிருக் கும் பகவான் நம்மாழ்வாராக அவதரித்தான் என்று கதை சொல்லுகிறது. 'நான் சடகோபன் என்ற என் பக்தனாக அவதரித்து, ஜாதி மதம் முதலான வித்தியாச மில்லாமல் பொது ஜனங்களுக்கு அவர்கள் பேசும் பாஷையிலேயே வேத ரகசியங்களை வெளியிட்டு மோட்ச வாசலைப் பகிரங்கமாகத் திறந்து வைக்கப் போகிறேன். கேளுங்கள் ரிஷிகளே!' என்று பகவானே சொன்னதாக வடமொழியிலுள்ள பிரமாண்ட புராணம் சொல்லுகிறது. பவிஷ்யத் புராணம், பார்க்கவ புராணம் மார்க்கண்டேய புராணம் முதலான நூல்களிலும் நம்மாழ் வாரைக் குறித்துப் பிரஸ்தாபம் வருகிறது. இப்படி யெல்லாம் பகீரதப் பிரயத்தனம் செய்து நம்மாழ்வாரைத் தெய்வமாக்கிய குருபக்தி எவ்வளவு விசேஷமானதா யிருக்க வேண்டும்!

இதே குருபக்திதான் நம்மாழ்வாரைச் சுற்றி வளர்த்த அற்புதக் கதைகளுக்கும் காரணமாகும். 'அவா அற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன்' இளமையில் சாமானியரைப் போல் இருக்கலாமா? எனவே, அவர் உலக இயற்கைக்கு மாறாக இருந்தார் என்று கதை எழுந்தது.

இந்த திவ்ய ஞான சம்பன்னர் திருவருள் என்ற ஞானப் பாலை உண்டவரல்லவா? இவருக்குத் தாயின் பால் எதற்கு? பரம்பொருள் என்ற உண்மையையே பார்த்துக்கொண்டிருந்தவருக்கு ஜடப் பொருள்களைக் காணக் கண் ஏது? எனவே, பதினாறு வருஷம் சமாதியில் ஆழ்ந்து ஒரே இடத்தில் அசையாமல் இருந்து தம்மைச் சுற்றிலுமுள்ள பிரபஞ்சத்தை முற்றும் மறந்தார் என்ற கதை பிறந்தது. தம்மையும் தாம் கண்ட உண்மையையும் அறிந்து கொள்ளும் பக்குவமில்லாதவர்களோடு பேசித்தான் என்ன பயன்? மதுரகவி யாழ்வாரைச் சந்திக்கும் வரை நம்மாழ்வார் மௌனியாயிருந்தார் என்ற கதை தோன்றியது.

எனினும் பகவதநுபவத்தால் கிடைத்த ஆனந்தத்தை இப்பெரியார் தாம் மட்டும் அநுபவிக்க விரும்பவில்லையாம். அந்த ஆனந்த நிலையிலும் உலகத்தின் துன்பம் நெஞ்சிலே பட்டதாம்; உலகத்தின் அழுகுரல் காதிலே விழுந்ததாம். தாம் தர்மகர்த்தராயிருந்து பரிபாலித்து வந்த ஞான சம்பந்தத்தை மதுரகவிகள் மூலமாகத் தாயிலாப் பிள்ளை போலிருந்த மனித வர்க்கத்திற்கே உரிமையாக்கினாராம்.

நம்மாழ்வார் வீற்றிருந்து தியானம் செய்து கொண்டிருந்த புளிய மரத்தடியிலேயே அவரை அடக்கம் பண்ணிய மதுரகவிகள் அங்கே கோயில்கட்டி உருவ வழிபாடும் உத்ஸவங்களும் ஏற்படுத்தினார்: அந்த உறங்காப் புளி.* முதிர்ந்த பருவத்தில், இன்றும்

*உறங்காப்புளி—இரவில் இலை மூடிக்கொள்ளாத புளியமரம். நீங்காத உள்ளிருள் நீங்கி, வற்றாத பிறவிக் கடல் வற்றி, மலராத தாமரைகளும் மலர்ந்தன!—என்று குதூகலப் படுகிறார்கள் பாகவதர்கள்.

ஆழ்வார் திருநகரியில் ஆழ்வார் கோயிலில் காணப் படுகிறது.

மற்ற ஆழ்வார்கள் இவ்வுலக உணர்ச்சியோ டிருந்து பிறகு தத்துவ ஞானம் பெற்றவர்கள் என்றும், நம்மாழ்வாரோ பரிமளத்தோடு பிறக்கும் துளசிபோலப் பிறந்து இயற்கையிலேயே ஞானபக்தி யுடையவரா யிருந்தாரென்றும் வைஷ்ணவர்கள் சொல்லுகிருர்கள். எனவே இவரை உயிர் அல்லது ஆத்மாவாகவும் மற்ற ஆழ்வார்களை உடம்பாகவும் சொல்வதுண்டு. ஆழ்வார் கோஷ்டியில் நம்மாழ்வார், காலத்தால் பிற்பட்டவரா யிருக்கலாம். முற்பட்டவர்களான முதலாழ்வார்களும் திருமழிசை யாழ்வாரும் தொண்டை நாட்டைச் சேர்ந் தவர்கள். வடக்கே அந்தப் பல்லவ ராஜ்யத்தில் தோன்றிய இயக்கம் வர வரப் பெரிதாகித் தெற்கே யுள்ள பாண்டிய நாட்டில் உச்ச நிலை அடைந்து விட்டது.

கடைசி ஆழ்வார் வைஷ்ணவர்களின் ஆதி குரு வாகக் கருதப்படுகிருர். இவருடைய பாடல்களும் விசேஷ குலதனமாகக் கருதப்படுகின்றன. இவரை, 'வகுள பூஷண பாஸ்கரன்'—அதாவது மகிழம்பூ மாலை யணிந்த ஞான சூரியன் என்று வைஷ்ணவ உலகம் போற்றுகிறது, இந்தச் சூரியனைக் கண்டு.

ஏழு தலைமுறையாகச் சிற்றரசர்களா யிருந்த பரம் பரையில் தோன்றியவர் நம்மாழ்வார்: இவரும் பூர்வாச் ரமத்தில் சிற்றரசரா யிருந்தாரென்று ஊகிப்பவரு முண்டு. இவரே தம்மைக் 'குருகைக்கோன்' என்று சொல்லிக் கொள்ளுகிருர். 'குருகை மன்னன்' என்று வைஷ்ணவ ஆசாரியர்களும் குறிப்பிடுகிருர்கள்.

ஆனல் இவருடைய இராஜ்யம் அந்த நாளில் ஆழ்வார் திருநகரியைத் தலைநகராகக் கொண்டு சுமார் ஐம்பது சதுர மைல் பரப்புள்ளதாக இருந்த வழுதிவளநாடு என்ற சிறு பிரதேசம்தானு? எத்தனையோ தலைமுறைகளாக எண்ணிறந்த பக்த கோடிகளின் இதயம் என்ற மகா ராஜ்யத்தைச் சக்கரவர்த்தியாக ஆண்டு வருகிருரல்லவா? இவர் பெற்ருேர், 'எங்கள் குடிக்கரசே!' என்றும், 'எங்கள் குலதெய்வமே!' என்றும் இவரைக் கொஞ்சி அழைத்ததாகக் கதை சொல்லுகிறது வைஷ்ணவ சமூகம்.

# 44. இன்பமழையும் ஞானவெள்ளமும்

மேகங்களைப் பார்க்கும்போதும், மலைகளைப் பார்க்கும் போதும், சமுத்திரத்தைப் பார்க்கும்போதும், 'அந்த நீலம்தான்! அந்த அழகு தான்!' என்று எண்ணி, நெஞ்சு குதிகொண்டு இவரைப் பிரிந்து ஓடிவிடுமாம். இருட்டைப் பார்த்தாலும் அவனுடைய திருவுருவைப் பார்ப்பதுபோலத் தோன்றும். ஏதாவதொரு ஜோதியைப் பார்த்தாலும் இப்படியே. குயில் மயில் முதலான பறவைகளைக் கண்டாலும், கருநிறமுள்ள பழங்களைப் பார்த்தாலும் இப்படித்தான். ஒரு நாள், இரண்டு நாள், மூன்று நாள் இப்படிப் பார்த்துவிட்டு, 'இது மயக்கம்தான்' என்று சும்மா இருப்பதுண்டா? அது தான் இல்லை: கருமை, நீளம், பச்சை நிறங்களைப் பார்க்கும்போதெல்லாம் இந்த ஆசை. சில சமயங்களில் வருத்தம்; சில சமயங்களில் பூரிப்பு.

இதோ இப்போது மலர்ந்திருக்கின்றன பூவைப்பூ காயாம்பூ, நீலோற்பலம், செங்கழுநீர்ப்பூ: இந்தப் பூக்களைப் பார்த்ததும் உயிரும் உடம்பும் ஒருங்கே மலர்ச்சி பெற்றுப் பூரித்துப் போகின்றனவாம், அவனுடைய திவ்ய மங்கள வடிவம்தான் இப்படி வந்து காட்சி தருகிறதென்று:

*பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற*
*காவி மலர்என்றும் காண்டோறும்,—பாவியேன்*
*மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும், அவ்வவை*
*யெல்லாம் பிரான்உருவே யென்று!*

இந்தப் பூக்களெல்லாம் வெறும் பூக்களாகத் தெரியவில்லை இவர் பக்திக் கண்களுக்கு. 'ஓ, பிரமித்தோம்!' என்று அறிவு—ஒரு தடவையல்ல, பல தடவை—எச்சரித்தபோதிலும், ஆசை கேட்பதாயில்லை. அந்தத் தெளிவைக் காட்டிலும் இந்தப் பிரமையே மேலென்று தோன்றுகிறது: எப்படியும் இதிலுள்ள இன்பம் அதிலில்லை! 'பாவியாகிய எனக்கு இப்படியும் ஒரு பாக்கியமா?' என்று இதயம் மகிழ்ந்து போகிறது.

ஒரு நாள் நீலோற்பல மலர்களையே பார்த்துப் பார்த்து ஆச்சரியமடைந்து, 'அந்த நிறத்தை ஒத்திருப்பதற்குப் பாக்கியசாலிகளான நீங்கள் என்ன தவம் செய்தீர்களோ? அடடா, தெரிந்துகொண்டேன்! மழையென்றும் பனியென்றும் வெயிலென்றும் பாராமல், இந்த நீர்நிலையில் ஒற்றைக் காலால் நின்று தவம் செய்கிறீர்களல்லவா?' என்று சொன்னார். ஆனால் இப்படித் தவம் செய்வதை அந்த இதயம் ஒப்புக்கொள்ளவில்லை.

பிறகு வானத்தைப் பார்த்தார். 'நீங்களும் அந்த நிறத்தைக் கொள்ளை கொண்டிருக்கிறீர்களே! இந்த யோகம் உங்களுக்கு எப்படி வந்தது? ஆகாசத்திலே பாய்ந்து எப்படிப்பட்ட தவத்தைச் செய்தீர்களோ?' என்று தூரத்திலே போய்க் கொண்டிருக்கும் மேகங்களுக்குக் கேட்கும்படி 'ஓ, மேகங்களே!' என்று கூப்பிட்டு ஒரு கேள்வி போட்டார். இந்தக் கேள்விக்கும் இவருடைய உள்மனமே பதில் சொல்லிவிடுகிறது. 'தெரிந்து கொண்டேன்! தெரிந்து கொண்டேன்!' என்று.

கேள்வியையும் பதிலையும் இதோ ஆழ்வார் வாக்கினாலேயே தெரிந்து கொள்வோம்:—

*மேகங்க ளோ! உரை யீர்: திரு மால்திரு மேனிஒக்கும்*
*யோகங்கள் உங்களுக்(கு) எவ்வாறு பெற்றீர்? உயிர்*
*[அளிப்பான்*
*மாகங்க ளெல்லாம் திரிந்து, நன்னீர்கள் சுமந்து, நுந்தம்*
*ஆகங்கள் நோவ வருத்தும் தவமாம் அருள்பெற்றதே!*

[மாகங்கள்—பெரிய வானம். ஆகங்கள்—உடம்புகள்.]

செடிகொடிகள், மிருகங்கள், பட்சிகள், மனிதர்கள் முதலான உயிர்க்குலத்தை யெல்லாம் வாழ்விக்க வேண்டுமென்று நல்ல நீரைச் சுமந்துகொண்டு உடம்பு நோகும்படி ஆகாசமெங்கும் திரிந்து கொண்டிருக்கின்றனவாம் மேகங்கள். பிரதியுபகாரத்தைக் காட்டிலும் மேலான தவமும் உண்டா? எனவே, இந்தப் பெருந்தவம் செய்வதால் தான் அவனுடைய அருளை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள்!' என்று திருப்தியடைகிறார்.

என்ன அழகான, பொருள் பொதிந்த, கற்பனை பாருங்கள்! பகவானுடைய நிறத்தை மட்டுமா குறிப்பிடுகின்றன? அருள்-வடிவமான லட்சுமியையும் குறிப்பிடுகின்றன, மின்னலோடு கூடிய மேகங்கள். சரி: அந்த லக்ஷ்மீ நாராயண மூர்த்தியின் குணத்தையும் ஒருவாறு ஞாபகப்படுத்தவில்லையா? இன்னும் பக்தர்களையும் உபலட்சணமாக ஞாபகப்படுத்துகின்றன அல்லவா? லோகோபகாரமாக நீரைச் சுமந்து வானமெங்கும் திரியும் மேகங்களைப்போல் பூமியெங்கும் திரிவார்களாம் பக்தர்கள்,—நல்லொழுக்கத்தோடு அருள் சுமந்து, அன்பு சுமந்து, மெய் வருத்தம் பாராமல்

உபதேசமும் கைங்கரியமும் செய்து, பாவிகள் உய்யும் படி நல்ல வழி காட்டிக்கொண்டே.

ஆம்: இதுதான் பக்தர்களுக்குத் தவம்—பக்தியும் பரோபகாரமான கைங்கரியமும்—என்பது நம்மாழ்வார் குறிப்பு. இந்த ஆழ்வாரே இப்படிப்பட்ட பக்தர்-கூட்டத்தின் தனிப்பெருந் தலைவராவு ரென்பது ஸ்ரீவைஷ்ணவர் கொள்கை.

தாம் அடைந்த மகோந்நத நிலையை நம்மாழ்வார் கூட உடனே அடைந்து விடவில்லையென்று தெரிகிறது இவருடைய வாக்கிலிருந்தே. 'நானும் நாள் தப்பாமல் பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறேன்: அவனோ உருக் காட்டுகிறானில்லை, இரக்கம் காட்டவுமில்லை; நெஞ்சே! அந்த அருள் வெள்ளம் ஏறிப் பாயமுடியாத அவ்வளவு பெரிய மேட்டு நிலமோ நாமிருக்கும் இடம்?' என்று கவலைப்படுகிறார் ஒரு சமயம். 'எங்கே காண்பேன், உலகமெல்லாம் முளைப்பித்த முதல் வித்தினை?' என்று தடவுகிறார் ஒரு சமயம். 'கூவிக் கூவிப் பார்த்தாலும் பார்க்க முடியவில்லையே; ஒரு வார்த்தையாவது கேட்கவும் முடியவில்லையே!' என்று பெருமூச்சு விடுகிறார் ஒரு சமயம்.

இயற்கைக்கு அதீதமான பரத்வநிலையை உணர முடியாதென்று அவதார மூர்த்திகளை வழிபடுவார்; இயற்கைப் பொருள்களினூடே அந்தர்யாமியாகப் பிரகாசிக்கும் பேரறிவை, பேரன்பை, பொருளை உணர்ந்து வழிபடுவார்; இயற்கை வளமுள்ள திருப்பதிகளில் அந்தர்யாமிப் பொருளுக்கும் அவதாரங்களுக்கும் நினைவுக்குறியான விக்கிரகங்களையும் வழிபட்டு அன்பைப் பெருக்கிக் கொள்வார்.

*செந்தா மரைத்தடங்கண், செங்கனிவாய் செங்கமலம்,*
*செந்தா மரையடிகள், செம்பொன் திருவுடம்பே!*
*முடிச்சோதி யாய்உனது முகச்சோதி மலர்ந்ததுவோ*
*அடிச்சோதி நீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?*

என்றெல்லாம் தமது இஷ்ட தெய்வத்தை விசேஷ மனோபாவத்தோடு தியானித்து அழகைக் காட்டி அடிமை கொண்ட அந்தக் காதலனுக்குத் தமது காதலையே கிரீடம் முதலான ஆபரணங்களாகவும், நெஞ்சைப் பூசும் சந்தனமாகவும் கற்பித்துக்கொள்வார்.

அஞ்ஞான இருளும் பாவ இருளும் ஒழியும்படி அவனே அருள்-விளக்காயிருந்து தன்னைக் காட்டியதும்,

*கோலமே! தாமரைக் கண்ணதோர் அஞ்சன*
*நீலமே! நின்(று)என(து) ஆவியை ஈர்க்கின்ற*
*சீலமே!*

[கோலமே—அழகே. ஈர்கின்ற—அறுக்கிற.]

என்று கதறிக் கதறி, 'உன்னை எந்நாள் கண்டு கொள்வேனே?' என்று ஏங்கிக் கொண்டிருந்த இருதயம்,

*... ... ... எல்லாப் பொருட்கும்*
*அருவா கியஆதி யைத்தேவர் கட்கெல்லாம்*
*கருவா கியகண் ணனைக்கண்டு கொண்டேனே!*

என்று ஆனந்தமடைகிறது.

எல்லாவற்றையும் பரித் தியாகம் செய்து கடைசியாகத் தாம் அடைந்த அந்த மகோந்நத நிலையும் இப்போது கிடைத்து விட்டதாகவே தோன்றுகிறது. அந்த நிலையிலும் எத்தனையோ, படிகளைத் தாண்டிப் போகிறாரென்றும், இவருடைய சூட்சும அதிசூட்சும

அநுபவங்களுக்கு முடிவே யில்லை யென்றும் எண்ணு கிறோம், இவர் பாசுரங்களை ஓதி ஓதி உணரும்போது.

நம்மாழ்வார் கொள்கையில் இரண்டு முக்கிய அம்சம் உண்டு: ஒன்று ஞானம் அல்லது வேதாந்த விஷயம்; மற்றது பக்தி யநுபவம். சிந்தனைக்கு உணவு வேதாந்தம்: இதயத்திற்குப் பக்தி. சில சமயங் களில் இவர் நம்மை விட்டு வெகுதூரம்போய் எங்கேயோ ஓர் எவரெஸ்டில் ஏறி நிற்பது போல நின்று, 'இதோ பாருங்கள்!' என்று காட்டுகிறார் அந்தச் சிகரத்தை, நமக்குத் தலை சுழன்று போகும்படி! பிறகு ஓடிவந்து வித்தியாச மில்லாமல் நம்மைத் தழுவிக் கொண்டு இதயத்தோடு இதயம் வைத்துப் பேசுகிறார்- 'இதோ நம்புங்கள்: எல்லாருக்கும் மோட்சமிருக்கிறது பக்தியிலே!' என்று உண்மையில் அந்தத் தத்துவ சிகரத்திலிருந்துதான் இந்த நம்பிக்கை—மதம் கங்கை யாகப் பெருகுகிறது.

கோடிக்கணக்கான உயிர்களை ஊட்டி வளர்த்து, போகும் வழியெல்லாம் பொன்னோடு புண்ணியம் விளைக்கும் கங்கையை வடஇந்தியாவின் உயிரென்று சொல்லலாம்: அப்படியே பக்தி-விசுவாசமும் சமய உலகின் ஜீவநதியாக ஓடிக் கொண்டிருக்கிறது. ஆழ்வார் அநுபவித்து வெளியிடும் நம்பிக்கை அல்லது விசுவாசத்தை மகாவிசுவாச மென்றே சொல்ல வேண்டும்.

இத்தகைய விசுவாசத்திற்கு ஆதாரமான பகவ தநுபவத்தை ஒரு சமுத்திரமென்றே சொல்லலாம். இந்த அநுபவத்தைப் பிரபந்தங்களாக வெளியிடு

வித்து நாட்டைத் திருத்திப் பணிகொள்ள விரும்பினர். பகவா னென்றும், இப்படிப்பட்ட பிரபந்தங்களை 'ஞானத் தமிழ்க் கட'லாகக் கருதவேண்டுமென்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்லுகிறார்கள்.

நம்மாழ்வார் சாஸ்திரம் தெரிந்தவர் தாம்: எனினும் இவர் ஞானம் வெறும் சாஸ்திர ஞானமன்று: யோகம் செய்தார்; எனினும் இந்த ஞானம் அந்த அப்பியாசங்களால் வந்ததுமன்று. அப்படிப்பட்ட ஞானத்தைக் காட்டிலும் ஆயிரமடங்கு அதிசயமான இவர் ஞானம் பகவானுடைய பிரசாதமாகக் கிடைத்த தென்பது ஸ்ரீவைஷ்ணவர் கொள்கை.

'அவனே மாயக்கவியாய் வந்து என் நெஞ்சிலும் உயிரிலும் கலந்துகொண்டு என்னைக்கொண்டுதன்னைத் தானே பாடுவித்தான்!' என்று அடிக்கடி சொல்லுகிறார் நம்மாழ்வார். அவன் தமது கண்ணிலும் நெஞ்சிலும் பண்ணிலும் கவியிலு மிருக்கிறான் என்று சொல்லி, 'நான் பகவானுடைய கவி' என்கிறார்.

*வண்தமிழ் நூற்கநோற் றேன்அடி*
*யார்க்(கு)இன்ப மாரியே!*

[நூற்க—நூல் செய்வதற்கு. நோற்றேன்—பக்கியம் செய்தேன்.]

என்றும் சொல்லுகிறார்.

பகவதநுபவம் என்ற மகா சமுத்திரத்திலிருந்து நம்மாழ்வார் என்ற மேகம் நல்ல நீரைக் கொணர்ந்து அடியார்களுக்கு இன்ப மழையாகப் பொழிந்ததென்று தீர்மானிக்கிறார்கள் பக்தர்கள்.

இவர் காலத்திலேயே இந்தப்பாடல்கள் விபரப் பிரசித்தி பெற்றிருந்தன என்று ஊகிக்கலாம். பக்தர்கள் மட்டுமா பாராட்டினார்கள்?

பாலேய் தமிழர், இசைகாரர்,
பக்தர் பரவும் ஆயிரத்தின்

என்று இவரே சொல்வதைக் கேளுங்கள்.

பக்தர்கள் பக்திக்காகப் பாடினார்களென்றால், இசை காரர் பாடல்களின் இசைக்காகவும், தமிழர் தமிழ்ப் பயிற்சிக்காகவும் இவற்றைப் பாடினார்களாம். பாலுக்குச் சமான மென்கிறார் தாய் மொழியை; தமிழர்களும் கறந்த பால்போலே யிருக்கிறார்களாம். இந்தப் பாடல் கள் 'பொய்யில் பாடல் ஆயிரம்' என்று போற்றப்படு கின்றன. வானம் பொய்த்தாலும் இவை பொய்த்துப் போவதில்லையாம். உயர்ந்த பகவதநுபவங்களை வெளி யிடும் உண்மைகளல்லவா?

நம்மாழ்வார் பாசுரங்கள் மதுரகவிகள் முதலான அக்காலத்து அடியார்களுக்கு இன்ப மழையாக இருந்தனவென்றால், பிற்காலத்து அடியார்களுக்கும் நாதமுனி தொடக்கமான ஆசாரியர்களுக்கும் ஞான வெள்ளமாகக் காணப்பட்டன என்று சொல்லவேண்டும்.

ஆம்; இந்தப் பாசுரங்களும் உபதேசங்களும் மதப் பற்றுள்ள தற்காலத்தாருக்கும் ஞான வெள்ளமாகவே தோன்றுகின்றன. ஆழ்வார் தமது இஷ்ட மூர்த்தியை 'ஞான வெள்ளச் சுடர் விளக்கு' என்று போற்று கிறார்: இந்த விளக்கினால் விளங்கிக் கொண்டிருக்கும் வாழ்க்கையும் வாக்கும் ஒரே ஞான வெள்ளமாகத் தோன்றுவதில் ஆச்சரியமில்லை.

ஆழ்வார் தமது 'ஞானவெள்ளச் சுடர்விளக்'கை எங்கும் கண்டார். இயற்கையிலும் கண்டார்; ஸ்தலங்களிலும் கண்டார்; கோவில்களிலும் கண்டார். தமது உள்ளத்திலும் கண்டார்; மற்றவர் உள்ளங்களிலும் கண்டார். எல்லாச் சமயங்களிலும் கண்டார். உலகத்திற்கெல்லாம் ஒருயிராகக் கண்டார். இளமையும் முதுமையும், புதுமையும் பழமையும் அவன்; நாடும் நகரங்களும் அவன்தான்;—என்கிருர். உயிர் மட்டுமல்ல; உடம்பும் அவன்தான்!—என்கிருர்.

எல்லாம் கடவுள் மயமாயிருப்பதால், அவனுக்கும் அடியார்களுக்கும் உலகத்திற்கும் கைங்கரியம் செய்வதே போகமென்கிருர் தமக்கு. ஒரே அமைப்பா யிருக்கும் பிரபஞ்சத்தின் உயிரான ஈச்வரனுடைய அம்சங்களல்லவா நாம்? எனவே, 'அந்த விச்வரூபத்தில் நானும் ஒரு பகுதி' என்ற உணர்ச்சியோடு லோகோபகாரமாகக் கைங்கரியஞ் செய்வது பாகவத தர்மந்தானே!

பலத்தையே நம்பி அதர்மம் செய்யக் கூடாதென்றும், நல்லொழுக்கத்தோடு இளமையிலேயே பக்தி செய்து பழக வேண்டுமென்றும் வற்புறுத்துகிருர். அன்பில்லா அறிவு அறிவன்று என்பதும், அன்பு-நெறியே அன்புருவாகிய அழகனிடம் சேர்த்துவிடுமென்பதும், பரிபூர்ண அன்பு பரம பரித்தியாகத்திலிருந்து பிறக்குமென்பதும், கடவுளன்பிலும் கைங்கரியத்திலும் ஒருவன் தன்னை முழுக்க இழந்துவிட வேண்டுமென்பதும், கடவுளே வழி காட்டித் திருத்திப் பணி கொள்கிருன் என்பதும் நம்மாழ்வாருடைய சில முக்கியமான கொள்கைகள்.

இவர் துறவியாயிருந்த போதிலும் மக்களுடைய சுக துக்கங்களில் அநுதாபம் காட்டித் தமது பாசுரங் களைப் பாடிப் பக்தி பண்ணுவதால் அடியார்கள் இம்மையின்பத்தோடும் மறுமையின்பமும் பெறுவார்கள் என்று சொல்லுகிறார்.

*வம்மின் புலவீர்! நும் மெய்வருத்*
*திக்கைசெய்(து) உய்ம்மினோ*

[வம்மின்-வாருங்கள். கைசெய்து-கைத்தொழில் செய்து.]

என்று உலகமுய்யும்படி கருணை கூர்ந்து புலவர்களுக் குப் புத்தி சொல்வதையும் கவனியுங்கள்.

உண்மையான கடவுளுணர்ச்சி—தெய்வ நாட்டம்-அதிகரிக்க அதிகரிக்க, சமரஸ சன்மார்க்கமும் ஜாதீய சமரஸமும் அதிகரிக்கும்: இதன் பயனாக இந்த உலகத் திலே ஒரு புதிய யுகம் பிறக்கும்—என்பது நம்மாழ்வார் கொள்கை. அப்படிப்பட்ட புதிய யுகத்தையும்உலகத் தையும் மனக்கண்ணால் கண்டு,

*பொலிக! பொலிக! பொலிக!*
*போயிற்று வல்லுயிர்ச் சாபம்:*
*நலியும் நரகமும் நைந்த;*
*நமனுக்கிங்(கு) யாதொன்று மில்லை;*
*கலியும் கெடும்;கண்டு கொண்மின்:*
*கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்*
*மலியப் புகுந்(து)இசை பாடி*
*ஆடி உழிதரக் கண்டோம்!*

[பொலிக—விளங்குக. நலியும்—வருத்துகிற. உழி தர—சஞ்சரிக்க.]

*திரியும் கலியுகம் நீங்கித்*
*தேவர்கள் தாமும் புகுந்து,*
*பெரிய கிதயுகம் பற்றிப்*
*பேரின்ப வெள்ளம் பெருகக்*
*கரிய முகில்வண்ணன் எம்மான்*
*கடல்வண்ணன் பூதங்கள், மண்மேல்*
*இரியப் புகுந்(து)இசை பாடி,*
*எங்கும் இடங்கொண் டனவே!*

[கிதயுகம்—கிருதயுகம்.]

என்று ஆனந்த மடைகிறார்.

இப்படி விண்ணும் மண்ணும் சந்திக்கும்போது, காலம் போவதற்குமுன் கலியுகம் ஓடிப்போகிறது; தன் குறுகிய ஆசைகளோடும் பெருந்துன்பங்களோடும்; கிருத யுகம் வந்துவிடுகிறது தன் பெரிய பெரிய நோக்கங்களோடு: பேரின்பம் பெருகி வெள்ள மிடுகிறது. ராட்சஸ சுபாவமுள்ளவர்களுக்கும் அசுர சுபாவ முள்ளவர்களுக்கும் இடமில்லையாம் இந்தப் புதிய உலகத்திலே, யுகத்திலே: இதில் சந்தேகம் ஒன்று மில்லை யென்கிறார் ஆழ்வார்.

அசுர ராட்சஸ சுபாவங்களோடு பகை, பசி, வியாதி முதலான தீமைகளும் போய்விடும் என்கிறார்.

*கொன்றுயிர் உண்ணும் விசாதி*
*பகைபசி தீயன எல்லாம்,*
*நின்(று)இவ் வுலகில் கடிவான்,*
*நேமிப் பிரான்தமர் போந்தார்!*

[விசாதி—வியாதி. கடிவான்-போக்கும் பொருட்டு. நேமிப்பிரான்—மகாவிஷ்ணு. போந்தார்—புகுந்தார்.] என்று உறுதி கூறுவதைக் கேளுங்கள்.

பகவானுடைய அன்பர்கள் தங்கள் அன்பினுலேயே பகை, வெறுப்பு, பசி, பிணி முதலான அசுர சம்பத்தைப் போக்கி எல்லாருக்கும் நன்மை தரும் தெய்வ சம்பத்[illegible]கொண்டுவந்து [illegible]ம். இதற்காக ம[illegible]ர்களும் பக்தர்களோடு ஒததுழைக்க வேண்[illegible] [illegible]ர சுபாவமாகிய ‘கறுத்த மன’த்தைப் போக்கிச் சநதை[illegible] ச[illegible]ரஸ [illegible]க்கச் செந்நெறியிலே நிறுத்திக் [illegible]

இந்தக் கனவுலோகத்தை[illegible]லட்சிய[illegible]மியை,

*கண்டோம்! கண்டோம்! கண்டோம்!*
*கண்ணுக்(கு) இனியன கண்டோம்!*

என்று குதூகலமாகக் காட்டுகிருர் ஆழ்வார்.

உலகத்திலுள்ள பக்தி மார்க்கப் பிரவர்த்தகர்களில் நம்மாழ்வாருக்கு ஒரு முக்கியமான ஸ்தானம் உண்டு. இவர் தோற்றம் தமிழ் நாட்டைப் புனிதமாக்கியது. இவர் உபதேசம் இந்தியாவின் ஞானச் செல்வத்தை அதிகப் படுத்தியது. இவரைத் ‘தமிழ் மாறன்’ என்றும், ‘வேதம் தமிழ்செய்த மெய்யன்’ என்றும் ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்கள் கூறுவதுண்டு.

ஆனுல் இவர் ஒரு நாட்டுக்கு, ஒரு மதத்திற்கு மாத்திரம் உரியவரல்லர். போரும் கொலைகளும் பலாத்காரமும் யதேச்சாதிகாரங்களிம் நிரம்பியிருக்கும் லோக சரித்திரத்தின் பக்கங்களிலே, இத்தகைய ஞானவீரர்களின் வாழ்க்கையும் உபதேசமும் பொன் எழுத்துக்களில் பொறிக்கத் தக்கன அல்லவா?

---

